OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

## இப்போதே சுகம், இதுவே சுகம்

Ashtavakra Mahagita - Vol.6

ஓஷோ



6

# அஷ்டாவக்ர மகாகீதை

## ஆறாம் பாகம்

## இப்போதே சுகம், இதுவே சுகம்

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 164 முதல் 196 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

## ஓஷோ

தமிழாக்கம்:

**டாக்டர் என். ஸ்ரீதரன்**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (ஆறாம் பாகம்) - இப்போதே சுகம், இதுவே சுகம்

முதற் பதிப்பு : 2018

விலை : ₹ 350/-

**Ashtaavakra Mahageethai - Part-6**

Originally published in Hindi under the title:
**ASHTAVAKRA MAHAGITA, VOL. 6**



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 2018 |
| Pages | : | 352 |
| **Price** | : | ₹ **350/-** |
| ISBN | : | 978-81-8345-686-9 |
| DTP | : | S. Asokkumar |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by : 

**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

க்ருதார்த்தோ அ்னேன க்ஞானேனேத்யேவம் கலிததீ: க்ருதீ |
பஸ்யம்ச்ச்ருண்வன் ஸ்ப்ருஷஜிம் க்ரன்னஸ்னன் னாஸ்தே
யதாஸுகம் || 164

சூன்யா த்ருஷ்டிர்வ்ருதா சேஷ்டா விகலானீஇந்த்ரியாணி ச |
நஸ்ப்ருஹா ந விரக்திர்வா க்ஷீண ஸம்ஸார ஸாகரே || 165

ந ஜாகர்தி ந நித்ராதி நஉன்மீலதி ந மீலதி |
அஹோ பரதஷா க்வாபி வர்ததே முக்தசேதஸ: || 166

ஸர்வத்ர த்ருஷ்யதே ஸ்வஸ்த: ஸர்வத்ர விமலாஸய: |
ஸமஸ்த வாஸனா முக்தோ முக்த: ஸர்வத்ர ராஜதே || 167

பஸ்யம்ச்ச்ருண்வன் ஸ்ப்ருர்ஷாஞ்ஜ க்ரன்னஸ்
நன்க்ருஹ்யன் வதன்வவ்ரஜன் |
ஈஹிதானீ ஹிதைர் முக்தோ முக்த ஏவ மஹாஷய: || 168

ந நிந்ததி ந ச ஸ்தௌதி ந ஹ்ருஷ்யதி ந குப்யதி |
ந ததாதி ந க்ருஹணாதி முக்த: ஸர்வத்ர நீரஸ: || 169

‘**இ**ந்த ஞானத்தைப் பெற்று எவனது அறிவு நெகிழ்ந்து விலகிவிட்டதோ, அத்தகைய திருப்தியை அனுபவிப்பவன் எதைப் பார்த்தாலும், கேட்டாலும், தொட்டாலும், முகர்ந்தாலும், சாப்பிட்டாலும் சுகமாகவே உணர்வான்.’ **(சுலோகம் 164)**

இங்கே ஞானம் எனப்படுவது நான் சாட்சி (பார்வையாளன்) மாத்திரமே, செய்பவன் (கர்த்தா) அல்லன் என்னும் உணர்வுதான். இந்த உணர்வு திருப்தி தருகிறது. இக்கருத்து விசித்திரமாகத் தோன்றலாம். செயல்புரிந்தால்தானே திருப்தி ஏற்படுவது வழக்கம். ஓர் ஓவியன், படம் வரைகிறான். திருப்தி பெறுகிறான். நீ வீடு கட்ட

விரும்பினாய். கட்டி முடித்தாய். அதைப் பார்த்து மகிழ்கிறாய். உன் விருப்பம் நிறைவேறிவிட்டது. இடையில் எத்தனையோ சிக்கல்கள், குறுக்கீடுகள், தடைகள். எல்லாவற்றையும் கடந்து விட்டாய். வெற்றி பெற்றாய்.

செயல்படுவதில்தான் சுகம் என்று மக்கள் பொதுவாக நினைக்கிறார்கள். செயல்படாதவன் தோல்வியைச் சந்திக்கிறான், சரிவடைகிறான், சோகத்தில் ஆழ்கிறான். ஆனால் அஷ்டாவக்ரர் போன்ற ஞானிகளின் மொழியில், 'நான் செய்பவன் அல்லன்' என்பதை உணர்பவன் திருப்தியுடன் இருப்பான். 'நான் செயல்புரிபவன்' என்னும் மனநிலை அமைந்தால் வாழ்க்கை முழுவதும் ஓடியபடியே இருக்க வேண்டியதுதான். அவன் எதிலும் திருப்தி அடைவதில்லை. ஒரு விருப்பத்தை நிறைவேற்றி விட்டால் உடனே புதிய விருப்பம் ஒன்று தோன்றி விடுகிறது. பிறகு வரிசையாகப் பத்து விருப்பங்கள் நிறைவேறக் காத்திருக்கின்றன. ஒரு கேள்விக்கு விடை கண்டால் பத்து புதிய கேள்விகள், ஒரு பிரச்சினைக்குத் தீர்வு கண்டால் பத்து புதிய பிரச்சினைகள் என்னும் நிலை உருவாகிறது. ஆகவே ஸம்ஸர்ர ஸாகரம் என்கிறோம். அலைமேல் அலையாக வந்துகொண்டே இருக்கின்றன. ஓர் அலையுடன் நீ முட்டி மோதி அதைச் சமாளிப்பதற்குள் இன்னோர் அலை வந்து மோதுகிறது என்றைக்கும் நீ அலைகளை வெல்ல முடிவதில்லை.

என்னைச் சந்திப்பவர்களில் சிலர் கோபம்தான் தங்கள் பிரச்சினை என்றும், கோபத்தை வென்றுவிட்டால், மீதி எல்லாவற்றையும் வென்ற மாதிரிதான் என்கிறார்கள். சிலர் தங்கள் உடல் பலகீனமடைந்தும், தங்களுக்கு வயதாகிவிட்ட போதிலும் காமத்திலிருந்து விடுபட முடியவில்லை என்று வருந்துகிறார்கள். இன்னொருவர் பேராசையால், மற்றொருவர் மோகத்தால், இன்னொருவர் வேறு பிரச்சினையால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு பிரச்சினை எதிர்ப்படும்போது அந்த சமயம் அந்த ஒரு பிரச்சினையைத்தான் சமாளிக்க வேண்டியதுபோல் தோன்றுகிறது. அந்த ஒன்றைச் சமாளித்த பிறகுதான் அதன் பின்னால் வேறு பல சிக்கல்கள் வரிசையாகக் காத்திருப்பது தெரிகிறது. கோபத்தை நீ வென்றதாக வைத்துக் கொள்வோம். அதன் பின்னால் வேறொன்று

நிற்பதைக் காண்பாய். அதே கோபம்தான் இப்போது புதிய வடிவில், புதிய முறையில் உனக்கு சவால்விடுகிறது.

ஐரோப்பிய அறிஞர்கள் ஒரு சமயம் ஒரு பிரச்சினை வீதம் சமாளிக்குமாறு கூறுகிறார்கள். காரணம், அவர்கள் பிரச்சினைகள் தனித்தனியானவை என நினைக்கிறார்கள். இந்தக் கண்ணோட்டம் தவறானது. எல்லாச் சிக்கல்களும் சிலந்திவலை இழைகளைப் போல் ஒன்றுடனொன்று பின்னிப் பிணைந்துள்ளன. சிலந்தி வலையின் ஓர் இழையை அசைத்தால், மொத்த வலையும் அதிரும். கோபம், பேராசை, மோகம் இணைந்தே உள்ளன. ஆகவே சிக்கல்களைப் பிரித்துச் சமாளிக்க முடியாது. ஒவ்வொரு கரண்டித் தண்ணீராக வெளியேற்றிக் கடலை வற்றச் செய்ய முடியுமா?

எனவே இந்திய ஞானிகள் ஒரு புதிய கண்ணோட்டத்தை உண்டாக்கினார்கள். ஒரே முயற்சியில், ஒரு சொடுக்கில் எல்லாச் சிக்கல்களையும் தீர்க்க முடியுமா என்று யோசித்தார்கள். துண்டு-துண்டாக இல்லாமல் ஒரே பிரச்சினையாகக் கருதி அதை எதிர்கொள்ள விழைந்தார்கள். ஒவ்வோர் அலையுடனும் போராட வேண்டாம். அதற்குப் பதிலாக, அலைகள் எழும்பக் காரணமாக உள்ள காற்றையே நிறுத்திவிடுவது சாத்தியப்படுமா என்று ஆராய்ந்தார்கள்.

அவர்கள் கண்டுபிடித்த வழிதான் சாட்சி மனப்பான்மை. நீ பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டாம். அவற்றின் பின்னால்போய் நின்றுகொள். நீ அவற்றைப் பார்த்தபடி இரு. உன் பார்வை உறுதியாக இருந்தால். உன் பிரச்சினைகள் சரிந்து சாய்ந்துவிடும். உனது பார்வை தடுமாறுவதால்தான் அவை தோன்றுகின்றன. உனது பார்வை நடுக்கம் ஒரு விஷயத்தை பிரச்சினையாக்கி விடுகிறது.

ஆகவே ஒரு பிரச்சினைதான் உள்ளது. அதாவது, உனக்குப் பார்வைக் கோளாறு உள்ளது. உனக்குக் கண்ணைத் திறக்கும் கலை தெரியவில்லை. முதலில் உன் பார்வை பிரச்சினையைத் தீர்த்துக் கொள்.

நூற்றாண்டுகளாக நம் ஞானிகள் சிந்தித்தும் அனுபவித்தும் கண்ட ஞானத்தின் சாரம் என்னவென்றால், துண்டு-துண்டாக பிரச்சினைகளை அணுகாதே என்பதுதான். இந்த அணுகு முறையில் வெற்றியே கிடைக்காது. இலை-இலையாக வெட்டி மரத்தை வீழ்த்த முடியாது. வேரை வெட்டினால்தான் மரம் விழும். அந்த வேரின் மறுபெயர்தான் அகங்காரம். நான் உடல் என்பது ஒரு வேர். நான் மனம் என்பது ஒரு வேர். அஸ்திவாரத்தை அகற்று. சீட்டுக்கட்டு மாளிகை உடனே சரிந்துவிடும். மாலையிலிருந்து ஒவ்வொரு மணியாகப் பிரிக்க அதிக நேரமும் அதிக உழைப்பும் தேவை. அவற்றைக் கோத்திருக்கும் நூலை வெளியே இழுத்துவிட்டால், எல்லா மணிகளும் ஒரே சமயத்தில் உன் கைக்குக் கிடைத்துவிடும்.

இவ்வாறு பிரச்சினைகளின் மூலத்தை, வேரை அகற்றுபவர் வாழ்க்கைப் போராட்டத்தில் அமைதியுடன் விளங்குவார். கோபமா? சரி, அது இருந்துவிட்டுப் போகட்டும். நீ தொலைவில் நின்றுகொண்டு அதைப் பார்ப்பவனாக இரு. இதேபோல் காமமா, மோகமா? பார்வையாளனாக இரு. உணர்ச்சி வசப்படாத பார்வை காரணமாக காமம், கோபம், கர்வம், பேராசை, மோகம் முதலியவை மழுங்கிப் போய்விடும். மனத்தில் அமைதி பரவும். மனத்தில் அலைகளை எழுப்புகின்ற ஆசைகள் அடங்கியிருக்கும்.

அறிவு நெகிழ்தலில் அறிவு என்பது என்ன? சிந்தனைகள், கேள்வி-பதில்கள், தர்க்கங்கள், கணக்குகள் முதலியவற்றின் கலவைதான் புத்தி. ஆனால் நாம் முயன்று பிரச்சினைகள் தீர்வதில்லை. நாம் முயன்றால் சிக்கல் அதிகரிக்கிறது.

நாம் நெகிழ்ந்து விலகிவிடுவோம். எது எப்படியோ அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும். நாம் நடுவில் குறுக்கிட வேண்டாம். அப்போது ஓர் அதிசயம் நிகழ்கிறது. நீ விலகியதும் எல்லாம் தானாகவே சரியாகி விடுகிறது. ஏனெனில் அடிப்படை யில் சிக்கல்கள் தோன்றியதே உன்னால்தான். நீ தலையிட்டால் சிக்கல் தீர்வது மேன்மேலும் கடினமாகிறது.

திறமை வாய்ந்த அறுவை சிகிச்சை மருத்துவர் (சர்ஜன்)கூட தன் மனைவிக்குத் தன் கையால் அறுவை சிகிச்சை செய்யத்

தயங்குவார். கை நடுக்கத்தை உணர்வார். வேறு எண்ணற்ற பெண்களுக்கு ஆபரேஷன் செய்தபோதெல்லாம் அவர் கை நடுங்கியதில்லை. ஆனால் மனைவி என்றதும் தன்னுடையவள் என்னும் உரிமை உணர்வு தலைதூக்குகிறது. தான் ஆபரேஷன் செய்து, ஏதாவது தவறு நிகழ்ந்து, அவள் இறந்துவிட்டால் என் கதி என்ன? குழந்தைகளின் கதி என்ன ஆகும்? என்றெல்லாம் கவலை தோன்றுகிறது. மற்ற பெண்களுக்கு ஆபரேஷன் செய்தபோதெல்லாம் அவர்களின் உயிர், அவர்களின் குடும்பம் பற்றியெல்லாம் அவர் நினைத்துப் பார்த்ததில்லை. அப்போது அவர் முழுமையாகவே சர்ஜனாக மட்டும் இருந்தார். நோயாளிகளுடன் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. ஆபரேஷன் செய்கையில் சாட்சி மனப்பான்மை கொண்டிருந்தார். தான் உண்டு-தன் வேலை உண்டு என்று மட்டுமே இருந்தார். கொடுக்கல்-வாங்கல் கிடையாது. ஆனால் ஒரு பெண்ணை 'இவள் என் மனைவி' என்று சொந்தம் பாராட்டியதும் பிரச்சினை தோன்றுகிறது. ஆகவேதான் தலைசிறந்த சர்ஜன்களும் தன் மனைவி-பிள்ளைகளுக்கு ஆபரேஷன் தேவைப்பட்டால் வெளியிலிருந்து வேறு சர்ஜன்களைக் கூப்பிடுவதுதான் வழக்கம்.

எந்தப் பொருளுடன் நீ ஒட்டிக் கொள்கிறாயோ அதிலிருந்து பிரச்சினை உதிக்கும். எதிலிருந்து விலகி நிற்கிறாயோ, அது சம்பந்தமான பிரச்சினைகள் உன்னை அணுகா. இதை உன் வாழ்க்கையில் சோதித்துப் பார். பிரச்சினை எழுந்ததும் அதை ஆராய்ந்தால் நீ அதனுடன் சம்பந்தப்பட்டிருப்பது தெரியவரும். கொஞ்சம் விலகி நில். இப்படி விலகுவதுதான் சாட்சி என்பது. வாழ்க்கை விசாலமானது. அதன் சிக்கல்களும் தீவிர மானவை. மனிதனின் புத்தியோ அற்பமானது, எல்லைக்கடங் கியது. நமது புத்தி என்பது என்ன? சில எண்ணங்களின் தொகுப்பு தானே. இதை வைத்துக்கொண்டா வாழ்க்கையின் மகாலீலையை நாம் சமாளிக்க முடியும்?

ஓர் எறும்பு மனித வாழ்க்கையைப் புரிந்துகொள்ள விரும்பினால், நீ அதைப் பார்த்து நகைப்பாய். பகவத்கீதை மீது ஊர்ந்து செல்லும் எறும்பால் அந்நூலைப் புரிந்துகொள்ள இயலுமா? ஆனால் மனிதனும் அப்படித்தானே நடந்து கொள்

கிறான். இந்தப் பேருலகில் நாம் எறும்பைவிட அற்பமாகக் கொசு போன்றவர்கள். நம்மால் உலகை அளந்தறிய முடியுமா? நமது குறுகிய புத்தியால் உலகின் ரகசியங்களைப் புரிந்துகொள்ள முடியுமா? இது முடியாத காரியம் என்பதால் நமது மனம் மேலும் குழம்புகிறது. ஒரு முடிச்சை அவிழ்த்தால், இன்னொரு முடிச்சு புதிதாகத் தோன்றுகிறது.

இயற்கை அல்லது சுற்றுச்சூழலைக் காப்பாற்ற நாம் நடவடிக்கை எடுத்தோமே, என்ன விளைவு ஏற்பட்டது? டி.டி.டி.* தெளித்தோம். கொசுக்களைக் கொன்றோம். இயற்கைப் படைப்பின் சங்கிலியில் ஒரு மணி அறுந்து இடைவெளி உண்டானது. கொசுக்களும் இயற்கைக்கு எவ்வகையாலோ தேவைப்படுவதால் அவற்றை அழித்து சுற்றுச்சூழலைக் காப்பாற்றிவிட முடியாது.

நாம் காட்டை வெட்டினோம். வீடுகள் கட்ட நிலம் தேவையென்று அவ்வாறு செய்தோம். காட்டை வெட்டியபின் மழை பெய்வது குறைந்து போனது. ஏனெனில் மரங்கள் மேகங்களை அழைக்கின்றன. இப்போது மேகங்கள் வருவதில்லை. ஏனெனில் அவற்றைக் கூப்பிட மரங்கள்தாம் இல்லையே. மரங்கள் காரணமாக மழை பெய்தது. பெரும்பான்மையான காடுகளை அழித்த பிறகுதான் நாம் மரங்களுக்கும் மழைக்கும் இடையேயான உறவைப் புரிந்துகொண்டோம். மரங்களை வெட்டியெறிந்த நாம் இப்போது தீவிரமாக மரம் நடு விழாக்கள் கொண்டாடுவதில் ஈடுபட்டு வருகிறோம். மழையின்றி அவை எப்படி வளரும்? மேலும், செடி மரமாக வளர்வதற்கு எத்தனையோ ஆண்டுகள் பிடிக்கும்.

நாம் எடுத்த முயற்சிகளால் மனிதனின் ஆயுள் காலம் நீண்டு வளர்ந்துள்ளது. சாவின் சதவிகிதம் குறைந்துவிட்டது. சமீபகாலமாக நாம் பிறப்பைக் கட்டுப்படுத்து (பர்த் கன்ட்ரோல்) என்ற பிரச்சாரத்தில் தீவிரமாக ஈடுபட்டுள்ளோம். சாவு எண்ணிக்கை குறைந்துபோனதால், மக்கள் தொகை அதிகரித்துப் புதிய சங்கடங்கள் தோன்றிவிட்டன. எல்லோரும் வசிக்க இடம் போதுமானதாக இல்லை. இந்த நூற்றாண்டின் இறுதியில்

* Dichloro-diphenyl-trichloroethane

(அடிக்குறிப்புகள் மொழிபெயர்ப்பாளருடையவை)

வாழ்வுரிமைப் போர் தலைதூக்கி, ஏராளமான மனிதர்கள் அழிந்துபோவார்கள்.

முன்பு மனிதனின் ஆயுள் 30-40 ஆண்டுகள் என்றுதான் இருந்தது. புதிய மருந்துகளின் கண்டுபிடிப்பால் மனித ஆயுள் 80 வரை நீண்டுள்ளது. இதனால் விளைவது நன்மையா, தீமையா? முடிவாகச் சொல்வது சிரமம். குழந்தைகள் அதிகம் பிறக்கா மலிருந்தால் நல்லது என்று இப்போது நாம் நினைக்க ஆரம்பித்து விட்டோம். ஆனால் இயற்கையின் படைப்பு விதிகளை எதிர்த்து, செயற்கையான முறையில் குழந்தைப் பிறப்பைத் தடைசெய்தால் இயற்கை எந்த விதத்தில் பழிவாங்குமோ, தெரியவில்லை.

பெண்ணிற்குக் குழந்தை பிறக்காவிடில் அவளிடம் தாய்மை என்னும் குணம் தோன்றாது. அவளது குணம், குழந்தை பெற்றவளின் குணத்திலிருந்து மாறுபட்டிருக்கும். அவளுக்குக் குறிப்பிட்ட நோய்களால் பாதிக்கப்படும் ஆபத்து உள்ளது. கர்ப்பத்தடை மாத்திரை போன்ற செயற்கை முறைகளால் குழந்தைப் பேற்றைத் தடுத்தால் பெண்ணின் உடலில் என்ன மாற்றங்களை உண்டாக்குமோ தெரியவில்லை. கர்ப்பத்தடை மருந்துகள் பிற்காலத்தில் புற்றுநோயைத் தூண்டுகின்றனவா என்பது யோசிக்கப்பட வேண்டும்.

இங்கிலாந்தில் ஒரு மருந்து கண்டுபிடிக்கப்பட்டு உபயோகத்திற்கு வந்தது. அதை எடுத்துக்கொண்டால் வலியின்றி பிரசவம் நடக்கும். இந்த மருந்து நன்கு விற்பனையானது. ஆனால் பிறந்த குழந்தைகள் குரூபமாக அல்லது உடற்குறையுடன் பிறந்தன. நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது. ஆனால் நிறையப் பெண்கள் இந்த மாத்திரையை ஏற்கெனவே பயன்படுத்தியிருந்தனர். பிறகுதான் ஒரு விஷயம் புரிந்தது. குழந்தை குறையின்றிப் பிறக்க பிரசவ வலி எவ்வாறோ துணைபுரிகிறது என்பது விளங்கியது. சுலபமாகக் குழந்தை பிறந்தால் அது இயற்கைக்கு விரோதமானது. அக்குழந்தையிடம் ஏதேனும் குறை இருக்கும். தாயின் உடலிலிருந்து வெளிப்படக் குழந்தை மேற்கொள்ளும் முயற்சி, போராட்டம், வலி தாய்க்கும் சேய்க்கும் எவ்வகையிலோ நன்மையளிக்கிறது. வலியுடன் கூடிய பிரசவம்தான் சுக பிரசவம், சுப பிரசவம்!

வாழ்க்கை சம்பவங்கள் ஒன்றோடொன்று நுணுக்கமாகப் பின்னப்பட்டுள்ளன. எந்த நடவடிக்கையால் என்ன பலன் என்பதை முன்கூட்டியே சொல்வதற்கில்லை. மனித வாழ்க்கையும் சிலந்திவலை போன்றதுதான்.

மனிதன் புத்தியை உபயோகித்து அதிகம் முன்னேறி விட்டதாகக் கூற முடியாது. புத்தியினால் முன்னேற்றம் விளைந்த தாக நாம் நினைப்பது பிரமை மாத்திரமே. மனிதன் புத்தியின் துணைகொண்டு முன்பைவிடக் கூடுதலாக மகிழ்ச்சி பெற்றுவிட வில்லை. காட்டுவாசி நம்மைவிட சந்தோஷமாக இருக்கிறான். காட்டில் வசிக்கும் ஆதிவாசி மனிதர்களைப் பார்த்து நாம் இரக்கப் படுகிறோம். 'பாவம்! மரத்தடியிலோ, குடிசையிலோ வாழ்கிறார்கள். இதுகூட ஒரு வாழ்க்கையா என்ன? ஒரே மாதிரியாகக் காய்-கனி-கிழங்குகளை விதம்-விதமாகச் சமைக்காமல் சாப்பிடுகிறார்கள். உடுத்திக்கொள்ள சரியான ஆடைகளுமில்லை. இவர்களுக்கு நாம் சேவைபுரிய வேண்டும். இவர்களுக்குப் படிப்பு சொல்லித் தருவோம். வீடு கட்டித் தருவோம். நாகரிக ஆடைகளை அறிமுகப்படுத்தி உடலைச் சரியாக மூடிக்கொள்ளச் செய்வோம்' என்றெல்லாம் திட்டம் தயாரிக்கிறோம்.

உன்னையே திரும்பிப் பார். நீ நாகரிகமான உடை அணிந்துள்ளாய். பல வகையான உண்வுகளை விதம்விதமாகச் சமைத்துச் சாப்பிடுகிறாய். உறுதியாகக் கட்டப்பட்ட வீட்டில் வசிக்கிறாய். ஆனால் சுகம் எங்கே? அமைதி எங்கே? கலகலப்பு எங்கே? உன்னால் அவர்களைப் போல் சுதந்திரமாக ஆட முடியுமா? வாய்விட்டுப் பாடுவாயா? நீ வசதிகளிருந்தும் வாடிப்போயல்லவா கிடக்கிறாய்? எவை வாழ்க்கைக்கு இயக்கம் தருகின்றன, எவை இயக்கம் தருவதுபோல் ஏமாற்றுகின்றன என்று கூறுவது கடினம். எனினும் கிழக்கத்திய ஞானிகளின் கண்ணோட்டத்தில் நீ புத்தியின் கையைப் பிடித்தபடி நடவடிக்கைகளில் ஈடுபட்டால் சிக்கல்களில்தான் மாட்டிக் கொள்வாய். சாஸ்திர அறிவை உதறித் தள்ளு. இந்த விசால உலகை இயக்குபவருடன் நீ சேர்ந்துகொள். நீ அவரிடமிருந்து பிரிந்துபோகாதே. அவரிடமிருந்து பிரிந்து இயங்க நீ முற்படுவ தால்தான் தொல்லைகளுக்கு ஆளாகிறாய்.

மனிதன் தனிப்பட்ட படைப்பில்லை. விலங்குகள், பறவைகள், செடிகள், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவை போன்றே மனிதனும் விசால சிருஷ்டியின் அங்கம்தான். ஆனால் மனிதன் இதை ஒப்புக்கொள்வதில்லை. அவன் 'என்னிடம் புத்தி உள்ளது. விலங்குகள்-பறவைகளுக்கு புத்தி கிடையாது. பாவம், அவை ஒரே மாதிரியான அடிமை வாழ்வு நடத்துகின்றன. நான் புத்தியை உபயோகித்து வாழ்க்கையைக் கூடுதலான ஆனந்தத் தின் திசையில் செலுத்துவேன்' என்று கூறிக்கொள்கிறான். ஆனால் நடப்பது என்ன? மேலும்-மேலும் துன்பம்தான் அனுப விக்கிறான். சில நோய்கள் மருந்துகொடுத்தால் அதிகமாவதுபோல், அவன் புத்தியை பிரயோகித்து பிரச்சினையில்தான் மாட்டிக் கொள்கிறான்.

நாம் தனித்தனிப் படைப்புகள் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது. ஒவ்வொரு படைப்பும் இன்னொன்றுடன் இணைந்திருக் கிறது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். சாஸ்திர அறிவு விதிமுறைகளைத் திணித்து மனத்தில் இறுக்கம் ஏற்படுத்து கிறது.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: சாட்சி மனப்பான்மை அமைந்துவிட்டால், பிறகு எதையும் விடவேண்டியதில்லை; பிடித்துவைக்க வேண்டியதில்லை. எது கிடைக்கிறதோ அதற்கு சந்தோஷம். ஒன்று கிடைக்காவிடில், அதுவும் சரிதான். நடப்பதை நடக்கவிட்டால் வாழ்க்கை எளிதாகிவிடும்.

உன் வாழ்க்கையும் இயற்கையாக அமையவில்லை. நீ வணங்கும் சந்நியாசிகளின் வாழ்க்கையும் சகஜமாக இல்லை. நீ அளவுமீறி உண்கிறாய். தண்ணீர் பருகக்கூட இடம் விடுவதில்லை. அவர் அளவுமீறி விரதம் என்று சொல்லிக்கொண்டு பட்டினி கிடக்கிறார். இரண்டுமே இயற்கைக்கு முரணானவை.

சந்நியாசியின் உடலும் மனித உடல்தானே. வயிற்றில் தீ மூண்டதுபோல் பசி ஏற்படுவது உடலின் இயற்கை. அவரோ, 'நான் உடல் அல்லன். நான் உடல் உணர்ச்சிகளை வென்றுகாட்டுவேன்' என்று சவால் விடுகிறார். ஒருவனது உடல் 'இதற்குமேல் சாப் பிடாதே. இடமே இல்லை' எனக் கெஞ்சுகிறது. இன்னொருவன்

உடலோ 'பசி தாங்க முடியவில்லை, ஒரு கவளம் அன்னமாவது போடு' என்று கெஞ்சுகிறது. ஒருவன் அளவு மீறி உண்பதில் தீவிரம் காட்டுகிறான். இன்னொருவன் வயிற்றைக் காயப்போடு வேன் என்று பிடிவாதம் பிடிக்கிறான். இந்த இரு செயல்களுமே இயற்கைக்கு எதிரானவை.

சந்நியாசி புலனடக்கம் வாய்ந்தவராக உனக்குத் தெரிகிறார். ஏனென்றால் புலனடக்கத்தின் அர்த்தம் உனக்குத் தெரிந்திருக்க வில்லை! புலனடக்கம் என்பது அளவு மீறாமையை, நடுநிலைமை யில் இருப்பதைக் காட்டுகிறது. மிகையாகி விட்டால்தான் உன் கவனம் பதிகிறது. அளவுடன் வாழ்பவன் உனக்குப் புலனடக்கம் வாய்ந்தவனாகத் தெரியமாட்டான். வெளிப்பார்வையில் அவனிடம் சிறப்பு எதுவும் தென்படாது. அளவோடு உண்பவன், அளவு குறையாமல் உறங்குபவன் உன்னைக் கவர்வதில்லை. ஒருவன் பட்டினி விரதம் மேற்கொண்டால், நீ அவனைத் துறவியெனப் பாராட்டுகிறாய். ஒருவன் தூக்கத்தைக் குறைத்துக்கொண்டு அதிகாலை 3 மணிக்கு விழித்து, தெரு மக்களின் தூக்கம் கெடும்படியாக பஜன் பாட்டுகள் பாடுகிறான். அவனை நீ பக்தனென்று பாராட்டுகிறாய். ஒருவன் தலைகீழாக நின்று சிரசாஸனம் செய்தால் அவனை மகாயோகி என்கிறாய். அதாவது, ஒருவன் இயற்கைக்கு முரணாகச் செயல்பட்டால்தான் சமூகத்தின் கவனம் ஈர்க்கப்பட்டுச் சிறப்புச் செய்யப்படுகிறது.

புலன்களின் தேவையை எல்லையை மீறாமல் நிறைவேற்றி மிதமாக வாழ்பவன் நம் கவனத்தை ஈர்ப்பதில்லை. ஏனெனில் அவன் மிகவும் சாந்தமாகவும், வெளிப்பார்வைக்கு சாதாரண மானவனாகவும் தென்படுகிறான். சமூகம் ஒருவனைக் கவனிக்க வேண்டுமென்றால், அவன் விலையுயர்ந்த ஆபரணங்கள் அணிந்து அரியணையில் அமர்பவனாக இருக்க வேண்டும் அல்லது திகம்பரனாக (நிர்வாணமாக) நடுத்தெருவில் நிற்க வேண்டும். ஏனெனில் இவ்வை சராசரியைக் கடந்த நிலைகள். சாமானியன், சீராக வாழ்பவன், இயற்கையாக இருப்பவன் சமூகத்தின் கண்களில் படுவதில்லை. எதிலும் மிதமாக இருப்பவன் ஒரே வகையான ஆடை அணிவான்; அளவுடன் சாப்பிடுவான்; தேவையான அளவு மட்டும் தூங்குவான். அவனது

வாழ்க்கையின் ஒழுங்குமுறை காரணமாக அவன் உனக்கு உறுத்தலாகத் தெரியமாட்டான். நீ அப்படியொருவன் இருப்பதைக்கூட அறிந்திருக்க மாட்டாய்.

நீ அப்படித்தான் மாற வேண்டும். நீ இருப்பதே தெரியக்கூடாது! நீ எப்போது வந்தாய் எப்போது போனாய்; எப்படி வந்தாய் எப்படிப் போனாய் என்பதெல்லாம் ஆரவாரமின்றி நடக்க வேண்டும். அப்போது நீ இயற்கையாக நடந்துகொள்கிறாய். இப்படிப்பட்டவனே துறவி. நீ அமைதியாகச் செயல்கள் புரிவதால் சுகமாக உணர்கிறாய். நீ பட்டினி கிடக்கமாட்டாய்; பெரிதாக தியாகம் செய்யமாட்டாய்; தலைகீழாக ஆசனம் போடமாட்டாய்; உடம்பைச் சவுக்கால் அடித்துக்கொள்ள மாட்டாய்.

சில சம்பிரதாயங்களில் சாமியார்கள் தங்களை சவுக்கால் அடித்துக்கொள்கிறார்கள். ரத்தம் வரும்படி அதிகம் சவுக்கடி வாங்குபவர் தலைசிறந்த சாமியாராகக் கருதப்பட்டார். இதேபோல் அதிகபட்ச நாட்கள் பட்டினி விரதம் இருப்பவர் சாமியார்களில் முதலிடம் பெற்றுக் கொண்டாடப்படுகிறார்.

சமண மதத்தில்தான் சாமியார்கள் அதிகபட்சம் பட்டினி விரதம் மேற்கொள்ளுகிறார்கள். நீ போய் அவர்களின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறாய். இப்படி விரதம் இருப்பது தன்னைச் சவுக்கால் அடித்துக் கொள்வதிலிருந்து வித்தியாசமானதில்லை. சவுக்கடிகூட பரவாயில்லை. உடலில் தோல் கிழிதலுடன் முடிகிறது. உபவாசம் உயிருக்கே ஆபத்தாயிற்றே. இது சம்பந்தமாக பக்தர்களிடையே போட்டி வேறு. 'என் சாமியார் மூன்று மாதம் உபவாசமிருந்தார். உன் சாமியார் எத்தனை நாள் உபவாசமிருந்தார்?' என்று பக்தர்கள் வாதம் புரிகின்றனர்.

உடை பணியாத (நிர்வாணமான) திகம்பரர்களின் சமண மதப் பிரிவினர் உடை பணிந்த ஸ்வேதாம்பரர் (வெள்ளங்கி அணிந்த) துறவிகளைத் தாழ்வாக நினைக்கின்றனர். சாதாரண மக்களும் உடை பணிவதால், உடை பணியும் சாமியார்கள் உயர்ந்தவர்கள் அல்லர் என்பது நிர்வாணத் துறவிகளின் மதிப்பீடாகும்.

நீ யாருக்கு அதிகம் மரியாதை கொடுக்கிறாய்? ஆணிப் படுக்கையில் படுத்துக்கிடக்கும் சாமியாரைப் பார்த்து நீ பிரமித்துப்

போகிறாய். ஆனால் ஓலைப்பாய் விரித்து அதில் படுத்திருக்கும் சாமியாரை நீ உயர்வாக நினைப்பதில்லை. ஏனெனில் நீயும் அப்படித்தானே படுக்கிறாய். நீ உன்னைப் பற்றி பெரிதாக நினைப்பதில்லை என்பது இங்கே மறைமுகமாகக் கூறப்படுகிறது.

எது முரணானதோ அதற்கே மதிப்புத் தரப்படுகிறது. ரஷ்யாவில் துறவிகளின் விசித்திரமான பிரிவு ஒன்று இருந்தது. அந்தத் துறவிகள் பிறப்புறுக்களை வெட்டிக்கொண்டு விடுவார்கள். மக்கள் அவர்களைப் பெரிதும் கொண்டாடினார்கள். ஏனென்றால் அந்தத் துறவிகளின் பிரம்மசரிய ஒழுக்கத்தை சந்தேகிக்க வாய்ப்பே இல்லை.

அஷ்டாவக்ரரின் மகாகீதை நூலைப் பயின்றவர்கள் அவர் ஏன் தனியானதொரு சம்பிரதாயத்தை ஆரம்பிக்கவில்லை என்று கேட்கிறார்கள்.

புதிய சம்பிரதாயம் எப்போது உதிக்கிறது? ஏற்கெனவே இருப்பதை எதிர்த்தால்தான், வழக்கமான கண்ணோட்டத்திலிருந்து முரண்பட்டால்தான், இயற்கைக்கு விபரீதமாகப் போனால்தான் மக்கள் புதிய சம்பிரதாயத்தைக் கவனிக்கிறார்கள். அஷ்டாவக்ரர் என்ன சொல்கிறார்? 'உண்ணு, பருகு, முகர்ந்துபார், தொடு. அலட்டிக்கொள்ளாமல் சகஜமாக வாழ்க்கை நடத்து. சூழ்நிலை யோடு ஒத்துப்போ. சாட்சியாகிவிடு' என்றெல்லாம் சொல்கிறார்.

நீ நம்பாமல் கேட்பாய்: 'சாட்சியாவதா? அது பெரிய ஏமாற்று வேலை அல்லவா? ஒருவன் சாட்சி மனப்பான்மை கொண்டவனா, இல்லையா என்பதை எப்படித் தெரிந்துகொள்வது? ஒருவன் சந்தோஷமாகச் சாப்பிடுகிறான், தூங்குகிறான், நிம்மதியாக உட்கார்ந்திருக்கிறான். கேட்டால், "நான் சாட்சி" என்கிறான். இதை எப்படி நம்புவது? சாட்சி மனப்பான்மை உள்ளே அல்லவா இருக்கும். அது வெளியே எப்படிப் புலப்படும்? ஒருவன் சாட்சி நிலையை அடைந்துவிட்டமைக்குச் சான்று என்ன? வெளியே அவனிடம் வழக்கத்திற்கு விரோதமான மாறுதல் தெரிந்தால்தானே அவனை சாட்சியென நம்பலாம்.

சாட்சி மனப்பான்மையை அடைந்துவிட்டவன் அதை வெளியே தெரிவிப்பதில்லை. அப்படி 'நான் சாட்சி' என்று

சொன்னால் அவன் சாட்சி நிலையை அடையவில்லை என்றுதான் அர்த்தம்! 'நான்' என்பதும் 'சாட்சி' என்பதும் ஒன்றாக இருக்கமுடியாது. ஏனெனில் 'நான்' என்பவன் செய்பவன்-கர்த்தா. சாட்சி என்பவன் பார்வையாளன்-த்ருஷ்டா.

உபநிஷதம் ஓர் எச்சரிக்கை விடுக்கிறது. அதன்படி, எவனொருவன் நான் கண்டுகொண்டேன் என்று கூறுகிறானோ, உண்மையில் அவன் அறிந்திருக்க மாட்டான். எந்த ஞானியும் அப்படியான அறிவிப்பு செய்வதில்லை. ஏனெனில் இதுவும் அகங்காரத்தின் ஒரு வகையே ஆகும். இந்த அறிவிப்பு மற்றவர்களை மட்டம் தட்டி தாழ்வாக நினைப்பதற்கு சமமாகும்.

**பு**த்தரிடம் வந்து சிலர், "கடவுள் என்பவர் உண்டா?" என்று கேட்பது வழக்கம். அவர் மௌனமாக இருந்துவிடுவார். ஒருவன் அவரிடம் வந்து, "உங்களுக்கு ஞானம் உண்டாகிவிட்டதா?" என்று கேட்டான். அதற்கும் அவர் பதில் கூறவில்லை. அந்த மனிதன் விடவில்லை. "உங்களுக்கு ஞானம் கிடைத்திருந்தால் 'ஆம்' என்று சொல்லுங்கள். ஞானம் கிடைக்கவில்லையாயின் அதை ஒப்புக் கொண்டுவிடுங்கள். இப்படி மௌனி பாபாவாக இருந்து எங்களைக் குழப்பாதீர்கள்," என்று கேட்டுக்கொண்டான்.

அப்போதும் புத்தர் அசைந்து கொடுக்கவில்லை. 'சரி, இவருக்கு ஞானம் கிடைக்கவில்லை. அதை ஒப்புக்கொள்ளும் தைரியம் இல்லாததால் இவரால் பதில் கூற முடியவில்லை' என்று நினைத்தபடி அவன் அங்கிருந்து அகன்றான். வழியில் எதிர்ப்பட்ட புத்தரின் சீடர்களிடம் அவன், "உங்கள் குருவிற்கு ஞானம் கிடைக்கவில்லை. நான் இப்போதுதான் அவரிடம் விசாரித்துவிட்டு வருகிறேன். ஞானம் கிடைத்திருந்தால் ஒத்துக்கொண்டிருப்பாரே. அவரிடம் ஏமாறாதீர்கள்," என்று தெரிவித்தான். அவர்கள் "உனக்குக் கிறுக்குப் பிடித்திருக்கிறது. அவர் ஞானம் பெற்றுவிட்டார். அதனால் அவர் பேசாமல் இருந்துவிட்டார். ஞானத்தை எப்படிச் சொல்லுவது?" என்றனர்.

'தனக்கு இது தெரியும், அது தெரியும்' என்று அங்கீகாரம் கேட்டு ஆரவாரம் செய்பவர்களைத்தான் நீ பார்த்திருக்கிறாய். பரம ஞானம் பெற்றவன் அறிவிப்புகள் செய்து கொண்டிருக்க

மாட்டான். அவன் தனக்கு ஒன்றுமே தெரியாது என்றுகூடச் சொல்லுவான். ஆகவே அறிவிப்பாளர்களை நம்பிவிடாதே.

ஞானம் அடைந்ததாக அறிவிப்போர் நிறைய உண்டு. ஆனால் சாதனையாளர்கள் வெகுசிலரே. பலர் பெருங்குரலில் அல்லது மேசையைப் பலமாகத் தட்டித் தாங்கள் ஞானம் பெற்றுவிட்டதாக அறிவிக்கிறார்கள். சத்தம் எவ்வளவு அதிகமோ அந்த அளவிற்கு அந்த அறிவிப்புகளை நீ நம்புகிறாய். ஆனால் ஞானம் பெற்றவன் குரலே எழுப்பமாட்டான்; கோஷம் போடமாட்டான். அந்த ஞானத்தை அமைதியாகப் பிறருக்கு உபதேசிப்பான்.

ஆகவே நான் சத்தியாகிரகம் என்னும் சொல்லை விரும்புவதில்லை. ஆக்ரகம் எனில் வலிந்து சுமத்துவது, சத்தியத்தை வற்புறுத்துவது என்னும் அர்த்தம் கிடைக்கிறது. ஒன்றை வலியுறுத்தித்தான், வற்புறுத்தித்தான், பரப்ப வேண்டுமெனில் அதில் பொய் கலந்திருக்கும். அதை மெய்யென நம்பவைக்க வேண்டியிருக்கும். சத்தியத்தை யாரும் ஆதரிக்காமலே சுயமாக பரவும்.

இதனால்தான் பரமஞானியாகிய மகாவீரர் 'ஸ்யாதவாதம்' என்னும் கோட்பாட்டை நிறுவினார். இன்றைய இந்தியில் 'ஷாயத்' எனப்படுகிறது. இது 'ஒருவேளை' (perhaps) என்னும் பொருள் தருகிறது. அவரிடம் ஒருவர் சென்று, "கடவுள் உண்டா, இல்லையா?" என்று கேட்டால், "இருந்தாலும் இருக்கலாம், இல்லாமலும் போகலாம்" என்று பதில் கூறியிருப்பார்! ஆகவே அவருடைய எதிரிகள் அவர் அறிவிலிபோல் பேசுவதாகக் குற்றஞ்சாட்டினர். வெட்டொன்று துண்டிரண்டாக, கடவுள் உண்டு என்றோ, இல்லை என்றோ சொல்லாமல் மழுப்பலாகப் பேசுகிறார் என்றனர்.

இதனால் விஷயம் சிக்கலாகிவிட்டது. நீ ஏற்கெனவே கடவுள் விஷயத்தில் தடுமாறிக் கொண்டிருக்கிறாய். இந்த மாமனிதரோ உன்னை அதிகம் சஞ்சலப்படுத்திவிட்டார். இவரிடம் உறுதியான, முடிவான பதில் கிடைக்கும்; ஊன்றுகோல் போன்ற கொள்கை கிடைக்கும்; வீட்டிற்கு ஆன்மிகச் செல்வத்துடன்

திரும்பலாம் என்று நினைத்தாய். இவரோ உன்னை முன்பைவிடக் குழப்பவாதியாக்கிவிட்டார். நீ வரும்போது கடவுள்மீது கொண்டிருந்த கொஞ்சநஞ்சம் நம்பிக்கையும் தடுமாறியது. "ஆத்மாவாவது உண்டா?" என்று கேட்டால் அதற்கும் இந்த மனிதர் "ஒருவேளை இருக்கலாம்," என்கிறார்!

மகாவீரரின் நோக்கம் என்னவென்றால், தன்னிடம் கேட்டு ஒருவர் ஒரு முடிவுக்கு வரக்கூடாது என்பதுதான். சொந்த அனுபவத்தின் மூலம் எதையும் முடிவு செய் என்கிறார். மற்றவர்களின் அனுபவத்தைக் கடன் வாங்காதே என்று எச்சரிக்கிறார். 'உன்னை ஒரு முடிவுக்கு வரச்சொல்ல நான் யார்? எனக்கு என்ன அருகதை? நான் எனக்காக நிச்சயித்ததை உனக்கும் வற்புறுத்தினால் நான் உனக்கு எதிரியெனக் கருதப்படுவேன்' என்றும் அவர் கூறியுள்ளார்.

என்னிடம் மிகுந்த மரியாதை உடைய ஒருவர் வருஷக் கணக்காகச் சந்திக்க வருகிறார். நான் அவரிடம், "என் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து கேட்கிறீர்கள். முடிந்தபோது தியானம் செய்து பழகுங்கள்," என்றேன். அவரோ, "தியானத்துக்கு என்ன தேவை? உங்களுக்கு ஞானம் கிடைத்துவிட்டதல்லவா? நீங்கள் கூறும் கருத்துகளை அப்படியே ஏற்கிறேன். என் மனத்தில் எந்த சந்தேகமும் கிடையாது. சந்தேகம் உள்ளவர்கள் தியானம் முதலியவை செய்து தீர்த்துக் கொள்ளட்டும். நான் உங்கள் பாதங்களைத் தொட்டு வணங்குகிறேன். உங்கள் ஆசீர்வாதம்தான் தேவை வேறு என்ன வேண்டும்," என்று கூறி சுயமாக முயலுவதை, சுயமாகச் சோதிப்பதைத் தட்டிக்கழித்துவிட்டார்.

எனது முடிவு உனது முடிவாக எப்படி ஆக முடியும்? நான் பெற்ற அறிவு உன்னுடைய அறிவாகவும் எப்படி மாறும்? நான் ஞானம் பெற்றவனா இல்லையா என்னும் அடிப்படையே உனக்குத் தெரிந்திருக்காதே. என் அறிவிப்பை அந்த அளவிற்கா நம்புகிறாய்? ஆனால் சத்தியம் என்பது தன்னை அறிவித்துக் கொண்டு வராதே!

நீ சத்தியத்தைத் தேட விரும்பவில்லை. நீ அதை இலவசமாகப் பெற விழைகிறாய். நீ உழைப்பை மேற்கொள்ள

விரும்பவில்லை. வேறு யார் மூலமாவது சத்தியத்தைத் தெரிந்துகொண்டால் தொல்லையில்லாமல் இருக்கலாம் என்கிறாய். தேடுகின்ற சிக்கலில் மாட்டிக்கொள்ள நீ தயாராக இல்லை. மலை ஏறி சிரமப்படுவதையும், தொலைதூரப் பயணத்தையும் புறக்கணித்து ஒருவன், இமயமலைக்குச் சென்று வந்தவனிடம், “நீ உன் பயணத்தை வர்ணித்து சொல்லு. நான் அதை கேட்டுக் கொள்கிறேன். உன் வர்ணிப்பை நம்புகிறேன். அது போதும் எனக்கு. மனக்கண்ணால் இமயத்தை தரிசித்துக் கொள்கிறேன்,” என்று சொன்னால் எப்படியிருக்கும்.

ஒருவரைத் தூக்கிவைத்து அவரை நம்புகிறவர்களே உலகில் பெரும்பான்மையினர். சுயசிந்தனையாளர் சிலரே உள்ளனர். ஆளுக்கொரு மதத்தை நம்புகிறார்கள். ஆளுக்கொரு வழிபடும் இடத்தை நம்புகிறார்கள். ‘இயேசுநாதர் சொல்லிவிட்டார். அதுவே முடிவான உண்மை. அவரா பொய் சொல்லுவார்?’ என்று. கிறிஸ்தவ மதத்தைப் பின்பற்றுவோர் கோடிக் கணக்கில் உள்ளனர். இதேபோல் சமணர்கள் ‘மகாவீரர் சொல்லி விட்டார். இனி மறுபேச்சு கிடையாது’ என்பார்கள்.

நீ இவ்வாறு உன்னையே ஏமாற்றிக் கொள்கிறாய். பரமஞானி ‘நான் கூறுவதே இறுதி சத்தியம்’ என்றெல்லாம் உரிமை கொண்டாட மாட்டார். அவர் வற்புறுத்த மாட்டார்; அழைப்பு மட்டுமே விடுப்பார். ‘அன்பனே, என்னைப் பார். அருகில் வா. நான் சொல்வதை சுவைத்துப் பார். ருசியை அறிந்துகொள். நான் தேடிச்சென்று வந்த மாதிரி நீயும் பயணிக்க ஏற்பாடுகள் தொடங்கு’ என்று தூண்டுவார். தான் உணர்ந்த சத்தியத்தை உனக்குள் திணிக்கமாட்டார். ‘நீயே ஆன்மிகப் பயணம் மேற்கொண்டு நீயே சத்தியத்தைக் கண்டுபிடித்து உனக்குள் நிரப்பிக் கொள்’ என்பார்.

‘எவன் உலகை வற்றிய கடலாகக் காண்கிறானோ, அவனிடம் ஆசையும் இருப்பதில்லை, விருப்பமின்மையும் இருப்பதில்லை. அவனது பார்வை சூனியமாக இருக்கும். அவன் முயற்சிகள் செய்வதில்லை. அவனுடைய உடல் உணர்வுகள் வலுவிழந்து அடங்கிப் போயிருக்கும்.’ **(சுலோகம் 165)**

**ப**ரமஞான நிலையில் பார்வை மாறிவிடும்; சூனியமாகத் தெரியும். உன் கண்கள் தற்சமயம் நிரம்பிக் கிடக்கின்றன. நூற்றுக்கணக்கான காட்சிகள் அதில் பதிந்துள்ளன. உன்னால் எதையும் நடுநிலைமையோடு பார்க்க முடிவதில்லை. எதையும் பார்க்கப் போவதற்கு முன்பாகவே நீ ஓர் அபிப்பிராயத்தை ஏற்படுத்திக் கொண்டு விடுகிறாய்.

சிலர் என்னைப் பார்க்க வருகிறார்கள். ஒரு சாரார் நான் நல்லவன் என்றும், வேறு சிலர் நான் ஆபத்தானவன் என்றும் முன்கூட்டியே முடிவு செய்துகொண்டு சந்திக்கிறார்கள். ஆகவே அவர்கள் எனது பேச்சு, செயல்கள், கண்ணோட்டத்திற்கு அவரவர் வழியில் தப்பர்த்தம் எடுத்துக் கொள்கிறார்கள். அப்படியே அவர்கள் தத்தம் இருப்பிடம் திரும்புகிறார்கள். என்னைப் பார்த்தும் அவர்கள் சரியாகக் கவனிக்கவில்லை. என் பேச்சைக் கேட்டும் புரிந்துகொள்ளவில்லை. ஏற்கெனவே கோணலான மனம் கொண்ட அவர்கள் என்னைக் காண வராமலே இருந்திருக்கலாம்.

**கி**றிஸ்தவ மூதாட்டி ஒருத்தி என்னிடம் வந்து, "உங்களுடைய உரைகளைக் கேட்டு நான் மிகவும் மகிழ்ந்தேன். கிறிஸ்தவ மதத்தில் எனக்குள்ள நம்பிக்கையை நீங்கள் மேலும் வலுப்படுத்தி விட்டீர்கள். நீங்கள் சொன்னதையேதான் இயேசுநாதரும் சொல்லியுள்ளார்," என்று என்னைப் பாராட்டினாள்.

இந்தப் பெண்மணிக்கு என்ன ஆயிற்று என்று நான் திகைத்தேன். அவள் இயேசுவின் போதனைகளால் நிரம்பி வழிபவள். அதாவது, அவளது எண்ண ஓட்டம் ஒரு குறிப்பிட்ட விதமாக ஏற்கெனவே அமைந்துவிட்டது. என் பேச்சைக் கேட்கையில் இயேசுவின் கருத்துகள்போல் உள்ளதாக அவள் நினைத்ததையெல்லாம் அவள் உள்வாங்கிக் கொண்டாள். ஒத்துவராததைத் தானாகவே உதறித் தள்ளியிருக்கிறாள். எனக்கு நன்றி கூறுகிறாள்.

நான் வெளிப்படையாகப் பேசினேன், "அம்மணி, நீங்கள்தான் இங்கே வரவேயில்லையே. நீங்கள் எப்படி என் பேச்சைக் கேட்டிருக்க முடியும்?"

அவள் பதறினாள் "எங்கேயோ தவறு நடந்திருக்கும். எதனாலோ நீங்கள் என்னை பார்க்க தவறியிருப்பீர்கள். நான் 15 நாளாகத் தவறாமல் உங்கள் சொற்பொழிவைக் கேட்டு வருகிறேன்," என்றாள்.

நானும் விடவில்லை. "நீங்கள் 15 ஆண்டுகள் என் பேச்சைக் கேட்டாலும் அது கேட்டதாக ஆகிவிடாது. கண்களையும், காதுகளையும், மனத்தையும் வெற்றிடமாக ஆக்கிக்கொண்டு என்னிடம் வாருங்கள். ஹிந்துவாக, கிறிஸ்தவராக, முஸ்லிமாக என்னிடம் வராதீர்கள். ஏற்கெனவே எதையெல்லாமோ கேட்டு மனத்தை நிரப்பிக்கொண்டபின் வந்தால் என் பேச்சு உள்ளே நுழைய வாய்ப்பில்லை. திறந்த மனத்துடன், காலியான மனத்துடன் என்னிடம் வா. என் பேச்சைக் கேள். நீ ஏன் கருத்துகளை ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற கட்டாயமில்லை. அதற்கான அவசரமும் இல்லை. முதலில் கேள்; பிறகு முடிவெடு. இப்பொழுதுபோல் கிறிஸ்தவக் கண்ணோட்டத்தைச் சரியென முடிவு செய்த பின் என் பேச்சு புரிவது சிரமம்," என்று சுட்டிக் காட்டினேன்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஓர் ஊரில் நீதிபதியாக நியமனமானார். முதல் வழக்கு வந்தது. வாதி தனது பக்க நியாயத்தை விளக்கிக் கூறியதும், முல்லா தலையசைத்து, "நீர் கூறுவது முற்றிலும் சரி. ஏற்றுக்கொள்கிறேன்," என்றார்.

கிளார்க் பதறினார். "ஐயா, இது ஒருபட்ச வாதம்தான். வழக்கு இன்னும் முடியவில்லை. பிரதிவாதியின் விளக்கத்தையும் தாங்கள் கேட்கவேண்டும்," என்று நினைவூட்டினார்.*

முல்லா மறுத்தார்: "இன்னொரு தரப்புக் கூறுவதையும் நான் கேட்டால் என் மனம் குழம்பிப்போகும். தீர்ப்பு வழங்குவது இழுபறியாகிவிடும். இந்த ஒரு தரப்பு வாதப்படி தீர்ப்பளித்து விட்டால் வேலை சுலபமாகிவிடும். என்னைத் தீர்ப்புக்கூற விடு," என்றார்.

* audi alteram partem என்று நீதிமன்ற மொழியில் கூறப்படுகிறது. இதன் பொருள் எதிர்த் தரப்பிற்கும் தன் கருத்தைச் சொல்ல உரிமையுண்டு என்பதுதான்.

கிளார்க் தடுத்தார். "நீங்கள் முதல் முறையாக இப்பதவிக்கு வந்துள்ளதால் உங்களுக்கு நீதிமன்ற நடைமுறைகள் தெரிந்திருக்க நியாயமில்லை. இரு தரப்பினரின் வாதங்களையும் கேட்டபின் நியாயம் வழங்குங்கள். ஒரு தரப்பு வாதத்தை மட்டும் கேட்டுத் தீர்ப்புக் கூறினால் அது அநியாயமாகிவிடும்," என்று பணிவுடன் கூறினார்.

முல்லா ஒப்புக்கொண்டு பிரதிவாதி கூறுவதையும் கேட்டுக் கொண்டார். பிறகு அவரைப் பார்த்து, "நீர் கூறுவது முற்றிலும் சரி. ஏற்றுக்கொள்கிறேன்," என்றார்.

கிளார்க் மறுபடியும் பதறினார். "ஐயா, தாங்கள் சுயநினை வோடுதான் இருக்கிறீர்களா? இப்படி உடனுக்குடன் இருதரப்பினர் சொல்வதும் சரி என்று முடிவெடுக்கக் கூடாது. இரு தரப்பு வாதங்களையும் மனத்தில் அசைபோட்டு யோசித்து, எந்தப் பக்கம் உண்மை என்று கண்டுபிடித்து, பிறகு தீர்ப்புக் கூற வேண்டும்," என்று வழிமுறையை விளக்கினார்.

முல்லா சொன்னார், "உன் விளக்கமும் சரியென்றே படுகிறது. இப்படி எல்லார் கூறுவதும் சரியென்று தோன்றுவதால் எனக்குத் தலை சுற்றுகிறது. நான் நீதிபதிப் பதவியை ஏற்றுக் கொண்டது தப்பு."

மனிதன் சீக்கிரம் முடிவெடுப்பதில் ஈடுபடுகிறான். நீ கிறிஸ்தவ குடும்பத்திலோ, ஹிந்து குடும்பத்திலோ பிறந்திருந்தால் அந்த ஒரு மதம், அந்த ஒரு தரப்பு, பற்றி மட்டுமே அறிந்திருப் பாய். உலகில் 300க்கு மேற்பட்ட மதங்கள் உள்ளன. அவற்றில் நீ எந்த மதத்தவனோ அதன் வாதங்களை மட்டுமே கேட்டிருப்பாய். எல்லா மதங்களைப் பற்றியும் அறிந்துகொண்ட பின்பா எந்த மதத்தவனாக இருப்பது என்று முடிவெடுப்பது? இதற்கு ஓர் ஆயுசு போதாதே என்பாய்.

குழந்தை பிறந்த சில நாள்களிலேயே பெற்றோர் அதன்மீது தங்கள் மதச் சடங்குகளின் முத்திரையைப் பதிக்கத் தொடங்கு கின்றனர். பச்சிளம் குழந்தைக்கு பிரார்த்தனை என்ற பெயரில் மொட்டையடித்து வலிக்கச் செய்கின்றனர். குழந்தை அப்படி

எதுவும் பிரார்த்தனை செய்துகொண்டு பூமிக்கு வரவில்லையே. ஏழு வயதிலேயே பூணூலை மாட்டி விளையாட்டுப் பிள்ளை யாகிய அந்தச் சிறுவனைக் காலையும் மாலையும் சடங்குகள் (சந்தி) செய்யவைத்துத் துன்புறுத்துகிறார்கள். சிறு வயதினர்க்கு மந்திரம், பூஜை விதி, கோயிலில் வழிபடும் முறை முதலியவை கற்றுக் கொடுத்து, அவர்கள் சுயமாகச் சிந்திக்கத் தொடங்கும் முன்னரே ஹிந்துவாக்கி விடுகிறார்கள். இதேபோல் மற்ற மதத்தினரும் குழந்தைகளுக்குத் தங்கள் மதப்பயிற்சி தருவதில் தீவிரமாயிருக்கிறார்கள். மடங்களின் தலைவர்களும் பெற்றோர் களைக் குழந்தைகளுக்கு மதக்கல்வி அளிக்குமாறு வற்புறுத்து கிறார்கள்.

ஒருபொழுதும் மதக்கல்வியைப் பரப்பக்கூடாது. தியானம் செய்யும் முறையைக் கற்பிக்கலாம். அதன் மூலம் மக்கள் தங்கள் மனத்தை சாந்தமாக வைத்துக் கொள்வதில் வெற்றி பெறுவார்கள். மனத்தில் எண்ணங்களைச் சீர்படுத்தி அவை தங்களைக் குழப்புவதிலிருந்து விடுபடுவார்கள். இப்படிப் பயிற்சி பெற்றவன் மனிதகுலத்திற்கே பொதுவான அறத்தைக் கடைப்பிடிப்பான். அவன் எந்த மதத்தையும் சேர்ந்தவனாக இருக்கமாட்டான்.

குழந்தைகளைப் பிற மதங்களின் பாதிப்பிலிருந்து காப்பாற்றப் பெற்றோர்கள் தங்கள் மதத்தைக் குழந்தைகளின் மனத்தில் திணிக்கும் முயற்சியில் ஈடுபடுகிறார்கள் ஆகவே குழந்தைகள் மதச்சடங்குகளைத்தான் கற்கின்றனரே தவிர, அறம் என்றால் என்ன என்று அவர்களுக்குத் தெரிவதில்லை.

மனிதர்களில் ‘ஏன்’ என்று கேட்க முடியாமல், கேட்க விடாமல் அதிகபட்சம் கொடுமைப்படுத்தப்பட்டவர்கள் சிறு வயதினரே ஆவர். பெற்றோர்களை எதிர்க்க முடியாத அளவு அவர்கள் பலஹீனர்கள். குடுமி வைத்துக்கொள், பூணூல் போட்டுக்கொள் என்றெல்லாம் பெற்றோர் கட்டளையிடும்போது சிறுவனால் எதிர்த்துப் பேச முடிவதில்லை. அவனுக்கு என்ன நடக்கிறதென்றே புரிவதில்லை. இளைஞனாக வளர்வதற்குள் அவன் தான் ஒரு ஹிந்து, கிறிஸ்தவன், முஸ்லிம், ஜெயின் என்றெல்லாம் மூளைச்சலவை செய்யப்பட்டு விடுகிறான்.

சாட்சி மனப்பான்மை பெற்றுவிட்டவன் எதற்கும் விசேஷ முயற்சி செய்ய வேண்டியதில்லை என்று நெகிழ்ந்து கொடுத்து வாழ்வான். ஆறு முயற்சி செய்யாமலே கடலை நோக்கி ஓடுகிறது. மரம் தானாகவே ஓங்கி வளர்கிறது. மேகம் முயற்சி எடுக்காமலே மழை பொழிகிறது. சந்திரன் இயல்பாகவே தனது பாதையில் சுழன்று முன்னேறுகிறது. சூரியன் ஓய்வெடுப்பதில்லை. தன் பெயரில் உள்ள வாரநாளில் (Sunday) எல்லா மக்களும் ஓய்வெடுப்பதுபோல் தானும் ஓய்வெடுக்க சூரியனுக்குத் தோன்றுவதில்லை. காரணம், அது களைத்துப் போவதில்லை. களைப்பின்மைக்குக் காரணம், அது தன் பணியை விசேஷ முயற்சி எடுத்துச் செய்யாமல் இயல்பாகப் புரிகிறது.

சாட்சி மனப்பான்மை வந்ததும் நாம் இதுவரை வெறி பிடித்தவர்கள்போல் வாழ்க்கை நடத்தியதை எண்ணி வியப்போம். நம் மனத்தில் எத்தனை-எத்தனை திட்டங்களை யோசிக்கிறோம். சில பலித்தன. சில தோல்வி. ஆனால் எதுவும் நம்மைக் கேட்டு நடக்கவில்லை. நாம் தேவையில்லாத பாரத்தை மனத்தில் கொண்டிருந்தோம். நாம்தான் செய்பவன் என நினைத்து மன இறுக்கத்திற்கு ஆட்பட்டிருந்தோம்.

நமது உயிர்சக்தி புலன்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. மனிதன் சாந்தமானால், சூனியமானால், சாட்சியாக மாறினால், உயிர்சக்தி புலன்களிலிருந்து விடுபட்டு மேல்நோக்கிப் பயணிக்கும். புலன்களுடன் சேர்ந்திருந்த வரையிலும் அது கீழ்நோக்கி இறங்கியபடி இருந்தது. உயிர்சக்தி மேல்நோக்கி எழும்பினாலும் புலன்கள் தத்தம் பணியில் நீடிக்கும். கண் பார்க்கும்; காது கேட்கும்; நாக்கு சுவையுணரும். ஆனால் பற்று மட்டும் இருக்காது.

**யா நிஷா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமி |**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஷா பஷ்யதோ முனே: ||**

என்று பகவத்கீதையில் சுலோகம் உள்ளது. உலக உயிர்களெல்லாம் அஞ்ஞானம் என்னும் இரவில் உறக்கத்திலிருக்கும்போது, புலனடக்கமுள்ள ஞானி விழித்திருப்பான். அறியாமை என்னும் பகலில் எல்லா உயிர்களும் விழித்திருக்கையில், ஞானி உறக்கத்தில் ஆழ்ந்திருப்பான்.

புலன்களில் விழிப்புடன் இருப்பவன் ஆத்ம அளவில் தூங்குமூஞ்சியாக இருப்பான். ஆத்ம விழிப்பு உள்ளவனின் புலன்கள் உறங்குவதுபோல் கிளர்ச்சியடையாமல் இருக்கும்.

'அவன் விழிப்பதில்லை, உறங்குவதில்லை, கண் இமைகளைத் திறப்பதோ-மூடுவதோ இல்லை. முக்தியடைந்த மனத்தின் உச்ச நிலை இதுவே'. **(சுலோகம் 166)**

**ஞா**னி எதுவும் செய்வதில்லை. எனவே விழிப்பது-தூங்குவது ஆகிய செயல்களுடன் அவனை சம்பந்தப்படுத்த முடியாது. கர்த்தா என்னும் மனப்பான்மை நீங்கிவிட்டால், கடவுள்தான் விழிக்கிறார், அவர்தான் தூங்குகிறார் எனலாம். இந்த வேறுபாட்டை நினைவில் கொள்.

நீ எவ்வளவு முயன்றும் தூக்கம் வருவதில்லை. முயன்றால் தூக்கம் வரும் என நீ நினைக்கிறாய். முயற்சிக்கும் தூக்கத்துக்கும் சம்பந்தம் இல்லை. தூக்கம் தானாக வரும் நிகழ்வாகும். கர்த்தா என்ற முறையில் உன்னால் தூக்கத்தை வரவழைத்துக் கொள்ள முடியாது. கர்த்தா உணர்வைக் கைவிட்டால், நீ இருக்க மாட்டாய். கடவுள் இருப்பார். அவர் தூங்குவார். என்னால் முயன்று தூங்க முடியும் என்று நீ இறுமாப்புடன் இருந்தால் தூக்கம் வராது. அது வரும்போது வரட்டும் என்று நீ சாட்சி மனப்பான்மையை மேற்கொண்டால், யாரும் தட்டிக்கொடுக்காமலே, தாலாட்டுப் பாடாமலே நீ உறங்கிவிடுவாய்.

தூக்கம் வரவில்லை என்று என்னிடம் வருவோரிடம் நான் சொல்வது, "வராவிட்டால் போகட்டும். அமைதியாகப் படுக்கையில் கிட. தூக்கத்தை வரவழைக்க எதுவும் செய்யாதே. உன் முயற்சி பலிக்காது. முயலுவதால்தான் தூக்கம் வருவதில்லை. உன் முயற்சிதான் தூக்கத்திற்குத் தடையாக உள்ளது.

வயதானவர்களும் எட்டு மணி நேரம் தூங்க விரும்புகிறார்கள். அவர்களுக்கு அவ்வளவு தூக்கம் தேவையில்லை. நாலு மணி நேரம் தூங்கினால் போதும். ஆனால் முன்பெல்லாம் போல் எட்டு மணி தூங்கவில்லையே என்று கவலைப்படுகிறார்கள். அப்போது அவர்கள் இளைஞர்களாக அல்லவா

இருந்தார்கள். வயதுக்கேற்றபடி தூக்கம் தேவைப்படுகிறது. தாயின் வயிற்றில் குழந்தை 24 மணி நேரம் உறக்கத்தில் இருக்கிறது. பிறந்த பின்பும் 18-20 மணி நேரம் தூங்குகிறது. அவ்வளவு தூக்கம் அதன் வளர்ச்சிக்குத் தேவை. வளர்ந்தவர்கள் தங்களைக் குழந்தைகளோடு ஒப்பிடக் கூடாது.

இதுதான் பிரச்சினை. ஒருவன் 35 ஆண்டுகளுக்கு முன் எவ்வளவு சாப்பிட்டானோ, அதையே வயது முதிர்ந்த பிறகும் தொடர்கிறான். நடுவயதைக் கடந்தபின் இனி உடலளவில் ஏற்றம் கிடையாதென்றும், படிப்படியாக இறக்கம்தான் என்றும் அவன் நினைவில் வைப்பதில்லை. வயிறு குப்பைக் கிடங்காக மாறுவதை அவன் கவனிப்பதில்லை. மலை ஏறியாகிவிட்டது. இனி இறங்கும்போது முன்பளவிற்கு பெட்ரோல் தேவையில்லையே. வயதாக ஆக, குறைந்த உணவே போதும். உடல் தன் தேவைக்கேற்ப உறங்கும் நேரத்தைத் தானே நிச்சயித்துவிடும். அது குறைந்த அளவு நேரமே ஆயினும் கவலையில்லை.

உடலுக்கு எப்போது-எது-எந்த அளவு தேவை என்று கூறுவது இயற்கையின் குரல். இறைவனின் குரலும் அதுவே யாகும். ஆனால் இறக்கும்வரை எல்லாம் ஒரேமாதிரியாக இருக்க வேண்டுமென, எதுவும் அளவு குறையக்கூடாதென நினைக் கிறோம். நாம் அழுது புலம்பாமல், அமைதியாக இருந்து, இயற்கையின் குரலைக் கேட்டுக் கொண்டால், இயற்கை நம் வாழ்வை சமதளம்போல் வைத்திருக்கும். தூக்கம் குறைந்து போனால், உடலுக்கு அதன் தேவை குறைந்துவிட்டதென்று புரிந்துகொள்வோம்.

ஞானி என்பவன் தானாக எதுவும் பிரயத்தனம் செய்யாத வனாக இருப்பான். கண்களை உறக்கம் தழுவினால் அதைத் தவிர்க்கமாட்டான். உறக்கம் வராவிடில் கவலைகொள்ள மாட்டான். அவன் உழைப்பாளியும் அல்லன், சோம்பேறியும் அல்லன். அவன் எதுவுமே அல்லன். அவன் ஒரு கருவி மாத்திரமே ஆவான். கடவுள் அவன் மூலம் செய்விப்பதைச் செய்வான்.

இந்த சுலோகத்தில், ஞானி நினைத்தால், கண்களை இமைக்காலும் இருக்க முடியும் என்று வருகிறது. சராசரி மக்களான

நாம் நம் இமைகளின் இயக்கம் பற்றி நினைப்பதுகூட இல்லை. ஆனால் யாராவது கையை நம் கண்ணருகே கொண்டுவந்தால் இமைகள் மூடுவதை உணர்கிறோம். ஆனால் நம் இமைகள் நாம் அறியாமலே மணிக்கு 15 தடவையாவது மூடி திறக்கின்றன.

நீ தூங்கும்போது ஒரு புழு முகத்தில் ஏறுகிறது. உடனே நீ அதைத் தட்டிவிடுகிறாய். மறுநாள் எவராவது நம்மிடம், “உன் முகத்தில் புழு ஏறியதா? நீ அதைத் தட்டிவிட்டாயா?” என்று கேட்டால், “அப்படியொன்றும் ஞாபகமில்லையே. நானா தட்டிவிட்டேன்?” என்று நீ திருப்பிக் கேட்பாய். ஆனால் உனக்குள்ளே எவனோ விழித்த நிலையில் இருந்திருக்கிறான். அவன்தான் புழுவைத் தள்ளியிருக்கிறான்.

வீட்டில் பலர் தூங்கியபடி இருக்கிறார்கள். ஆனால் எவரோ ‘ராமா’ என்று உன் பெயரைச் சொல்லியதும், நீ மட்டுமே விழிக்கிறாய். புரண்டு படுத்தபடி, ‘யாரது தூங்கறவனை தொந்திரவு செய்யறது?’ என்று எரிச்சல்படுகிறாய். மற்றவர்கள் உறங்கியபடி இருக்க, உனக்கு மட்டும் அந்தக் குரல் எப்படிக் கேட்டது? அது உன் பெயர். அது உன் ஆழ்மனத்தில் பதிந்திருக்கிறது. உன் பெயர் ஒலிக்கப்பட்டதும் உள்ளேயிருந்து ஒரு சக்தி எழுகிறது. தூக்கத்திலும் உன் பெயரை உன்னால் கேட்க முடிகிறது.

இன்னொரு உதாரணமாகத் தாயைச் சொல்லலாம். புயலடித்தாலும், இடி-மின்னலாய் இருந்தாலும் அசந்து தூங்குபவள் தன் குழந்தை சிறிது சிணுங்கினாலும் சட்டென விழித்துக் கொள்கிறாள். உள்ளேயிருந்து அவளை எழுப்புபவர் யார்?

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: ‘இமை மூடுவதில்லை, திறப்பதில்லை; தூங்குவதில்லை, விழிப்பதில்லை; தானாக எதுவும் செய்வதில்லை. செய்பவன் நான் என்ற கர்த்தா மனப்பான்மையே இருப்பதில்லை. இத்தகையோர் முக்தி பெற்ற மனத்தினர் ஆவர்.’ இதுவே உச்சகட்ட உணர்வு. கர்த்தா மனப்பான்மை நீங்கிவிட்டால் பிறகு கவலைப்பட எதுவுமில்லை. செய்பவன் நான் என்னும் உணர்வுதான் நம்மை வெற்றி-தோல்வி பற்றி கவலைப்பட வைக்கிறது. இந்தக் கவலையிலிருந்து மீள்வது எப்படி என்று புதிய கவலை ஒன்று நம்மைத் தொற்றிக் கொள்கிறது.

இந்திய மனத்தத்துவக் கண்ணோட்டத்தின்படி மனத்தின் நிலைகள் நான்கெனப்படுகிறது-

1. **ஜாக்ருதி:** விழித்த நிலை. இந்நிலையில் அகங்கார உணர்வு தலைதூக்கி நிற்கிறது. செய்பவன் நான் என்ற திமிர் இருக்கிறது. எதற்கெடுத்தாலும் 'நான்' என்னும் உணர்வு நம்மைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறது.

2. **ஸ்வப்ன** (சொப்பனம்): இந்த நிலையில் அகங்காரம் வலுவிழக்கிறது. கனவு நிலையில் அகங்காரம் கரைந்து போகிறது. தான் யார், எந்த சாதி, என்ன உத்தியோகம் முதலிய உன் ஆளுமையின் பல முகப்புகள் நினைவில் வருவதில்லை. கனவில் நீ செயல்புரிகையில் உன் அகங்காரம் சிறிதளவே ஒட்டிக்கொள்கிறது.

3. **ஸுஷுப்தி** (ஆழ்ந்த உறக்கம்) : கனவும் மிஞ்சாத நிலை. எதுவும் மிஞ்சாத நிலை. இப்போது அகங்காரம் விலகிவிடுகிறது. நீ என ஒருவன் இருப்பதை உன்னால் உணர முடிவதில்லை. கர்த்தா உணர்வும் இப்போது உனக்கில்லை. நீயாக எதுவுமே செய்வதில்லை. சுவாசிப்பது சுயமாக நடைபெறுகிறது. உணவு ஜீரணமாகிறது. இரத்தம் ஓடுகிறது. உடல் இயக்கம் எதுவும் உன் வசத்தில் இல்லை.

விழிப்பு நிலையில் 'நான்' என்பது வலுவாக இருந்தது. கனவு நிலையில் 'நான்' என்பது நிழல்போல் நீடித்தது. ஆழ் துயிலில் அந்த நிழலும் காணாமல் போய்விடுகிறது. இது இருட்டான நிலை. இது நீ என்பவனே இல்லாமல் போன எதிர்மறையான (நெகடிவ்) நிலை.

4. **துரீயம்** (சர்வோச்ச நிலை): இந்த நிலை ஜாக்ருதிபோல் விழிப்புடையது; சுஷுப்திபோல் சாந்தம் நிறைந்தது. துரீயம் என்றால் ஆழ்துயிலில் கிடைக்கும் அமைதி என்று அர்த்தம். ஆழ்துயிலை இருட்டான நிலை என்று மேலே சொன்னோம். துரீயத்தில் ஒளி தோன்றுகிறது. ஆழ்துயிலில் அகங்காரம் காணாமல்போகிறது. துரீயமும் ஆழ்துயில்தான். ஆனால் அது அகங்காரமே இல்லாத, தோன்றியே இராத நிலை. 'நான்' என்பதே இல்லாத நிலையில் மனிதன் முழுமையாகக் கடவுளுக்காகவே

இருப்பவன் ஆகிறான். அவன் இல்லாமல் போவதால் அவனுக்குப் பதிலாகக் கடவுளே எஞ்சியுள்ளார்.

'இப்படி முக்த (சுதந்திர) நிலையை அடைந்த முக்தன் தன்னில் நிலைத்தவனாக எதனிடத்தும் நல்லெண்ணம் கொண்டவனாக விளங்குவான். எல்லா இச்சைகளிலிருந்து விலகியவனாக, எங்கும் நிறைந்தவனாக வீற்றிருப்பான்.' **(சுலோகம் 167)**

**ப**க்குவம் பெற்றவன் (முக்தன்) எந்த சூழ்நிலையிலும் தன்னில் நிலைபெற்றவனாக இருப்பான். அவன் ஒருபோதும் சலனமடைய மாட்டான். அவன் தனது மையத்திலிருந்து அசையமாட்டான். மரம் தனது வேரில் உறுதியாக நிற்பதுபோல், அவன் தனது ஆத்மாவில் வேரூன்றியிருப்பான். இன்பம்-துன்பம், வெற்றி-தோல்வி, ஆரோக்கியம்-நோய் ஆகிய அனைத்து நிலையிலும் ஒரேமாதிரியாகத் திகழ்வான். எதற்கும் அவன் தடுமாறமாட்டான்.

அவன் நல்லெண்ணமே கொண்டிருப்பான். அவனது மனம் தூய்மையாக இருக்கும். அவனிடம் கடுமை இருக்காது. அவன் எதுவும் விசேஷமாகச் செய்யவேண்டியதில்லை. அவனை நெருங்கினால் அவனைச் சூழ்ந்திருக்கும் அமைதியை நாமும் உணர முடியும். அவனிடமிருந்து திரும்பிவருகையில் கங்கையில் குளித்தது போன்ற புத்துணர்ச்சியை உணர முடியும்.

மக்கள் புனித இடங்களுக்கு யாத்திரை செய்கின்றனர். அப்படி அலைய வேண்டியதில்லை. ஞானிதான் புண்ணிய தீர்த்தம். ஆகவே சமணர்கள் மகாவீரரை தீர்த்தங்கரர் என வணங்குகின்றனர். தீர்த்தம் என்பது குறிப்பிட்ட நதியில்லை. ஞானியைச் சுற்றியுள்ள பிரதேசம்தான் தீர்த்தம். உண்மையான கங்கை ஞானிகளுக்குள்ளே பிரவாகிக்கிறது. காசியிலுள்ள கங்கையால் உன் உடல் சுத்தமாகும் என்பது சரிதான். ஞானிகளுடன் தொடர்பேற்படுவது உன் ஆத்மாவும் கங்கையில் நீராடியதற்கு சமமாகும்.

ஞானி தரையிலோ, மரத்தின் கீழ் சாதாரண மண் மேடையிலோ இருக்கலாம். ஆனால் அவரது அருளாட்சி சுற்றிலும் நடைபெறுவதை நீ உணருவாய். அது தங்க சிம்மாசனத்தில்

உட்கார்ந்து சாதாரண அரசர்கள் நடத்தும் வெளிப்புறமான ஆட்சியன்று. மனிதர்களின் இதய சிம்மாசனத்தில் அமர்ந்து உள்முகமான ஆட்சியை ஞானி நடத்துகிறார். இதைத்தான் இயேசுநாதர் விண்ணரசு என்று குறிப்பிடுகிறார்.

இயேசுநாதரைப் பிடித்து கைதுசெய்ய அனுப்பப்பட்டவர்கள் அவர் பேச்சால் கவரப்பட்டுத் திரும்பிச் சென்றுவிட்டனர். எளிமையான தோற்றத்திலும் அவர் பேரரசர்போல் தெரிந்தார் என்றனர். அவரது தோற்றப் பொலிவிலிருந்து தப்பிக்கவே அவரை இரவில் சிறைப்பிடித்தனர்.

உடலில் ஆடையின்றி மகாவீரர் நிற்கிறார். ஆனால் ஒரு பேரரசரைப் போன்ற ராஜ கம்பீரத்துடன் விளங்குகிறார்.

**சு**வாமி ராம் என்று ஒரு துறவி இருந்தார். தன்னை மகாராஜா என்றே கூறிக்கொள்வார். 'மகாராஜா ராமரின் ஆறு கட்டளைகள்' என்று ஒரு நூலும் இவர் எழுதியுள்ளார். கோவணாண்டியான இவர் உலக மக்களுக்குக் கட்டளையிடுகிறார்! அவர் தமது அமெரிக்க விஜயத்தின்போதும் தம்மை மகாராஜா என்றே அறிவித்துக் கொண்டார். அமெரிக்க மக்கள் இதற்கான காரணம் கேட்டனர்.

சுவாமி ராம் பதிலளிக்கையில், "ஏனெனில் என்னிடம் எல்லாம் உள்ளன. நான் என் பெற்றோரின் சிறு வீட்டிலிருந்து வெளியேறிய அன்றிலிருந்தே அனைத்து உலகங்களும் என் வீடாகிவிட்டன. அவையே என் சொத்து. நான் சொல்லி சந்திரன்-நட்சத்திரங்கள் இயங்குகின்றன. சூரியன் எனக்காகவே உதிக்கிறான்," என்று தெரிவித்தார்.

மக்கள் அவருக்குச் சிறிய அளவில் மூளைக்கோளாறோ என சந்தேகித்தனர். ஆனால் சுவாமி ராம் சரியாகத்தான் சொன்னார். நீ என்பவன் இல்லாது போனால் உனக்குள்ளேயிருந்து கடவுள்தான் பேசுகிறார்.

அமெரிக்காவில் ஒருவர் வெளிப்படையாகவே, "சுவாமி, உங்கள் சங்கேதப்படியா உலக இயக்கம் நடக்கிறது?" என்று கேட்டார்.

சுவாமி ராம் உறுதியான குரலில், "வேறென்ன? வேறு யாருடைய சங்கேதப்படி உலகம் நடைபெற முடியும்? என்னைத் தவிர இந்த பிரபஞ்சத்தில் வேறு யார் உள்ளனர்? நான்தான் முதன்முதலாக ஓர் உதை கொடுத்து உலகைச் சுழல வைத்தேன். அப்போதும் நான் ஒருவன் மட்டுமே இருந்தேன். சந்திரன்-நட்சத்திரங்களைப் படைத்தவன் நானே. பிறகு அவற்றை இயக்கி வருபவனும் நானே," என்றார்.

நாடுகளை வென்றவன் உண்மையான மகாராஜா ஆகமாட்டான். மனத்தின் விருப்பங்களை வென்றவனே மாமன்னன். அவனுடன் ஒப்பிடுகையில் ஏனைய அரசர்கள் பிச்சைக் காரர்களே.

'பார்க்கிறான், கேட்கிறான், தொடுகிறான், முகர்கிறான், உண்கிறான், ஏற்கிறான், பேசுகிறான், நடக்கிறான், ஆனால் முயற்சி செய்வதிலிருந்தும், சும்மா இருப்பதிலிருந்தும் விலகி நிற்கிறான். இத்தகையவன் ஜீவன் முக்தன், உயிருடன் முக்திநிலையில் இருப்பவன்,' **(சுலோகம் 168)**

அவன் எல்லாம் செய்கிறான்; ஆனாலும் எதுவும் செய்வதில்லை. நடக்கிறான் ஆனாலும் நடப்பதில்லை. பேசுகிறான் ஆனால் பேசுவதில்லை. சாப்பிடுகிறான் ஆனால் சாப்பிடுவதில்லை.

**ஒ**ருமுறை கிருஷ்ணன்-ருக்மிணி யமுனை நதியின் ஒரு கரையில் முகாமிட்டிருந்தனர். நதியில் வெள்ளம். மறுகரையில் ஒரு முனிவர் தனியாகத் தெரிந்தார். 'அந்த முனிவர் அந்தக் கரையில் மாட்டிக் கொண்டுவிட்டாரே. அவருக்கு யார் உணவு கொண்டு போய்த்தர இருக்கிறார்கள்?' என்று ருக்மிணி பரிதாபப்பட்டாள்.

"நீ கொண்டுபோய்க் கொடேன்," கிருஷ்ணர் தூண்டினார்.

"எப்படி நதியைக் கடப்பது? வெள்ளத்தில் படகு போகாதே."

கிருஷ்ணர் உபாயம் சொன்னார், "நீ யமுனையைப் பார்த்து, 'நதியே, இந்த முனிவர் எப்பொழுதும் உபவாசம் இருப்பவராயின் எனக்கு வழிவிடு' என்று சொல்லு."

ருக்மிணி உணவெடுத்துக் கொண்டு நதிக்கரையை அடைந்து அவ்வாறே கூறியதும் யமுனை நடுவில் விலகி வழிவிட்டது! ருக்மிணி மறுகரைக்குச் சென்று முனிவருக்கு உணவளித்தாள். அதற்குள் நதிப்பாதை மீண்டும் வெள்ளத் தண்ணீராகி விட்டது. கிருஷ்ணர் இருக்கும் கரைக்கு எப்படித் திரும்புவது? தன் கண் எதிரேயே முனிவர் சாப்பிட்டுவிட்டதால் முன்பு கூறியதைத் திரும்பச் சொல்ல முடியாதே என்று ருக்மிணி குழம்பினாள்.

அவளது குழப்பத்தைக் கவனித்த முனிவர் அதற்கான காரணம் கேட்டார். ருக்மிணி தான் வந்த விதத்தைச் சொன்னாள். முனிவர் அவளிடம், "நீ வந்தபோது சொன்ன அதே வார்த்தை களையே இப்போது நீ திரும்புவதற்கும் உபயோகித்துப் பார்," என்றார்.

ருக்மிணிக்கு நம்பிக்கை இல்லை. முனிவர் சொன்னது போல் நான் சொன்னாலும் பொய் வார்த்தைகளைக் கேட்டு நதி எப்படி வழிவிடும் என்று அவளுக்குப் புரியவில்லை. வேறு வழி இல்லாததால் அவள் நதிக்கரைக்குத் திரும்பி முன்பு சொன்னதையே சொன்னாள். என்ன ஆச்சரியம்! நதி மீண்டும் பிரிந்து வழி உண்டாக்கித் தந்தது. மேலும் குழப்பத்துடன் அவள் கிருஷ்ணரை வந்தடைந்தாள். கிருஷ்ணர் விளக்கினார்: "முனிவர் எனப்படுபவர் எப்போதும் உபவாசம் இருப்பவராவார். உண்ணாமல் பட்டினி கிடப்பதற்கும் இதற்கும் சம்பந்தமில்லை. உனக்கு உபவாசம் என்னும் சொல்லின் அர்த்தம் தெரியுமா? ருக்மிணி? உப எனில் அருகில்; வாச எனில் வசித்தல், உட்காருதல். நமக்குள்ளே ஒருவர் வீற்றிருக்கிறாரே அவரின் அருகில் உட்காருவதே உபவாசம். உண்ணாமலிருப்பதற்கு உண்ணாவிரதம் என்று வேறு பெயர். அந்த உள்ளே இருப் பவனை விட்டுவிலகாமல், அந்த மையத்திலேயே நீடிப்பதே உபவாசமாகும்."

அந்த உள்ளே இருப்பவன் அவன் சாப்பிட்டாலும் சாப்பிடாததுபோல்தான். ஏனெனில் உணவு உடலுக்குள் போகுமே தவிர அவனுக்குள் போகாது. அவன் சாட்சியாக நீடித்திருப்பான். அவன் நடந்தாலும் நடக்காததுபோல்தான். ஏனெனில் நடப்பது

உடல் மட்டுமே. உடல் போககிறது. மனம் சிந்திக்கிறது. உண்மையான நீ இவை எல்லாவற்றையும் கடந்தவன். உடலின் எல்லா நடவடிக்கைகளின் பின்னணியில் அவன் சாட்சிபோல் அமைதியாக உள்ளான்.

அவன் குறிப்பிட்ட விதமாக எதுவும் செய்வதில்லை. நடப்பதை அப்படியே நடக்கவிடுகிறான். எல்லோருக்கும் வழிகாட்டு கிறான். தன் மூலமாகக் கடவுள் எதைச் செய்விக்கிறாரோ அது அவனுக்கு சம்மதம். தன்னுடைய நடவடிக்கைகளை அவன் கணக்குப் போட்டுக் குறித்து வைத்திருப்பதில்லை. அவன் எல்லா சூழ்நிலைகளிலும் தன்னைக் கடவுளுக்குப் பக்கமாக உணர்கிறான். அவன் எதிர்நீச்சல் போடுவதை நிறுத்திவிட்டான். அவன் நதியில் அதன் ஓட்டப்படி மிதந்து செல்கிறான். தடையற்ற இந்த பிரவாகத்தின் பெயர் ஜீவன் முக்தி.

'முக்தன் (ஆன்ம சுதந்திரம் பெற்றவன்) எதிலும் ஒட்டிக் கொள்வதில்லை. அவன் திட்டுவதில்லை, புகழ்வதில்லை, மகிழ்வதில்லை, கோபிப்பதில்லை, கொடுப்பதுமில்லை, வாங்குவது மில்லை' **(சுலோகம் 169)**

**மு**க்தன் பற்றற்றவன். ஏனெனில் அவன் பரம்பொருளை பற்றிக் கொண்டவன். உலக விஷயங்களில் அவனுக்குப் பிடிப்பு நீங்கிவிடுகிறது. நமக்குச் சுவையானவை எல்லாம் அவனுக்குச் சுவையற்றவையாய் உள்ளன. நம் நடவடிக்கைகளும் அவன் செயல்களும் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன.

நீ எதை ரசம் (சுவை) நிறைந்ததாகச் சொல்கிறாயோ, அது உண்மையில் அப்படி இல்லை. உன்னுடைய விருப்பங்கள் சுவை யானவையாக இருந்தால், உன் வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாக அல்லவா மாறியிருக்க வேண்டும். ஆனால் உன் வாழ்க்கை பாலைநிலம் போல் உலர்ந்தல்லவா கிடக்கிறது. உன் வாழ்க்கை யில் ஒரு பூகூட மலரவில்லை. எங்கும் முள்மயம்தான். எப்போதும் துன்பம்தான்.

நீ ஞானியின் கோணத்திலிருந்து பார்த்தால், உன் வாழ்க்கையில் வேறு இடத்தில் ரசம் அல்லது இன்பத்தின் ஊற்று

இருப்பது தெரியவரும். உன் வாழ்க்கை மகாகாவியம்போல் சிறப்பாக ஆக முடியும். அதில் தெய்வீக சங்கீதம் ஒலிக்கும்.

ஆனால் மதத் தலைவர்கள் ரசம் நிறைந்த ஞானிகள் அல்லர். அவர்கள் உலர்ந்துபோனவர்கள். குடும்ப வாழ்க்கையை அவர்கள் உதறித் தள்ளிவிட்டதால், நீ அவர்களை தியாகிகளெனப் புகழ்கிறாய். அவர்கள் உனக்குக் கட்டுப்பாடுகளை விதித்து உன் வாழ்க்கையையும் வறண்டுபோகச் செய்கிறார்கள்.

நீயாக எதையும் வலிந்து தியாகம் செய்ய வேண்டிய தில்லை. இறை உணர்வு என்னும் ரசத்தை நீ பருகப் பருக, உலகப் பற்றுகளும் தொடர்புகளும் தாமாகவே அகன்றுவிடும். உயர்ந்த பொருள் கைக்குக் கிடைக்கும்போது அற்பப் பொருள்கள் தாமாகவே அகன்றுவிடுவது வழக்கம்தான். இதுதான் இயற்கையான தியாகம். இதற்கு எந்த முயற்சியும் தேவையில்லை. 'நான் தியாகம் செய்தேன்' என்னும் அகங்கார உணர்வு எழுவதில்லை.

சராசரி மனிதர்கள் பிறரை நிந்திப்பதில் சுவை காண் கிறார்கள். அப்போது அதன் பிரதிபலிப்பு அவர்களது முகத்திலும் தெரிகிறது. அவர்கள் ஒரு புது சக்தியை உணர்கிறார்கள். நீ குறை கூறித் திட்டுவதற்கு யாருமே இல்லாமல் போனால் உனக்குச் சலிப்பாகத் தோன்றும்.

உனக்குப் பிறரை நிந்திப்பது ஏன் பிடித்திருக்கிறது? பிறரை நிந்திக்கும்போது மக்கள் ஏன் சந்தோஷப்படுகிறார்கள்? காவிய இலக்கணத்தில் ஒன்பது சுவைகளை (நவரசம்) கூறுகிறார்கள். நிந்திப்பது ஏன் விடப்பட்டது? அதுவும் சுவை உடையதாயிற்றே. காவிய ரசங்களை மக்கள் எப்பொழுதாவதுதான் அனுபவிக் கிறார்கள். ஆனால் நிந்தை ரசம் எல்லா காலங்களிலும்ம் இடங் களிலும் பரவியுள்ளதே. ஒருவன் உன்னிடம் இன்னொருவனை நிந்தித்துப் பேசினால், நீ மற்ற வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு அந்தப் பேச்சை விரும்பிக் கேட்கிறாய். அவன் பாதியில் நிறுத்திவிட்டு மீதியை அடுத்த நாள் சொல்வதாகக் கூறினால் நீ தவிக்கிறாய். ஒரேயடியாக முழுத் தகவலையும் சொல்லிவிட்டுப் போகுமாறு கெஞ்சுகிறாய்.

பிறரை நிந்திப்பது ஏன் சுவையாக உள்ளது? நிந்திக்கும் போது பிறரை மட்டம்தட்டுகிறோம். அப்போது நாம் உயர்ந்தவர் களெனப் பெருமிதம் அடைகிறோம். பிறரை நிந்தித்தல் என்பது நாம் நேர்டியாகவோ, மறைமுகமாகவோ நம்மையே பாராட்டிக் கொள்ள வாய்ப்பாக அமைகிறது.

**அ**க்பர் தமது அவையில் ஒருநாள் ஒரு கோடுபோட்டு, அதைத் **தொடாமலேயே** அதைச் சிறியதாகக் காட்ட முடியுமா என்று கேட்டார். எல்லோரும் திகைத்தனர். பீர்பல் அந்தச் சிறிய கோட்டின் அருகில் ஒரு பெரிய கோடு போட்டார். இப்போது தொடாமலே ஒரு கோடு சிறியதாகிவிட்டது. நிந்தித்தல் என்பது தான் பெரிய கோடு. அது பிறரைத் தாழ்வுபடுத்தி விடுகிறது. 'மற்றவர்கள் முட்டாள்கள், நான்தான் புத்திசாலி' என்று நிந்திப்பவன் நினைக்கிறான்.

இன்னொரு விஷயம், ஒருவன் இன்னொருவனை நிந்தித்தால் நீ அதற்குச் சான்று கேட்பதில்லை. ஆனால் இன்னொருவன் புகழப்பட்டால், அதற்கான காரணத்தை நிரூபிக்கச் சொல்கிறாய். ஒருவர் ஞானமடைந்து விட்டார் என்று கூறப்பட்டால் அதற்கு என்ன சான்று என்று கேட்கிறாய். ஆனால் யாரேனும் ஒரு பெரிய மனிதர் ஒழுக்கத்தில் சரிந்துவிட்டார் என்று கேள்விப்பட்டால், நீ அதற்கு ஆதாரம் கேட்பதில்லை. 'எனக்கு அந்த ஆளைப் பற்றி முன்பே சந்தேகம்தான். அவரைப் பற்றி நான் உயர்வாக நினைத்ததில்லை' என்று உன்னையே நீ மெச்சிக்கொள்கிறாய். உன் கோடு பெரிதாக இருக்க வேண்டு மென்று உனக்கு ஆசை.

ஆனாலும் ஒரு விதிவிலக்கு. குறிப்பிட்ட சிலர் புகழப்பட்டால் நீ அதில் சுவை காண்கிறாய். நீ யாரை குருவென வரிக்கிறாயோ, அவரை நீயும் மனமாரப் புகழ்கிறாய். மகாகுரு, ஜகத்குரு என்றெல்லாம் போற்றுகிறாய். மற்றவர்கள் அவரைப் போலி ஆசாமி என்று நினைக்கக்கூடும். ஒருவரை நீ ஏன் மகாகுரு என்று புகழ்கிறாய்? அப்போதுதான் அவரும் மற்றவர்களும் உன்னை மகாசீடன் என்று பாராட்டுவார்கள். அவரது கோடு போலவே உன் கோடும் அமைந்துவிடும். அவரது

கோடு நீண்டால் தலைமைச் சீடனாகிய உனது கோடும் நீண்டுவிடுமென உனக்குத் தெரியும்.

இதுபோல் உனக்கு வேண்டியவர்களையும் நீ புகழ்கிறாய். நீ உன் மகனை ஆயிரத்தில் ஒருவன் என்று பாராட்டுகிறாய். அதேபோல்தான் மற்றவர்களும் தங்கள் குழந்தைகளைப் புகழ் கிறார்கள். இது உண்மையானால், சமூகம் சாதனையாளர்களால் ஏன் நிரம்பி வழியவில்லை? இந்த 'ஆயிரத்தில் ஒருவர்கள்' எல்லாம் பிற்காலத்தில் எங்கே காணாமல் போகிறார்கள்? பழத்தை வைத்து மரத்தை மதிப்பிடுவதானால், நீயும் சாதாரணமானவன்தான் என்ற முடிவுக்குவர நேரிடும்.

என் நண்பர் ஒருவருக்கு இரண்டு மகன்கள். ஒருவர் மத்திய அரசில் மந்திரி; மற்றவர் உள்ளூரில் மளிகைக் கடைக் காரர். நண்பர் தன் அமைச்சர் மகனைப் பற்றியே எப்போதும் பேசுவார். நான் இரண்டாவது மகனைப் பற்றி விசாரித்தால், "அவனைப் பற்றி சொல்ல என்ன இருக்கிறது?" என்று சலித்துக் கொள்வார். அவர் தன்னை மோதிலால் நேருவெனக் கற்பனை செய்தார். தன் மூத்தமகன் ஜவஹர்லால் நேருவைப் போலவே பிரதமராகிவிடுவான் என்று எதிர்பார்த்தார். பிரதமரின் தந்தை யென்றால் மாபெரும் கௌரவம் உண்டு. மளிகைக் கடைக்காரரின் தந்தைக்கு சமூகத்தில் என்ன அந்தஸ்து இருக்க முடியும்?

ஆனால் மந்திரியான மூத்த மகன் பல குற்றச்சாட்டுகளால் பாதிக்கப்பட்டார். மன இறுக்கத்திற்கு ஆளானார். எப்பொழுதும் பணிச் சுமை இருந்ததால் ஆரோக்கியத்தைக் கவனிக்கவில்லை. எனவே நடுவயதில் திடீரென இறந்துவிட்டார். நண்பர் சோகத்தால் தற்கொலை செய்து கொள்ள முயலும் அளவிற்கு மனம் உடைந்து போனார். நான் அவரிடம், "உங்கள் இரண்டாம் மகன் இறந்து போயிருந்தால் இந்த அளவிற்குத் துன்பப்பட்டிருப்பீர்களா?" என்று விசாரித்தேன். அவர் என்னைப் பார்த்து, "நீங்கள் ஏன் எப்போதும் இரண்டாம் மகனைப் பற்றியே நினைவூட்டுகிறீர்கள்?" என்று கேட்டார். "உங்களுக்குத் தந்தையின் இதயம் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ளத்தான்," என்று பதில் சொன்னேன்.

அவர் சும்மா இருக்கவில்லை. இரண்டாவது மகனைக் கொஞ்சம் கொஞ்சமாக அரசியலில் தள்ளி, சில ஆண்டுகளி

லேயே அமைச்சர் பதவி பெறச் செய்துவிட்டார். பிறகு எப்போதும் இரண்டாம் மகனைப் பற்றியே பேசிவருகிறார். மூத்த மகனை மறந்துவிட்டார்.'

உன் அகங்காரத்தை (பெருமித உணர்வை) யாருடன் சேர்க்கிறாயா அவரையே போற்றுகிறாய். கடவுளின் ஒரே மகன் என்று அழுத்தம் தருவதற்காகவே மகாவீரர், புத்தர், இயேசுநாதர் ஆகியோருக்கு சகோதரர் அமைந்திருக்கவில்லை. அந்தந்த மதத்தினர் அந்த ஒருவரை மட்டுமே துதிக்க வேண்டுமென்று அர்த்தம்.

இதேபோலவே குறிப்பிட்ட ஒருவர்தான் இறைவனின் தூதர் என்றும், குறிப்பிட்ட ஒரு நூல்தான் இறைவன் அருளியது என்றும் அடையாளம் காட்டப்படுகிறது. இதற்குமேல் இடங்கொடுத்தால் இறைத் தூதர் என்று தம்மை அறிவித்துக்கொள்வோர் பலர் தோன்றி விடுவார்கள். இறைவன் அருளியவை வேறு-வேறு நூல்கள் என்று வாத விவாதம் எழும். இந்துக்களின் பார்வையில் பரமாத்மாவின் நூல் வேதங்களாகும்.

ஆரிய சமாஜத்தினர்* வேதங்களைக் கொண்டாடுகின்றனர். அந்த அமைப்பைச் சேர்ந்த ஒருவர் என்னைச் சந்தித்தார். "நீங்கள் பைபிளை மிகவும் புகழ்கிறீர்கள். இயேசுநாதரையும் மிகவும் புகழ்கிறீர்கள். நாங்கள் சொல்வதையும் காது கொடுத்துக் கேளுங்களேன். பரமாத்மா முதன் முதலாக வேதங்களைப் படைத்தளித்தார். ஆகவே வேதங்களே உலகில் தொன்மையான நூல்கள். அவை கடவுள் அருளியவை என்பதால் அவற்றில் குறையோ, பிழையோ இருக்க முடியாது. அதில் திருத்தி எழுத வேண்டிய பகுதி எதுவும் கிடையாது. எல்லா மதங்களும் பிற்காலத்தில்தான் உதித்தன. அவை மனிதன் உருவாக்கியவை. மற்ற புனித நூல்கள் மனிதர்களால் மொழியப்பட்டவை என்பதால் கடவுள் படைத்த வேதங்களே உலகின் முதல் நூல்களாகும்.

---

* ஆரிய சமாஜம் 1875இல் லாகூரில் சுவாமி தயானந்த ஸரஸ்வதியால் தோற்றுவிக்கப்பட்டது. 'வேதங்களை நோக்கித் திரும்பிச் செல்க' என்பது அவரது முழக்கம். அவர் எழுதிய 'சத்யார்த்த பிரகாஷ்' ஆரிய சமாஜத்தின் அடிப்படை நூலாகும்.

"புனித நூல்களெனக் கூறப்படும் மற்றவை மனிதர்களால் படைக்கப்பட்டவை. இந்துக்கள் வேதங்களைத் தங்களுடன் இணைத்துக்கொண்டு, அவற்றின் தொகுப்பே கடவுள் அருளிய முதல் நூல் என்று கூற, அதனால்தான் இந்து மதத்தை சனாதன மதம் என்னும் பெயரால் வழங்குகிறார்கள்" என்று வாதாடினார்.

ஆனால் யோசியுங்கள். கால ஓட்டத்தில் எல்லாம் மாறுதலடைகின்றன. ஆகவே எந்த புனித நூலும் காலத்திற்கு ஒவ்வாத, நீக்கப்பட வேண்டிய பகுதிகளைக் கொண்டிருக்கின்றன. அவை எந்தத் தலைமுறை மக்களைக் கருத்தினில் கொண்டு எழுதப்பட்டனவோ அவர்களும் இன்றில்லை. அவை தொடக்கப் பள்ளி மாணவர்களுக்காக எழுதப்பட்டவை போன்றவை. நாமோ வளர்ச்சி பெற்றுவிட்டோம். பல்கலைக்கழக மாணவர்களுக்கு ஏற்றவைபோல் உள்ள உயர்தரமான ஆன்மிக நூல்களே இப்போது தேவை.

நீ நிந்தனையிலும் சுவை காணாதே. துதியிலும் சுவை காணாதிரு. இந்த இரண்டு வகைச் சுவைகளுமே ஆரோக்கிய மானவை அல்ல. இவற்றை நோய்களென்று கூறலாம். இந்த இரண்டையுமே கைவிட்டால், உன் அகங்காரம் ஆதாரம் எதுவும் இல்லாமல் பலகீனமாகிவிடும். பிறகு எதுவும் கொடுப்பதற்கும் இல்லை கொள்வதற்கும் இல்லை. எது எப்படியோ அப்படியே இருக்கிறது.

முக்தன் பிறரிடமிருந்து பெறுவதற்கு எதுவுமில்லை. அவன் பிறருக்கு எதுவும் தரவேண்டியதுமில்லை. எல்லாம் அவனுடைய வையே அல்லது எதுவும் அவனுக்குச் சொந்தமானதன்று. எல்லாம் அவனுக்குக் கிடைத்துள்ளது. யாரிடமிருந்தும் அவனுக்கு எந்த எதிர்பார்ப்பும் இல்லை. அவை அனைத்துடனும் அவன் ஒன்றிவிட்டான்; அனைவருடனும் ஒன்றிவிட்டான்.

ஒவ்வொருவனின் உள்ளத்தினுள்ளும் கடவுள் மறைந்து நிற்கிறார் — கல்லினுள் உருவம் மறைந்திருப்பதுபோல. சற்று செதுக்கி வெளியே கொண்டுவர வேண்டும். இது கடினமானதன்று. ஆனால் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

> **ஓஷோ அவர்களே! நீங்கள் உலகைப் பொறுத்தவரை திருப்தியுடனிருந்து போது மென்றிருந்து, கடவுளைப் பொறுத்த வரையிலும் அதிருப்தியுடன் இருக்க வேண்டும் என்றீர்கள். இன்னொரு சமயம் நீங்கள் உலக விருப்பம் எதுவும் இருக்கக் கூடாது; எதற்கும் ஆசைப்படக்கூடாது; இருப்பதை அப்படியே ஏற்க வேண்டும்; சாட்சி மனப்பான்மை வேண்டும் என்றும் சொன்னீர்கள். இந்த இரண்டு கருத்துகளும் முரண்படுகின்றனவே.**

முரண்பாடுபோல் தெரிகிறதே தவிர அவை வேறு பட்டிருக்கவில்லை. உனக்கு அடிப்படை சத்தியம் புலப்படாததால் மேலாக உணர்வதைக் கூறுகிறாய். சத்தியத்தின் மொழி வேறானது.

உதாரணமாக, காதலில் அல்லது அன்பில் தோல்விதான் வெற்றி என்று ஒருவர் கூறுகிறார். இது முரணாகத் தெரிகிறது. தோல்வி எப்படி வெற்றியாக முடியும்? ஆனால் உன் வாழ்க்கையில் ஒரு துளி அன்பாவது உன்னை ஈரமாக்கியிருந்தால், காற்று வீச்சுபோல் அன்பு உன்னை ஒருமுறையாவது வருடி யிருந்தால், மனக் கடலில் அன்பின் ஓர் அலையாவது எழும்பி யிருந்தால், காதல் அல்லது அன்பில் தோல்வியும் ஒரு வெற்றியே என்பது புரிந்துபோயிருக்கும்.

அன்பில் தோல்வியடைதல்தான் வெற்றியின் அடையாளம். தோற்றவன் வென்றான். தன்னை சமர்ப்பிப்பதுதான் அன்பில் வெற்றி பெறும் வழியாகும். அன்பு என்பதை அறிந்திருந்தால்தான்

அன்பின் மொழியும் புரிய வரும்; அதன் அகராதி வேறு எனத் தெரிய வரும். ஆனால் நீ அறிந்துள்ளது கத்தியின் மொழியையே. நீ நம்பியது வன்முறையின் மொழியையே. பிறரை நசுக்கு வதையே நீ வெற்றி என்று நினைத்து வந்திருக்கிறாய். அடங்கிப் போயும், பணிந்தும்கூட ஒருவன் வெற்றிபெற முடியும் என்பதை நீ அறிந்திருக்கவில்லை.

கடவுளை அடைய முடியவில்லை என்னும் அதிருப்தி உண்மையில் மகாதிருப்தியான உணர்வாகும். உலகிலோ திருப்தி தருவதுபோல் தோன்றியவை முடிவில் அதிருப்தியே தருகின்றன. உலகத்தின் வழக்கமே எரிவதும் எரிப்பதும்தான். எங்கும் நெருப்பாக தகிக்கிறது.

**பு**த்தர் அரண்மனையை விட்டு வெளியேறுவதைச் சிலர் கவனித்தார்களாம். தடுத்து அறிவுரை கூறினார்களாம். "எங்கே கிளம்பிவிட்டீர்கள்? சற்று திரும்பிப் பாருங்கள். அதோ உங்கள் தங்கமாளிகை. அங்கே சுகக் குவியல். திருப்தி தரும் பொருள்கள். அழகான மனைவி. சிறு வயது மகன், வயதான பெற்றோர். இத்தகைய சுகமான சூழ்நிலை வேறு எங்கே கிடைக்கும்?" என்று கேட்டனர்.

அவர்கள் விரும்பியபடியே புத்தர் ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டுச் சொன்னார்: "நீங்கள் சொல்வதுபோல் அப்படி எதுவும் தெரியவில்லையே. எங்கேயும் கொழுந்துவிட்டு நெருப்பு எரிகிறதே. எல்லாம் பற்றி எரிகிறது. நீங்கள் கூறும் தங்க மாளிகையோ, மனைவி-மகன்-பெற்றோரோ கண்ணுக்குத் தெரியவில்லையே." அடுத்து அவர் தேரோட்டியிடம், "சாரதி! நீ ரதத்துடன் திரும்பிச் செல். நான் அந்த நெருப்பு சுவாலைகளை நோக்கித் திரும்பிவருவதாக இல்லை," என்று கட்டளையிட்டார்.

தேரோட்டி அவர் மனத்தை மாற்ற மிகவும் முயன்றான். அவன் வயதானவன். குழந்தைப் பருவத்திலிருந்தே புத்தருடன் பழகியவன். அவர் வளர்வதைக் கவனித்தவன். புத்தர் மீது அவனுக்கு அளவற்ற பிரியம். அவன் என்ன சொல்லியும் புத்தர் கேட்காததால் அவன் கடைசி அஸ்திரத்தை பிரயோகித்தான். "நீர்

ஒரு கோழை. உண்மையான க்ஷத்திரியனில்லை. வாழ்க்கையை எதிர்த்து நிற்காமல் புறமுதுகு காட்டி ஓடுகிறீர்," என்று ஏசினான்.

புத்தர் சிரித்தார். "வீட்டிலே நெருப்புப் பிடித்துக் கொண்டால் அதைவிட்டு ஓடுபவனைக் கோழையென்றா இகழ்வது? அப்படி வெளியேறாமல் நெருப்பிலேயே உட்கார்ந் திருப்பவன் அறிவாளியா?" என்று திருப்பிக் கேட்டார்.

சாரதி மறுத்தான். "நெருப்பு எதுவும் கண்ணில் தென்படவில்லையே," என்றான்.

புத்தர் சொன்னார், "அதுதானப்பா பிரச்சினை. நெருப்பு எரிவது எனக்குத் தெரிகிறதே. அது உனக்குத் தெரியவில்லை. நாம் பேசும் மொழிகள் வேறுபோல் உள்ளன. நான் சொல்வது ஒன்று நீ புரிந்துகொள்வது வேறொன்று. நம்மிடையே புரிதல் இல்லாமல் போய்விட்டது."

உலகில் திருப்தி எங்கே இருக்கிறது? இங்கு எதுவும் தோற்றமே. யாராவது நம்மிடம், "நீங்க எப்படி இருக்கீங்க?" என்று கேட்டால், நாம் "நல்லாத்தான் இருக்கிறேன்," என்று சொல் கிறோம். இது ஒப்புக்கான கேள்வி. நமது பதிலும் நாகரிகம் கருதித்தான். ஆனால் உண்மையிலேயே நாம் நன்றாகத்தான் இருக்கிறோமா? தனிமையில் சில நிமிடம் அமர்ந்து அன்றன்று எல்லாம் நன்றாகத்தான் நடந்ததா என யோசித்தால் உண்மையை அறியலாம்.

உலகில் எதுவும் சரியாக இல்லை. உலகின் சுபாவப்படி அதன் குறைகளைப் போக்க முடியாது. இருப்பதெல்லாம் எப்படியோ அப்படியே திருப்திகொள்ள வேண்டியதுதான். இதைத்தான் நான் சாட்சி மனப்பான்மை என்கிறேன். பிறகு நீ எதற்கும் அலட்டிக்கொள்ள மாட்டாய். நீ எத்துணை ஆர்ப்பாட்டம் செய்தாலும் உலகம் தன் வழியிலேயே போய்க்கொண்டிருக்கும்.

**அ**மெரிக்கப் பெண்மணி ஒருத்தி பல்பொருள் அங்காடியில் பொம்மைகள் வாங்கிக் கொண்டிருந்தாள். குழந்தைகளின் மூளை வளர்ச்சிக்கு உதவும் விளையாட்டிற்காக பிளாஸ்டிக் சில்லுகள் கொண்ட பெட்டி ஒன்றை அவள் வாங்கினாள். அங்கேயே அவள்

அவற்றைப் பலவிதமாக அடுக்கிப் பார்த்தாள். முழுமையான உருவம் எதுவும் அமையவில்லை. அவளுடன் அவள் கணவரும் வந்திருந்தார். கணிதப் பேராசிரியரான அவர் ஜ்யாமிட்ரி (ஜியோமிதி) அடிப்படையில் அவற்றை அடுக்கிப் பார்த்தார். அவராலும் ஓர் உருவத்தை உண்டாக்க முடியவில்லை.

இருவரும் கடை முதலாளியிடம் சென்று, "எங்களாலேயே முடியாததை சிறு வயதினான எங்கள் மகள் எப்படி அடுக்கி பொம்மை உருவம் தர முடியும்?" என்று கேட்டனர்.

கடை முதலாளி சிரித்தார். "இந்த விளையாட்டின் அடிப்படையே இந்தத் துண்டுகளை எப்படி அடுக்கினாலும் உருவம் அமையாது என்பதுதான். இதன் மூலம் சிறுவர்கள் கற்கும் பாடத்தை அவர்களேகூட பிற்காலத்தில்தான் உணர்வார்கள். அந்தப் பாடம் என்னவென்றால், நாம் எத்துணை முயற்சி செய்தாலும் வாழ்க்கை ஓர் ஒழுங்குமுறைக்குக் கட்டுப்படாது என்பதுதான்," என்று அவர் விளக்கினார்.

வாழ்க்கையில் முழுமை கிடைத்துவிட்டால் நீ கடவுளை எங்கே தேடப் போகிறாய்.* முழுமையைத் தேடும் பயணம்தான் கடவுளை நோக்கிய பயணமாக அமைகிறது. இங்கேயே பூரணத்துவம் நிறைந்திருந்தால், புத்தர் அரண்மனையைவிட்டு நீங்கியிருப்பாரா? உலகில் எதிலும் பூரணத்துவம் நிறைந்து விட்டால், பிறகு கடவுளைத் தேடுதல் நின்றுவிடும். ஏனெனில் பூரணத்துவம்தான், பரிபூரணன்தான் கடவுள்.

உலகில் முழுதிருப்தி கிடைக்காதெனில் நாம் மேற்கொண்டு என்ன செய்வது? என் ஆலோசனைப்படி, எது எப்படி இருக்கிறதோ — அது குறைவாயினும் மிகுந்திருந்தாலும்— அதை அப்படியே ஏற்றுக் கொள்வோம். இதனால் திருப்தி அடைந்துவிட்டோம் என்று அர்த்தமில்லை. இதற்குமேல் அலட்டிக்கொள்ளாதே என்றுதான் இதற்கு அர்த்தம். இன்னும் கடவுளை அடைய முடியவில்லையே என்பதற்காக அதிருப்திப்படு. கடவுள் விஷயத்தில் அதிருப்திதான் திருப்தியாக

* Ah, but a man's reach should exceed his grasp or what's a heaven for? (Robert Browning)

எண்ணப்படும். அங்கே தாகம்தான் தாகம் தணிந்ததற்கான அறிகுறி. கடவுள் விஷயத்தில் தாகம் அதிகரிக்கும் அளவிற்கேற்ப குளமே உன்னை நெருங்கிவரத் தொடங்கும். ஒரு கட்டத்தில் தாகமே பேருருவம் எடுத்து, நீ மிஞ்சாமல் போனால், அப்போது கடவுளின் அருளெனும் மாமழை பொழியும்.

**ஷேக்** ஃபரீத் என்று ஒரு துறவி. அவர் ஒரு நதியின் கரையில் உட்கார்ந்திருந்தபோது, ஒருவன் அவரை அணுகி, "கடவுளை எப்படி அடைவது?" என்று கேட்டார்.

ஃபரீத் சற்று வித்தியாசமான துறவி. அவர் அவனைப் பார்த்து, "நான் இப்போது நதியில் குளிக்கப் போகிறேன். நீயும் என்னுடன் சேர்ந்து குளிக்க வா. குளித்த பிறகு உன் கேள்விக்குப் பதில் சொல்கிறேன். அல்லது வாய்ப்பு நேர்ந்தால், நாம் குளிக்கும்போதே வழி சொல்கிறேன்," என்றார்.

அந்த மனிதன் சற்று பயந்து போனான். குளித்தபின் சொல்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. முடிந்தால் குளிக்கும் போது சொல்கிறேன் என்கிறாரே. அது எப்படி சாத்தியமாகும்? 'சரி, வந்தாகிவிட்டது, என்ன நடக்கிறதெனப் பார்த்துவிடலாம்' என அவனும் துறவியுடன் நதியில் இறங்கிவிட்டான்.

அந்தத் துறவி அந்த மனிதனைக் காட்டிலும் பலசாலி. அந்த மனிதன் தண்ணீருக்குள் அமிழ்ந்தபோது துறவி அவன் கழுத்தைப் பிடித்துக்கொண்டு அவன் தலைதூக்க முடியாதபடி செய்தார். சில வினாடிகளுக்குப் பின் அவர் தன் கையைத் தளர்த்தினார். அவன் எரிமலையாக வெடித்தான். "நான் உங்களிடம் வந்தது கடவுளைத் தேடி அலைந்து அடைவதற்காகத்தானே தவிர, இப்படிக் கொலை செய்யப்பட்டுக் கடவுளை அடைவதற்கன்று," என்று அவன் குமுறினான். துறவி பதில் கூறவில்லை. இருவரும் கரையை அடைந்தனர்.

துறவி கேட்டார், "நீ தண்ணீரில் மூழ்கியபோது என்னென்ன ஆசைகள் தோன்றின?"

"ஆசைகளா! ஒரு ஆசைதான் மிஞ்சியிருந்தது. ஒரு முறையாவது வெளிக்காற்றை சுவாசிக்க வேண்டும் என்பதுதான்

அந்த ஆசை. அந்த ஆசையும் நினைவில் எழ முடியாத மனநிலையில் இருந்தேன். எனக்கும் என் சுவாசத்துக்குமிடையே இடைவெளியே உணரவில்லை. நானே அந்த ஆசையாக, அந்த சுவாசமாகிப் போனேன்." -அவன் பரிதாபமாகக் கூறினான்.

துறவி சொன்னார்: "அதுதானப்பா உன் கேள்விக்கு எனது பதில். கடவுளைத் தேடிப் பயணிப்பதில் ஒரு கட்டம் வரும். அது இறுதிக் கட்டம். தேடுபவனுக்கும் அவன் தேடிய விஷயத்திற்கு மிடையே வேறுபாடு எதுவும் இருக்காது. அப்போது நீ கடவுளை உணர்வாய்.

ஆழ்ந்த தாகத்திலேயே
உளது அதன் திருப்தியும்
கேள்விக்குப் பதில் கிடைக்க,
நீயே கேள்வி ஆகிவிடு
இசை பிறக்க வேண்டுமானால்
நீயே பாட்டாகிவிடு
பயிற்சியிலேயே வெற்றி உளது
வெற்றி வராது வெளியிலிருந்து

ஆத்மதரிசனக் கதவைத் திற
முக்தி வரும் வழி அதுவே
அகங்காரப் போர்வையை உதறி எறி
முக்தி உனக்கு வசமாகும்
நீயே கோயில், நீயே பூஜை
சிலை என்பது வெளியில் இல்லை

பூரணத்திற்கும் சூனியத்திற்கும்
வேறுபாடு இல்லை இடையே
அவை ஒரே நிலை இரண்டு தோற்றம்
ஒரே கடல்தான் உள்ளது எங்கும்
பார்வைக்கு மட்டுமே வெவ்வேறு
காண்பவனுக்கும் காட்சிக்குமிடையே
தரகர்-முகவர் கிடையாது
பார்வை என்பது நம்மிடமே உள்ளது

கடவுளை அடைய, கடவுளை அறிய, அடங்காத தாகங் கொள். அந்தத் தாகத்திலிருந்தே திருப்தியும் தோன்றும். அந்தத்

தாக விதையிலிருந்து திருப்தி மரம் வளரும். தாகம் உனக்கு, திருப்தி வெளியிலிருந்து என்பது ஆன்மிகத்தில் எடுபடாது. தாகம் கர்ப்பமென்றால் திருப்தி அதில் வளரும் சிசு.

ரமண மகரிஷி தன் சீடர்களிடம் 'நான் யார்?' என்று இடைவிடாமல் கேட்டுக்கொண்டே இருங்கள் என்றார். ஜார்ஜ் ஆஸ்பர்ன் (George Osborne) என்ற தத்துவ அறிஞர் ரமணரைச் சந்தித்தார். அவர், "நான் யார் என்று இடைவிடாமல் கேட்டபடி இருந்தால் பதில் கிடைத்துவிடுமா?" என்று விசாரித்தார்.

ரமணர் திருப்பிக் கேட்டார்: "பதிலா! கேள்வியிலேயே பதில் மறைந்துள்ளதே. உன்னுடைய எல்லாவற்றையும் பணயம் வைத்து, உறுதியாக இக்கேள்வியைக் கேட்கும் நிலை வந்தால், கேள்வியே பதிலாகிவிடும். பதில் வெளியிலிருந்து வராது, கிடைக்காது. உனக்குக் கிடைக்கக்கூடியது உனக்குள்ளேயே மறைந்துள்ளது. வெளியே நீ நிறையத்தான் தேடிவிட்டாய். போதும். இனி உனக்குள்ளேயே தேடு."

எதற்கும் ஆசைப்படக் கூடாது என்று சொன்னேன். கடவுள் என்பவர் நாம் ஆசைப்பட்டு வெளியிலிருந்து பெறும் பொருள் இல்லை. அவர் நமது சுபாவமாக நம்மிடம் ஏற்கெனவே அமைந்துள்ளார். அவரை நீ தொலைத்துவிடவும் முடியாது. சில சமயம் மறக்க மட்டும் செய்யலாம். ஆசை, விருப்பம் வெளிப்பொருட்களுடன்தான் சம்பந்தப்பட்டவை.

ஓர் இளைஞன் என்னிடம் வந்து, "சுவாமி, நான் உங்களிடம் சந்நியாசம் பெற்றுக்கொண்டால், நீங்கள் எனக்கு என்ன வழங்குவீர்கள்?" என்று கேட்டான்.

"உன்னிடம் ஏற்கெனவே உள்ளதையே உனக்கு அறிமுகப் படுத்தி அதைத் தருவேன். உன்னிடம் என்ன இல்லையோ, இருக்கக்கூடாதோ அதைப் பிடுங்கிக் கொள்வேன்," என்று பதிலளித்தேன்.

சில விஷயங்கள் உன்னிடம் இல்லை. ஆனால் அவை உன்னிடம் உள்ளதென நினைக்கிறாய். வேறு சில உன்னிடம்

ஏற்கெனவே உள்ளன. ஆனால் அவை உன்னிடம் உள்ளதை நீ உணரவில்லை. உன்னிடம் உள்ள அதைத்தான் நினைவூட்டி உனக்கு வழங்குவேன்.

ஆத்ம தரிசனம் அல்லது கடவுள் தரிசனத்திற்கு இரண்டு வழிகள் உண்டென நான் பலமுறை கூறிவந்திருக்கிறேன். அன்பு வழி, தியான வழி என்பவையே அவை. நீ அன்பு வழியில் செல்பவனானால், சாட்சி கொள்கையை மறந்துவிடு. அங்கே சாட்சிக்கு இடமில்லை. அன்பு கொண்டவன் பார்ப்பதுடன் நில்லாது நுகரவும் விரும்புவான். அன்புள்ளம் தரிசனத்துடன் நில்லாது கடவுளை அனுபவிப்பான். அவனிடம் உணர்ச்சிக் கொந்தளிப்பு காணப்படும்.

ஆனால் உன்னால் அன்பு வழியில் செல்ல முடியாவிடில், அன்பு உணர்வு உன்னிடம் சுபாவமாக அமைந்திராவிடில், நீ தியான வழியில் செல். அதன் மூலம் சாட்சி மனப்பான்மை கைகூடும். ஆன்மிக திருப்தி பெறுவாய்.

அன்பு சொல்லும் — எது உள்ளதோ அதில் மூழ்கு.

சாட்சி சொல்லும் — எது உள்ளதோ அதைப் பார்

அன்பு சொல்லும் — கடலில் இறங்கி அமிழ்ந்து குளி.

சாட்சி சொல்லும் — கரையில் அமர்ந்து அலைகளைப் பார்

இந்த இரண்டு கண்ணோட்டங்களும் ஒரே இலக்கிற்கே நம்மைக் கொண்டுப்போய்ச் சேர்ப்பிக்கின்றன. வழிகள்தாம் வெவ்வேறு; சேருமிடம் ஒன்றேதான். ஒரு பொருளைக் குறிப்பிட பல சொற்கள் இருப்பது போல்தான் இதுவும்.

தியானமும் பக்தியும் கடைசிக் கட்டத்தில் சந்தித்து விடுகின்றன. அந்தக் கட்டத்தை அடையும்முன் அவை சந்திப்பதில்லை. சந்திப்பிற்கு முற்பட்ட நிலையில் அவற்றின் பாதைகள் மிகவும் வேறுபட்டவையாக உள்ளன. பக்தன் கடவுளின் பெயரைச் சொல்லி அழைத்து, உணர்ச்சிவசப்பட்டு, 'ஓ'வென அழுகிறான். தியானம் பயின்றவன் அமைதியாக இருக்கிறான் அவன் விரகத் துன்பம் அடைவதில்லை. அவன் சூனிய

நிலையில் அமர்ந்திருக்கிறான். அவன் எங்கும் சென்று எதையும் தேடுவதில்லை. எதன் மீதும் அவன் விருப்பம் கொள்வதில்லை. பக்தன் தன் எல்லா விருப்பங்களையும் திரட்டி, கடவுள் தரிசனம் என்னும் ஒரே விருப்பமாகக் குவித்து மையப்படுத்துகிறான். சாட்சி தன்னை சூன்யமாக்கிக் கொள்கிறான். பக்தன் தன்னை நிரப்பிக் கொள்வதில் ஈடுபடுகிறான். சூன்யம் ஆவதும் பூரணம் ஆவதும் கடைசிக் கட்டத்தில் ஒன்றுதான். பொருள் ஒன்றே, பார்க்கும் விதம்தான் இரண்டு வகை.

மீராபாயின் உபதேசமும் அவரது வாழ்க்கையும் பக்தியை அடிப்படையாகக் கொண்டது. அவர் சாட்சி என்னும் சொல்லை உபயோகிக்கக் கூட இல்லை. அஷ்டாவக்ரரோ சாட்சி மனப் பான்மை குறித்தே பேசுகிறார். அன்பு, பக்தி ஆகிய இரண்டையும் அவர் குறிப்பிடுவதில்லை.

நான் சில சமயம் பக்தி-அன்பு பற்றிப் பேசுகிறேன். வேறு சில சமயம் சாட்சிக் கொள்கையை வற்புறுத்துகிறேன். ஏனெனில் எல்லா மக்களின் சுபாவமும் கண்ணோட்டமும் ஒரேமாதிரியாக அமைந்திருப்பதில்லை. பாதிப்பேருக்கு மேல் அன்புவழியை ஆதரிப்பவர்களாக உள்ளனர். சிலர் சாட்சி மனப்பான்மையை வளர்த்துக் கொள்கின்றனர். நான் குறிப்பிட்ட மதத்தின் அல்லது மதப்பிரிவின் சந்நியாசி அல்லன் என்பதால் மேற்கண்ட இருவகையினருக்கும் ஏற்றபடி பேசுகிறேன்.

அஷ்டாவக்ரர் மட்டுமல்ல, ஜைன மதமும், புத்த மதமும் கூட சாட்சி மனப்பான்மையை வலியுறுத்துகின்றன இதனால் அம்மதங்களைப் பின்பற்றுவோர் புலன்களின் வசப்படாதிருக்கக் கடுமையான விரதங்களைக் கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் மீராபாயும் கபீர்தாசரும் அன்புவழிப் பயணிகளாக இருந்தனர். இந்தக் கண்ணோட்டம் மட்டுமே சரி என்றால், தியானத்தின் கதி என்ன? அன்பு வழியை மேற்கொள்ள இயலாதவர்களின் நிலைமை என்ன? மனம் பாலைநிலம்போல் சூன்யமாக விளங்குவோர் என்ன செய்வது? அவர்களும் கணிசமான எண்ணிக்கையில் இருக்கின்றனரே. ஆண்-பெண், பகல்-இரவு, வெயில்-நிழல்போல் அன்பு அல்லது தியானம் என்னும் வழியைப் பின்பற்றுவோர் தனித்தனியாக உள்ளனர்.

உலகில் இதுவரை ஏற்பட்டுள்ள மதங்கள் முழுமையானவை அல்ல. எந்த மதமும் அன்பு-தியானம் ஆகிய இரண்டையும் கவனத்தில் கொண்டு மனிதனை முழுமைத் தன்மைக்குக் கொண்டு செல்லவில்லை. இரண்டு வழிகளையும் ஆதரிப்பது ஆபத்தானதென மதத் தலைவர்கள் நினைக்கின்றனர். அந்த ஆபத்தை நான் சிரமேற்கொள்ளுகிறேன். மடத் தலைவர்கள் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு வழியை ஆதரித்து மற்றவை யெல்லாம் தவறென அறிவிக்கின்றனர். இதனால் மதங்கள் வலுப்பெறுவதற்குப் பதிலாக, ஒன்றுடனொன்று மோதின. மதத்தின் பெயரால் போர்கள் நிகழ்ந்தன. வன்முறையால் ரத்தம் பெருக்கெடுத்தது.

அவ்வாறு உறுதியாக நான் குறிப்பிட்டு ஒரு வழி சொல்வதில்லை. அறிவு படைத்த மனிதன் தனக்கேற்ற வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்வான். அதே சமயம் அவன் வேறு சரியான வழிகளும் இருக்கக்கூடும் என நம்புவான். ஏனெனில் கடவுள் என்பவர் எல்லா வழிகளிலும் இருப்பவர். எல்லாவற்றையும் கடந்து நிற்பவரும் அவரே. உலகில் தெரியும் முரண்பாடுகள் கடவுளை வந்தடையும்போது சரியாகிவிடும். பல்லிய இசை (ஆர்க்கெஸ்ட்ரா) போல் பல வகை இசைக் கருவிகளின் விதம் விதமான ஒலிகள் நம் காதை வந்தடையும்போது எவ்வாறோ அவை இணைந்து ஒரே சங்கீதமாக உணரப்படுவதுபோல்தான் இதுவும்.

அன்பு வழி, தியான வழி இரண்டுமே சரி என்று நான் கூறுகிறேன். அதற்காக நீ இரண்டு வழிகளையும் ஒன்றாகவோ, மாற்றி-மாற்றியோ பின்பற்று என்று நான் கூறமாட்டேன். அது ஒரேசமயம் இரண்டு படகுகளில் அல்லது இரண்டு குதிரைகளின் மேல் சவாரி செய்வதற்கு ஒப்பாகும். மலையின் உச்சியை அடையப் பல பாதைகள் உள்ளன. ஆனால் எவனும் ஒரேசமயம் இரண்டு பாதைகளில் பயணிக்க முடியாது. நீ உனக்கு சௌகரியமான வழியில் போ. வேறு பாதைகளும் உண்டென்பதை நீ நினைவில் வைத்தால் போதும்.

இப்படி மனம் பெருந்தன்மையைக் கடைப்பிடிப்பது கடினம். சராசரி மனிதனின் மனம் குறுகலானது. என் வழிதான் சரி என்று

சொல்லும்போது உனக்கு சந்தோஷமாக இருக்கிறது. மற்ற பாதைகளை மட்டம் தட்டும்போது உன் அகங்காரத்திற்குத் தீனி கிடைக்கிறது. 'நான் சரி-நீ தவறு' என்று முடிவுகட்டும்போது அதை நாம் ரசிக்கிறோம் அல்லவா?

மற்றவர்கள் இயங்கும் விதம் தவறெனச் சுட்டிக்காட்டுவதில் நாம் பரபரப்பாக இருக்கிறோம். இது வேண்டாம். மற்றவர்கள் அவரவர் வழியில் போகட்டும். ஒருவன் கோயிலுக்குச் சென்று சிலை வழிபாடு செய்கிறான். எனில் அவனைப் பழிக்காதே. மாறாக, அவனை வாழ்த்து. 'கடவுள் நீ விரும்பும் வழியிலேயே உனக்குக் கிடைப்பாராக!' என்று ஊக்கமளி. மேலும், 'நான் வேறு வழியில் செல்கிறேன். நானும் இறுதிக் கட்டத்தை அடைய முடிந்தால், அந்த இடத்தில் உன்னை நான் சந்திப்பேன். தற்சமயம் என் வணக்கத்தை ஏற்றுக்கொள். என் நல்வாழ்த்துகளுடன் நீ உன் பாதையில் பயணத்தைத் தொடரு. நீ வணங்கும் கோயில் சிலையிடம் என் வெற்றிக்காகவும் வேண்டிக்கொள் என்று கூறு!

உலகில் மக்கள் மதவாரியாகப் பிரிந்து இந்துவாக, முஸ்லிமாக, சீக்கியராக, கிறிஸ்தவராக, பார்சி மதத்தவராக இருக்கக்கூடாது என்பது என் கொள்கை. மக்கள் பொதுவில் இறை நம்பிக்கை உடையவர்களாக இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

## இரண்டாம் கேள்வி

**ஆன்மிக முயற்சி செய்யும் சாதகன் நான்கு நிலைகளைக் கடக்க வேண்டுமெனக் கேள்விப்பட்டுள்ளேன். கடைசிக் கட்டத்தில் அவன் சத்திய தரிசனம் பெறுகிறான். அந்த நான்கு நிலைகளை விளக்குங்கள்.**

**நீ** குறிப்பிடும் நிலைகளை இஸ்லாமிய சூஃபி பிரிவு தெளிவாக வரையறுத்துள்ளது. முதலாவதை அவர்கள் தரீகத் என்கிறார்கள். 'தரீகா' என்றால் விதிமுறைகள், வழிமுறைகள், யோகம் ஆகியவை. ஆகவே சாதகன் எதையாவது முயன்று செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவன் விரும்பியது

கிடைக்கும். சும்மா இருந்தால் கைக்கு எதுவும் அகப்படாது. கொஞ்சமாவது பாதையில் நடைபோட வேண்டும். வழி தேடவேண்டும். தானே ஓர் ஒற்றையடிப் பாதையை உண்டாக்க வேண்டும். வாழ்க்கையில் பல கட்டுப்பாடுகளைப் பின்பற்றுதல் அவசியம். வாழ்க்கையில் ஓர் ஒழுங்குமுறை இருக்க வேண்டும். கடவுளை அடைய இவ்வாறு தன்னைத் தகுதியுடையவனாக ஆக்கிக்கொள்ள வேண்டும்.

குடியரசுத் தலைவரைச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தால், அப்படியே சட்டென்று கிளம்பிப் போய்விட முடியாது. அவரது மாளிகையில் எதிர்பார்க்கப்படும் சம்பிரதாயங்களைப் பின்பற்ற வேண்டும். எத்தகைய ஆடை அணியலாம் என்றுகூட கட்டுப்பாடு உண்டு. எப்படி உட்கார்வது-எழுந்திருப்பது-கை குலுக்குவது-வணங்குவது என்பதற்கும் விதிமுறைகள் உண்டு. அங்குள்ள அதிகாரிகளும் பார்வையாளர்களுக்கு ஒழுங்காசாரத்தை (etiquette) சொல்லித் தருவார்கள்.

வேறு விதமாகவும் சொல்லலாம். குடியரசுத் தலைவர் நம் வீட்டுக்கு விஜயம் செய்யவுள்ளாரெனில் நாம் எத்தனையோ முன்னேற்பாடுகள் செய்வோம். அரசு அதிகாரிகளும் முன்கூட்டியே வீட்டையும் சுற்றுப்புறத்தையும் ஆராய்வார்கள்; தேவையான ஆலோசனை வழங்குவார்கள். நீ கடவுளையே உன் உள்ளமாகிய இல்லத்திற்கு அழைப்பாயாகில், அவரது விஜயத்திற்குத் தேவையான தயாரிப்புகளைச் செய்துவைக்க வேண்டுமல்லவா? அந்த விதிமுறைகளைச் சொல்லித் தருபவர் தான் சத்குரு. அவரிடமிருந்து அவற்றைக் கற்க வேண்டும்.

அர்ஜுனன் அவ்வாறுதான் செய்தான். கிருஷ்ணனை குருவாகக் கருதி, "ஞானம் நிலைத்து நிற்பவனின் (ஸ்திரப்ரக்ஞன்) வர்ணனை என்ன? அவன் எவ்வாறு பேசுவான்? எப்படி இருப்பான்? எங்ஙனம் நடப்பான்?" என்பது பற்றிய கட்டுப்பாடுகளை விளக்கும்படி கேட்டுக் கொள்கிறான். (பகவத்கீதை 2:54)

இரண்டாவது நிலைக்கு **ஷரீயத்** என்று பெயர். இதன் பொருள் 'லயிப்பு' என்பதாகும். இங்கே முயல்பவன் முயற்சியுடன் ஒன்றாகக் கலந்துவிடுகிறான். மேலே சொன்ன முதல் கட்டத்தில்

நீ எச்சரிக்கையுடன் விதிமுறைகளைப் பின்பற்றுகிறாய். ஏனெனில் நீ புதிதாகக் கற்பவன். கார் ஓட்டக் கற்றுக்கொள்பவன்போல் நீ பல விஷயங்களை ஒரேசமயம் கவனிக்க வேண்டியுள்ளது. சாலையைப் பார்த்தல், ஸ்டியரிங்கில் கவனமாயிருத்தல், ஆக்சிலேட்டர் மீது பாதத்தை அழுத்துதல், பிரேக்கையும் கவனித்தல், கியரை மாற்றும்போது ஸ்விச்சை அழுத்த மறக்காதிருத்தல் என்று எத்தனையோ பிரச்சினைகள். ஒரு செயலை மறந்தாலும் உயிருக்கு அல்லது வண்டிக்குச் சேதம். காலப்போக்கில் நீ காரோட்டும் திறமை பெற்றுவிடுகிறாய். பிறகு அரட்டையடித்தபடி, பாடியபடி, ரேடியோவில் பாட்டுக் கேட்டபடி ஓட்ட முடிகிறது. ஏனெனில் நீ விதிமுறைகளுடன் லயித்து, அவை உனது ஆளுமையின் அங்கமாகிவிட்டன. முயற்சியிலிருந்து இனி உன்னைப் பிரிக்க முடியாது.

விடியற்காலையில் 3 மணியிலிருந்து 4 மணி வரையிலான காலத்தில் ஓட்டுநர்கள் அதிகத் தூக்கக் கலக்கம் கொள்வதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். ஒரு நிமிடத்திற்கும் குறைவாகக் கண் மூடித் திறப்பதற்குள் விபத்து ஏற்பட்டுவிடுகிறது. சாலை விபத்துகள் அதிகபட்சம் நிகழ்வது விடியற்கால நேரத்தில் தான் என்று புள்ளிவிபரம் மூலமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆனால் மற்ற நேரங்களில் ஓட்டுநர் ஓட்டுதலுடன் பிரிக்க முடியாதபடி இணைந்துவிடுகிறார். மது அருந்திய பின்புகூட பல ஓட்டுநர்கள் சிரமமின்றி கார் அல்லது பஸ்ஸை ஓட்டுகிறார்கள். இவ்வாறு கட்டுப்பாடு ரத்தத்தில் கலந்துவிடுகிறது; எலும்புகளில் சேர்ந்துவிடுகிறது.

தினமும் அதிகாலை மூன்று மணியளவில் (பிரம்ம முகூர்த்தத்தில்) கண் விழிக்க விரும்புகிறாய். ஆகவே கடிகாரத்தில் அலாரம் வைக்கிறாய். சிறிது காலம் சென்றபின் அலாரத்தின் உதவியின்றியே எழுந்திருக்கத் தொடங்குகிறாய். காரணம், மனக் கட்டுப்பாடு உன் ரத்தத்தில் கலந்துவிட்டது. அதாவது, மேற்சொன்ன தரீகத், ஷரீயத் ஆகிவிட்டது.

தரீகத் விதிமுறைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. அதில் நான் என்னும் உணர்வு (self-consciousness) தூக்கலாக உள்ளது.

இந்த நிலையிலுள்ளவன் அகங்காரத்தைக் கைவிட்டவனாக இருக்கமாட்டான். அதிலிருந்து வெளியே வர அவன் முயற்சி எடுப்பது உண்மை. இரண்டாவதான ஷூரீயத் நிலையில் முயல் பவனுக்கும் முயற்சிக்கும் நடுவில் இடைவெளி இருப்பதில்லை. 'நான்' என்றும் தன்னுணர்வு காணாமல் போகிறது.

மூன்றாவது கட்டம் **மாரிஃபத்** என்னும் பெயருடையது. முதல் நிலையில் 'நான்' என்னும் உணர்வு இருக்கிறது. இரண்டாவதில் 'நான்' மனப்பான்மை காணாமல் போய்விடுகிறது. மூன்றாவதில் இறை அனுபவம் உணரப்படுகிறது. முதல் நிலையில் ஆன்மிகப் பயிற்சியின் விதிமுறைகள் மட்டுமே போதிக்கப் படுகின்றன. இரண்டாவதில் எடுத்த முயற்சிகள் (சாதனை) சாதகரின் வாழ்க்கையில் கலந்து விடுகின்றன. மூன்றாவதில் கடவுளின் தோற்றம் (உணர்வு) தெரியத் தொடங்குகிறது. ஆனால் அகக்கண்ணில் தெரியும் அத்தோற்றத்தில் கடவுள் முழுமையாகத் தெரியவில்லை. நூற்றுக் கணக்கான மைல்களிலிருந்து பார்க்கும் போது கண்ணில் தெரியும் மலையின் தோற்றம் போன்றதுதான் இந்த நிலை. இன்னும் ஜன்னல் முழுமையாகத் திறக்கவில்லை எனலாம்.

நான்காவது நிலையின் பெயர் **ஹகீகத்**. ஹக் எனில் சத்தியம் என்று பொருள். இந்தியத் தத்துவத்தில் இதை பிரம்ம ஞானம் என்பர். இந்நிலையில் நானும் இல்லை; நீயும் (கடவுள் என்று தனியாக) இல்லை. இருப்பதெல்லாம் சத்தியம் மட்டுமே. இது அத்துவைத (இரண்டல்ல என்னும்) நிலை. எனக்கும் உனக்கும் (கடவுளுக்கும்) நடுவில் இடைவெளி இல்லை.

இது சாதகனின் யாத்திரை (pilgrim's progress), இந்தப் பயணத்தில் மூன்று தங்குமிடங்கள் (camps), நான்காவது போய்ச் சேருமிடம் (destination), நடுவில் எங்கும் நின்றுவிடாதே. தேங்கிவிடாதே. சிலர் விதிமுறைகளுடன், அதாவது, விரதங்கள், சடங்குகள், யோகம், தியானம் இவற்றுடன் நின்றுவிடுகின்றனர். தங்கள் ஆன்மிகப் பயணம் நின்றுவிட்டதாகக் கருதுகின்றனர்.

அவர்கள் பிராணாயாமம் பயில்கின்றனர். மூக்கின் வலது-இடது பக்கங்கள் வழியாக மாற்றி-மாற்றி சுவாசத்தை நிறுத்தியும்

வெளியிட்டும் பயிற்சி செய்கின்றனர். தலைகீழாக (சிரஸானம்) நிற்கின்றனர். இதெல்லாம் தப்பில்லை. எல்லாப் பயிற்சியும் நல்லதே. ஆனால் அவர்களது வாழ்க்கை இவற்றிலேயே கழிந்துபோகிறது. நாம் வணங்கும் யோகிகள் ஆயுள் முடியப் பயிற்சியாளர்களே. அவர்கள் ஆசனங்கள் போடுவதிலேயே சிக்கிக்கொள்கின்றனர். உடல் சுத்தம் என்று கூறிக்கொண்டு சில சமயம் உண்ணாநோன்பு மேற்கொள்ளுவார்கள். சில சமயம் தண்ணீர் மட்டுமே அருந்துவார்கள். சில சமயம் பழங்கள் மட்டுமே உண்பார்கள். இதையெல்லாம் ஆன்மிக சாதனை என நினைத்து யோகிகள் தாங்களும் ஏமாறுகிறார்கள்; பிறரையும் ஏமாற்று கிறார்கள். விதிமுறைகளும் கட்டுப்பாடும் தேவை. ஆனால் அவையே இறுதி லட்சியமல்ல. மேடையை அலங்காரம் செய்வதி லேயே காலத்தை ஓட்டினால் நிகழ்ச்சியை எப்போது ஆரம் பிப்பது?

**சு**வாமி ராமதீர்த்தர் ஒரு கதை சொல்கிறார். ஓர் இளைஞன் வேலை நிமித்தம் வெளியூரிலேயே தங்கிவிட நேர்ந்தது. ஆரம்பத்தில் அவன் ஒன்றிரண்டு கடிதங்கள் எழுதியதுடன் நிறுத்திக்கொண்டான். வேறு வழியின்றி ஒருநாள் காதலி அவன் வேலை பார்த்துவந்த ஊருக்கே போய் அவன் வசித்த வீட்டை யடைந்தாள். அப்போது அவன் மும்முரமாக ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவள் படிக்கட்டில் உட்கார்ந்து காத்திருந்தாள். அவன் திரும்பிப் பார்க்கவில்லை. அவள் வந்ததை உணரவும் இல்லை.

திடீரென அவள் சத்தம் போட்டாள். "நான் வந்ததை பார்க்கலியா? அப்படி யாருக்கு நீண்ட கடிதம் எழுதுகிறீர்கள்? புதிய காதலி கிடைத்து விட்டாளா?"

திரும்பிப் பார்த்த இளைஞன் காதலி வந்திருப்பதை அறிந்து திகைப்புற்றான். "அடேட நீயா! சற்று முன்னாலேயே சொல்லியிருக்கக்கூடாதா? நான் ஒரு மணி நேரம் கடுமையாக உழைத்து உனக்குத்தான் கடிதம் எழுதிக்கொண்டிருந்தேன். நடுவில் தொடர்பு கொள்ளாததால் விவரங்கள் நிறையச் சேர்ந்துவிட்டன" என்றான்.

இப்படித்தான் சிலர் 'ஸ்ரீ ராமஜெயம்' நோட்டுப் புத்தகங்களை நிரப்புவதில் உழைப்பையும் நேரத்தையும் செலவழிக்கின்றனர். அந்த சமயம் ராமபிரானே வந்தாலும் எழுதும் பக்கத்தை முடிப்பதற்காக அவரைக் காக்கவைத்து விடுவார்கள்! சிலர் ஆவிருத்தி என்ற பெயரில் மந்திரங்களை லட்சம் முறை, கோடி முறை என்று ஒலித்துக்கொண்டிருப்பார்கள். அப்போது கடவுளே பிரசன்னமாகி, "என் பெயரை மனம் உருகி, கண்ணீர் பெருகிட ஒருமுறை சொன்னால் போதும். லட்சம், கோடி என்பதை என்னால் தாங்க முடியாது காது வலிக்கிறது!" என்று சொன்னாலும் பக்தர்கள், "அப்படி நடுவில் நிறுத்த முடியாது. அபசாரம், பாவம் சூழ்ந்துகொள்ளும்," என்றும் கடவுளின் வேண்டுகோளைப் புறக்கணித்துவிடுவார்கள்! சடங்குகளும், விதிமுறைகளும் ஆன்மிக மலையேற்றத்தில் முதல் படிகளாகும். அங்கேயே உட்கார்ந்து விட்டால் உச்சியை எப்படிச் சென்றடைவது?

**எ**னக்கு அறிமுகமான நண்பர் ஒருவர். நல்லவர். ஊரில் நல்ல பெயர். நான் அவரது ஊருக்கு ஒருமுறை சென்றபோது மக்களிடம் அவரது நற்பெயருக்கான காரணம் கேட்டேன். அவர்கள் அவர் மிகவும் சுத்தமான வாழ்க்கை நடத்துபவர் என்றும் மனத்திலும் அழுக்கற்றவர் என்று கூறினர். விளக்கமாக சொல்லும்படி கேட்டுக் கொண்டேன். அவர் வசதியற்றவர் என்பதால் பொதுக் குழாய்க்குத் தண்ணீர் பிடிக்கச் செல்வாராம். ஒரு பெண் அங்கிருந்தாலும் வீட்டுக்குத் திரும்பிவிடுவாராம்! காமத்தைக் கட்டுப்படுத்துவதற்காகத் திருமணமும் செய்து கொள்ளவில்லை.. குழாயடியில் அடிக்கடி யாராவது பெண் இருப்பாள் என்பதால், இவர் அவ்வப்பொழுது அங்கு சென்று வந்து யாரும் பெண் இல்லாதபோது தண்ணீர் பிடித்து வருவார். பிறகு சமையல். இப்படி ஒவ்வொரு நாளும் ஓடிவிடும்.

நான் அவரைச் சந்தித்தேன். "நீங்கள் எப்பொழுது கடவுளை வழிபடுகிறீர்கள்?" என்று வினவினேன். "கடவுளா! வழிபட நேரம் எங்கே இருக்கிறது? மனத்தை சுத்தமாக வைத்திருப்பதற்கே பெரும்பாடு படவேண்டியுள்ளது. உடம்பையும் கவனித்துக் கொள்ள நானே உரலில் கோதுமை மாவு அரைத்து சப்பாத்தி

செய்து கொள்கிறேன். வேறெதற்கும் நேரம் கிடைப்பதில்லை,'' என்றார். எனக்கு அவர் மீது பரிதாபமே மேலிட்டது.

இவர் மட்டுமில்லை. புகழ்பெற்ற சந்நியாசிகளும் தாங்கள் விரித்த வலையிலேயே சிக்கித் தவிக்கின்றனர். மடாதிபதிகள் நாள் முழுவதும் பலவகைச் சடங்குகளைச் செய்கின்றனர். பார்வையாளர்களைச் சந்திக்க வேண்டும். பங்கேற்க வேண்டிய நிகழ்ச்சிகள் தினமும் இருக்கும். ஆன்மிக உரையும் தினமும் நிகழ்த்தியாக வேண்டும். அவர்கள் எப்பொழுதுதான் மனம் ஒன்றிக் கடவுளை தியானிக்கிறார்களோ அந்தக் கடவுளுக்கே வெளிச்சம்! சடங்குகளின் வழி கடவுள் என்பதற்குப் பதிலாக, சடங்குகள்-விரதங்கள்-கட்டுப்பாடுகளே கடவுள் என்னும் பிரமைக்கு சந்நியாசிகள் ஆளாகி விடுகிறார்கள். அவர்களின் பக்தர்களும் கண்மூடித்தனமாக அதே வழியில் செல்கிறார்கள்.

முதல் படி விதிமுறைகள் (தரீகத்). அங்கேயே உட்கார்ந்துவிடாமல், அடுத்த இலக்காகிய இரண்டாம் படியில் காலெடுத்து வைக்க வேண்டும். இதுவே ஷரீயத் அல்லது லயிப்பு. விடியலில் (பிரம்ம முகூர்த்தத்தில்) எழுந்து தியானம் செய்தால்தான் கடவுள் கிடைப்பாரென்பதை நம்பாதே. நீ எப்போது எழுந்திருக்கிறாயோ அதுதான் பிரம்ம முகூர்த்தம் பிறகு நாளாவட்டத்தில் நீயாகவே விடியலில் எழத் தொடங்குவாய்.

உன் உணவைச் சமைத்தவர் யார், பிராமணரா, வேறு சாதியினரா என ஆராயாதே. பிராமணர் சமைப்பதைச் சாப்பிடுவதுதான் ஆன்மிகம் என்று பிரபல சந்நியாசிகளைப் போல் நினைக்காதே. இதெல்லாம் அற்ப விஷயங்கள், உணவு தாமாக இருந்தால் போதும்.

ஆகாய விமானம் சிறிது தூரம் ஓடுபாதையில் பஸ்போல் ஓடுகிறது. இது முதல் கட்டம் (தரீகத்). ஓர் எல்லைக்கோடுவரை ஓடி, சற்று நிதானித்து, இதுவரை திரட்டிய வேகத்தின் உதவியால் மேலே எழும்புகிறது. இப்போது விமானம் லயிப்புடன் வானத்தில் மிதந்து செல்கிறது. இதை ஷரீயத் நிலையுடன் ஒப்பிடலாம்.

விதி-விரதம் என்று கண்மூடித்தனமாகப் பிடிவாதம் பிடிக்கக்கூடாது. அதற்கு ஒரு கதை சொல்கிறேன்.

துறவி ஒருவர் தன் சீடர்களுடன் யாத்திரை மேற் கொண்டார். கிளம்பும் முன் அவர் தன் சீடர்களுடன் சேர்ந்து அடுத்த ஒரு மாதம் உண்ணாநோன்பு இருப்பதாக சங்கல்பம் (சபதம்) செய்துகொண்டார்.

நான்கு நாட்களுக்குப்பின் அவர்கள் ஒரு கிராமத்தை அடைந்தார். அங்கு ஒரு பக்தர் வந்து சந்தித்தார். அவர் துறவிக்கும் சீடர்களுக்கும் அருமையான விருந்து தருவதற்காகத் தன் குடிசையையே அடைமானம் வைத்துப் பணம் திரட்டியதாகத் தெரிவித்தார்.

தங்கள் குரு உண்ணாநோன்பு குறித்து அவருக்குத் தெரிவித்து விருந்துண்ண மறுத்துவிடுவாரெனச் சீடர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவரோ அந்த மனிதரிடம், "உன் அளவுகடந்த பக்தியை கௌரவமாக நினைத்து உன் விருந்தை ஏற்கிறேன்," என்று கூறிவிட்டார்! சீடர்கள் அதிர்ச்சியடைந்தனர். 'ஒரு மாத விரதத்தை நாலு நாளிலேயே கைவிடும் இவரை ஜகத்குருவாக நினைத்தோமே இவர் உண்மையில் சாப்பாட்டு ராமன்போலிருக்கிறதே. வாய் ருசியைக் கட்டுப்படுத்த முடியாத இவர் என்ன துறவி' என்று குழம்பினர். ஆனால் குருவை எதிர்த்துப் பேச அவர்களுக்குத் துணிவில்லை. 'நாம் மட்டும் ஏன் பட்டினி கிடக்க வேண்டும்?' என்று எல்லோருமாக குருவுடன் சேர்ந்து சென்று வயிறு புடைக்க உண்டனர்!

குரு சீடர்களுடன் யாத்திரையைத் தொடர்ந்தார். இரவானதும் ஓரிடத்தில் எல்லோரும் தங்கியபோது சீடர்கள் அவரை வசமாகப் பிடித்துக்கொண்டார்கள். "நீங்களே இப்படிச் செய்யலாமா? ஒரு மாதம் உண்ணாநோன்பு என்று சபதம் செய்துகொண்டு நாலு நாளிலேயே அதைக் கைவிடுவதா? நாங்கள் விரதம் இருக்கத் தயாராக இருந்தபோது நீங்கள் எங்களை பலவீனப்படுத்தலாமா?" என்று அவரை உலுக்கினார்கள்.

குரு சமாதானப்படுத்தினார். "இந்த நாலு நாளை மறந்துவிடுங்கள், புதிதாக அடுத்த ஒரு மாதம் உண்ணாவிரதம் இருப்போம். ஒரு மாதம்தானே? நம் எத்தனையோ வருஷங்கள் உயிரோடு இருக்கத்தானே போகிறோம். அதில் ஒரு மாதம்

என்பது அற்பகாலம்தான். ஆனால் அந்த பக்தரைப் பற்றி யோசியுங்கள். என்னை குரு என்று அவர் கருதுவதால் தனது குடிசையை அடைமானம் வைத்து, விருந்துக்கு ஏற்பாடு செய்து நம்மை கௌரவிக்கிறார். இந்த நிலைமையில் விரதம் என்று கூறிக்கொண்டு நாம் சாப்பிட மறுத்தால், அவர் மனம் புண்படும். நம் மறுப்பு குரூரமான செயலாகிவிடும். மேலும் அவர் நமது விரதம் பற்றி அறிந்திருக்கவில்லையே. நம் விரதம் நாலுநாள் தள்ளிப்போகிறது. அவ்வளவுதானே விஷயம்,'' என்றார். இந்தத் துறவி தரீகத் நிலைக்கு அடுத்த நிலைக்குச் சென்றுவிட்டார் என்பது தெளிவு. விரதம் நல்லது. ஆனால் அது நம்மைச் சிறைப்படுத்திவிடக் கூடாது. அது நாம் நம்மையே சிறைப்படுத்திக் கொள்வதுபோலாகும்.

இரண்டாவது கட்டமாகிய ஷரீயத்தில் 'நான்' என்னும் உணர்வு முழுமையாக நீங்கிவிட வேண்டும். அப்பொழுது மூன்றாவது நிலை தொடங்கும். 'நான்' உணர்வு நீங்கி உன் மனம் சூன்யமான நிலையில் உனக்குள் கடவுளின் கிரணம் இயங்கும். கடவுள் கிரணம் இறங்காவிடில், 'நான்' உணர்வு மனத்தில் ஒரு மூலையிலாவது மிஞ்சியுள்ளது என்று அர்த்தமாகும். 'இன்னும் எனக்கு இறை அனுபவம் ஏற்படவில்லையே, நான் எத்தனையோ விரதங்கள் இருந்தேனே, தவம்-பிரார்த்தனை செய்தேனே, எனக்குப் பின்னால் பயிற்சியைத் தொடங்கியவர்கள்கூட இறையுணர்வு பெற்றுவிட்டதாகக் கூறுகிறார்களே' — இவ்வாறெல்லாம் மனம் பேசினால் 'நான்' உணர்வு நீடிப்பதாகவே அர்த்தம்.

அதற்குப் பதிலாக-'கடவுளே, நீ எப்பொழுது எனக்குள் எழுந்தருள விரும்பினாலும் நான் தயாராக இருப்பேன். வாசற்படியில் உட்கார்ந்து உன் வரவை எதிர்பார்ப்பேன். அவ்வாறு எதிர்பார்ப்பதும் இனிமையாக உள்ளது. கதவை மூடமாட்டேன். இரவோ-பகலோ எப்பொழுது வேண்டுமானாலும் நீ வா' என்று நீ உனக்குள் கூறிக்கொண்டால், உன் அகங்காரம் நீங்கி நீ பக்குவப்பட்டுவிட்டாய் என்று பொருள்படும்.

**இ**யேசுநாதர் கூறிய கதை ஒன்றில் செல்வந்தர் ஒருவர் தீர்த்த யாத்திரை மேற்கொள்ளுகிறார். அவர் வேலைக்காரர்களை

அழைத்து, "எல்லோரும் வாசல் கதவு அருகிலேயே இருங்கள். நான் என்றைக்கு எந்த நேரத்தில் திரும்பி வருவேன் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. நான் வரும்போது வாசல் கதவு மூடியிருக்கக் கூடாது." என்று கட்டளையிட்டார்.

அதன்படி வேலைக்காரர்கள் இரவும் பகலும் வாசல் கதவைத் திறந்துவைத்து அருகிலேயே உட்கார்ந்திருந்தார்கள். இப்படியே ஒரு வாரம் ஓடிவிட்டது. வேலைக்காரர்கள் அலுப்படைந்தார்கள். 'எஜமானர் இன்னும் வரக் காணோமே' என்று முணுமுணுத்தார்கள். 'வாசலிலேயே கிடந்தது போதும். கதவை மூடிவிடுவோம். எல்லோரும் தூங்குவோம். அவர் வந்து கதவைத் தட்டும்போது திறக்கலாம்' என்று முடிவெடுத்து அவ்வாறே செய்தார்கள்.

அன்றிரவு கதவை மூடிவிட்டு அனைவரும் கண்ணயர்ந்தனர். சரியாக அந்த நேரம் பார்த்து எஜமானர் வாசலில் வந்து நின்றார்!

இயேசுநாதர் விளக்குகிறார் — அதே பிழையை நீ செய்துவிடாதே. உன் உள்ளக் கதவை எப்போதும் திறந்து வைத்திரு. கடவுளுக்கு எப்பொழுது விருப்பமோ உன் உள்ளத்தில் பிரவேசிக்கட்டும். தயாராக நீ இருப்பதுதான் உன் கடமை.

சீடன் தயார் நிலையை அடையும்போது குரு கிடைத்துவிடுகிறார். பக்தன் தயாராக இருக்கும்போது கடவுள் வந்து சேர்கிறார். உனது தயாரிப்பு உண்மையானால் அது கட்டாயம் நல்ல பலனைக் கொண்டுவரும். அவர் வரத் தாமதமானால் நீ அவர்மீது சினம் கொள்ளக்கூடாது. உன் தயாரிப்பு, உன் லயிப்பு இன்னும் முழுமை பெறவில்லை என்பதுதான் அவர் தாமதிப்பதற்குக் காரணம் ஆகும். ஆகவே நீ உன் முயற்சியில் அதிக தீவிரம் காட்ட வேண்டும். உன் லயிப்பு முழுமை பெறும்போது திடீரென்று கடவுளின் கிரணம் உனக்குள் இறங்கும். நீ கடவுளை தரிசித்ததுபோல் உணர்வாய். இதுவே மூன்றாம் நிலையாகிய மாரிஃபத். ஒரு கிரணம்தான் பிரவேசித்தது எனினும் உன் உள்ளம் பூவாக மலரும். இதயம் குதூகலிக்கும். இதுவரை இருந்த சந்தேகங்கள் நீங்கி, கடவுள் இருக்கிறார் என்னும்

நம்பிக்கை உறுதி பெறுகிறது. இனி கடவுளை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய அவசியமுமில்லை. எதை நாம் மறந்துவிடுவோம் என்று பயப்படுகிறோமோ அதைத்தானே நினைவில் வைத்துக் கொள்வோம்.

வேற்றூர் செல்லும் காதலன் காதலியிடம், "என்னை மறந்துபோய்விடாதே. எப்பொழுதும் நினைவில் வைத்திரு." என்று விடைபெறும் சமயம் கூறுகிறான். அவள் முகத்திலடித் தாற்போல் பதிலளிக்கிறாள், "உனக்கு பைத்தியமா பிடித்து விட்டது? நான் உன்னை மறப்பவளாய் இருந்தால்தானே உன்னை நினைவில் வைத்துக்கொள்ளும் தேவை எழு;ம. நான் எப்பொழுதும் நினைப்பவரை எப்படி மறக்க முடியும்?"

இதேபோல் ஒருவன் 'நான் கடவுளை அடிக்கடி நினைவில் கொள்கிறேன்' என்றால், அவன் அவரை மற்ற நேரங்களில் மறந்தும் போய்விடுகிறான் என்றுதான் அர்த்தம்! எல்லா நேரமும், எல்லாச் செயல்களிலும் கடவுள் நினைவு இருப்பதுதான் முழுமையான பக்தியின் அடையாளம்.

ஒருவன் கபீர்தாசரிடம், "கடவுளை எந்த விதமாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்?" என்று விசாரித்தான். அதற்கு அவர் ஆறு-குளத்திலிருந்து தண்ணீர் எடுத்துச் செல்லும் கிராமத்துப் பெண்களைப் பார்த்துக் கற்றுக்கொள்," என்றார். அப்பெண்கள் பானையில் தண்ணீர் நிரப்பித் தலைமேல் வைத்துக் கொள்கின்றனர். ஒரு கையால் மட்டுமே அதைப் பிடித்தபடி, மற்ற பெண்களுடன் அரட்டையடித்தபடி நடக்கின்றனர். வழியில் தடுக்காதபடியும் கவனித்துக்கொள்கின்றனர். அதேசமயம் ஏதோ உள்ளுணர்வுடன் பானை கீழே விழாதபடியும் எச்சரிக்கையாக உள்ளனர். பக்தனும் அப்படித்தான் இருக்க வேண்டும். குறிப்பிட்ட நேரத்தில் பத்மாசனம் போட்டு, தனியாகக் கடவுளை நினைப்பது என்பது முழுமையைக் காட்டாது. எல்லா நேரத்திலும். கடவுளின் நினைவு உள்ளத்தின் ஆழத்தில் தொடர்ந்து நிகழ வேண்டும். நாம் மூச்சு விடுவதையும், இதயம் துடிப்பதையும் தனியாக உணர்வதில்லை. ஆனாலும் அவை ஓயாது நடைபெறுகின்றன. அதுபோல் கடவுளின் நினைவு மேல்மட்டத்தில் தெரியாவிடினும்

உள்ளத்தின் ஆழத்தில் பரவியிருக்க வேண்டும். கபீர்தாசர் கூறுகிறார் தண்ணீரைக் கொட்டினால் அது விட்டுவிட்டு விழும். எண்ணெயைக் கொட்டினால் அது சீராக, இடைவெளியின்றி விழுவதைப்போல் நமது பக்தியும் அமைய வேண்டும். இத்தகைய நிலையே நான்காவது கட்டமாகிய ஹகீகத் எனப்படுகிறது.

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே, கபீர்தாசர், மீராபாய், அஷ்டாவக்ரர் ஆகிய மூவருமே சமர்ப்பண உணர்வு பற்றிக் கூறுகிறார்கள். அவர்களின் கண்ணோட்டத்தில் வேறுபாடுகள் உண்டா?**

**ப**க்தன் சமர்ப்பணம் என்னும் சொல்லைக் கடவுளைக் குறித்து பிரயோகிக்கிறான். கடித முகவரியில் எழுதும் 'பெறுநர்' போன்றது இச்செயல். ஞானி சமர்ப்பணம் ஆகும்போது ஒன்றைக் குறித்துச் .செய்வதில்லை. அவன் செய்வது சுத்தமான சமர்ப்பண மாகும். பக்தனின் சமர்ப்பணம் முயன்று செய்யப்படுவது. ஞானியின் சமர்ப்பணம் சகஜமாக நிகழ்கிறது. அதில் போராட்டம் எதுவும் கிடையாது.

பக்தனின் சமர்ப்பணத்தில் பூரணத் தன்மை கிடையாது. ஏனெனில் அவனது செயலை, ஏற்க இன்னொருவர் (கடவுள்) தேவைப்படுகிறார். ஒரு கட்டத்தில் பக்தனும் கடவுளும் ஒன்றாகி விடுவார்கள். அப்போது சமர்ப்பணம் மட்டுமே மிஞ்சியிருக்கும். ஒருவகை சமர்ப்பணம் ஞானத்தால் விளைகிறது. இன்னொரு வகை சமர்ப்பணம் அன்பின் மூலம் தூண்டப்படுகிறது. ஆகவே ஞானி, பக்தனின் சமர்ப்பணத்தைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அவன் கல்லின் முன் சமர்ப்பணம் செய்கிறானே என ஞானி நினைப்பார்.

நம் நாட்டில் மரத்தின் கீழ், செதுக்கப்படாவிடிலும் ஏதோ ஒரு கல்லை நட்டு அதற்கு மஞ்சள், குங்குமம், சந்தனம் தடவி, பக்தன் அதற்கு மாலையிட்டுக் கைகூப்பி வணங்குகிறான். இங்கே பக்தி உதயமாகிறது. ஞானி அதைப் பார்த்துச் சிரிக்கக்கூடும். 'இவனே கடவுள் என்பதை மறந்து இவன் யாரை வணங்குகிறான்?' என்று ஞானி பக்தனைப் பற்றி நினைப்பான்.

ஆனால் பக்தனைப் புரிந்துகொள்ள முயலு. பக்தன் சொல்கிறான் — நான் பூஜை செய்ய விரும்புகிறேன். ஆதாரம் ஏதுமின்றி எப்படி பூஜிப்பது? இந்தக் கல்லை பக்தன் ஓர் ஆதாரமாகக் கொள்கிறான். வழிபாடு எத்துணை உண்மையானது என்பதுதான் முக்கியமான விஷயம். ஒரு கல் அல்லது சிலையை நிமித்தமாக வைத்து பூஜை செய்தால் அது எளிதாகிறது. சிறுவர்களுக்கு ஆரம்பத்தில் 'அ, ஆ' என்றெல்லாம் எழுத்து களை மட்டும் சொல்லிக் கொடுத்தால் மனத்தில் தங்காது. ஆகவே, அ என்றால் அம்மா, ஆ என்றால் ஆடு என்றெல்லாம் சொல்லித் தருகிறோம். காலப்போக்கில் சிறுவன் அம்மா, ஆடு முதலிய ஆதாரங்களை உதறிவிட்டு நேரடியாக எழுத்துகளுடன் தொடர்பு கொள்கிறான். அதுபோல் பக்தனும் ஒரு காலத்தில் கல்லை மறந்து, கடவுளை நோக்கியே நேரடியாக வந்துவிட வாய்ப்புள்ளது.

பக்தன் தன் அன்பை கடவுள் என்று கருதி எதன் மீதாவது பொழிய விரும்புகிறான். கல் கிடைப்பது சுலபம். அதன் கீழே அன்பை வெளிப்படுத்துகிறான். இப்பொழுது கல் அவனுக்குக் கடவுளாகிவிட்டது. ஞானிக்கு அது எப்பொழுதும் கல்லாகத் தெரிகிறது. பக்தன் விஷயம் அப்படியன்று. அவன் கல்மீது தன் அன்பை அபிஷேகம்போல் சொரிந்து அதைக் கடவுளாக மாற்றிவிட்டான்!

ஒரு நண்பன் உனக்குக் கைக்குட்டை ஒன்றை அன்பலிப்பாகத் தருகிறான். அதன் விலை இரண்டு ரூபாய்தான் இருக்கும். மொத்தமாகப் பத்து கைக்குட்டை வாங்கினால் அதன் விலை இன்னும் குறையும். ஆனால் நண்பன் கொடுத்ததென அதை நீ பாதுகாப்பாக வைத்துக்கொள்கிறாய். மற்றவர்களுக்கு அதை நீ ஏன் எடுத்து உபயோகிப்பதில்லை என்பது தெரியாது. அந்தச் சிறு துணி உன் இனிய உணர்ச்சிகளுடன் சம்பந்தப்பட்ட தாகும். அந்த சிநேக உணர்ச்சியை மற்றவர்களால் பார்க்க முடியாது. ஏனெனில் உணர்ச்சி என்பது யார் கண்ணுக்குமே தெரியாது.

பக்தன் சிலையை வணங்குவதைப் பார்க்கிறாய். அங்கே உனக்குக் கல்தான் தெரிகிறது. பக்தன் அந்தச் சிலைமீது பொழியும் அன்பின் அபிஷேகம் உன் கண்ணுக்குத் தெரிவதில்லை.

சிலையல்ல கடவுள். அந்த அன்பு உணர்வுதான் உண்மையான கடவுள். குழந்தை நடைவண்டியைப் பிடித்தபடி நடக்கக் கற்றுக் கொள்கிறது. சற்று வளர்ந்ததும் நடைவண்டியைப் புறம் தள்ளி விட்டுத் தானே நேராக நடக்கிறது. பக்தன் சிலையைத் தொடர்ந்து வழிபட்டு, காலப்போக்கில் பக்தி உணர்வில் முதிர்ந்து, சிலையின் உதவியின்றியே கடவுளை உணரத் தொடங்குகிறான். ஞானவழி கடினம். ஆனால் இறையனுபவம் அதில் முன்னதாகவே கிடைக்கிறது. பக்தி வழி எளிது. ஆனால் அதில் முதிர்ச்சிபெற நீண்ட காலமாகிறது. ஏறத்தாழ வாழ்வின் இறுதியில்தான் பக்தன் சிலையின் உதவியின்றி இறையனுபவம் பெறுகிறான்.

பௌத்த சமண மதங்கள் ஞான வழியைப் பின்பற்றி இறையுணர்வை விரைவில் பெறலாம் என்கின்றன. ஆகவே பக்தி வழியைப் பின்பற்றுகின்ற இந்து மதம், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகியவற்றைப் பின்பற்றுவோரால் சமண, பௌத்த மதங்களைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. சீக்கிரம் நடைவண்டியைக் கைவிட்டு நடக்கும் குழந்தைகளை நாலைந்து வயதிற்கு மேலும் சுயமாக நடக்க இயலாத குழந்தைகளால் புரிந்து கொள்வது சிரமம்.

மிகுந்த அகங்காரம் உள்ளவர்கள் கடவுள் இருப்பதை ஒப்புக்கொள்ள சம்மதிப்பதில்லை. ஆனால் கடவுள் கிடையாது என்று சொல்வோர் அனைவரும் அகங்காரிகள் அல்லர். மகாவீரர், புத்தர், மார்க்ஸ், சார்வாகர், நீத்ஸே ஆகியோர் கடவுள் இருப்பதை ஏற்கவில்லை. ஆனால் இவர்களின் கண்ணோட்டத்தில் வித்தியாசம் உள்ளது. சார்வாகர், நீத்ஸே, மார்க்ஸ் ஆகியோர் அகங்காரம் காரணமாகக் கடவுளை மறுக்கின்றனர். இவர்கள் சொல்வது — 'நான் இருப்பதை நான் உணர்கிறேன். ஆகவே நான் மட்டுமே நிஜம். கடவுள் என்று நான் உணர முடியாத ஒருவர் எப்படி இருக்க முடியும்?' என்கின்றனர் புத்தரும் மகாவீரரும் சொல்வது வேறு — 'நான் என்பவனே இல்லாது போய்விட்டேன். 'நானே' இல்லாதபோது எனக்குக் கடவுள் எப்படித் தேவைப் படுவார்? "நான்" என்னும் உணர்வு நீங்குவதற்காகவே கடவுளின் துணை தேவைப்படுகிறது. "நான்" என்பது இல்லாமல் போனால் கடவுளின் உதவி தேவைப்படாது. நோயில்லை என்றால் மருந்து எதற்கு!

ஞானி, பக்தன் இருவருமே சமர்ப்பணம் என்னும் சொல்லை உபயோகிக்கிறார்கள். பக்தன் தன்னிலிருந்து தனியான இன்னொன்றின் (கடவுளின்) திருவடிகளில் பணிவதை சமர்ப்பணம் என்கிறான். ஞானியோ இன்னொன்று எனத் தனியாக ஒன்று கிடையாது. சமர்ப்பண உணர்விலேயே லயிப்பதுடன் தேடுதல் முடிகிறது என்கிறான். ஞானி பேசுவது உரைநடையில் பக்தனோ பாடுகிறான்.

**என் கண்களின் இமையே வா**
**என் இதயத்தின் துடிப்பே வா**
**என் மன பிருந்தாவனமே வா**
**என் கோகுலக் கண்ணனே வா**
**என் செல்வமே வா பந்துவே வா**
**என் உடலே வா மனமே வா**

இதயத்தை ஆண்-பெண் எனப் பிரிப்பதில்லை. எனினும் ஞானியின் இதயத்தை ஆண் என்றும், பக்தனின் இதயத்தைப் பெண் என்றும் கருதலாம். ஆண் இதயம் வலியுறுத்திப் பெறு வதையும், பெண் இதயம் குழைந்து பெறுவதையும் குறிப்பிடுகிறது. ஞானி பெண் ஆனாலும் ஆண் இதயம் பெற்றிருப்பார். இதேபோல் பெண் இதயம் பெற்ற ஆண் பக்தர்களும் உண்டு.

**சீ**னாவில் ஒரு சிலை வழிபடப்படுகிறது. பெயர் க்வான்யின். அது புத்தர் சிலைகளில் ஒரு வகை. ஆனால் விசித்திரமானது. ஏனெனில் பெண் வடிவில் உள்ளது. நான் இது பற்றி விசாரித்தேன். முதல் முறையாக புத்தரைப் பற்றித் தெரியவந்தபோது, சீன சக்கரவர்த்தி சிற்பிகளை அழைத்து புத்தர் சிலை தயாரிக்கச் சொன்னார். அக்காலத்தில் புகைப்பட கலை தோன்றியிராததால் சிற்பிகள் புத்தரைப் பற்றி விவரம் திரட்டினார்கள். அவரது வாழ்க்கை, நடத்தை, குணங்கள் ஆகியவை பற்றிய விவரங்களை ஆராய்ந்தபின் அத்தகைய ஆள் ஆணாக இருக்க முடியாது. உடல் ஆணுடையதாக இருப்பினும் இவரிடம் பெண்ணின் இயல்புதான் காணப்படுகிறது. இவரிடம் கருணை, தாய்போல் பாசம், அன்பு முதலிய பெண்மை குணங்களே அதிகபட்சமாகக் காணப்படுகின்றன. இந்த அடிப்படையில் சிற்பிகள் செய்த புத்தர்

சிலை பெண் வடிவில் அமைந்துவிட்டது! அது இப்பொழுதும் சீனாவில் இருக்கிறது. ஏன், இந்தியாவில் வடித்த புத்தர் சிலைகளில் அவரது முகத்தில் பெண்மைதானே அதிகம் பிரதிபலிப்பாகியுள்ளது. புத்தரைப் பற்றி ஒன்றுமே தெரியாதவர்கள் அந்த சிலைகளின் முகத்தைப் பெண் முகம் என்றே கூறுவர்.

நான் ஆண்-பெண் என்று சொல்லும்போது அது உடலைக் குறிக்கவில்லை. ஆண் மனம் சமர்ப்பணம் செய்யுமளவு வளையாது. பெண் மனம் சமர்ப்பணத்திற்கு ஏங்கும் சுபாவம் கொண்டது; மரத்தைத் தழுவும் பூங்கொடி போன்றது.

மரம் கொடியைச் சார்ந்திருக்காது. கொடிதான் மரத்தைச் சார்ந்திருக்கிறது. கொடி தன்னைத் தழுவுவதால் மரம் மகிழ்ச்சி கொள்கிறது. தன்னை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டால் யாருக்குமே மகிழ்ச்சி உண்டாகத்தானே செய்யும்.

ஆண் மனத்தின் அடையாளமாகத் தன்னையே நம்பி யிருத்தலைச் சொல்லலாம். ஆகவே இத்தகைய மனமுடைய வர்கள் நிறுவிய மதங்களிலும் ஆன்மிகப் பிரிவுகளிலும் சாட்சி மனப்பான்மை வலியுறுத்தப்படுகிறது. ஜே.கிருஷ்ணமூர்த்தியின் வழி ஆண் மனத்தை அஸ்திவாரமாகக் கொண்டுள்ளது. 'விழித்தெழு, அது போதும்' என்று கூறுகிறது. சுய உணர்வுடன் தனது மையத்தில் நிற்கச் சொல்கிறது. அஷ்டாவக்ரர் கூறுகிறார், 'ஆன்ம ஆரோக்கியம் பெறு. உன் ஆன்ம மையத்தில் நிலைத்திரு. நீ எதையும் தேடிப் போக வேண்டியதில்லை. எங்கும் வளைந்து வணங்க வேண்டியதில்லை. கோயில்-சிலை-பூஜை-பிரார்த்தனை கட்டாயமில்லை.'

ஆனால் இதைப் பெண்மனம் படைத்தவர்களால் புரிந்துகொள்ள இயல்வதில்லை. இப்படி ஓர் ஆன்மிகமா என்று அவர்கள் திகைக்கின்றனர். இதில் சுவையே, ரசமே இல்லையே என நினைக்கின்றனர். பெண்மனத்தோர் மீராபாயைப் போல் ஆடி பாடவே விரும்புவர். தம்மைக் கொடியாகக் கருதிக் கண்ணன் என்னும் மரத்தில் படரவே விரும்புவர். அன்பு ரசத்தில் மூழ்கவே விழைவர்.

**பெண் மனத்தின் மொழியே தனி**
**என்றும் உளது அந்நேச மொழி**

**காலைதோறும் கமலமலர்**
**கதிரவன் உதிக்கக் காத்துளது**
**மாலைதோறும் அல்லிமலர்**
**சந்திரனை எதிர்பார்க்கிறது**
**உயிரைப்போன்றது இப்படி லயிப்பு**

**பறவைகள் மேகத்தை எதிர்பார்த்து**
**எழுப்புகின்ற ஏக்க ஒலி**
**தாகத்தால் தூண்டப்படவில்லை**
**தணியா அன்பின் ஒலியே அது.**

பெண்மனத்தின் அன்பிலிருந்துதான் பிரார்த்தனை பிறக்கிறது. பெண்மனத்தின் அன்பிலிருந்துதான் பூஜை தோன்றுகிறது. ஆண் மனநிலை (சாட்சி மனம்), பெண் மனநிலை (அன்பு மனம்) இந்த இரண்டில் நீ எதை மேற்கொள்ள வேண்டும் என்று நான் ஆலோசனை தர இயலாது. இரண்டில் எந்த வழி உனக்குச் சுவையாகத் தெரிகிறதோ, உன் மனத்திற்குப் பிடித்துள்ளதோ அதில் திளைத்து மூழ்கு. நீ உடலால் ஆணா-பெண்ணா என்பதுடன் இந்தத் தேர்ந்தெடுத்தல் சம்பந்தப்பட்டதன்று.

காஷ்மீரில் ஒரு பெண் துறவி இருந்தார். லல்லா என்று பெயர். அம்மாநில மக்கள் அவரிடம் மரியாதை வைத்திருந்தனர். காஷ்மீரில் புகழ்மிக்க இரண்டு பெயர்கள் அல்லா, லல்லா என்று சொல்வதுண்டு. லல்லா விசித்திரமான துறவி. மகாவீரருக்கு சமமான ஞானம் பெற்றவள். அவரைப் போலவே அவள் நிர்வாணமாகவே இருந்தாள்!

ஆண் நிர்வாணமாக இருப்பதில் சிரமமில்லை. எத்தனையே ஆண்கள் ஆடையின்றி இருந்திருக்கிறார்கள். கிரேக்க நாட்டில் டயாஜினஸ்* அப்படித்தான் வாழ்ந்தார். இந்தியாவில் நிர்வாண சாதுக்களின் தனி சம்பிரதாயமே உள்ளது. லல்லா உடலால் பெண்ணாயினும் மனத்தால் ஆண் இயல்பு பெற்றிருந்த தால் தான் ஆடையின்றி இருந்ததைப் பொருட்படுத்தவில்லை.

* Diogenes ( கி.மு.320) கிரேக்க தத்துவ அறிஞர். இயற்கையான வாழ்வு வாழ வேண்டுமென உபதேசித்தவர். ஆடையின்றி, இருப்பிடமின்றி வாழ்ந்தவர்.

பெண் தொட்டால் சுருங்கியாக இருப்பவள். தன்னை ஒளித்துக் கொள்பவள். அதிகமாக வெளிப்படாதவள். வெட்கத்தால் முக்காடு போட்டுக்கொள்பவள், இந்தப் பின்னணியில் லல்லா மிகுந்த தைரியசாலியாக இருந்திருப்பாள். பெண் உடலில் ஆணாகவே அவள் கருதப்பட்டிருப்பாள்.

சமண மதத்தில் இதற்கோர் எடுத்துக்காட்டு உண்டு. அம்மதத்தில் தீர்த்தங்கரர் எனப்பட்ட 24 புனிதர்களில் ஒரு பெண் துறவியும் உண்டு. பெயர் மல்லிபாய். ஆனால் பின்னாளில் அவள் பெயர் மல்லிநாத் என மாற்றப்பட்டது. அவள் ஆடையின்றி இருந்தாள். அவளைப் பெண்ணாகக் கருதக்கூடாது என்பது சரியான முடிவு. பெண் தன்மை இல்லாததால் அவளை ஆண் துறவியாக வணங்கலாயினர்.

இதையெல்லாம் கருத்தில் கொண்டு நீ உன் இயல்பை நன்றாக ஆராய்ந்து பார். அப்பொழுது சரியான வழி எதுவென உனக்குப் புலப்படும். ஆதாரம் அல்லது பற்றுக்கோடு ஒன்று இல்லாமல் உன்னால் சமர்ப்பணமாக முடியாதெனில், பக்தி வழியைப் பின்பற்று. எந்த ஆதாரமும் தேவையில்லை, சொந்தக் காலிலேயே நீ நிற்க முடியுமென நினைத்தால், நீ ஞானவழியில் நடைபோடு. ஆனால் அந்தத் தன்னம்பிக்கை அகங்காரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கக் கூடாதென்பது முக்கியம். அகங்காரம் உள்ள மனம் துளையுள்ள பாத்திரம் போன்றது. அதில் எவ்வளவு பக்தியையோ, ஞானத்தையோ நிரப்பினாலும் அதில் நிற்காமல் இறங்கிவிடும். மனம் பழையபடி வெற்றிட மாகவே இருக்கும்.

அகங்கார மனநிலையில் கர்த்தா (செய்பவன்) நான் என்னும் உணர்வு மிகுந்திருக்கிறது. சாட்சி மனநிலையில் கர்த்தா உணர்வு இருப்பதில்லை. அகங்காரி 'நான் என் கால்களில் நிற்கிறேன்' என்று திமிராகப் பேசுவான். சாட்சி மனமுள்ளவன், 'நான் யார்? நிற்பவன் நானல்லவே. கடவுள்தான் நிற்கிறார்' என்பான்.

'நான் இருக்கிறேன்-நான்தான் இருக்கிறேன்' என்று எண்ணும்வரை நீ உடலுக்குக் கட்டுப்பட்டவனாக இருக்கிறாய். 'நான் இல்லை இருப்பது அவர்' என்றால் நீ உடலையும்

மனத்தையும் வென்றவனாகி விடுகிறாய். யார் திருவடிகளையும் வணங்காமல் நீ சமர்ப்பணமாகிவிடுகிறாய்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே, அகங்காரம் நீங்கி, இதுவா–அதுவா என்று தேர்ந்தெடுக்கும் குழப்பம் நீங்கி மனம் அமைதியாக விளங்க வழி கூறுங்கள்.**

என்னைச் சந்திக்க வருபவர்களில் பலர் இதே கேள்வியைக் கேட்கின்றனர். தியானம் செய்து பார்த்தும் மனத்தில் சாந்தம் பிறக்கவில்லை என்கின்றனர். நான் அவர்களுக்குச் சொல்வதெல்லாம் 'மன அமைதியைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். தியானத்தைத் தொடர்ந்து செய்யுங்கள்' என்று கூறி அனுப்பிவிடுகிறேன்.

பதினைந்து நாள் கழித்து மீண்டும் வருகிறார்கள். 'நாங்கள் கவலைப்படுவதைக் கைவிட்டோம். ஆனால் மனம் சாந்தமாகவில்லையே என்று விசித்திரமான புகார் செய்கிறார்கள். கவலைப்படுவதை நிறுத்திவிட்டால் அதுதானே சாந்த நிலை. வேறு தனியாக சாந்தம் என்பது கிடையாதே. மற்ற கவலைகளை மட்டுமல்ல, சாந்தம் எப்படி, எப்பொழுது ஏற்படும் என்று கவலைப்படுவதையும் விடவேண்டும்.

நீ மாற்று (choice) இல்லாதவனாக மாறு. இதுவா–அதுவா என்னும் குழப்பத்திலிருந்து வெளியேறு. இழுபறி நிலையிலிருந்து வெளியேறு. அப்போது முழு அமைதி பெறுவாய் என அஷ்டாவக்ரர் உரைக்கிறார்.

மனம் அமைதியிழப்பதற்கு இன்னொரு காரணம் பேராசை. மக்கள் சடங்குகள் செய்தால், கோயில்–குளம் என்று அலைந்தால், சுவர்க்கம் கிடைக்கும், தேவகன்னியர் கிடைப்பார்கள், எவ்வளவு வேண்டுமானாலும் மது பருகக் கிடைக்கும், உல்லாசமாக இருக்கலாம் எனக் கற்பனை செய்கிறார்கள்.

ஆனால் சுவர்க்கம் உனக்கு வெளியில் இல்லை. அப்படி ஒன்று இருந்து அது உன் வருகையை எதிர்பார்த்துக்

கொண்டிருக்கவில்லை. இதேபோல் நரகம் என்பதும் உனக்கு வெளியில் இல்லை.

அரேபியாவில் மதத் தலைவர்கள் ஹுக்கா பிடிப்பது சாதாரண விஷயம். அப்படி ஒரு குரு ஹுக்காவைத் தூண்டிவிட நெருப்புத் தணல் கொண்டுவருமாறு ஒரு சீடனை அனுப்பினார். ஆனால் அவனுக்கு எங்கும் நெருப்பு கிடைக்கவில்லை. அவன் குருவிடம் வெறுங்கையுடன் திரும்பினான். ஹுக்கா பிடிக்கத் துடித்துக்கொண்டிருந்த குரு எரிச்சலடைந்தார். "நரகத்துக்கு போய் நெருப்பு கொண்டுவா. அங்கே கிடைக்குமல்லவா?" என்று திட்டினார்.

ஆனால் சீடன் குருவின் மேற்போக்கான திட்டையே உந்து சக்தியாகப் பயன்படுத்தி நரகத்துக்கே போய்விட்டான்! வாயிற்காப்போனிடம் அவன் விசாரித்ததில், "உள்ளே போய் உனக்குத் தேவையான அளவு நெருப்பை எடுத்துக்கொண்டுபோ," என்றான். ஆனால் உள்ளே எங்கும் நெருப்பு தென்படவில்லை! நரகத்தில் எங்கும், எப்பொழுதும் நெருப்பு எரிந்துகொண்டிருக்கும் என்றல்லவா கேள்விப்பட்டிருந்த சீடன் குழப்பமடைந்தான். திரும்பிவந்து வாயிற்காப்பவனிடம் விசாரித்தான். அதற்கு அவன், "இங்கே தனியாக, வெளிப்படையாக நெருப்பு எதுவும் கிடையாது. இங்கே தள்ளப்படுகின்ற ஒவ்வொரு மனிதனும் தனக்குள் எரியும் நெருப்புடன் வந்துசேர்கிறான்," என்று விளக்கினான்.

இவ்வாறாக, நரகமும் சுவர்க்கமும் உனக்குள்தான் இருக்கின்றன. இன்னொரு விஷயம். மனிதன் இறந்த பிறகுதான், எதிர்காலத்தில்தான், சுவர்க்கத்தையோ, நரகத்தையோ அடைவோம் என நினைக்கிறான். ஆனால் அவை இரண்டும் எதிர்காலத்தில் இல்லை. அவை இப்பொழுதே, இங்கேயே உன்னுடன் இருக்கின்றன. நீ எங்கு சென்றாலும் சுவர்க்கத்தையும் நரகத்தையும் உன்னுடனே எடுத்துச் செல்கிறாய்.

சுவர்க்கமா, நரகமா என்று தேர்ந்தெடுப்பது உன் வசத்தில் இல்லை. ஏனெனில் நீ கர்த்தா (செய்பவன்) இல்லை. நீ அப்படி என்ன பெரியவனா? உன்னால் என்ன செய்ய முடியும்? உன்

திறமையின் அளவு என்ன? உன்னால் சுயமாகப் பிறக்க முடிந்ததா? நீ விரும்பும்போது இறக்க முடியுமா? உயிருடன் இருப்பதும் உன் செயலா? உன்னால் சுவாசிக்க முடியாமல் போனால் என்ன செய்வாய்? உன் வாழ்க்கையை நீயா முடிவு செய்கிறாய்?

நீ ஏன் பிறந்தாய் என்ற காரணம் உனக்குத் தெரியாது. உன்னை உண்மையில் பிறப்பித்தவனும், உன் வாழ்க்கையை நடத்திச் செல்பவனும், உனக்குள்ளே இருந்துகொண்டு மூச்சு விடுபவனும், ஒருநாள் அதை நிரந்தரமாக நிறுத்திவிடுபவனும் எவனோ, அவனிடமே உன்னை முழுமையாக ஒப்படைத்துவிடு. நீ கர்த்தாவாக இல்லையெனில் எதையும் தேர்ந்தெடுக்கும் பிரச்சினையும் எழாது.

சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள், கிரகங்கள், மலை-கடல்கள் என்றெல்லாம் படைத்து நிர்வகிக்கின்றவனால் உன் அற்ப வாழ்க்கையை இயக்க முடியாதா? நீதான் உன் வாழ்க்கையைத் தாங்குவதாக பிரமை கொண்டுள்ளாய். நீ சுயமாக நிற்பதுகூட உன் கண்ணுக்குத் தெரியாமல் உன்னை யாரோ தாங்கிப் பிடிப்பதால்தான். ஆனால் நீயோ, 'நான் செத்தால் குடும்பம் என்ன ஆகும்? நான் இல்லாவிடில் உலகிற்கு நஷ்டம்' என்றெல்லாம் நினைக்கிறாய்.

நீ இல்லாமல் போனால் எந்தக் குறைவும் இல்லை. நீ பிறப்பதற்கு முன்பும் உலகம் இயங்கிக் கொண்டுதான் இருந்தது. உன் காலத்திற்குப் பிறகும் உலகம் தொடர்ந்து இயங்கும். இன்றுள்ளது போலவே உனக்குப் பிறகும் இருக்கும். கடுகளவும் மாற்றமிராது. நீ உலகமெனும் கடலில் ஒரு சிற்றலை மட்டுமே ஆவாய். ஓர் அலை தான் இல்லாமல் போனால் கடலின் கதி என்ன ஆகும் என்று நினைக்கலாமா? அலைகள் இல்லாமல் கடல் என்னவாகும்? எல்லா அலைகளும் அடங்கிப் போனாலும் கடல் இருக்கத்தான் செய்யும். கடல் இருப்பதால்தான் அலைகள் தோன்றுகின்றன. எல்லா அலைகளும் கடலுக்கே சொந்த மானவை. நாமும் இதேபோல் விசாலமான ஒன்றின் அங்கம்தான்.

அப்போது, செய்பவன் நான் (கர்த்தா) என்னும் உணர்வு நீங்கிவிடும். அந்த இடத்தை சாட்சி மனப்பான்மை பிடித்துக் கொள்ளும். அதுவே ஆன்மிகத்தில் தலைசிறந்த நிலையாகும். அந்த சிகரத்தை — சாட்சியாக எதையும் பார்க்கும் நிலையை — அடையும்வரை — நீ கவலைகளைத் தவிர்க்க முடியாது; அழுதுகொண்டிருக்கும்போது சிரிப்பது எப்படி?

பிடித்தது-பிடிக்காதது என்றெல்லாம் வகைப்படுத்துவதைக் கைவிடு. சாட்சியாக நடப்பதைப் பார்த்துக்கொண்டு அமைதியாக இருந்துவிடு. உன் மூலம் கடவுள் செய்விப்பதை நடைபெறவிடு. நீ உன்னைச் செயல் புரிபவனாகக் கருதாதே. 'நான் செய்தேன்' என்று கூறாதே 'அவர் செய்வித்தார்' என்று சொல். எதிர்காலம் குறித்து உன் விருப்பம் எதுவாயினும் அவர் உனக்காக நிச்சயித்துள்ள விதமாகவே எல்லாம் நடைபெறும். அப்படியானால் நீ கை-காலை அசைக்க வேண்டாமென்று அர்த்தமில்லை. உன் பணிகளை, கடமைகளைத் தொடர்ந்து செய். கர்த்தா உணர்வு மட்டும் இருக்கக்கூடாது. செய்பவன் நீ என நினைக்கக்கூடாது. நடனம் தொடர்கிறது. நடனமாடுபவன் மறைந்துவிடுகிறான். பாட்டு தொடர்ந்து கேட்கிறது. ஆனால் பாடகன் கண்ணுக்குத் தெரியவில்லை.

பயணம் (யாத்திரை) நீடிக்கிறது. பயணியைத்தான் காணோம். தீர்த்த யாத்திரை என்பதற்கு இதுதான் அர்த்தம். யாத்திரை தொடர வேண்டும். யாத்திரிகன் மறைய வேண்டும். அவன் மிஞ்சக்கூடாது. யாத்திரைதான் மிஞ்ச வேண்டும். அதாவது, பயணியே யாத்திரையாகி விடுகிறான்!

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஸானுராகாம் ஸ்த்ரியம் த்ருஷ்ட்வாம் ம்ருத்யும் வா ஸமுபஸ்திதம்|
அவிஹ்வலமனா: ஸ்வஸ்த்தோ முக்த ஏவ மஹாஷய:|| 170

ஸுகே துக்கே நரே நார்யான் ஸம்பத்ஸு ச விபத்ஸு ச|
விஷேஷோ நைவ தீரஸ்ய ஸர்வத்ர ஸமதர்ஷின:|| 171

ந ஹிம்ஸா நைவ காருண்யம் நௌத்தத்யம் ந ச தீனதா|
நாச்சர்யம் நைவ ச க்ஷோபஹ ஹீணஸம்ஸரனே நரே|| 172

ந முக்தோ விஷய த்வேஷ்டா ந வா விஷய லோலுப:
அஸம்ஸக்தமனா நித்யம் ப்ராப்தா ப்ராப்த முபாஷ்னுதே 173

ஸமாதானா ஸமாதான ஹித அஹித விகல்பனா:|
சூன்ய சித்தோ ந ஜானாதி கைவல்யமிவ ஸன்ஸ்தித:|| 174

நிர்மமோ நிரஹங்காரோ ந கிஞ்சிதிதி நிச்சித:|
அந்தர்கலித ஸர்வாஷஹ குர்வன்னபி கரோதி ந || 175

மனஹ ப்ரகாஷ ஸம்மோஹ ஸ்வப்ன ஜாட்ய விவர்ஜித: |
தஷாம் காமபி ஸம்ப்ராப்தோ பவேத்ரலிதமானஸ: || 176

ஸ்நேகம் நிறைந்த பெண், நெருங்கிவிட்ட மரணம் இந்த இரண்டாலும் பாதிக்கப்படாமல், சலனப்படாமல், இயற்கையாக இருப்பவன் எவனோ அவன் பிறவித்தளையிலிருந்து நிச்சயமாக விடுபட்டவன் (முக்தன்) ஆவான். **(சுலோகம் 170)**

இவை இரண்டும் முக்த புருஷனின் அடையாளங்கள்.

வாழ்க்கையில் நமக்குப் பூட்டப்படும் விலங்குகள் இரண்டு ஜோடி. ஒரு ஜோடி அன்பெனும் விலங்கு. இன்னொரு ஜோடி

விலங்கு அச்சம் என்பது. அன்பு, வாழ்வதுடன் சம்பந்தப்பட்டது. அச்சம், சாவுடன் சம்பந்தப்பட்டது. இவை ஒரே நாணயத்தின் இருபுறம் போன்றவை. ஏனெனில் வாழ்க்கையில் அச்சம், அன்பு இரண்டும் உண்டு. வாழ்வதில் பிடிப்பு இருப்பதால் சாவதற்கு பயமாக உள்ளது. வாழ்வதில் விருப்பம் நீங்கிவிட்டால் சாவச்சமும் இருக்காது. சாவதற்கு தயார்நிலையில் இருந்தால், வாழ்வதில் ஈடுபாடு இருக்காது.

நாம் உயிருடன் இருப்பதை அளவுகடந்து விரும்புகிறோம். நாம் ஏன் உயிர் வாழ வேண்டும் என்னும் காரணம் தெரியாமலே நாம் வாழத்தான் விரும்புகிறோம். நூற்றுக் கணக்கான துன்பங்கள் குறுக்கிட்டாலும், நம் வாழ்க்கை அர்த்தமற்றுப் போய்விட்டாலும், நாம் வாழ்க்கையைத் தொடரவே விரும்புகிறோம். கை-கால் முறிந்துபோனாலும், பார்வை இழந்தாலும், மூப்பினால் தளர்ச்சி யடைந்தாலும், கொடிய நோயினால் உடல் அழுகிவிட்டாலும், யாவரும் வாழவே விரும்புகின்றனர். நமது உண்மையான நிலைக்கும் உயிர் வாழும் ஆசைக்கும் தொடர்பு இருப்பதில்லை.

சாலையில் ஒரு பிச்சைக்காரனைப் பார்க்கிறோம். கை-கால் முடமாக உள்ளது அல்லது பார்வை இல்லை. உடம்பு எலும்புக்கூடாகத் தெரிகிறது. எப்படியோ தேய்ந்தபடி அவன் செல்கிறான். பிச்சையாக ஒவ்வொரு ரூபாய் பெறுவதற்கும் கஷ்டப்படுகிறான். பலர் பிச்சை போடாமல் அவனை விரட்டு கிறார்கள். இந்த நிலைமையில் இவன் ஏன் வாழ விரும்புகிறான் என்று நாம் மனத்துக்குள் கேள்வி கேட்கிறோம் அல்லவா? இனி அவன் வாழ்க்கையில் பெறுவதற்கு என்ன உள்ளது? சரி, நீ அவனது நிலைமையில் இருந்தால் என்ன செய்வாய்? தற்கொலையா செய்துகொள்வாய்? உன்னைப் போன்ற மனிதன் தான் அவனும். அவனது வாழும் ஆசையும் நியாயமானதே யாகும்.

உயிர் வாழும் ஆசை மற்ற ஆசைகளைவிட வலுவானது. நாம் வாழ்வதற்கான அவசியம் தெரியாதபோதிலும் நாம் வாழவே விரும்புகிறோம். வாழ்க்கையில் நாம் விரும்பும் எதுவும் கிடைக்காவிட்டாலும் நாம் உயிரிழக்கத் தயாரில்லை. வாழ்க்கை மீது இவ்வளவு அழுத்தமான பிடிப்பு நமக்கு ஏன் இருக்கிறது?

இதுவரை நமக்கு வாழ்க்கையில் எதுவும் கிடைக்காவிடினும், நாளைய தினம் ஏதோ நல்லது நடக்குமென்று நாம் நம்பி வருகிறோம். இன்றுவரை வாழ்க்கை வெறுமையாக இருந்தது. சாம்பல் படிந்திருந்தது. நாளை பூ பூக்கலாம்; நம் வாழ்க்கை மலரலாம். அதைக் காத்திருந்து பார்ப்போம். சாவதற்கு அவசரப்பட வேண்டாம்.

வாழ்க்கையை இன்ப துன்பங்களோடு முழுமையாகக் கழித்தவன் வாழ்ந்ததுபோதும் என்ற திருப்தியுடன் இருக்கிறான். அவன் தானாகச் சாவைக் கூப்பிடுவதில்லை என்றாலும், சாகும் நேரம் நெருங்கிவிட்டதெனத் தெரிந்தால் பதற்றப்படமாட்டான். கூடுதலாக அவகாசம் கிடைத்தால் இன்னும் சில வேலைகளை முடித்துவிடலாமே என நினைக்கமாட்டான். யாராயினும் எப்போது இறந்தாலும் சில வேலைகளைப் பாதியில் விட்டுத்தான் செல்ல நேரிடும் என்பதை அவன் அறிந்திருக்கிறான்.

நான் ஒரு புத்தகம் படித்தேன் 'Hope for the Terminal Man' (கடைசி மூச்சில் உள்ளவனுக்கு நம்பிக்கையூட்டல்). அதன் மேலட்டையில் அச்சாகியிருந்த பின்வரும் வாசகங்களேகூட கவனத்தை ஈர்த்தன.

உணவின்றி மனிதன் 40 நாள் உயிர்வாழலாம்

நீரின்றி மனிதன் 3 நாள் உயிருடன் இருக்கலாம்

மூச்சின்றி மனிதன் 8 நிமிடங்கள் ஜீவிக்கலாம்

எதிர்கால ஆசையின்றி ஒரு நிமிடமும் வாழ முடியாது

உண்மையில் எதிர்கால நம்பிக்கையின்றி வாழ்க்கையில் எப்படி நீடிக்க முடியும்? நம்மை உயிர்வாழ வைப்பது எதிர்கால நம்பிக்கைதான். இதுவரை நடக்காத நல்லது நாளை அல்லது இனிமேல் நடக்கும் என்று ஒவ்வொரு நாளும் மனிதன் அடுத்த நாள் குறித்து நம்பிக்கை கொள்கிறான்.* அடுத்த நாள் வர, சில

* Tomorrow, and tomorrow, and tomorrow
Creeps in this petty pace from day to day
To the last syllable of recorded time
-Shakespeare: Macbeth

மணி நேரம்தானே எஞ்சியுள்ளது; இரவிற்குப் பின் காலைப் பொழுது வரத்தானே செய்யும்; பிறகு நிலைமை சரியாகிவிடும் என்று மனிதன் கற்பனை செய்கிறான். அதற்குமுன் சாவு வரக்கூடாதென அஞ்சுகிறான்.

சாவிடம் ஏன் பயம்? அது என்ன செய்கிறது? அது கத்தி போல் அடுத்த நாள் என்பது வராதபடி அதை வெட்டிவிடுகிறது. சாவுக்குப் பின் நாளைய தினம் என்பது இருக்காது. சாவுக்கு முன் தினம் வரைதான் நீ வாழலாம். நாளை என்னும் மெல்லிய நூலை லேசாக இழுத்தே சாவு அறுத்துவிடுகிறது. சாவு கொல்வது உன்னையன்று; அது உன் எதிர்காலத்தைக் கொல்கிறது. உன் எதிர்கால நம்பிக்கைக்கு அது விஷமாக அமைகிறது. உன் கனவு கலைகிறது.

மனிதன் மாற்றுவழி யோசித்தான். அவனுக்கு எதிர்காலம் குறித்து ஏதாவது ஆதாரம் தேவைப்பட்டது. இதன் விளைவாக, மறுபிறவிக் கோட்பாடு தோன்றியது. இப்பிறவியில் நிறைவேறாத ஆசைகள் அடுத்த பிறவியில் பூர்த்தியாகிவிடும் என்று மனிதன் நம்பத் தொடங்கினான். மறுபிறவி சித்தாந்தம் சரியா-தப்பா என்று நான் இங்கு கருத்துக் கூறவில்லை. மறுபிறவி உண்டென நம்புபவர்கள் எந்த ஆதாரத்தையும் சாட்சியத்தையும் காண்பிக்க முடிவதில்லை. அவர்களின் விருப்பங்கள் இப்பிறவியில் நிறைவேறாததால் உண்டான ஏக்கத்தின் விளைவே மறுபிறவி நம்பிக்கை. இந்த நம்பிக்கை உள்ளவர்கள் மரணத்தை வென்று விட்டதுபோல் உணர்கிறார்கள். ஆத்மாவைப் பற்றி சிந்திக்காத வர்கள்கூட மறுபிறவியில் நம்பிக்கை வைத்தால், 'இப்பிறவியில் இந்த உடல்தானே இறக்கிறது. ஆத்மாவின் உதவியால் நாம் அடுத்த பிறவி பெற்றுவிடுவோம்' என்கிறார்கள். அப்பொழுது அந்தப் புது உடலைக்கொண்டு நமக்குள்ள விருப்பங்களை முழுமையாக அனுபவிக்கலாமென எதிர்பார்க்கிறார்கள்.

நீ யார் என உனக்குத் தெரிந்திருக்கவில்லை. நீ இக் கேள்வியை உனக்குள் ஆழ்ந்து கேட்டதில்லை. வாழ்க்கை என்பது என்ன என்றும் அறிய முயன்றதில்லை. இதன் அர்த்தம், இதன் ரகசியம், இதன் உபயோகம் என்ன? இதன் பின்னால் என்ன மறைந்திருக்கிறது?

காலையில் எழுந்திருத்தல், உணவு, அலுவலகத்திற்கு ஓடுதல், அங்கிருந்து இரவாகும் சமயம் திரும்புதல், உணவு, மனைவியுடன் கொஞ்சல் அல்லது தகராறு, உறக்கம், மீண்டும் மறுநாள் எழுதல்.... இதையா நீ வாழ்க்கை என்கிறாய்? இதையேவா அடுத்த பிறவியிலும் நீட்டிக்க ஆசைப்படுகிறாய்? நீ எப்படி வாழ்கிறாய் என்பதைப் பற்றியாவது யோசித்திருக் கிறாயா? ஆனால் தொடர்ந்து வாழ விரும்புகிறாய். வாழ்க்கை அந்த அளவிற்கு உன்னை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறது.

ஒரு விஷயம் நீ கவனித்தது உண்டா? ஏழை நாடுகளிலும், ஏழை மக்களிடையேயும் தற்கொலை செய்துகொள்வோர் குறைவு. காட்டுவாசிகளுக்குத் தற்கொலை பற்றி எதுவுமே தெரியாது. ஒரு சமூகம் செல்வ வளம் பெறத் தொடங்கியதும் அதனால் அந்த சமூக மக்கள் ஆசைகளை வளர்த்துக் கொள்ளத் தொடங்கியதும், தற்கொலை செய்து கொள்வோரின் எண்ணிக்கையும் அதிகரிக்கத் தொடங்குகிறது. வசதி உள்ளவர்கள்தாம் தற்கொலை செய்து கொள்ளுகின்றனர். ஏழைகள் எப்படியோ வாழ்க்கையை ஓட்டிவிடுகின்றனர். பிச்சைக்காரர் யாரும் தற்கொலை செய்து கொண்டதாக நீ கேள்விப்பட்டதுண்டா? அவர்களும் இயற்கையாகச் சாவதையே விரும்புகிறார்கள்.

வாழ்க்கையைக் குறைவாக அனுபவித்தவன் வாழும் ஆசையை அதிகக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறான். நீயும் வாழ்க்கையை பலமாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். மறுபிறவி உண்டென நம்புகிறாய். இந்த நம்பிக்கைக்கு அடித்தளமாக என்ன ஆசை உள்ளது? நீ பார்க்கும் வாழ்க்கை நிஜமானதன்று. நீ பார்ப்பது கானல்நீரையே.

மேலுள்ள சுலோகம் 170இன்படி — எவன் வாழ்வு-சாவு ஆகிய இரண்டு நிலையிலும் அலட்டிக்கொள்ளாத மனம் பெற்றவனோ, அவன் உயிருடனேயே முக்தி பெற்றவன் ஆகிறான். அவன் சிநேகம் நிறைந்த பெண்ணையும், நெருங்கி விட்ட மரணத்தையும் சமமாகவே நடத்துவான்.

பெண்ணையும் சாவையும் தராசின் இரு தட்டுகளைப்போல ஒன்றாகச் சேர்த்துச் சொல்வது உனக்குத் திகைப்பூட்டும். இதன்

விளக்கமென்ன? நமக்குப் பிறப்புக் கிடைத்தது பெண்ணிடமிருந்து. ஆகவே சாவும் அவளிடமிருந்தே வருவதுதான் பொருத்தமாக இருக்கும். எங்கேயிருந்து பிறப்புத் தொடங்கியதோ அங்கே யிருந்துதான் சாவும் வரும். எங்கிருந்து உயிர்க்கயிறு தொங்க விடப்பட்டதோ அங்கிருந்தே அது மேலே இழுத்துக் கொள்ளப்படுகிறது.

காளியின் சிலை உருவத்தைப் பார்த்திருப்பாய். காளியை அன்னை என்கிறோம். அவள் தாய்மையின் அடையாளம். ஆனால் கழுத்தில் மண்டையோட்டு மாலை தரித்துள்ளாள்! கையில் வெட்டப்பட்டு ரத்தம் சொட்டும் மனிதத் தலை. கபால காளி. பயங்கரத் தோற்றம். நாக்கை வெளியே நீட்டியபடி இருக்கிறாள். கீழே கிடக்கும் கணவரின் நெஞ்சின்மீது கால்வைத்து நடனமாடுகிறாள். தாயும் அவளே, சாவும் அவளே என்பது இத்தோற்றத்தின் பொருள்.

பெண்ணின் அடையாளமும் இதுவே. நான் பெண்ணாக உடல் தோற்றத்தில் உள்ளவர்களை இங்கே குறிப்பிடவில்லை. பிறப்புத் தருபவள் என்று அர்த்தம் எடுத்துக்கொள்ளவும். எங்கேயிருந்து வட்டம் தொடங்குகிறதோ அங்கேயே அது திரும்பிவந்து முடிவும் அடைகிறது.

மேகத்திலிருந்து மழை பெய்கிறது. ஆறாகப் பாய்ந்து ஓடி, கடலில் வீழ்கிறது. அங்கிருந்து தண்ணீர் ஆவியாகி மேகம் உண்டாகிறது. மேகத்திலிருந்து மீண்டும் மேகமென வட்டம் நிறைவு பெறுகிறது.

கிழவன் குழந்தையைப் போலவே மீண்டும் பலகீன னாகிறான். குழந்தை பல்லின்றிப் பிறக்கிறது. கிழவனுக்குப் பொக்கைவாய் ஏற்படுகிறது. குழந்தையின் நிலையைப்போல். அவனையும் தூக்கிநிறுத்த, உட்காரவைக்க, உணவூட்ட மற்றவர் களின் உதவி தேவைப்படுகிறது. இங்கே குழந்தையிலிருந்து கிழவன் என்னும் வாழ்க்கையின் வட்டம், சுழற்சி பூர்த்தியாகிறது.

பெண்களுக்கு எதிராக இங்கே கூறப்படுவதுபோல் தோன்றலாம். ‘ஆமாம், பெண்கள் ஆபத்தானவர்கள்தாம். இது ஏற்கெனவே தெரிந்த விஷயம்தானே’ என ஆண்கள் சிலர்

ஆமோதிக்கலாம். நான் சொல்வது பெண்ணுடலில் உள்ளவர்களைப் பற்றி அன்று. தாய்-மனைவி-மகள் என்னும் குறிப்பிட்ட உறவான பெண்களையும் இங்கே குறிப்பிடவில்லை. இங்கே பெண் எனப்படுபவள் ஓர் அடையாளம் மட்டுமே ஆவாள்.

காமத்தினால் பிறப்பு நேர்கிறது. காமம் ஏறத்தாழ நீங்கிவிட்ட நிலையில் — முதுமையின் பலகீனமான நிலையில் — மரணம் நிகழ்கிறது. நதி வற்ற ஆரம்பித்துவிட்டது. விரைவில் அது காணாமல் போய்விடும். குழந்தைப் பருவத்தில் நதிநீர் சுரக்கத் தொடங்குகிறது. இளமைக் காலத்தில் அது வெள்ளமாய்ப் பொங்குகிறது. முதுமை என்பது நதி விடைபெறும் நேரம். அது கடலில் கலக்கும் நேரம் நெருங்கிவிட்டது. விரைவில் அது மறைந்துவிடும். காம உணர்ச்சி குறைந்து மறையவுள்ளது. அது மறையவில்லைபோல் காட்டிக்கொண்டு, சாவைத் தள்ளிப்போட, முற்காலத்தில் மன்னர்கள் தங்கள் முதுமையிலும் இளமையான பெண்களை மணந்துகொண்டனர். மேலும், காம சக்தி தங்களிடம் நிறைய உள்ளதாகக் காண்பித்துக் கொண்டால்தான், மக்கள் தங்களை உடல் வலிமை வாய்ந்தவர்களென மதித்து தங்களிடம் அஞ்சுவர் என்றும் இந்தக் கிழட்டு மன்னர்கள் நினைத்துக் கொண்டார்கள்.

உன் வயது 50 என வைத்துக் கொள்வோம். உனக்கு 20 வயதிலுள்ளவள் காதலியாகக் கிடைத்தால், உன் வயது 10 வருஷமாவது குறைந்துபோனது போல் நடந்து கொள்வாய். மறுபடியும் உன் உடலில் சிலிர்ப்பு ஏற்படுகிறது. மனத்தில் குறுகுறுப்பாக இருக்கிறது. கிழவரிடமும் யுவதியின் அன்பு கிடைத்தால் இந்த மாற்றங்கள் உண்டாகும். இதை மாற்றியும் சொல்லலாம். ஓர் இளைஞனுக்குப் பெண்ணின் சிநேகமே கிடைக்காமல் போனால், அவன் கிழவனைப்போலத் தோற்றமளிக்கவும், நடந்துகொள்ளவும் தொடங்குகிறான். நீரில் மூழ்குபவனுக்குத் துரும்பும் நம்பிக்கை தருவதுபோல், முதுமை காரணமாக சாவை நெருங்கிவிட்டவனும் காமத்தால் மீண்டும் துடிப்புப் பெறுகிறான். பெண்களின் சகவாசம் கிடைக்கப் பெறாதவர்கள் திரைப்படங்கள் பார்த்தும், கடைத்தெருவில் பெண்களை உரசியும் தங்கள் ஏக்கத்தை ஓரளவு தணித்துக் கொள்கிறார்கள்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மொட்டை மாடியில் அமர்ந்து தெருவில் செல்பவர்களைப் பார்த்தபடி இருந்தார். அவர் திடீரென வேலைக்காரனை அழைத்து, "ஓடிப்போய் என் பல்செட்டைக் கொண்டுவா, அவசரம்," என்று பரபரத்தார். ஆனால் அவன் மெதுவாக வந்து பல்செட்டைக் கொடுத்தான். "அப்படி என்ன அவசரம்? இப்பொழுது நீங்கள் எதுவும் சாப்பிடப் போவ தில்லையே," என்றான். அதற்கு முல்லா, "இப்போதுதான் ஒரு இளம்பெண் தெருவில் போனாள். அவளைப் பார்த்ததும் சீட்டியடிக்கத் தோன்றியது. அதுக்குத்தான் பல்செட் கேட்டேன். நீ மெதுவாக வந்து நிற்கிறியே," என்று வருத்தமாகச் சொன்னார்.

கிழவன் பெண்களைப் பார்த்து சீட்டி (சீழ்க்கை) அடித்தான் எனில் அவன் தனது வயதை மறந்துவிட்டதாக அர்த்தம். நெருங்கிவரும் சாவு அவனுக்கு நினைவில் இல்லை என்று அர்த்தம். இதுவரை தள்ளாடி நடந்தவன், அவ்வாறு நடப்பதைப் பெருமையாக நினைத்தவன், பெண்களின் நெருக்கம் கிடைத்தால், நிமிர்ந்து நடக்க ஆரம்பிக்கிறான். அவனது வாழ்க்கை என்னும் மங்கிக்கொண்டிருந்த விளக்கில் யாரோ மீண்டும் எண்ணெய் ஊற்றியதுபோல் தோன்றுகிறது. கூடுதலாகச் சிறிது நேரம் ஒளி நீடிக்கிறது.

காமம், வாழ்க்கை உயிரோட்டத்துடன் இருப்பதன் அடையாளமாகும். ஆகவே காம உணர்வு நின்றுபோனால் மரணம் நெருங்கிவிட்டது தெரியவருகிறது. பெண்ணையும் சாவையும் அருகருகே வைத்து சுலோகம் 170 கூறப்பட்டது.

இறக்கவுள்ள ஒரு மனிதன் பெண்ணைக் கண்டு மோகித் தால், சாவு எதிரே நிற்பது கண்டு நடுங்கிப்போவான். இறக்கவுள்ள ஒரு மனிதன் பெண்ணைக் கண்டு சலனப்படாவிட்டால், அவன் சாவைக் குறித்தும் நடுங்கமாட்டான். பெண்ணைப் பற்றிக் கூறியதெல்லாம் ஆண்கள் விஷயத்திலும் பொருந்தும். பெரும்பான்மையான நூல்கள் ஆண்களால் எழுதப்படுவதால், எதற்கும் பெண்களையே குறை கூறுவதுபோல் தோன்றுகிறது. ஆண்கள் பெண்ணிடம் காம வசப்படுவதால் சாவு கண்டு நடுங்குவார்களெனிலும், பெண்களும் ஆணிடம் காமவசப்படும்

நிலையில் சாவுக்கு நடுங்குவார்கள். ஆனால் மரணம் நெருங்கும்போது ஒரு பெண் அழகான, பலசாலியான, அன்பை வெளிப்படுத்துகின்ற ஆணைக் கண்டு தடுமாறாவிடில், அவள் மரணத்திற்கு அஞ்சமாட்டாள்.

வாழ்க்கையின் எந்த வயதிலிருந்து நீ காமத்தால் தடுமாறாமல் இருக்கிறாயோ அந்த சமயத்திலிருந்தே நீ மரணம் குறித்தும் பதற்றமடைய மாட்டாய். நமக்கு மரணம் எப்போது நிகழும் என்பதை உறுதியாகக் கூற இயலாது. அது தெரிந்தால் தானே நாம் முன்கூட்டியே ஏற்பாடுகள் செய்துவைக்க முடியும்; நாடக ஒத்திகைபோல் பயிற்சி எடுக்க முடியும் எடுத்துக்காட்டாக, சாவு அடுத்த வாரம் ஏற்பட உள்ளதெனத் தெரிந்தால் நாம் அதற்குத் தகுந்த 'ரிஹர்ஸல்' பார்க்க முடியும்.

சாவு திடீரென வருகிறது. அதன் வருகை குறித்து செய்தி அனுப்பப்படுவதில்லை. வருமான வரித் துறை அனுப்புவதுபோல் மூன்று முறை எச்சரிக்கை நோட்டீஸ் கிடைப்பதில்லை. இதனால் தான் அடுத்த நிமிடம் இறக்கப் போகின்றவனும், சாவு வாசல் கதவுவரை வந்துவிட்டது தெரியாமல் எதிர்காலத்திற்கான திட்டங்களை தயாரிப்பதில் ஈடுபடுகிறான். சாவுடன் நமது சந்திப்பு ஒருமுறைதான் நிகழ்கிறது; திடீரென நிகழ்கிறது. விபத்து சமயம் எட்டிப் பார்த்துவிட்டுப் போனதாகச் சொல்வது சரியில்லை. ஒருமுறைதான் வரும் சாவு வெறுங்கையுடன் திரும்புவதில்லை. அழைக்காத விருந்தாளிபோல் அது நம் வீட்டு வாசலில் வந்து நிற்கிறது. பழைய சாஸ்திர நூல்கள் சாவை அதிதி என்று கூறுகின்றன. திதி (தேதி நாள்) குறிப்பிடாமல் சாவு வந்து நிற்பதால் அதற்கு அப்பெயர் ஏற்பட்டது.

சாவைக் கண்டு அஞ்சாமலிருக்க நீ உன்னிடமுள்ள காம உணர்வை ஆராய்ந்து பார்; அளந்து பார். எந்த அளவிற்கு காமம் குறைந்துபோகத் தொடங்குகிறதோ அதே அளவிற்கு உன் சாவு பயமும் குறைந்துவிடும். இவ்வாறு சாவுக்கு அஞ்சாதவன் அமிர்தம் பருகியவன் போலாகிறான். ம்ருத்யு எனில் சாவு. ம்ருத எனில் இறந்த. ஆகவேதான் அம்ருத (அமிர்த) என்பது இறவாமையைக் குறிக்கிறது.

ஆத்மா இறவாதது, அமரத் தன்மை கொண்டது என்று நீ கேள்விப்பட்டிருக்கிறாய். உடனே உன் ஆத்மா அப்படிப் பட்டதென நினைத்துவிடாதே. தற்சமயம் உன்னிடம் ஆத்மா எங்கே இருக்கிறது! காமம் முதலிய பிடிப்புகள் நீங்கியபின்தான் நீ ஆத்மாவிடம் வருகிறாய். தற்சமயம் உன் ஆத்மா அமுங்கிக் கிடக்கிறது. ஆத்மாவை அறிந்திராத காரணத்தினால்தான் சிலர் உடலையே ஆத்மா என நினைக்கின்றனர். சிலர் மனமே ஆத்மா என்கின்றனர். மனசாட்சியின் குரலை ஆத்மாவின் குரலெனக் கருதுகின்றனர். இதெல்லாம் பிரமை. ஆசைகளென்ற மேகங்களால் நம் ஆத்மா மறைக்கப்பட்டுள்ளது. மேகங்கள் கலைந்ததும் ஆத்ம சூரியன் வெளிப்படும். ஆசைகளென்ற தூசிப் படலம் விலகியதும் ஆத்மாவின் ஒளி வெளிப்படும்.

ஆத்மா நிச்சயமாக அமரத்தன்மை கொண்டது. ஆனால் நீ அறிந்து உனக்குள்ளேயே இருப்பவை அமரத்தன்மை உடையவை அன்று. நீ அமரத்தன்மை பற்றி இதுவரை அறிந் திருக்கவில்லை. அமரத் தன்மையுடன் அறிமுகம் ஏற்பட்டால் நீ மரணத்திற்கு பயப்படமாட்டாய். நீ யோசிப்பாய் — 'சாவா? எப்படி சாவு? யாருக்கு சாவு? இறக்கின்றவன் நான் அல்லவே! என் உடல் இறக்கும். ஏனெனில் அது பிறந்தது. மனம் இறக்கும். ஏனெனில் அதை உடலிலிருந்து பிரிக்க முடியாது.' உடல்-மனம் இரண்டிற்கும் அப்பால் எது உள்ளதோ, எது அந்த இரண்டையும் கடந்து உள்ளதோ அதுவே ஆத்மா. அதுவே சாட்சியாக தம் வாழ்வில் நடப்பவற்றைப் பார்த்தபடி இருக்கிறது.

காம உணர்வு நம்மை வலுவாகப் பிடித்து வைத்திருக்கிறது. அதனிடமிருந்து தப்புவது கடினம். அது தீவிர வேகம் கொண்டது. அது நம் ஆளுமையில் ஆழமாக வேரூன்றியிருக்கிறது. அது நான்கு புறத்திலுமாக நம்மை முற்றுகையிட்டிருக்கிறது.

நம் உடல் அணுக்களால் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் பாதி தந்தையிடமிருந்தும், பாதி தாயாரிடமிருந்தும் வந்தவை. அவர்கள் இருவரின் காம சம்பந்தமான அணுக்கள் இணைந்து உனது அணுவை உண்டாக்கினர். அந்த அணுவி லிருந்து தொடர்ந்து மற்ற அணுக்கள் தோன்றின. இப்போது நம்

உடலில் ஏழு கோடி காம அணுக்கள் உள்ளனவென்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இத்தனை கோடி காம அணுக்களின் உள்ளே எங்கேயோ உன் ஆத்மா ஒளிந்திருக்கிறது. ஏழு கோடி மக்கள் வசிக்கும் மாநிலம் போல் உன் உடலைக் கற்பனை செய்தால் இதன் தலைவன் உள்ளே ஆழத்தில் புதைந்து வசிக்கிறான். அவன்தான் 'நான் யார்?' என்னும் கேள்விக்கு விடையாக இருப்பவன். ஆனால் அவன் மேலே வரமுடியாதபடி அமுக்கி ஏழு கோடி ஜீவ அணுக்கள் அவனைத் தேர்க் குதிரைகள் போல் இழுத்துச் செல்கின்றன. பிறகு எல்லாமாகச் சேர்ந்து சாவின் குழியில் விழும். ஏனெனில் இவை காமத்தில் பிறந்தவை.

சுருக்கமாக: காமத்தில் பிறந்தவை சாவில் மடியும். நீயாகிய ஆத்மா காமத்திற்கு முன்னாலும் இருந்தாய். ஆகவே நீ ஆத்மாவாகச் சாவிற்குப் பின்னாலும் இருப்பாய். ஆனால் சாஸ்திர ஞானத்தால் ஆத்மாவின் இருப்பை உணர முடியாது.

உன் அருகே அன்பு நிறைந்த இளம்பெண் நிற்கிறாள். அழகானவள், கட்டான உடலமைப்பு உள்ளவள், உன் மீது பிரியம் கொண்டிருக்கிறாள். அதேபோல் உன்மீது பிரியம் கொண்டு உன்னைத் தனதாக்கிக்கொள்ள சாவு காத்திருக்கிறது. இந்த இரண்டிற்கும் நடுவில், மனத்தில் சலனமில்லாமல் நீ நிற்கிறாய். நீ அப்படி இருக்க முடியுமானால், காற்றடித்தாலும் அசையாமல் சீராக ஒளி விடும் சிம்னி விளக்குப்போல் உன்னால் இருக்க இயலுமெனில், நீ முக்தனாகி (சுதந்திரமானவனாகி) விட்டாய் என அறிந்து கொள்ளலாம்.

என்னிடம் சிலர் வந்து குறிப்பிட்ட நபர் முக்தனாகிவிட்டார் என்பதை எப்படித் தெரிந்துகொள்வதெனக் கேட்கிறார்கள். மற்றவர்களின் நிலையைக் கண்டறிய உபாயம் எதுவும் இல்லை. மற்றவர்களை நீ எப்படிப் புரிந்துகொள்வாய்? தனது நிலையை அறிய மட்டுமே வழி உண்டு. மற்றவன் முக்தனாகிவிட்டானா என்று கேட்பதே கூட தவறுதான். இதை அறிந்துகொள்வதால் உனக்கு என்ன பயன்? வெளிப்பார்வை மூலம் ஒருவன் முக்தனா, இல்லையா என்று கண்டுபிடிக்க முடியாது. வெளி வாழ்க்கையில்

அவனும் மற்றவர்களைப் போலவே நடந்து கொள்வான். பசியெடுத்தால் சாப்பிடுவான். தூக்கம் வந்தால் தூங்குவான்.

உனக்கும் முக்தனுக்கும் வெளிவாழ்க்கை நடவடிக்கைகளில் வேறுபாடு தெரிவதில்லை. வேறுபாடு உள்ளே இருக்கிறது. அவன் உண்ணும்போது முழுநினைவுடன் உணவிலேயே கவனம் செலுத்தி உண்கிறான். அப்படி அவன் மனத்தைக் குவிப்பது உன் பார்வையில் அகப்படுவதில்லை. உறங்குகையில் அவன் அதில் முழுமையாக ஆழ்ந்துவிடுகிறான். ஆனால் அவனுக்குள்ளே எதுவோ விழித்திருக்கிறது. அதை நீ அவனுக்குள்ளே செல்ல முடிந்தால்தான் காணலாம். நீ உனக்குள்ளேயே ஆழ்ந்து செல்ல இயலாதவனாக இருக்கிறாய். மற்றவர்களின் உள்ளத்தை உன்னால் எப்படி ஆழங்காண முடியும்?

இந்த சுலோகம் கிருஷ்ணருக்குப் பொருந்தாதே என்பாய். பெண்களின் நடுவில் நடனமாடி கொண்டிருந்த அவர் முக்தனாக இருக்க முடியாது என வாதம் செய்வாய். வேறு ஆணாக இருந்தால் நீ சொல்வது பொருந்தும். ஆனால் கிருஷ்ணர் கதை வேறு. அவர் பெண்களால் சூழப்பட்டும் சலனமடையாதவர். அலைகளின் நடுவே மௌனம் போன்றவர். நீயும் சபலங்களின் நடுவே சலனமற்றவனாய் இருந்தால்தான், கிருஷ்ணரும் அவ்வாறு இருந்திருப்பார் என்னும் முடிவுக்கு வர முடியும்.

புத்தரிடம் ஒருவன் வந்து பின்வருமாறு கேட்பதாக வைத்துக் கொள்வோம் — ஐயா, தாங்கள் புத்த நிலையை அடைந்துவிட்டீர்களென்ற அறிவிப்பைக் கேட்டோம். உங்களுக்கு மகாஞானம் கிடைத்துவிட்டதாகவும் அறிகிறோம். உயிருடனேயே தாங்கள் முக்தனாகிவிட்டதாகவும் சொன்னார்கள். இதுவெல்லாம் உண்மை என்பதற்கு ஏதேனும் ஆதாரம் அளியுங்கள்.

அதற்கு புத்தர், "நீங்கள் என்னை அறிவதற்கு முயன்றால், உங்களுக்குக் குழப்பமேற்பட்டுவிடும். மாறாக, நீங்கள் உங்களின் நிஜசொரூபத்தை அறிய முற்படுங்கள். அப்பொழுது என்னையும் புரிந்துகொள்வீர்கள்," என்று வழிகாட்டினார்.

இந்த சுலோகத்தை மற்றவர்கள் விஷயத்தில் உபயோகிக் காதே. மற்றவர்களை நீ புரிந்துகொள்ள முடியாது. பெண்களோடு

ஒருவர் இருப்பதைப் பார்த்து நீ அவர் முக்தரில்லை என்று அவசரப்பட்டுக் கூறிவிடுவாய்.

இந்த சுலோகத்தை உனக்கு ஓர் உரைகல்லாகப் பயன் படுத்திக்கொள். நீ பாதையில் செல்கிறாய். ஓர் அழகிய ஆணோ, பெண்ணோ கடந்து செல்லும்போது, உனக்குள் சலனம் ஏற்படாவிட்டால், நீ மகிழ்ச்சி கொள்ளலாம். உனக்கு வாழ்க்கையின் உண்மையான சுவை சிறிது தெரிந்துவிட்டதென்லாம்.

கொஞ்சம்-கொஞ்சமாக எதற்கும் சலனப்படாதிருக்கும் பழக்கம் வலுப்பெறும். ஒருநாள் மரணம் உன்னை நெருங்கும். காமம் தன் கடைசி விளைவாக சாவிற்குக் கொண்டுசெல்லும். காமத்தால்தான் உடல் தோன்றியதால், அதற்கு சாவு நேருவது தவிர்க்க முடியாதது. ஆனால் காம சூழ்நிலையிலும் சபலப்படாமல் இருப்பவன் இறந்து போனபிறகு மீண்டும் பிறப்பதில்லை.

இதுவே ஜீவன் முக்தி எனப்படுகிறது. ஆணாலோ, பெண்ணாலோ கவரப்படாமல் காமத்திலிருந்து விடுபடுவதே ஜீவன் முக்தி. பண ஆசை, பதவி ஆசையும்கூட காம ஆசையை நிறைவேற்றிக் கொள்ள உதவுகின்றன. முற்கால மன்னர்களின் அந்தப்புரத்தில் இதனால்தான் ஏராளமான பெண்கள் நிறைந் திருந்தனர். இது கட்டுக்கதையில்லை. மன்னர்களிடம் இப்படி வாழ்வதற்கான வசதி இருந்தது. மனத்தத்துவ மேதை ஸிக்மண்ட் ஃப்ராய்டும் நம் எல்லா விருப்பங்களின் அடி ஆழத்தில் இருப்பது காம உணர்ச்சியே (libido) என்கிறார்.

நீ பிறக்கும்போது மௌனத்திலிருந்து தோன்றினாய். நீ இறந்தபின் மௌனத்தில் கலந்து விடுவாய். ஜென் துறவிகள் நம்மை நமது பிறப்பிற்கு முன்னாலிருந்த நம் முகத்தை, சாவுக்குப் பின்னால் கிடைக்கப் போகிற அதே முகத்தை, தேடி காணச்சொல்கிறார்கள். நடுவில் கிடைத்தது கடன் வாங்கிய முகம்; நம் தந்தை-தாயிடமிருந்து கிடைத்த முகம். அது உனதன்று; உனக்குச் சொந்தமானதன்று. எனவேதான் உண்மையான மதத்தில் கோலாகலமும், கூச்சலும், ஆர்ப்பாட்டமும் இருக்காது. அது மௌனத்தை, தியானத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும்.

கடவுளை அணுக எது சிறந்த வழி என்று கவலை கொள்ளாதே. எல்லா வழிகளும் இறைவனிடமே இட்டுச் செல்கின்றன. நீ கவனிக்க வேண்டிய விஷயம் உன் வழியில் தடை இருந்தால் நீ அங்கேயே தேங்கிவிடக்கூடாது என்பதுதான். வழியில் தங்கும் கூடாரத்தை பயணம் முடிகின்ற இடமென நினைத்துவிடாதே. தொடர்ந்து நடந்தால் யாருமே பாதையின் முடிவை, சேருமிடத்தை அடைந்துவிடலாம். உலகப் பாதைக்கும் ஆன்மிகப் பாதைக்குமுள்ள ஒற்றுமை இது. ஆன்மிகப் பயணியாகிய நீ வழியில் தென்படும் கூடாரங்களாகிய பணம், பதவி, ஆண்-பெண் மோகம், பேராசை, பாசம் போன்ற எதிலும் நிரந்தரமாகத் தங்கிவிடாதே. வழியில் தேங்காதே. விழிப்புடன் இரு. தொடர்ந்து நடைபோடு.

ஞானிகளின் பரம்பரை முற்காலத்துடன் முடிந்து விட்டதென நினைக்காதே. இந்த பரம்பரை ஒரு காலத்திலும் முடிவு பெறுவதில்லை. பெரும்பான்மையோர் அறியாமை உறக்கத்தில் இருப்பினும், எங்கோ, யாராவது ஒருவன் விழித்தபடி இருப்பான்.

நமக்குள்ள நோய் நாம் யார் என்பதை அறிந்திராமைதான். உன்னை ஒருவன் 'நீ யார்?' என்று கேட்டால், உன்னால் உள்ளது உள்ளபடியே பதில் கூற முடியுமா? உன்னைப் பற்றி நீ சொல்பவை போலியானவை. தினசரி நடவடிக்கைகளுக்கு மட்டுமே உதவுபவை. நீ சொல்கிறாய்: "என் பெயர் ராமன். நான் இந்த ஊரில் வசிப்பவன். நான் இந்தத் தெருவில் வசிக்கிறேன். என் வீட்டு எண் இது.' இந்தத் தகவலெல்லாம் சரிதான். ஆனாலும் இவை உன் உண்மையான அடையாளமில்லை. இவை மற்றவர்கள்' உன்னை 'நீ யார்?' என்று கேட்டால் சொல்ல வேண்டிய பதில்கள். ஆனால் உன்னையே 'நீ யார்?' என்று கேட்டு, நேரான, நேர்மையான பதில் சொல்ல முடியுமா?

மனத்தத்துவ மேதை ஸிக்மண்ட் ஃப்ராய்ட் சில குழந்தைகள் இந்தக் கேள்வியை எழுப்புவதுண்டு என்கிறார். சில குழந்தைகள் பெற்றோரிடம், "நான் யாரு? எங்கேந்து வந்தேன்? இங்க எப்படி வந்தேன்?" என்று கேட்பதுண்டு. பெற்றோருக்குப் பதில் தெரியாதே. அவர்கள் வேடிக்கையாக, "உன்னை கடையில் வாங்கினோம்" என்று சொல்வதுண்டு.

வயதானால் இந்தக் கேள்விக்கு விடை கிடைத்துவிடும் என்று கூற முடியாது. வயதிற்கும் இந்தக் கேள்விக்கும் சம்பந்தமில்லை. வயதானால் விடை கிடைப்பது முன்பைவிட சிரமம். ஏனெனில் நமது மூளை அதற்குள் ஏராளமான பயனுள்ள மற்றும் பயனற்ற விஷயங்களால் நிரம்பிவிடுகிறது. சுயமாகச் சிந்திக்கும் ஆற்றலை இழந்துவிடுகிறது.

இறக்கும் சமயம் சிலர் மனத்தில் இக்கேள்வி தோன்றலாம். 'நான் யார்? இன்ப துன்பங்களை அனுபவித்தேன். வெற்றி-தோல்வி கண்டேன். கூச்சல் போட்டேன், ஆர்ப்பாட்டம் செய்தேன். நிறையப் பேருடன் சண்டை போட்டேன். பிறரை நிறைய ஏமாற்றினேன். இனி என்ன ஆகும்? நான் என்பது உடலா? அது எரிக்க அல்லது புதைக்கப்பட்டபின் நான் என்ன ஆவேன்? அல்லது நான் ஆத்மாவா? ஆத்மா என்பதால் அழியாமல் இருப்பேனா? வேறு உடலுக்குப் போக நேரிடுமா?' என்றெல்லாம் சிந்தனை எழலாம். ஆனால் மரணப் படுக்கையில் 'நான் யார்?' என்னும் கேள்விக்கு விடைகிடைக்க வாய்ப்பில்லை.

இந்தக் கேள்விக்கான பதில் மனத்தில் சலனமே இல்லாமல் போனால்தான் கிடைக்கும். அசையும் தண்ணீரில் பிரதிபிம்பம் தெளிவாகத் தெரிவதில்லை. அதுபோல் குழப்பமான மனத்தில் 'நான் யார்?' என்னும் கேள்விக்குத் தெளிவான பதில் பெற முடியாது. நீ முழுமையாக சாந்தமாக இருக்க வேண்டும். மனத்தில் ஓர் அலைகூட எழக்கூடாது. அப்போது இந்தக் கேள்விக்கு விடை கிடைத்து, உன் நிஜத்தன்மையை அறிந்து கொள்வாய். அப்போதும் உன்னால் புரியும்படி அதை வெளியில் சொல்ல முடியாது ஊமையால் வெல்லத்தின் சுவையைக் கூற முடியாததுபோல் உனது அனுபவம் இருக்கும். எனினும் உன்னுள் நிகழ்ந்த மாற்றம் பிறரை உன்பால் இழுக்கும். அவர்களை உன்னருகில் உட்கார்ந்து பேசவைக்கும்.

ஆனால் நம்மை அறியும் முயற்சியைச் செய்யாமல், நாம் வாழ்க்கை முழுதும் மணல் வீடு கட்டுவதுபோல், காகிதப் படகு விடுவதுபோல் மேலோட்டமான வாழ்க்கை வாழ்கிறோம்.

சில இருட்டுகள்
ஒளியுடன் சேர்ந்து வரும்
சில வெளிச்சங்கள்
இருட்டுடன் சேர்ந்து வரும்
சிலருடைய கால்கள்
நேற்றைய படிகளில் நின்றுவிடும்
சிலருடைய கைகள்
இன்றும் வரலாறு படைக்கும்
காலப் போக்குடன் சமரசம் இன்றேல்
பூமி செழிப்புடன் விளங்காது
சில காற்றுகளின் வேகத்தில்
மலைப் பாறைகளே தடுமாறுகையில்
நாம் நதிக்கரையில் மணல்வீடு கட்டி
நிரந்தரம் அதுவென நினைக்கிறோம்

அஷ்டாவக்ரர் சொல்கிறார் — நீ சலனமற்ற மனத்தை உடையவனாக ஆக முடிந்தால், நீ பிறப்பு - இறப்பு - செய்கைகள் அற்ற கடவுளை அறிந்துகொள்வாய். அவர் இருத்தல் மட்டும் செய்கிறார். அவரது அந்த இருத்தலில் நீ ஆழ்வது உனக்கு முழுமையான அமைதியையும் முக்தியையும் பெற்றுத்தரும்.

'எல்லாவற்றையும் சமமாகக் காண்பவன். (ஸமதர்ஷீ) சுகம்-துக்கம், ஆண்-பெண், வளமை-வறுமை முதலியவை வெவ்வேறென ஏற்பதில்லை' **(சுலோகம் 171)**

**ந**மக்கு இன்பமும் துன்பமும் வெவ்வேறெனத் தனித்தனியாகத் தெரிகின்றன. காரணம் என்னவெனில் நாம் இன்பத்தை விழைகிறோம்; துன்பத்தை வெறுக்கிறோம். நமது விரும்புதல்-விரும்பாமை காரணமாக அவை இரண்டெனத் தெரிகின்றன. விருப்பம்-விருப்பின்மை இரண்டையும் கைவிட்டு நீ சலனமின்றி ஒரு நிகழ்ச்சியைப் பார். அப்போது இன்பம் துன்பத்திற்கிடையே வித்தியாசம் மறைந்துவிடுவதை உணருவாய். இன்பம் துன்பத்திற்கிடையே எல்லைக் கோடு போடுவது நமது விருப்பமே தவிர, உண்மையில் அவை ஒன்றே.

வாழ்க்கையில் இன்னொரு விநோதமும் உள்ளது. ஒரு பொருளை அல்லது விஷயத்தை நீ விரும்பாது இருந்திருக்கலாம்.

அது துன்பம் தருவது என நீ நினைத்திருக்கலாம். அதுவே எதிர்பாராத நிகழ்ச்சியால் உனக்குப் பிடித்தமான பொருள் அல்லது நிகழ்ச்சியாக மாறிவிடக்கூடும். உதாரணமாக, ஒருவன் சிகரெட்டை வெறுக்கிறான். ஏனெனில் முதல் முறையாக அவன் பிடித்தபோது, அவனுக்குத் தலைசுற்றியது; இருமல் வந்தது; முகம் சிவந்தது. கண்ணிலிருந்து நீர் வடிந்தது, உடல் நடுங்கியது. அவன் சிகரெட்டைப் பாதியில் எறிந்துவிட்டான். 'ஒரு நிமிஷம் முன்னால் வரை நல்லாத்தான் இருந்தேன். இந்த சிகரெட் சனியனால் ஆடிப்போய்விட்டேன்' என்றான்.

ஆனால் நண்பர்கள் சும்மா விடுவார்களா? அவர்கள் அவனை சமாதானபடுத்தி, "எதுவுமே ஆரம்பத்தில் கஷ்டம்தான். போக போகச் சரியாயிடும். இதுவும் ஒருவகை யோகப் பயிற்சிதான். பழக்கமாகிவிட்டால், பிறகு நாங்கள் வற்புறுத்தினாலும் சிகரெட்டை நீ கைவிடமாட்டாய்," என்றனர். அப்படித்தான் நடந்தது. நாளடைவில் அவன் செயின் ஸ்மோக்கர் ஆகிவிட்டான்! இது கள் குடித்தலுக்கும் பொருந்தும். ஆரம்பத்தில் இந்தக் கசப்பான திரவத்தை எப்படித்தான் பருகுகிறார்களோ என்று துப்பியவன், பிறகு குடிகாரனாகிவிடுகிறான்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மனைவி பலத்த சங்கடத்தில் இருந்தாள். அவர் தினமும் வெளியில் நன்கு குடித்துவிட்டே வீடு திரும்புவார். அவள் எவ்வளவோ புத்திமதி சொல்லிப்பார்த்தும் அவர் குடிப்பதைக் கைவிட தயாராக இல்லை.

ஒருநாள் அவள் கணவர் கள் குடிக்கும் கடைக்குள் போய்விட்டாள். அவளைப் பார்த்து முல்லா அரண்டு போனார். பெண்கள் அங்கே வருவதே கிடையாது. முல்லாவின் மனைவி நேரே அவர் இருந்த இடத்திற்கே வந்து பக்கத்து நாற்காலியில் அமர்ந்தாள்! வியப்புடன் பார்த்த கணவரை நோக்கி அவள், "இந்த திரவத்திலே ஏதோ விசேஷம் இருக்கு. அதனாலதான் ஒருதடவை குடிக்கிறவங்க அதுக்கே அடிமையாயிடறாங்க. அப்படியென்ன விசேஷம்னு தெரிஞ்சுக்கிறதுக்காகத்தான் நானே குடிச்சு பார்க்க வந்திருக்கேன்," என்றாள்.

முல்லா தத்தளித்தார். யோசிக்கலானார். 'நான் ஒருவன் குடிப்பதே வீட்ல பிரச்சினையாயிருக்கு. இவளும் குடிக்க ஆரம்பிச்சா என்னைப் போலவே வீட்டில ஆர்ப்பாட்டம் செய்வாள், என்னை துன்புறுத்துவாள். குடிகாரனான நான் இவளை குடிக்காதே என்று எப்படி தடுக்க முடியும்?'

இதற்குள் மனைவி ஏதோ மது வரவழைத்துவிட்டாள். கோப்பையிலிருந்து கால் பாகம் குடித்ததும் முகத்தில் வெறுப்புப் படர்ந்தது. கோப்பையைத் தட்டிவிட்டாள். "இதென்ன விஷம் மாதிரியில்ல கசக்குது! இதைப்போய் மனுஷன் குடிப்பானா?" என்று கூறியபடி அவள் வாயிலிருந்த மதுவைத் துப்பிவிட்டாள்.

முல்லாவின் முகம் பிரகாசமடைந்தது. "பார்த்தியா, நான் இதக்குடிச்சு சந்தோஷமா இருக்கேன்று நீ தப்பா நினைச்சியே. கஷ்டப்பட்டு குடிச்சுதான் வீட்டுக்கே வர்றேன். அந்த வெறுப்பிலதான் நான் கத்தறேன்னு புரிஞ்சுக்க," என்று அவர் மனைவிக்கு விளக்கம் கொடுத்தார்.

பயிற்சி செய்தால் துன்பமும் சுகமாகத் தெரியத் தொடங்குகிறது. ஒன்றின்மீது விருப்பம் ஏற்பட்டால் அது சுகம் தரக்கூடியதாகத் தோன்றுகிறது.

ஒரு பெண் ஓர் ஆணை விரும்புகிறாள்; ஓர் ஆண் ஒரு பெண்ணை விரும்புகிறான். இப்படிப்பட்ட நிலையில் பரஸ்பர விருப்பம் காரணமாக சுகமாகத் தோன்றுகிறது. அவர்கள் திருமணம் செய்துகொள்கின்றனர். அவர்களின் இடையே இருந்த அன்பு தேயத் தொடங்குகிறது. சுகம் கரையத் தொடங்குகிறது. முதலில் இருந்த அன்பு சில ஆண்டுகளுக்குப் பின் வெறுப்பாக மாறிவிடுகிறது. நடுத்தர வயதைக் கடந்தபின் ஆண்-பெண் சிரித்தபடி சாலையில் சென்றால், ஒன்று, அவர்கள் நடிக்கிறார்கள் அல்லது அவர்கள் கணவன்-மனைவி ஜோடி இல்லை!

ஒருமுறை நான் ரயிலில் பயணம் செய்தேன். எதிர் இருக்கையில் ஒரு பெண்மணி. வண்டி நின்ற ஒவ்வொரு நிலையத்திலும் ஒருவன் ஓடிவந்து அவளிடம் ஏதோ பேசிவிட்டுத் தன் பெட்டிக்குத் திரும்பிவிடுவான். அவன் பொதுப்பெட்டியில்

இருந்தான் போலிருக்கிறது. ஒவ்வொரு முறையும் அவள் சாப்பிட பிஸ்கட், சர்பத், டீ, ஐஸ்க்ரீம் என்று ஏதாவது கொண்டுவந்து தந்தான்.

நான் அவளைப் பார்த்து, "அந்த ஆள் உன் கணவர் போலிருக்கே" என்று பேச்சை ஆரம்பித்தேன். அவள் 'ஆமாம்' என ஒத்துக்கொண்டாள்.

"உங்களுக்குக் கல்யாணமாகி எத்தனை வருஷம் ஆகியிருக்கும்?"

"ஏழெட்டு வருஷம் ஆகியிருக்கும், ஐயா."

"ரொம்ப புளுகாதேம்மா. ஏழெட்டு வருஷமா? உண்மையில நீ இவனை கல்யாணம் செய்துகொண்டவளாக இருக்க முடியாது. கல்யாணமாகி ஏழு வருஷத்துக்கு அப்புறமும் எந்தக் கணவன் ஒவ்வொரு ஸ்டேஷன்லயும் மனைவியைத் தேடிவந்து உபசாரம் செய்வான்? கலியுகத்தில் அப்படி நடக்க வாய்ப்பே இல்லை. பழங்கால புராணங்களிலும் இப்படிக் கணவன் கிடையாது. உண்மையைச் சொல். இவன் யார்? நான் அந்த ரகசியத்தை வெளியிட மாட்டேன்," என்று நம்பிக்கையூட்டினேன்.

"முன்பின் தெரியாத நீங்கள் எப்படி உண்மையைக் கண்டுபிடித்தீர்கள்? நாங்கள் திருமணமானவர்கள் இல்லை' — அவள் ஒப்புக் கொண்டாள்.

இதென்ன பெரிய கண்டுபிடிப்பு என்று நான் நினைத்தேன். அவன் இவள் கணவனாக இருந்தால், இவளைப் பதிவு செய்த பெட்டியில் அமர்த்தி, பொதுப்பெட்டிக்குப் போனபின், ஒருதடவை கூட பார்க்க வந்திருக்கமாட்டான்! பயணம் முடிந்தபின்தான் சந்திப்பான். தன்னால் வெளியே வர முடியாதபடி பெட்டியில் கூட்டமாக இருந்தது என்று சாக்குச் சொல்வான்.

கணவன்-மனைவி இருவருக்குமே முன்பதிவு கிடைத்து, அருகருகே உட்கார்ந்தாலும் அதிகம் பேசிக்கொள்ள மாட்டார்கள். பார்வையால் ஒருவரையொருவர் மிரட்டி அடக்குவார்கள். வீட்டிலும் பலர் அப்படித்தான் உள்ளனர். சந்திக்க யாராவது

வந்தால் மட்டும் கலகலப்பாகப் பேசி, சந்தோஷமாக இருப்பதுபோல் காண்பித்துக் கொள்வார்கள்.

**எ**ன் நண்பர் ஒருவர். மனவுறுதி மிக்கவர். வியாபாரத்தில் நிறையச் சம்பாதித்துவிட்டார். நான் அவரிடம், "எத்தனை காலம்தான் இப்படி பணத்தை எண்ணியே வாழ்க்கையை ஓட்டுவதாக உத்தேசம்?" என்று கேட்டேன். அவர், "நாற்பத்தைந்தாம் வயதைத் தொட்டதும் சட்டென்று வியாபாரத்தை நிறுத்திவிடுவேன்." என்றார். அவர் உண்மையிலேயே 45ஆவது பிறந்த நாளன்று தனது கடையை மூடிவிட்டு என்னைச் சந்தித்தார். "அடுத்து நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"உங்களிடம் வசதி இருப்பதால் ஏதாவது மலை மீதுள்ள ஊரில் குடியேறுங்கள். மீதி வாழ்க்கையை அமைதியாக நடத்துங்கள்," என்று ஆலோசனை வழங்கினேன்.

"நல்ல ஆலோசனைதான். ஒரு சங்கடம் உள்ளது. எனக்கு 15 வயதில் திருமணம் நடந்து இப்போது 30 வருஷமாகிறது. அவளைத் தனியாக விட்டுச் செல்ல முடியாது. நாங்கள் இருவருமே மட்டும் இருக்க நேர்ந்ததால் அதை சங்கட்மாகவே பல ஆண்டுகளாக உணர்ந்து வருகிறோம். நீங்களும் எங்களுடன் வசிக்க வந்தால், எங்கள் வாழ்க்கையின் இறுக்கம் தணியும். நாங்கள் வெளியூர் போனால்கூட பயணம் இலகுவாவதற்காக மூன்றாம் நபர் ஒருவரை அழைத்துச் செல்வது வழக்கம்" என்றார்.

திருமணமான புதிதில் மூன்றாம் நபர் தலையிடுவதைத் தவிர்த்த தம்பதியினர், சில ஆண்டுகள் திருமண வாழ்க்கைக்குப் பிறகு தங்களுடன் இன்னொருவர் இருந்தால் சலிப்பு, வெறுப்பு, சண்டை, வாதவிவாதம் குறைந்துவிடும் அல்லது ஏற்படாது என்னும் முடிவிற்கு வருகின்றனர். அவர்கள் தங்களுக்குள் பேச வேண்டியதை இத்தனை ஆண்டுகளில் பேசி முடித்தாகிவிட்டது; பார்க்க வேண்டியதைப் பார்த்தாகிவிட்டது; செய்ய வேண்டியதை எல்லாம் செய்து முடித்தாகிவிட்டது. வாழ்க்கையின் சுவை நீங்கி உலர்ந்துபோனது. ஒரு காலத்தில் பரஸ்பரம் காதல் பைத்தியம் கொண்டிருந்த தம்பதியினர் கால ஓட்டத்தில், வீட்டிலும் விலகியே, தனித்தனி தீவாக இருக்க முயல்கின்றனர்.

இவ்வாறு வாழ்க்கையில் எத்தனையோ சூழ்நிலைகளில் சுகம் துன்பமாகவும், நிகழ்காலத் துன்பம் எதிர்காலத்தில் இன்பமாகவும் மாறுவதை நீ கண்டிருப்பாய். ஆகவே இன்ப துன்பம் இரண்டில்லை, தனித்தனி இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். உன் கண்ணோட்டப்படி அவற்றினிடையே வேறுபாடு தெரிகிறது. உன் விருப்பம் (choice) என்று ஒன்று இல்லாவிடில் இன்பம், துன்பம் இரண்டுமே மறைந்துவிடும். பிறகு உனக்கு வறுமை-வளம், ஆண்-பெண் போன்றவற்றிலும் வேறுபாடு தெரியாது.

இப்படி ஒருவன் இருந்தால், அவன் பார்வை ஒரே பார்வையாக, நேர்பார்வையாக இருக்கும். ஆனால் இதனால் அவன் ஆணைப் பெண்ணாக அல்லது பெண்ணை ஆணாக அழைத்துப் பேசுவான் என்று அர்த்தமில்லை. உலக விவகாரங்களுக்காகத்தான் ஆண்-பெண் வெவ்வேறு வகையினர் என்றும், அடிப்படையில், ஆழத்தில் அவர்களிடையே வேறுபாடு கிடையாது என்பதும் அவன் முடிவு.

இந்த அடிப்படையான வேறுபாடு உடலுடன் சம்பந்தப்பட்டதன்று. உன் விருப்பத்தைப் பொறுத்து வேறுபாடு தெரிகிறது. மனத்தில் காம விருப்பம் வலுப்பெற்றதும் ஆண்-பெண் வேறுபாடு தெரிகிறது. மற்ற சமயங்களில் அப்படிப் பிரித்து நடந்து கொள்ளத் தோன்றுவதில்லை. உடலின் கட்டமைப்பில் சிறிது வேறுபாடு உண்டு. வேதியல் அடிப்படையிலும் ஆண்-பெண் வேறுபாடு உண்டு. ஆனால் உள்ளே எல்லோரது ஆத்மாவும் ஒன்றுபோல்தான் உள்ளன. ஆண் ஆத்மா-பெண் ஆத்மா என்று தனிப் பிரிவுகள் கிடையாது. தன் ஆத்மாவை உணர்ந்தவனுக்கு எல்லாமே ஆத்மாவாகவே தெரியும். ஆண்-பெண் என்று பிரிந்து தெரியாது.

'எவனது உலகம் சுருங்கி மெலிந்து விடுகிறதோ, அவனிடம் வன்முறை (ஹிம்சை), கருணை, அகங்காரம், பணிவு, ஆச்சரியம், வருத்தம் என்பவை இருக்காது.' **(சுலோகம் 172)**

இங்கு உலகம் என்றது உன்னைச் சுற்றிலும் பரவியுள்ள நிலப் பரப்பைக் குறிப்பிடுவதற்கு அன்று. அது என்றும் சுருங்கி

மெலிவடைவதில்லை. அது ஒரே மாதிரியாக இயங்கியபடி இருக்கிறது. உலகின்மீது கவர்ச்சியோ, வெறுப்போ இல்லாத மனநிலை என்று அர்த்தம். வெளி உலகம் எப்படி இருந்தாலும் சரிதான். அதில் மாற்றம் எதுவும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் உள்ளே ஓர் உலகம் இயங்குகிறதே, அதை அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். வெளி உலகத்தில் எவ்வளவு கொந்தளிப்பு இருப்பினும், இந்த உள் உலகம் சாந்தமாகிவிட்டால் மனத்தில் ஹிம்சை உணர்வு எழாது; கருணை சுரக்கும்.

நாம் வர்த்தமான மகாவீரரை மகாகருணாமூர்த்தி என்கிறோம். இது நமது தவறு. நமது கோணத்திலிருந்து இது சரியான மதிப்பீடாகத் தெரியலாம். ஆனால் மகாவீரரின் தரப்பிலிருந்து பார்த்தால் இது தவறு. அவரிடம் கோப குணம் முற்றிலுமே இல்லாத நிலையில் கருணை எப்படித் தோன்ற முடியும்? யாரிடம் ஹிம்சை உணர்வே கிடையாதோ அவர் எப்படி அகிம்சையைக் கடைப்பிடிப்பார்? மற்றவர்களுக்குத் துன்பமே தர விரும்பாத ஒருவன் தனியாக சுகம் என்று எதைத் தருவான்? மற்றவர்களைத் தாக்க விரும்பாதவன் அவர்களைக் காப்பாற்றுவதற்கென்று தனியாக என்ன செய்ய முடியும்?

மகாவீரர் கோபப்பட்டதே இல்லை; பிறரைத் துன்புறுத்திய தில்லை என்பதால் நாம் அவரை கருணாமூர்த்தி என்கிறோம். இது நாம் கொடுக்கும் பெயர் மட்டுமே ஆகும். அவரிடம் ஹிம்சை-கருணை, அன்பு-வெறுப்பு, திமிர்-பணிவு என்னும் இரட்டைகள் கிடையாது. அத்தகையவன் தானும் அடங்குவதில்லை, பிறரையும் நசுக்குவதில்லை.

நீயோ மனிதர்களை இரண்டிரண்டாகப் பிரிக்கிறாய். அடக்குபவன்-அடங்குபவன், கீழ்ப்படிதலுள்ளவன்-அகங்காரி, பரம்பரையைப் பின்பற்றுபவன்-பரம்பரையிலிருந்து விலகியவன், ஆத்திகன்-நாத்திகன் என்றெல்லாம் வகைப்படுத்துகிறாய்.

புத்தரோ, மகாவீரரோ ஆத்திகரும் அல்லர், நாத்திகரும் அல்லர். பரம்பரையைப் பின்பற்றுபவரும் அல்லர்; மரபை எதிர்த்துப் புரட்சி செய்தவரும் அல்லர். கண்ணை மூடிக்கொண்டு சமூகத்தின் கட்டளையைப் பின்பற்றியவரும் அல்லர்; சமூகத்தைப்

புறக்கணித்தவரும் அல்லர். அவர்கள் தங்கள் இயல்புக்கு ஏற்றதான வாழ்க்கை நடத்தினர். அவர்கள் வெளி உலகால் பாதிக்கப்படாமல் தங்கள் செய்கைகளுக்கு உள்ளேயிருந்து தூண்டுதல் பெற்றவர்கள். சில விஷயங்களில் அவர்கள் மக்களுடன் இணக்கமாக இருந்தார்கள்; சில விஷயங்களில் முரண்பட்டார்கள். அவ்வாறு அவர்கள் வேண்டுமென்றே நடந்துகொள்ளவில்லை.

பரம்பரை வழியையே பின்பற்றுபவர் ஆட்டுமந்தைபோல் செல்லும் மக்களிடையே தானும் ஒருவனாக இருப்பதையே விரும்புவார். மற்றவர்களைப் போலவே ஆடை அணிதல், தலை முடி வைத்துக் கொள்ளல், மற்றவர்கள் பேசும் விஷயங்களையே தானும் பேசுதல், அவர்கள் பிடிக்கும் வகை (brand) சிகரெட் பிடித்தல், அவர்கள் பார்த்த திரைப்படத்திற்கே தானும் செல்லுதல், அவர்கள் ஆமோதிக்கும் புத்தகங்களையே படித்தல் என்றெல்லாம் சமூகம் என்னும் கூட்டம் செய்வதையே மரபுவாதி பின்பற்றுவார். கும்பலிலிருந்து விலகிச் செல்வது ஆபத்து. தனக்கென ஒருவன் தனிப்பாதை போட்டால் கும்பல் சினம் கொள்ளும். நீ தனித்தன்மை வாய்ந்தவனாக முயலுவதைக் கும்பல் விரும்புவதில்லை.

'எங்களுடனேயே இரு' என்று கும்பல் கட்டளையிடுகிறது. எல்லோரும் ஒன்றாக ஒட்டியிருந்தால்தான் கும்பலுக்கு திருப்தி. ஆட்டுமந்தையில் ஆடுகள் ஒன்றோடொன்று ஒட்டி உரசிச் செல்வதைப் பார்த்திருப்பாயே. அதுதான் கும்பலின் இலக்கணம்.

இன்னொரு வகை மனிதர்கள் உண்டு. ஆட்டுமந்தையில் ஓர் ஆடாகச் செல்வதை இவர்கள் விரும்புவதில்லை. ஆகவே கும்பல் என்ன சொல்கிறதோ அதற்கு நேர் விரோதமாகச் செயல்படுகிறார்கள். இவர்களும் வேறு விதத்தில் — எதிர்மறை முறையில் – கும்பலின் அணுகுமுறையால் தூண்டப்படுகிறவர்கள் தாம். 'கள் குடிக்காதே; நீண்ட முடி வைத்துக் கொள்ளாதே; தினமும் குளி' என்றெல்லாம் கும்பல் சொல்லும். இதனாலேயே இந்த இரண்டாம் வகையினர் போதைப் பொருள் பயன்படுத்து வார்கள்; நீண்ட முடி வைத்துக்கொள்வார்கள்; அரிதாகவே குளிப்பார்கள்.

இப்படித்தான் சிலர் குழுக்களாக அமைந்து தம்மை ஹிப்பிக்கள்* என்று அழைத்துக்கொண்டனர். இவர்கள் சமூகம் பின்பற்றிய விதிமுறைகளையும் கட்டுப்பாடுகளையும் புறக் கணித்தனர். ஆனாலும் இதுவும் ஒருவகையில் கும்பலின் தாக்கம்தானே. ஹிப்பிக்களும் சமூகத்திடமிருந்து தான் மறைமுகமாக, எதிர்மறையான தூண்டுதல்களைப் பெறுகிறார்கள். இவர்களது வழி தனிப்பட்ட வழியன்று. அது சமூகத்திற்கு எதிரான வழி மட்டுமே ஆகும். கும்பல் குளிக்கிறது; சுத்தமான ஆடை அணிகிறது. அந்தக் காரணத்தாலேயே ஹிப்பிக்கள் குளிப்ப தில்லை; அழுக்கு ஆடையே அணிவர்.

அமெரிக்காவில் சில கடைகளில் ஆடைகள் தைக்கப்பட்ட பின் அழுக்காக்கப்பட்டு ஹிப்பிகளுக்கு விற்கப்படுகின்றன என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஹிப்பி புதிய ஆடை அணியமாட்டான். ஏனெனில் சமூகம் சுத்தமான ஆடையே அணியப்பட வேண்டும் என்று எதிர்பார்க்கிறது. அமெரிக்காவில் சில கடைகள் ஆடைகளைத் தைத்தபின் அவற்றைக் கிழித்தும், அழுக்காக்கியும், கெடுத்தும் பழைய ஆடைபோல் மாற்றிவிடு கின்றன. ஹிப்பிக்களின் கவனத்தைக் கவர்வதற்காக அக்கடைகள் தங்கள் விளம்பரத்தில் 'இங்கே கிழிந்த, நைந்துபோன, பழைய ஆடைகள் விற்கப்படுகின்றன' என்று அறிவிப்பும் செய்கின்றன!

**நே**பாளத்தில் என் நண்பர் ஒருவரின் தொழிற்சாலை உள்ளது. அங்கே சிலை தயாரிக்கிறார்கள். அவற்றின் மீது 'ஆசிட்' தெளித்து விகாரப்படுத்துகிறார்கள். அவற்றை பூமியில் புதைத்து ஒராண்டிற்குப் பின் வெளியே எடுக்கிறார்கள். அதை 500 ஆண்டுகளுக்கு முற்பட்ட புராதன சிலை என அறிவிக்கிறார்கள். இவ்வாறு ஐம்பது ரூபாய் கூட பெறாத சிலையை 5000 ரூபாய்க்கு விற்றுவிடுகிறார்கள்!

---

* ஹிப்பி இயக்கம் 1960களில் புகழ்பெற்றிருந்தது. சமூகத்தில் பெரும்பான்மையோரின் வாழ்க்கை முறையிலிருந்து முரண்பட்டு ஹிப்பிக்கள் வாழ்ந்தனர். நீண்ட முடி, வண்ணமயமான ஆனால் அழுக்காடையுடன் நாடோடிகளாய் அலைந்த இந்த ஹிப்பிகள் கஞ்சா முதலிய போதைப் பொருட்களைப் பயன்படுத்தினர்.

ஒருமுறை நான் அவரின் விருந்தாளியாக அவர் வீட்டில் தங்கியிருந்தேன். வீட்டிலிருந்த பல சிலைகளைப் பார்த்து அவை பழைமையானவை என நானும் ஏமாறினேன்: அவர் விளக்கினார்: “சிலையில் நாங்களே ஏதாவது பழைய வருஷத்தைச் செதுக்குகிறோம். மொழியின் பழைய வடிவத்தில் இருந்த சில எழுத்துக்களையும் அதில் பொறிக்கிறோம். பிறகு ஆசிட் தெளித்து எல்லாம் சிறிதளவு சேதமடையச் செய்கிறோம். எதன் கையையாவது உடைக்கிறோம். அல்லது மூக்கைச் சிதைக்கிறோம். சில சிலைகளை நிலத்தின் கீழ் புதைத்து வைக்கிறோம். ஆறு மாதம் - ஓராண்டில் அவை பழைய சிலைகளாக மாறி விடுகின்றன. சிலை ஆராய்ச்சி வல்லுநர்கள்தாம் உண்மையைக் கண்டறிய முடியும். மற்றவர்கள் அவற்றைப் பழங்கலைப் பொருள் (antique) என நினைத்து, பெருந்தொகை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள். சிலருக்குப் பழையது என்றால் மோகம். ஹிப்பி பழைய, சிதைந்த ஆடைகளையே விரும்புவது இதுபோல்தான். சிலை புதிது. பழைமை விரும்பிகளுக்காக அது சிதைக்கப் படுகிறது. ஆடை புதிது. ஹிப்பிகளுக்காக அது சின்னபின்னப் படுத்தப்படுகிறது.

ஞானியின் நிலைப்பாடு என்ன? அவன் சமூகம் சொல் கிறதே என்பதற்காக சமரசம் செய்துகொண்டு இயங்குவதில்லை. அதே சமயம் அவன் சமூகம் சொல்கிறது என்பதற்காகவே வலிந்து எதையும் எதிர்ப்பதில்லை. சமூகத்திற்கு அனுகூலமா அல்லது எதிரா என்றெல்லாம் ஆராயாமல், அவன் தான் போட்ட பாதையில் செல்கிறான். அவனது இசைக்கென்று தனியான யாப்பு (ஸ்வ சந்தம்) உள்ளது; தனி லயம் உள்ளது. அந்த இசை உனக்கும் ஏற்புடையதாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. அவன் உன்னைப் பற்றி கவலைப்படுவதில்லை; நீ போடும் கணக்குப்படி அவன் நடந்துகொள்வதில்லை. ஞானி என்பவன் திமிர் பிடித்து சமூகத்தை எதிர்ப்பதில்லை; கோழையாக அதற்குப் பணிந்து போவதுமில்லை. அவன் மரபுக்கு அடிமையுமில்லை; புரட்சிக் காரனும் இல்லை. அவன் தனக்குள், ஆத்மாவிற்குள், சிந்தித்து ஆத்மா காட்டும் வழியின்படி செல்கிறான்.

மேலும், அவன் எதற்கும் வருந்துவதில்லை; எது நடப்பினும் வியப்பதில்லை ஏமாற்றம் காரணமான வருத்தம் எப்போது

ஏற்படுகிறது? நீ பத்தாயிரம் ரூபாய் கிடைக்கும் என்று நினைத்த இடத்திலிருந்து பத்து ரூபாய்கூட கிடைக்காவிடில் மிகுந்த துயரம் விளைகிறது. பத்து ரூபாய்கூட கிடைக்காது என்ற இடத்திலிருந்து உனக்குப் பத்தாயிரம் ரூபாய் கிடைத்தால் மிகுந்த ஆச்சரியம் விளைகிறது. நடைபெற முடியாது என நினைத்து நடந்தால் — கூரையைக் கிழித்துக் காசு கொட்டினால் — வியப்பு. நடைபெறும் என நினைத்தது நிகழாவிடில் — வருத்தம்.

ஞானியின் வாழ்வில் ஏமாற்றமும் இல்லை, வியப்பும் இல்லை. வாழ்வில் என்ன நடக்கிறதோ அதற்கு எதிராக அவன் நினைக்கமாட்டான். அவன் இப்படி நடக்க வேண்டுமென எந்தக் கனவும் கண்டதில்லை. அவன் முன்கூட்டியே எந்த அபிப் பிராயமும் ஏற்படுத்திக் கொள்வதில்லை. ஐந்து ரூபாய் கிடைத் தாலும் சரி, 5000 கிடைத்தாலும் சரி என்பான். கையிலிருப்பது தொலைந்து போனாலும் சரிதான் என விட்டுவிடுவான். அவன் மனத்தில் துன்ப அலையோ, இன்ப அலையோ எழுவதில்லை. அவன் மனம் அலையற்ற அமைதிக் கடலாக விளங்கும்.

ஞானி எதற்கும் ஆச்சரியப்படுவதில்லை. ஏனெனில் இந்த உலகமே ஆச்சரியங்கள் நிறைந்ததுதான் என்று அவனுக்குத் தெரியும். ஒவ்வோர் இலையும்கூட அதிசயமான படைப்பு. ஒவ்வொரு பூக்களுமே ரகசியக் கதை சொல்கிறது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளிலும் நுணுக்கம் உள்ளது.

தினமும் உலகில் அதிசய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. மரம் வளர்வது எவ்வளவு அபூர்வமானது! விதையை உடைத்துப் பார். உள்ளே ஒன்றுமிருக்காது. காயோ, மலரோ இன்றி சூன்யமாகத் தெரியும். மீன் முட்டையைக் காட்டிலும் சிறியதான விதை முளைத்து பெரிய மரமாக பேருருவம் எடுக்கிறது. பூமியில் ஒரு விதை மட்டும் நட்டு, எந்தத் தடையும் இல்லாமல் பார்த்துக்கொண்டால் சுற்றுப்புறத்தைப் பசுமையான காடாகச் சில ஆண்டுகளிலேயே மாற்றிவிடலாம் எனத் தாவர இயலார் கூறுகின்றனர்.

குழந்தை பிறக்கிறது — உன்னிடமிருந்து, உன் மனைவி யிடமிருந்து. ஜனனம் என்பது மாபெரும் அதிசயம் அல்லவா?

உனக்குக் குழந்தை பிறந்த செய்தி கேட்டதும் நீ கைகுலுக்கு வதற்குப் பதிலாக, பூமியில் அப்படியே விழுந்து கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டாமா? ஒருவர் கையிலிருந்து விபூதி வரவழைத்ததை அதிசயம் எனக் கொண்டாடுகிறாயே. ஒவ்வொரு கண்ணீரின் பின்னால் புன்முறுவலும், வாழ்வின் பின்னால் சாவு நிற்பதும் அதிசயமில்லையா?

உலகில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அதிசய மானதுதான். அதிசயம் அடங்கியிராத எதுவும் இங்கே நிகழ்வ தில்லை. இந்த காரணத்தால் ஞானி எதற்கும் வியப்படைவதில்லை என்று அஷ்டாவக்ரர் இந்த 172ஆம் சுலோகத்தில் கூறுகிறார்.

ஞானி எதற்கும் வருத்தப்படுவதுமில்லை. 'நான் எதுவும் செய்து உலகம் இயங்குவதில்லை' என்று அவன் உணர்ந்துள் ளான். 'நான் வேண்டிக் கொள்வதால் எதுவும் நிகழப்போவ தில்லை' என்றும் அவன் கூறுவான். 'நான் பார்வையாளன் மட்டுமே ஆவேன். ஆகவே நடப்பதைப் பார்த்தபடி இருப்பேன்' என்பான். உலகில் சில சமயம் இன்பம், சில சமயம் துன்பம்; சில சமயம் செல்வம்; சில சமயம் வறுமை; சில சமயம் கௌரவம், சில சமயம் அவமானம் என்றெல்லாம் நிகழ்கிறது. இவற்றால் பாதிக்கப்படாமல் சாட்சிபோல் பார்த்தபடி இருப்பதில் உள்ள சுவையை ஞானி அனுபவிப்பான்.

நாமோ நம்முடைய கோரிக்கைகளையும் விருப்பங் களையும் கணக்குப் பதிவேடுபோல் மனத்தில் திரட்டிக்கொண்டு கடவுளை விடாமல் தொந்தரவு செய்கிறோம். அவரைத் தமது இஷ்டப்படி செயல்பட விடுவதில்லை. 'இப்படிச் செய்துகொடு, இப்படி நடைபெறட்டும்' என்று அவரிடம் பிரார்த்திக்கிறோம். நம் விருப்பம் நிறைவேறாவிடில் வருத்தமாகப் போய்விடுகிறது. கடவுள் வேண்டாம் என்று முடிவுகட்டுகிறோம். விருப்பம் நிறை வேறினால் அந்த உல்லாசத்தில் கடவுள் தேவைப்படுவதில்லை. ஆனால் என்ன நடந்ததோ அதுதான் எப்படியும் நடைபெற் றிருக்கும். என்ன நடைபெறவில்லையோ அது உன் வேண்டு கோளுக்கு இரங்கி நிகழ வாய்ப்பில்லை.

**தொ**லைபேசியில் இவள் நம்பர் சுழற்றுகிறாள். மணி அடிக்கிறது. இவள் பேசுகிறாள், “அக்கா, இப்போ உடம்பு பரவாயில்லையா?” என்று விசாரிக்கிறாள். மறுமுனையிலிருந்து அவள், “வேதனை சகிக்க முடியலை. தலைவலிக்கிறது. காலிலும் இடுப்பிலும் ரொம்ப வலி. வீட்ல எல்லா சாமானும் சிதறிக் கிடக்கு. குழந்தைகள் பண்ற அட்டகாசத்தில எனக்கு பைத்தியம் பிடிச்சிடும் போல இருக்கு,” என்று புலம்புகிறாள்.

இவள் கூறினாள். “நீ படுத்து ஓய்வெடு. நான் உன் வீட்டிற்கு வருகிறேன். மதிய சாப்பாடு நான் வந்து செய்யறேன். வீட்டை சுத்தம் செஞ்சு பசங்களையும் குளிப்பாட்டிடறேன். சரி, மகேஷ் வீட்ல இல்லாம இந்த சமயம் எங்கே போய் தொலைஞ்சாரு?”

“மஹேஷா, யாரைச் சொல்ற?”

“உன் புருஷன் மகேஷைத்தான்.”

“என் புருஷன் பேரு மகேஷ் இல்லியே!”

“அப்படியா?” இவள் பெருமூச்சுவிட்டாள். “மறந்துபோய் தப்பான நம்பரை கூப்பிட்டுட்டேன். மன்னிச்சுடுங்க,” என்றாள்.

சற்று அமைதி நிலவியது. மறுமுனையிலிருந்து இரண்டாமவள் சோகமாக, “அப்படின்னா, நீங்க வந்து உதவி செய்யப் போறதில்லையா?” என்று கேட்கிறாள்!

எது நடைபெற முடியாதோ அதுவும் நடைபெற வேண்டுமென மனிதன் எதிர்பார்க்கிறான். முதல் பெண்மணி இரண்டாமவளின் வீட்டிற்கு இனி போகவேண்டிய காரணமில்லை. ஆனால் இரண்டாமவள் போனில் அழைத்த முதல் பெண் தவறாக அழைத்துவிட்ட போதிலும், தன் பிரச்சினைகளைத் தெரிந்து கொண்டதால் இரக்கப்பட்டு வருவாளா என எதிர்பார்க்கிறாள்.

நடைபெற முடியாத ஒன்றிற்காக நாம் வருந்துகிறோம். நடைபெற்றே ஆகவேண்டிய ஒன்று நிகழ்ந்தமைக்கு நாம் தேவையின்றி ஆனந்தமடைகிறோம். நமது மனம் எப்படி உணர்ந்தாலும் சரி, நடப்பது நடந்தே தீரும்; நடைபெற முடியாதது என்றும் நடவாது.

'முக்தனான மனிதன் புலனாசைகளில் ஈடுபடமாட்டான். அவை குறித்து வெறுப்பும் வெளிக்காட்டமாட்டான். அவன் எப்பொழுதும் பற்றற்ற மனத்துடன் இருந்து கொண்டு, கிடைத்த பொருளை அனுபவிக்கிறான். கிடைக்காத பொருளுக்காக ஏங்குவதில்லை' **(சுலோகம் 173)**

முக்தனாகிய (உலகக் கவர்ச்சிகளிலிருந்து விடுதலை பெற்ற) மனிதன் எப்பொருள் மீதும் விரோதம் பாராட்டுவதில்லை. எப்பொருளுடனும் ஆசையால் ஒட்டிக்கொள்வதில்லை. அவன் எதனிடமும் விருப்பு-வெறுப்பு பாராட்டுவதில்லை. அவன் கிடைத்ததை வைத்துக்கொண்டு திருப்தி பெறுகிறான். எல்லோரும் அப்படியில்லை. கிடைக்காததையும் நடைபெறாததையும் நினைத்து நாம் ஏங்கியபடி இருப்பதால், கிடைத்ததையும் நடை பெற்றதையும் வைத்து நம்மால் திருப்தியாக வாழ முடியவில்லை.

**க**ட்டடக் கலைஞர் ஒருவர். படகு விபத்தில் அவர் மட்டும் தப்பித்து ஒரு தீவை அடைந்தார். அங்கே வேறு யாரும் வசிக்க வில்லை. எங்கு பார்த்தாலும் மரக்கட்டைகளும் கற்களுமாகக் குவிந்துகிடந்தன. அந்த மனிதர் பொழுது போவதற்காகச் சிறு வீடுகள் கட்டினார். கடற்கரையிலிருந்து அந்த வீடுகளுக்குச் சாலையும் அமைத்தார்.

சில ஆண்டுகளுக்குப் பின் ஒரு கப்பல் அந்தத் தீவைத் தொட்டது. அதிலிருந்தவர்கள் தீவைச் சுற்றிப் பார்க்க இறங்கினார்கள். கட்டடக் கலைஞர் தென்பட்டார். வீடுகளைச் சுற்றிக்காட்டினார். எல்லோரும் பிரமித்தனர். கடைசியில் அவர் யூதத் திருக்கோயில் (synagogue) ஒன்றைக் காட்டினார். தான் யூதர் என்பதால் தாம் அங்கே வழிபடுவதாகச் சொன்னார். இன்னோர் இடத்தில் கிறிஸ்தவ ஆலயம் கண்ட யாத்திரிகர்கள், "இது என்ன தனியாக ஒன்று உள்ளதே" என்றனர். அதற்கு அவர், "இதையும் நான்தான் கட்டினேன். ஆனால் இதற்குள் நான் போவதில்லை!" என்று தெரிவித்தார்.

விசித்திரமான பதில். வழிபடுவதற்காகக் கோயில் கட்டியவர், தாம் போகாதிருக்கவும் வேறு பிரிவினரின் ஒரு கோயிலும்

கட்டிவைத்தார். அவர் தனது உழைப்பை வீணாக்கிவிட்டார் என்று நீ நினைக்கலாம். ஆனால் நீ உன் மனத்தை ஆராய்ந்துபார். நீ நிறைவேண்டியவற்றிற்காகத் திட்டங்கள் தயாரிக்கிறாய். அதேசமயம் என்னென்ன செய்யக் கூடாது என்பதற்கான திட்டங்களையும் தயாரித்துவிடுகிறாய். உன்னிடம் உள்ள பொருள்களுடன் நீ சம்பந்தப்பட்டிருப்பதுடன், உன்னிடம் இல்லாதவற்றுடனும் நீ வேறுவகையில் சம்பந்தப்பட்டிருக்கிறாய். மற்றவர்களிடமுள்ள உள்ள பொருட்களுடனும் உனக்குத் தொடர்புண்டு. இதெப்படி சாத்தியமாகும்? உன்னிடம் இல்லாதவற்றை, மற்றவர்களிடம் மட்டும் உள்ளவற்றை நீ மனத்தளவில் உதறித் தள்ளவில்லையே. 'அவையும் கிடைத்தால்...' என்று ஆசைப்பட்டு அவற்றுடன் நுணுக்கமாகத் தொடர்பு கொண்டுள்ளாய். பக்கத்து வீட்டு 'ஷெட்'டில் வைக்கப்பட்டுள்ள காருக்கும் உனக்கும் சம்பந்தமில்லை என நீ நினைக்கலாம் ஆனால் அப்படி ஒரு கார் உன்னிடம் இல்லையே என்னும் ஏக்கம் உன்னை அதனுடன் கட்டிப் போடுகிறது.

**டா**க்டர் ஒருவர் எனக்கு நண்பர். அவர் குறுக்கெழுத்துப் போட்டிகளில் வெறி பிடிக்கும் அளவுக்குக் கலந்துகொள்பவர். அவரது தொழிலில் பின்னடைவு ஏற்பட்டது. நோயாளிகளைக் காக்க வைத்துவிடுவார். கிளினிக்கிலும் குறுக்கெழுத்துப் படிவங்களை நிரப்புவார் அல்லது புதிர்களுக்கு விடை பற்றி சிந்திப்பார். ஆகவே நோயாளிகளை அதிகம் பேசவிடமாட்டார். அல்லது அவசரமாக மருந்துச் சீட்டு எழுதி விரட்டிவிடுவார்.

டாக்டரின் மனைவி கேட்டுக்கொண்டதன் பேரில் நான் டாக்டரிடம் நோயாளிகளின் வருகை குறைந்துபோனதைப் பற்றி நினைவூட்டினேன். அவர், "கொஞ்சம் கொஞ்சமாக நோயாளிகளிடம் பணம் வசூலிப்பதற்குப் பதிலாக, ஒரு குறுக்கெழுத்துப் போட்டியில் ஜெயித்தால்கூட போதும், லட்ச ரூபாய் கிடைத்துவிடும்," என்றார். அதேசமயம் அவர் நீண்ட காலமாக முயன்றும், ஒரு தடவைகூட சிறு பரிசும் கிடைக்கவில்லை என்று வருத்தம் தெரிவித்தார்.

"ஒருவேளை உங்களுக்கு அதிர்ஷ்டம் இல்லை போலிருக்கிறது. இனி என் பெயரில் அனுப்பிப் பாருங்கள்,"

என்று ஆலோசனை கூறினேன். "ஜெயித்தால் எனக்கு எவ்வளவு பங்கு கிடைக்கும்?" என்றும் கேட்டேன்.

"லட்ச ரூபாயில் ஐம்பதினாயிரம் தந்துவிடுகிறேன்," என்றார்.

நான் ஆசிரமத்துக்குத் திரும்பினேன். நான் பேசியதெல்லாம் வேடிக்கைதான். இரவு பதினோரு மணி. டாக்டர் சந்திக்க வந்துள்ளதாகச் சொன்னார்கள். அவர் என்னைப் பார்த்ததும், "உணர்ச்சிவசப்பட்டு ஐம்பதாயிரம் தர ஒத்துக்கொண்டேன். கொஞ்சம் குறைத்துக்கொள்ள முடியுமா?" என்று கெஞ்சினார்.

இன்னும் பரிசே விழவில்லை, அதற்குள் பேரம்! நான் ஆறுதல் சொன்னேன்" கவலைப்படாதீர்கள். என் பெயரில் அனுப்பி ஜெயிக்க 25 ஆயிரமாகக் குறைத்துக் கொள்கிறேன். வீட்டிற்குச் சென்று தூங்குங்கள். மறுபடியும் இங்கே வந்து என்னை எழுப்பாதீர்கள்," என்று கூறி அவரை அனுப்பிவைத்தேன்.

காலையில் அவர் வீட்டுப் பக்கமாக நான் உலாவுவது வழக்கம். எனக்காகக் காத்திருந்த அவர் மனைவி என்னிடம் விரைந்து வந்தாள், "ராத்திரியெல்லாம் அவர் தூங்கலை. குறுக் கெழுத்துப் போட்டிக்கு விடை கண்டுபிடிக்கிற கவலையோட, உங்கள் நிபந்தனை பற்றியும் கவலைப்படுகிறாரு," என்றாள்.

நான் டாக்டரைச் சந்தித்தேன். "என் பெயரில் அனுப்பு வதற்காக பரிசில் 10 ஆயிரம் தந்தால் போதும். அதையும் நான் எடுத்துக் கொள்ளாமல் உங்கள் பெயரிலேயே தர்மகார்யங்களுக்கு செலவழிப்பேன்," என்றேன்.

அவர், "அதைப் பற்றிக் கவலையில்லை. இந்தத் தடவை எனக்கே நேராக லட்ச ரூபாய் பரிசு கிடைத்துவிடும்போல் நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. ஆகவே அடுத்த முறை உங்களைக் கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டு உங்கள் பெயரில் அனுப்பலாம். இந்தத் தடவை வேண்டாம். அதை எப்படி உங்களிடம் சொல்வது என்று சங்கடமாக இருந்தது. அதனால்தான் இரவு கவலைப்பட்டேன்," என்றார்.

மனிதன் தனக்குக் கிடைக்காதவற்றுடனும் சம்பந்தம் வைத்துக் கொள்கிறான். அதனுடன் இன்ப துன்பத்தைச் சேர்த்துவிடுகிறான். ஒரு பொருள் இன்னும் கிடைக்காததால் அது குறித்துத் தானே துன்பத்தைப் படைத்துக் கொள்கிறான்.

ஆனால் மனப்பக்குவம் பெற்றவன் ஒரு பொருள் கிடைத் தாலோ, ஒரு செயல் நிகழ்ந்தாலோ இயற்கையாகவே மகிழ்கிறான். அதே சமயம் அது கிடைக்காவிடிலும், ஒரு செயல் நிகழாவிடிலும் அதுவும் ஏதோ நல்லதற்காகவே என்று கருதி அப்போதும் மகிழ்ச்சியுடன் விளங்குகிறான். இதைத்தான் அஷ்டாவக்ரர் இந்த 173ஆம் சுலோகத்தில் கூறுகிறார்.

**சூ**ஃபி சம்பிரதாயத் துறவி ஒருவர் சீடர்களுடன் ஹஜ் யாத்திரை மேற்கொண்டார். அவரிடம் ஒரு பழக்கம். காலையில் எழுந்ததும் ஆகாயத்தை நோக்கிக் கைகூப்பி, ‘கடவுளே! எனக்கு எது தேவையோ அதை அறிந்து, நீ எப்பொழுதும் அதை நிறைவேற்றத் தருகிறாய். உனக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். மிக்க நன்றி’ என்று துதிப்பார். தினமும் அப்படியென்ன நன்மை நடந்தது என்று தெரியாமல் சீடர்கள் திகைப்பார்கள்.

ஒரு முறை எல்லோரும் மூன்று நாளாகப் பட்டினி கிடக்க நேர்ந்தது. வழியிலிருந்த ஊர்களில் சூஃபி சம்பிரதாயத்தினருக்கு எதிரிகளேயிருந்ததால் குருவையும் சீடர்களையும் தங்கக்கூட விடவில்லை. வழியெல்லாம் மரத்தடிகளிலேயே தங்க நேர்ந்தது. ஆனால் குரு தனது வழக்கமான நன்றி பிரார்த்தனையை நிறுத்தவில்லை. இதனால் ஆத்திரமுற்ற சீடர்கள் குருவைக் கண்டித்தனர்.

“சுவாமி, எல்லாவற்றிற்கும் எல்லை உண்டு. நாம் மூன்று நாளாகப் பட்டினி. மரத்தடியில் தங்க நேரிட்டது. கடுமையான வெயிலுக்கு மர நிழல் போதவில்லை. இரவுகளைக் காட்டிலேயே கழிக்க வேண்டியுள்ளது. எந்த காட்டு விலங்கு எப்போது தாக்குமோ என்று பயமாக உள்ளது. நீங்கள் என்னடாவென்றால், வழக்கம்போல், ‘கடவுளுக்கு நன்றி. என் அன்றாடத் தேவைகளை நீ நிறைவேற்றுகிறாய்’ என்று பொய் சொல்லுகிறீர்கள்,” –சீடர்கள் வெடித்தனர்.

குரு சிரித்தார். "என் நன்றித் துதியிலுள்ள நுணுக்கத்தை நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. நாம் மூன்று நாள் பட்டினி கிடக்க வேண்டும், தங்க இடமின்றித் தவிக்க வேண்டும் என்பது கடவுளின் விருப்பம் என்று தெரிகிறது. கடவுளின் விருப்பம் எதுவோ அதுவே நமது விருப்பமாகவும் இருக்க வேண்டும்.* இதைத்தான் நான் மாற்றிப் போட்டு என் தேவையைக் கடவுள் நிரப்புகிறார் என்று கூறுகிறேன்," என்று விளக்கினார்.

ஞானத்தின் ஆழ்ந்த நிலையில் ஒரே ஒரு ரசம்தான் உண்டு — சமரசம். எது கைவசம் இருக்கிறதோ அது போதும். எது இல்லையோ அதுவும் சரி. எதுவும் கிடைத்தால் சரி; கிடைக்கா விடிலும் சரி. ஞானி 'உண்டு-இல்லை' என்னும் இரு நிலை களையும் சமமாக அனுபவிக்கிறான். மற்றவர்கள் இல்லாததற்கு, கிடைக்காததற்கு ஏங்குவதுடன், கைவசம் உள்ளதிலும் திருப்தி யடைவதில்லை.

ஞானி ஒவ்வொன்றிலும் சுவை காண்கிறான். எதையும் எப்படி ரசிக்க, ருசிக்க வேண்டும் என்னும் கலை அவனுக்கு வசமாகியிருக்கிறது. ஆனால் நீயோ உனக்குக் கிடைத்துள்ள விருந்துணவைக்கூட சுவைத்து உண்ணத் தெரியாதவளாக இருக்கிறாய்.

ஒருவன் 20 ஆண்டுகள் முன்பு உன்னைத் திட்டினான். அது இப்போதும் முள்ளாய் மனத்தை உறுத்துகிறது. ஒருவன் உன்னை அவமானப்படுத்தினான்; கோபித்தான். அதை உன் நெஞ்சம் மறக்கவில்லை. காயம் ஆறவில்லை. அவ்வப்பொழுது அந்தப் பழைய நினைவுகளை அசைபோட்டுப் புதுப்பித்துக்கொள்கிறாய். கடந்த கால வருத்தத்தை இப்போதும் சுமக்கிறாய். உன்னை அவமானப்படுத்தியவன் இதற்குள் இறந்துபோயிருப்பான். ஆனால் உன்னைத் திட்டியபோது விகாரமடைந்த முகம் உனக்கு இன்னும் நினைவில் உள்ளது. எதிர்காலம் பற்றி சிந்தித்துப் பலவிதமான கணக்குகள் போட்டுப் பார்க்கிறாய். ஆனால் என்ன நடக்கும் என்பது யாருக்கும் தெரியாது. இதனால் நீ நிகழ்காலத்தில் வாழத் தவறிவிடுகிறாய்.

---

* If this is the way God wants it to be, this is the way I want it. - Tom Booley.

ஜென் சம்பிரதாயத்தில் துறவறம் பூண்ட ரின்ஜாயி முதல் முறையாகத் தன் குருவைச் சந்தித்தபோது அவர், "நீ எந்த ஊரிலிருந்து வருகிறாய்?" என்று கேட்டார். ரின்ஜாயி ஊரின் பெயரைச் சொன்னார். அடுத்து குரு, "உன் ஊரில் இப்போது அரிசி விலை என்ன?" என்று கேட்டார். ரின்ஜாயி சிரித்தபடி சொன்னார், "நான் எதை விட்டுவிட்டு வந்தேனோ, அது முடிந்துபோன விஷயம். இன்னும் வராதது வந்துசேரவில்லை. நான் நிகழ்காலத்தில் மட்டும் உள்ளேன். இதனுடன் சம்பந்தப்பட்ட தகவல் வேண்டுமானால் கேளுங்கள்," என்றார்.

குரு அவரைப் பாராட்டினார். "நீ செய்தது சரி. நீ அரிசி விலையைச் சரியாகச் சொல்லியிருந்தால், உன்னை ஆசிரமத்தில் சேர்த்துக்கொள்ளாமல் விரட்டியிருப்பேன். நிரந்தரமாக ஊரை விட்டு வெளியேறிய பிறகு, அங்கே அரிசி விலை என்ன என்பதை நினைவில் வைத்திருப்பவனை என் சீடனாக்குவதால் என்ன உபயோகம்? நடந்த கதை என்பது முடிந்த கதை," என்று ரின்ஜாயியைப் பாராட்டினார்.

வயலில் நாம் விதைத்து வந்த
தங்கநிறப் பயிர் வளர்ந்திருக்கும்
முற்றிய பயிரின் மெல்லிய மணம்
மக்கள் உடலைத் தழுவியிருக்கும்
குமரிப் பெண்களின் அன்புக் கரங்களில்
அரிவாள் இருக்கும் அறுவடை செய்ய

புல்லாங்குழலை நாம் உடைத்துவிட்டு
வந்த பிறகும் அதில் தேங்கிய சோகம்
இன்னமும் சன்னமாய் ஒலித்தபடியிருக்கும்

கல்லும் மண்ணும் கலந்து நாம் கட்டிய
பாலங்கள் இதற்குள் சிதைந்திருக்கும்

ஆம், நாம் கடந்த காலத்தை நசுக்கி மறந்துவிட வேண்டும். அப்போது இசைத்த புல்லாங்குழலை — உணர்ச்சி வெளிப் பாட்டுக் கருவியை - எறிந்துவிட வேண்டும். நினைவுகளென்னும் பாலங்களை உடைத்துவிட வேண்டும். எதிர்காலம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்னும் எதிர்பார்ப்பு கூடாது.

ஞானி என்றால் தியாகி என்றும், உலக இன்பங்களை அனுபவிப்பவனை போகி என்றும் நாம் வகைப்படுத்துகிறோம்.

ஆனால் ஞானிதான் உண்மையான போகி. அவன்தான் எப்போதும் ஆனந்த நிலையில் இருக்கிறான். உலகில் போகி எனப்படுபவன் எதையும் அனுபவிக்காமல் துன்பத்தில் ஆழ்ந்துள் ளான். அவன் கடந்த கால இன்பங்களில் திருப்திபெறாததால் தொடர்ந்து ஏமாற்ற உணர்வில் இருக்கிறான். எதிர்காலத்தில் என்ன இன்பம் கிடைக்குமோ, அது திருப்தி தருமா என்னும் கவலை யால் போகி இன்றைய வாழ்க்கையையும் அனுபவிப்பதில்லை.

ஈசாவாஸ்ய உபநிடதம் 'தேன த்யக்தேன புஞ்ஜீதா' என்கிறது. இதன் பொருள் 'விடு-அனுபவி' என்பதாகும். விடுவதன் மூலம் வாழ்க்கையை ஞானி அனுபவிக்கிறான். மகாவீரர், புத்தர், அஷ்டாவக்ரர், ஜரதுஸ்த்ரர் ஆகியோர் தியாகம் மூலம் ஆனந்தம் பெற்றவர்கள். இதற்கு மாறாக, நாம் போகி என அழைப்பவன் வாழ்க்கையில் சுவை காண்பதில்லை. அவர்களின் வாழ்க்கை பாலைநிலமாக உள்ளது. எல்லாம் உலர்ந்து கிடக்கிறது. எங்கும் பசுமை தென்படவில்லை. வீணை ஒலிக்கவில்லை; ராகம் எழும்பவில்லை; பாட்டு கிளம்பவில்லை. சலங்கையொலி கேட்கவில்லை. போகம் என்ற பெயரில் துன்பம்தான் விலைக்கு வாங்கப்படுகிறது.

**ரா**மகிருஷ்ணர் வாழ்வில் ஒரு வேடிக்கை நிகழ்ந்தது. ஒருவன் அவரிடம் ஆயிரக்கணக்கான ரூபாய்க்கான பணக்கட்டு சமர்ப்பித்தான். "தாங்கள் இதை சுவீகரித்து அருளுங்கள்" என்றான். அவர் அதை ஏற்பதற்குத் தன் இயலாமையைத் தெரிவித்து, "நான் இதை ஏற்பதில் சிரமம் உள்ளது. ஆகவே ரூபாயை கங்கை நதியில் தூக்கி எறி," என்றார். அந்த மனிதன் பிரமித்து, "இவ்வளவு பெருந்தொகைக்கும் ஆசைப்படாத நீங்கள் மகாதியாகி," என்று அவரைப் போற்றினான். அதற்கு ராம கிருஷ்ணர், "அப்படி இல்லையப்பா, நீதான் என்னைவிட பெரிய தியாகி," என்றார். அந்த மனிதன் ஒன்றும் புரியாமல் விழித்தான். அவனது குழப்பத்தைக் கண்டு ராமகிருஷ்ணர், "நான் உலகத்தை விட்டு கடவுளைப் பெற்றேன். நீ கடவுளை விட்டு உலகத்தை அனுபவிக்கிறாய். எது பெரிது, உலகமா, கடவுளா! கடவுள்தானே பெரிது. நான் கைவிட்டது அற்பமான பணம். நீயோ பெரிதினும் பெரிதான கடவுளை விட்டதால் நீயே மகாதியாகி!" என்றார்.

“சூனிய மனநிலை பெற்றுவிட்ட மனிதன் கேள்வி-பதில், பிரச்சினை-தீர்வு, நன்மை-தீமை ஆகியவற்றைக் கடந்துவிடு கிறான். அவன் மோட்சம் போன்ற நிலையில் நிலைபெறுகிறான்.” **(சுலோகம் 174)**

தனக்குள் நிலைபெற்றவன் முக்தனாகிறான். தன்னுள் நிலைபெறுகிறான். அத்தகையவன் சூன்யமாகிறான். சூன்ய நிலையே மோட்ச நிலை; எதுவும் வேண்டாத நிலை. அவன் மனத்தில் எந்தக் கேள்வியும் எழுவதில்லை. ஆகவே பதிலும் எதிரொலிப்பதில்லை. எதையும் நன்மை தருவது-தீமை தருவது என்று பிரித்துப் பார்ப்பதில்லை. நடப்பதெல்லாம் நன்மைக்கே என்று அவன் எடுத்துக்கொள்வான்.

ஆளுயரக் கண்ணாடி. அதன் முன்னால் அழகி ஒருத்தி நின்றால் அது மகிழுமா? குரூபமான ஒருவன் கண்ணாடி முன்னால் நன்றால் அது வருந்துமா? பிரதிபிம்பத்துடன் கண்ணாடிக்குக் கொடுக்கல்-வாங்கல் கிடையாது. எந்த உருவமும் எதிரில் இல்லாதபோது கண்ணாடி காலியாக, நிர்மலமாக உள்ளது. ஆகவே கண்ணாடியின் நிலையை சாட்சி மனப்பான்மைக்கு சமமாகக் கருதலாம். அது எல்லாவற்றையும் சாந்தமாகப் பார்த்தபடி இருக்கிறது.

‘எவனது உள்ளத்திலிருந்து எல்லா எதிர்பார்ப்புகளும் உருகி வெளிப்பட்டு விடுகின்றனவோ, எவன் எதுவும் உண்மையில் அப்படியில்லை என்பதை அறிந்துள்ளானோ, அத்தகைய பற்றற்ற, அகங்காரமற்ற, சூனியமாகிப்போன மனிதன் கர்மம் (செயல்கள்) புரிந்தாலும், எதுவும் செய்யாதவனாகக் கருதப்படுவான்.’ **(சுலோகம் 175)**

அவன் கடமைகளில் தொடர்ந்து ஈடுபடுவான். ஆனால் தான் செய்யும் செயல்களைக் கடவுள் அவன் மூலமாகச் செய்விக்கிறார் என்றே நினைப்பான். அவன் தன்னை கர்த்தா என்று நினைக்காமல் கருவியாகக் கருதுகிறான்.

‘எவனது மனம் உருகி ஆசைகள் என்னும் மாசு நீங்கிவிட்டதோ, எவனது மனத்திலிருந்து கர்மம், மோகம், சொப்பனம், சடத்தன்மை ஆகியவை நீங்கிவிட்டனவோ, அந்த

மனிதன் சொற்களால் கூற முடியாத புனித நிலையை அடைகிறான்.' **(சுலோகம் 176)**

மனம் உருகுதல் என்றால் என்ன? பேராசை, புலனாசை, பல வகை விருப்பங்கள் முதலியவை நீங்கி எவன் எதுவும் வேண்டுவதில்லையோ, இருப்பதுடன் திருப்திகொண்டுள்ளானோ, அவன் மனம் எல்லா அழுக்குகளும் நீங்கும்படி ஞானத் தீயின் சூட்டில் உருகிவிட்டதெனலாம். மனம் உருகிவிடுவதால் அவன் மன உணர்வு இல்லாத நிலையை அடைகிறான்! அவன் கனவுகூட காண்பதில்லை. அதாவது, கனவில்கூட எதற்கும் அவன் ஆசைப்படுவதில்லை.

எப்போது உனக்குள் எல்லாக் கனவுகளும் முடிவுபெற்று விடுகின்றனவோ, அப்போது உன் மனம் நிர்மலமாகிறது. உன் மனத்தில் சிறு புகை அளவுகூட சிந்தனை எழக்கூடாது. மனமாகிய ஆகாயத்தில் சிறு மேகம்கூட தெரியக்கூடாது. அப்போது நீ உள்ள பரவசமான நிலையை விளக்கச் சொற்களே கிடைக்காது. அதைப் பேசவும் முடியாது, பாடவும் முடியாது. இந்த நிலையை வர்ணிக்க இதற்குமுன் மேற்கொண்ட முயற்சிகள் தோல்வியே கண்டன.

எனினும் அந்த நிலையைப் புரிந்துகொள்ள சாட்சி மனப்பான்மை உதவும். உனக்குள்ளே இருக்கும் ஆத்மா என்னும் கண்ணாடி சுத்தமாக உள்ளது. அதில் உன் சுயரூபத்தைப் பார்க்குமளவிற்கு நீ பக்குவப்பட்டுவிட்டால், ஒரு விசித்திரம் உனக்குத் தெரியவரும். அதாவது, நீ வசிப்பது உலகில்தான், ஆனால் உலகுடன் நீ சம்பந்தப்பட்டிருக்கவில்லை!*

'நீ' என்பவன் இருக்கும்வரை எதுவும் உன்னுடையதன்று. 'நீ' என்பவன் நீங்கியதும் எல்லாமே உன்னுடையதாகிவிடும்! இந்த நிலையை உபநிடதமும், பகவத்கீதையும், திருக்குர்ஆன், பைபிளும் சுட்டிக்காட்டியுள்ளன. எம்மதத்தவராயினும் ஞானிகள் அனைவரும் உள்முகப் பயணம் செய்யுமாறு உனக்கு ஆலோசனை வழங்கியுள்ளனர்.

அஷ்டாவக்ரரின் இந்த சூத்திரங்களை மேலோட்டமாகப் புரிந்துகொண்டால் போதுமென நினைக்க வேண்டாம். இவற்றால் உன் அறிவு வளர்ந்தால் அது போதாது. ஆன்மிக வாழ்க்கையில்

---

* To be in the world, but not of the world (Hazlitt)

முன்னேறுவதே உன் லட்சியமாக இருக்க வேண்டும். அதுவே நீ பிறந்ததற்கு காரணமாக வேண்டும். நீ சாதாரணமானவன் அல்லன் நீ எங்கும் பரவி விளங்குபவன். இந்த வானம் அனைத்தும் உனதுதான். நீயே அகில உலக சக்கரவர்த்தி. நீ உன்னை அற்ப மானவனாக, பிச்சைக்காரனாக நினைத்துத் தாழ்த்திக் கொள்ளாதே.

**நீரின் நடுவில் அசைகிறது**
**இரும்புத் தளையில் கட்டிய படகு**

**சுழல்நீர் வந்து நாற்புறமும்**
**வலுவற்ற மரவிளிம்புகளைத் தாக்கி**
**அசைத்தாட்டுகிறது அப்படகை**
**சலங்கை கட்டிய நர்த்தகிபோல்**
**நளினமாய் அசைவது படகின் இயல்பு**

**படகு அறியாது அமைதியாய் நிற்பதை**
**நின்றால் அது உடனே நடுங்கும்**
**படகு புறப்பட்டுவிட்டாலோ**
**நடுங்கப் போவது நதியின் நீர்தான்**

நீ பார்த்திருப்பாய். படகு சங்கிலியால் கரையில் கட்டப்பட்டிருக்கிறது. அலை வந்தால் படகு நடுங்குவதுபோல் அசைகிறது. உன் நிலையும் அதுபோல்தான். ஆசை என்னும் சங்கிலியால் நீ கரையுடன் பிணைக்கப்பட்டுள்ளாய். கரையும் சேறுமயமாக உள்ளது. அது தரித்திரம் பிடித்ததாக உள்ளது. நீ (படகு) புறப்பட்டு விட்டால் விசாலமான கடல் (படைப்பு) முழுதும் உனக்கே சொந்தம்.

பயணம் செய்யாமல் நின்றுவிட்டால் நீதான் நடுங்க வேண்டியிருக்கும். ஆனால் நீ கிளம்பிவிட்டால், சுற்றியுள்ள எல்லாம் அசைந்தாலும், உன் ஸ்திரத்தன்மை பாதிப்படையாது. உன் புறப்பாட்டில், உன் நடையில், உன் இயக்கத்தில் உயிரோட்டம் நிறைந்துவிடும். கரையில் கிடந்து நடுங்காமல் பயணம் மேற்கொள்வேன் என்று சவால் விடு. உள்முகமான மலையேற்றத்தைத் தொடங்கு. உனக்குள்ளே இருக்கும் ஆத்மா என்னும் இமயத்தின் சிகரத்தைத் தொடு. இதுவே ஆத்ம ஜெயம் என்பது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! அஷ்டாவக்ரரின் சாட்சி, லாவோத்ஸு சொன்ன தாவோ, தங்களின் ததாதா கோட்பாடு – இம்மூன்றினிடையே என்ன ஒற்றுமைகள் – வேற்றுமைகள் உள்ளன?**

**ஒ**ற்றுமை நிறைய; வேற்றுமை குறைவு.

லாவோத்ஸு எதை தாவோ என்றாரோ, அதுவே வேதங்களில் ரிதம்பரா என்றும், புத்தரால் தம்மம் (தர்மம்) என்றும் அழைக்கப்பட்டது. இது வாழ்க்கையை நடத்தும் முறை குறித்த உயரிய கொள்கையாகும். எல்லாக் கோட்பாடுகளிலும் இதுவே தலைமையானது. அது இந்த விசாலமான பிரபஞ்சத்தில் பதிந்திருக்கும் ரகசியமாகும்.

மாலையில் மணிகள் காணப்படுகின்றன. அவை ஒரு நூலால் தொகுக்கப்பட்டுள்ளன. ஒரே நூலே எல்லா மணிகளையும் சேர்த்து நிறுத்துகிறது. உலகில் வாழும் முறை குறித்து ஏராளமான சித்தாந்தங்கள் நிலவுகின்றன. இவை அனைத்தையும் கோத்து நிர்வகிக்கக்கூடிய தலைமைக் கொள்கை ஒன்று வேண்டும். இல்லாவிடில் நூலறுந்த மணிகள்போல் எல்லாம் சிதறிவிடும். மாலை சிதைந்துவிடும்.

ஒரு மாலையில் கோக்கப்பட்ட மணிகளே கண்ணுக்குத் தெரிகின்றன. உள்ளே மறைந்திருக்கும் நூல் கண்ணில் படுவதில்லை. அது வெளியே தெரியவும் கூடாது. நூல் கண்ணுக்குத் தென்பட்டால் மாலை சரியாக தயாரிக்கப்படவில்லை என்று அர்த்தமாகும்.

எது கண்ணில் தெரிகிறதோ அது அறிவியலின் கண்டுபிடிப்பாக இருக்கும். புவி ஈர்ப்பு விசை, ஒளிச்சிதறல், காந்தத்தின் செயல்பாடுகள் போன்ற ஏராளமான விஷயங்களை அறிவியல் கண்டுபிடித்துள்ளது. ஆனால் இவற்றின் அடிப்படையில் மகத்தான கோட்பாடு (நியமம்) ஒன்றும் இருக்கும். இல்லாவிடில் இத்தனை அறிவியல் விதிமுறைகளும் சிதறிவிடும் அல்லவா? அந்தத் தலைமைக் கோட்பாட்டிற்கு நீ தாவோ, தம்மம், ரிதம்பரா, பகவான், பரமாத்மா, பிரம்மம் என்று என்ன பெயர் வேண்டுமானாலும் கொடு.

வாழ்க்கைப் பயணத்திற்கு மகோன்னதமான கோட்பாடு தாவோ (TAO) ஆகும்.* அதை அடிப்படையாகக் கொண்டு செயலாற்றுவதற்கான சாதனமே வழியே சாட்சி மனப்பான்மை. நான் கூறும் 'ததாதா' என்பது போய்ச்சேரும் இடம். இன்னும் சுருக்கிச் சொல்லலாம்: லாவோத்ஸு=சித்தாந்தம்; சாட்சி=சாதனம்; ததாதா=சித்தி. மூன்றும் இணைந்துள்ளன; அடுத்தடுத்து உள்ளன. இதை கங்கை-யமுனை-சரஸ்வதி போன்ற திரிவேணி எனலாம். கிறிஸ்தவர்களும் மூன்றாக ட்ரினிடி (Trinity) என்கிறார்கள். இந்துக்கள் திரிமூர்த்தி என்பர். தாவோ=வழிகாட்டி; சாட்சி=பயணம்; ததாதா=சேருமிடம்.

இந்த மூன்றினிடையே சிறிதளவே வேற்றுமை உண்டு. ஏனெனில் இவை ஒரே பொருளுடன், பரம்பொருளுடன், இணைந்துள்ளன. முதல் இரண்டு கட்டங்களில் நின்று விடாமல் பயணம் தொடர வேண்டும். நதி ஆங்காங்கே நின்று ஓடி, கடலில் வீழ்கிறது. பிறகு தன்னை, தனது தனித்தன்மையை நதி இழந்துவிடுகிறது.

தாவோ ஒரு தேடுதல், சத்தியத்தைத் தேடுதல், தர்மத்தைத் தேடுதல். பயணம் கடைசிவரை தொடர்ந்தால், தேடுதலின் முடிவில், நீ தர்மமயமாகி விடுவாய்; சத்யமயமாகி விடுவாய்.

---

* Tao (Dao) என்பது சீன நாட்டு தத்துவம். இது வாழ்க்கையின் அடிப்படையாக அமைந்தால் பரம்பொருளை ஓரளவு அறியலாம். வாழ்வு-மரணம் (பயணம்-முடிவு) இதன் இரண்டு கட்டங்கள். நாம் நமது சுபாவத்திற்கேற்றப்டி வாழ வேண்டும்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் எவ்வளவு காலம்தான் திக்கு தெரியாமல் தேடி—தேடி இளைப்பேன்?**

**நா**ன் என்னும் உணர்வு நீடிக்கும்வரை உன் அலைச்சலும் நீடிக்கும். உன்னை அலையவைப்பவன் வெளி ஆள் இல்லை உன்னால்தான் உனக்கு அலைச்சல் உண்டாகிறது. 'நீ' என்பது ஒழிந்தால், கடவுள் மட்டுமே இருப்பார் என்பதால் நீ அவருடன் கலந்துவிடுவாய். நீதான் சிக்கலின் முடிச்சு. ஆகவே முடிச்சு உள்ள இடத்தை நெகிழ்த்தாமல், மற்ற இடங்களில் முயன்றால், சிக்கல் அதிகரிக்கும். 'நான்' என்னும் முடிச்சு அவிழ்ந்துவிட்டால், நீ யாரைத் தேடுகிறாயோ 'அவர்' எப்போதும் உனக்குள்ளே இருந்துவருகிறார் என்று அறிந்து கொள்வாய் ஓரிடத்தில் ஒருவர்தான் இருக்கலாம் என்னும் நிலையில், 'நான்' என்பது நீங்கினால்தான் கடவுள் அந்த வெற்றிடத்தில் அமரமுடியும்.

நீ தேடினதால்தான் 'அது' கிடைக்கவில்லை! தேடுவதற்காக நீ வெளியே ஓடினாய். அதுவோ கண்ணுக்குப் புலப்படாமல் உனக்குள்ளே இருக்கிறது ஓடுவதால் உன் கண்களில் புழுதி படிந்து உன்னால் பார்க்க முடியாமல் போகிறது. ஓடுவதால் நீ தொலைவிலுள்ளதை மட்டும் பார்க்கிறாய். உன் அருகே உள்ளதை உன்னால் காண முடியவில்லை. ஓடுவதால் உன் கண்ணுக்கு வெளியுலகம் தெரிந்தது; உள்ளுலகம் தென்படவில்லை. உள்ளே பார்க்க வேண்டுமானால், இப்போதுபோல் கண்ணைத் திறந்துவைத்து, ஓடியபடி இருக்கக் கூடாது. கண்ணை மூடிக்கொண்டு, அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்து, பார்வையை உட்புறம் செலுத்த வேண்டும். அதற்கான கண்கள் உள்ளே இருக்கின்றன! யோகம்-தியானம்-சமாதி மூலம் அந்தக் கண்கள் திறக்கும்படி செய்யலாம்.

கடலில் இருக்கும் மீன் கடலின் கட்டாயத் தேவையை உணர்வதில்லை. தூண்டிலில் மாட்டிக்கொண்டு அது கரையில் வந்துவிழும்போது தவிக்கிறது, துடிக்கிறது. அப்போது அதற்குக் கடலின் பெருமை தெரிகிறது. எப்படியாவது நழுவித் தேய்ந்தபடி மீண்டும் கடலுக்கு வந்துவிட்டால் அது மீண்டும் உயிரோட்டம்

பெறுகிறது. நாமும் அப்படித்தான் கடவுளுக்கு வெளியே நமக்கு வாழ்வு கிடையாது.

தொலைவு என்பதைப் புரிந்துகொள்வது எளிது. அருகி லிருப்பது புரிவது கடினம். அதற்கு விசேஷ அறிவு வேண்டும். கடவுள் எங்காவது தொலைவில் இருந்தால், இமயமலையின் கௌரிசங்கர் சிகரத்தில் அவர் வீற்றிருந்தால், நாம் எப்பாடுபட்டா வது அவரைச் சென்றடைந்திருப்போம். ஹிலாரியும் தென்சிங்கும் அவரை தரிசித்திருப்பார்கள்!* கடவுள் சந்திரலோகத்தில் இருந்தாலும் அறிவியலில் மேலும் முன்னேற்றம் ஏற்பட்டு நாம் 'சந்திரயான்' (நிலவு வண்டி) மூலம் அங்கே ஒரு காலத்தில் போய்விடலாம். தொலைவில் இருப்பாரெனில் அடைய முடியும்.

சந்திரனைச் சென்றடைய மனிதன் எவ்வளவு முயற்சி செய்கிறான். ஆனால் தனக்குள் பயணிக்க அந்த அளவிற்கு அவன் முயலுவதில்லை. குழந்தை சிறிது வளர்ந்ததுமே சந்திரனை நோக்கிக் கைநீட்டுகிறது! நிலவைப் பிடித்துத் தருமாறு தாயிடம் கேட்டு அழுகிறது. இவ்வாறு வாழ்க்கையின் ஆரம்பத்திலிருந்தே நாம் தொலைவிலுள்ளதையே பார்க்கப் பழகிவிடுகிறோம். சாதாரண மாகவே, நாம் கண்ணைத் திறந்ததுமே தொலைவிலுள்ளதே தெரிகிறது. கண்களை மூடினாலோ நாம் தூங்கிவிடுகிறோம்! கண்ணைத் திறந்ததுமே வாழ்க்கையின் அவசர ஓட்டங்கள். இந்த இரண்டு நிலைகளின் நடுவேதான் நம் வாழ்க்கை இயங்குகிறது.

கண்களை மூடி ஆனால் விழிப்புடன் இருந்தால் அதுவே தியானம். விழிப்பிலிருந்து கொஞ்சமும், தூக்கத்திலிருந்து கொஞ்சமும் எடுத்து, அவற்றைக் கலக்கினால் கிடைப்பது தியானம். தூக்கத்திலிருந்து நாம் எடுப்பது சாந்தி, ஓசையின்மை, சூனியம். இப்படி நாம் தயாரிப்பதுதான் தியான ரொட்டி (சப்பாத்தி). அது நம் ஆன்மிகப் பசியை திருப்தி செய்யும்.

ஆன்மிகத் தேடலில் எத்தனை காலம் அலைவேன் என்று கேட்டாயல்லவா? நீ விரும்பியே அலைந்தால் அதைத் தடுக்க முடியாது. அவ்வாறு அலைவது உனக்கு சந்தோஷமாக இருந்தால் உன்னைக் காப்பாற்ற முடியாது.

---

* Edmund Hillary, Tenzing Norgay முதல் முறையாக எவரெஸ்ட் சிகரத்தில் 29.5.1953 அன்று ஏறி சாதனை புரிந்தனர்.

நீ கவனித்திருப்பாய், குழந்தைகள் சற்று வளர்ந்ததும் பெற்றோர் சொல்வதைக் கேட்பதில்லை. விருப்பமின்மை மட்டும் அதற்குக் காரணமில்லை. பெற்றோரை வேடிக்கையாகச் சீண்டுவதற்காகவேகூட குழந்தைகள் அவர்களை எதிர்ப்பதுண்டு.

முல்லா நஸ்ருத்தீன் பழத்தோட்டம் வைத்திருந்தார். அங்கே பலவகையான ஏராளமான பழங்கள் விளைந்ததால் அவரால் எல்லாவற்றையும் விற்க முடியவில்லை. அவரது ஊர் ஒரு கிராமமானதால் பழம் வாங்குவோரும் அதிகமில்லை. மரங்களிலேயே விட்டுவைத்தால் பழங்கள் அழுகிவிடும். ஆகவே அவர் அவற்றை அக்கம் பக்கம் இலவசமாகவே கொடுத்துவந்தார். ஒருநாள் அவர் தனது தோட்டத்தில் ஐந்தாறு சிறுவர்கள் நுழைந்து விட்டதைப் பார்த்தார். கல் அல்லது கம்பினால் அவர்களை விரட்டாமல் அவர் நாட்டுத் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு கிளம்பினார்!

ஒருவர் நஸ்ருத்தீனைத் தடுத்து, "பழங்கள் வாங்குவோர் போதாமையால், பழங்கள் அழுகுவதைக் கவனித்து நீ இலவசமாகவே பலருக்கு அவற்றைக் கொடுத்துவிடுகிறாய். நிலைமை அப்படியிருக்க, இந்தப் பசங்கள் விளையாட்டாகக் கொஞ்சம் பழம் பறித்தெடுத்துப் போனால் உனக்கு என்ன நஷ்டம் வந்துவிடும்? சிறுவர்களை விரட்டத் துப்பாக்கியா!" என்று கேட்டார்.

முல்லா சொன்னார், "நான் துப்பாக்கி எடுத்துத் துரத்துவது ஒரு வேடிக்கை. இது அவர்களைச் சீண்டி, மீண்டும் வருமாறு அழைப்பு விடுவதுபோல்தான். நாளை வந்து பாருங்கள். இப்போது ஐந்தாறு பேர்தானே வந்தனர். இவர்கள் போய் மற்ற சிறுவர்களிடம் துப்பாக்கியைப் பற்றி சொல்வார்கள். ஆகவே வேடிக்கை காண பதினாலு-பதினைந்து சிறுவர்கள் தோட்டத்திற்குள் வந்துவிடு வார்கள். அப்போது நான் ஆகாயத்தை நோக்கிச் சுடுவேன். இது பற்றி அறிந்து நாளை மறுநாள் பள்ளிக்கூடம் காலியாகிவிடும். மாணவர்கள் எல்லோரும் இங்கே திரண்டுவிடுவார்கள்."

சிறு வயதினரும் ஓரிடத்திற்குப் போவது தடுக்கப்பட்டால் அங்கேதான் போவார்கள். எதைச் செய்யக்கூடாது என்று தடுக்கிறோமோ அதையே கட்டாயமாகச் செய்யத் துடிப்பார்கள்.

கட்டுப்பாடுகளை மீறிச் செய்யப்படும் கள்ளத்தனத்தில் சந்தோஷம் இருக்கத்தான் செய்கிறது. அப்போது நான் 'ஹீரோ' என்னும் உணர்வு தலைதூக்குகிறது. நீ எல்லாவற்றுக்கும் தலை யாட்டினால் நீ வெறும் பொம்மையாக அல்லவா நினைக்கப் படுவாய். 'முடியாது' என்று நீ கண்டிப்பாகச் சொல்லும்போது பொம்மை உயிர் பெற்றுவிட்டதுபோல் தோன்றும். 'மற்றவர்கள் சொன்னால் நான் உட்கார வேண்டும், எழுந்திருக்க வேண்டும் என்று கட்டுப்படுத்தினால் எனக்கென்று சுதந்திரமான ஆளுமை கிடையாதா?'' என்று நீ குமுறுவாய். கடவுள் தடுத்தும் முதல் மனித னாகிய ஆதம் தடுக்கப்பட்ட ஞானப் பழமாகிய ஆப்பிளைப் பறித்துண்டமை இந்த எதிர்ப்பின் ஓர் அடையாளம்தான்.

சராசரி மனிதனும் இப்படியே செய்கிறான். ஓர் அலுவலகத்தில் ஓர் அறை வாசலில் 'உத்தரவின்றி உள்ளே வரக்கூடாது' என்று அறிவிப்பு இருக்கும். அதை உன்னால் பொறுத்துக்கொள்ள முடியாது. திரையைச் சற்று விலக்கியோ, கதவின் ஓட்டை வழியாகவோ, அருகிலுள்ள சன்னல் மூலமாகவோ உள்ளே என்ன நடக்கிறது என்று அறியத் துடிப்பாய். அப்போது உன் அகங்காரம் பெருமிதம் கொள்கிறது.

ஒரு கோணத்திலிருந்து பார்த்தால், 'கடவுளைத் தேடு கிறேன்' என்பவர்கள் தேடலிலேயே நீடிக்க விரும்புவதுபோல் தோன்றுகிறது. அதிலேயே அவர்கள் ஒரு சுவையை உணர்கிறார்கள். பயணம் இன்பமாக அமைந்தால் நாம் இறங்க வேண்டிய ஊர் விரைவில் வருவதை நாம் விரும்ப மாட்டோமே. கடவுளைச் சென்றடைவதைத் தள்ளிப் போடுவதற்காக இந்தத் தேடல் நாடகம். ஏனெனில் அவரை அடைந்துவிட்டால் 'நாம் அவருடன் ஒன்றிவிடுவோமே, நம் தனித்தன்மையை இழந்துவிடுவோமே!' என்று பயப்படுகிறோம்.

உன் தேடல் எப்பொழுது முடியும் என்று கேட்கிறாய். தேடலை முடிவுக்குக் கொண்டுவர நான் வழி சொன்னால், நீ வேண்டுமென்றே அந்த வழியைப் பின்பற்றாமல் போகக்கூடும்! ஏனெனில் அந்த வழி மூலம் இறைவனை அடைந்துவிட்டால், தேடல் இன்பம் முடிந்துவிடும் என்றும், கடவுளுடன் கலந்து நீயே

காணாமல் போய்விடுவாய் என்றும் உனக்கு பயம். அல்லது, இப்பொழுது நீ தேடலில் மேற்கொள்ளும் பாதையே நான் கூறும் பாதையாகவும் இருந்தால், நீ உன் பாதையை மாற்றிக்கொள்ள வசதியாக இருக்கும்.

**ர**வீந்திரநாத் டாகுரின் பாடல் ஒன்று கதைச் சுவையுடன் பின்வருமாறு உள்ளது.

நான் பல பிறவிகளாகக் கடவுளைத் தேடி அலைகிறேன். பல இடங்களில் தேடினேன். அவர் கிடைக்கவில்லை. எப்பொழு தாவது எங்காவது அவரது நிழலுருவம் தெரிந்தது. வெகு தொலைவில் ஒரு நட்சத்திரத்தின் பக்கமாக அவரது தேர் செல்வதாகத் தோன்றியது. அல்லது சூரிய கிரணங்களையே தேராகக்கொண்டு செல்வதைக் கண்டேன். சந்திரன் ஒளியிலும் அவரைக் கண்டேன். நான் பல பிறவிகளாக முயன்று அந்தந்த இடங்களுக்குப் போனால் அவர் அங்கிருந்து புறப்பட்டுப் போயிருப்பார்!

'கடைசியில் ஒருநாள் நான் ஜெயித்துவிட்டேன்! எனது பயணம் வெற்றியுடன் முடிந்தது. நான் அவரது மாளிகைக்குப் போய்ச்சேர்ந்தேன். கடவுளின் இல்லம் என்னும் பெயர்ப் பலகையைப் பார்த்தேன். கதவு மூடியிருந்தது. நான் மகிழ்ச்சி பொங்கப் படிகளில் ஏறி கதவை நெருங்கினேன். பூட்டுபோல் மாட்டியிருந்த சங்கிலியைக் கழற்றிக் கதவைத் தட்டப்போனபோது ஒரு சந்தேகம் மனத்தில் மின்னலிட்டது. கடவுள் கதவைத் திறந்து எதிர்ப்பட்டால் அடுத்துஎன்ன செய்வது என்று மனத்தில் கேள்வி பிறந்தது. இதற்கான பதிலை முன்கூட்டியே யோசிக்க வேண்டியிருந்தது. கடவுளைக் கண்ட பிறகு செய்வதற்கு எதுவும் மிஞ்சியிருக்காதே! இதுவரை கடவுளைத் தேடும் முயற்சியில் வாழ்க்கை சுறுசுறுப்பாகக் கழிந்தது. கடவுளைக் கண்டுவிட்டால் மேற்கொண்டு என்ன செய்வது?

'இவ்வாறு யோசித்தபின் நான் தாழ்ப்பாள் சங்கிலியை ஓசைப்படுத்தாமல் பூட்டுப்போல் மீண்டும் மாட்டிவிட்டேன். சத்தமில்லாமல் படிகளின் வழியாகக் கீழே இறங்கினேன். அதற்கு வசதியாகச் செருப்புகளைக் கழற்றிவிட்டேன். பிறகு அங்கிருந்து

ஓட்டம் பிடித்தவன் திரும்பியே பார்க்கவில்லை! இப்போது கடவுளின் இருப்பிடம் எங்கே இருக்கிறது என்று தெரிந்துவிட்டது. அந்த ஓரிடத்தை மட்டும் விட்டு மற்ற இடங்களில் அவரை இதுவரை தேடியிருக்கிறேன் என்பதும் புரிந்து போனது.'

கடவுளுடன் உனக்கு இணைப்பு ஏற்பட்டால், இதுவரை உனக்கிருந்த 'நான்தான் கர்த்தா (செய்பவன்)' என்னும் தற்பெருமையைக் கைவிட நேரிடும். அந்த சந்தோஷம் போய்விடும். ஏனெனில் கடவுளுடன் இணைதல் என்பது மாமரணம் (மகாம்ருத்யு) ஆகும். பிறகு உனக்குத் தனித்தன்மை என்றும் கிடையாது; காரணம், பிறகு பிறப்புக் கிடையாது. தேடி அலைவதில் அகங்காரம் — நான் தேடுகிறேன் என்னும் நினைவு — திருப்தி கொள்கிறது. கடவுளைச் சந்தித்துவிட்டால் பிறகு நீயே இல்லாமல் போய்விடுவாய். கடவுளின் திருவடிகளில் நீ சமர்ப்பிப்பது பூக்களையே. ஏதோ சில பூக்களை அவரின் திருவடிகளில் தூவி நீ அவரை ஏமாற்ற முடியாது. உன்னையே தான் பறித்து சமர்ப்பிக்க வேண்டும். நீ என்னும் பூவை, உன் அகங்காரம் மற்றும் உன் ஆளுமை என்னும் பூவைத்தான் வைக்க வேண்டும். கடைத்தெரு மாலைகளால் கடவுளை ஏமாற்ற முடியாது. தோட்டப் பூக்களாலும் கடவுளை திருப்திசெய்ய முடியாது. உன்னையே அளிப்பதுதான் நைவேத்தியம், அர்ச்சனை எல்லாமும் ஆகும். இதற்கு தைரியம் இல்லாததால் நாம் தேடலிலேயே நீடிக்கிறோம். அதேசமயம் நாம் தேடல் எப்போது முடியும் என்று குருவைக் கேட்பது வேடிக்கைதான்.

நீ வெளிப்பொருள்களைக் கடவுளிடம் சமர்ப்பிப்பதற்குப் பதிலாக, உன்னையே சமர்ப்பிக்க முன்வரும்போது கடவுளுடன் இணைப்பு ஏற்பட்டு விடும்.

மனிதன் 'தான்' என்னும் தனித்தன்மையைக் கைவிட தயாராக இல்லை. அதேசமயம் கடவுளிடம் தான் இணைய வேண்டும் என்றும் விரும்புகிறான். 'நான்' என்னும் உணர்வு நீங்குவதை அவன் விரும்பவில்லை. ஆனால் 'நான்' உணர்வு நீங்குவதால் கிடைக்கக்கூடிய ஆனந்தமும் வேண்டும் என்கிறான். தான் காலி பாத்திரம்போல் வெறுமையாகிவிடுவதையும் விரும்புவதில்லை. ஆனால் அப்படி சூன்யமாவதால் ஏற்படும்

நிறைவு உணர்வை முன்கூட்டியே பெற ஆசைப்படுகிறான். பழங்கால மாவரைக்கும் இயந்திரங்களின் மேற்பகுதிக்கும் கீழ்ப்பகுதிக்கும் நடுவில் அரைபடும் தானியம்போல, மனிதன் அகங்காரமும் வேண்டும், ஆண்டவனும் வேண்டும் என்னும் இருவிதமான ஈர்ப்புகளின் நடுவே நசுங்குகிறான்.

உனக்கு 'நான் கர்த்தா' என்னும் அகங்காரம் இருந்தால், 'பக்தி-கடவுள்' என்றெல்லாம் பேசாதே. நீ செயல் வீரனாகவே தொடர்ந்து நீடித்திரு. ஆத்திகனாயிருப்பதோ, நாத்திகனா யிருப்பதோ தவறன்று. இதுவா-அதுவா என்று முடிவு செய்யாமல் நீ இப்படியும் அப்படியுமாக மாறுவதுதான் பரிதாபம். ஒரு காலை ஒரு படகிலும், இன்னொன்றை இன்னொரு படகிலுமாக வைத்துப் பயணிப்பதுபோல்தான் இதுவும்.

கிறிஸ்தவப் பள்ளிக்கூடம் ஒன்றில் பாதரியார் மாணவர் களைப் பார்த்து, "யார்-யார் சுவர்க்கத்திற்குப் போக விரும்புகிறீர் களோ அவர்களெல்லாம் கைதூக்குங்கள் பார்க்கலாம்," என்றார். அனைவரும் கைதூக்கினர் — ஒருவனைத் தவிர. பாதரியார் அவன்மீது இரக்கப்பட்டு, "இப்போதுதானே சுவர்க்கத்தில் கிடைக்கும் சுகங்களைப் பற்றி சொன்னேன். உனக்கு அந்த சுகங்கள் வேண்டாமா?" என்று கேட்டார்.

"சாமி, நானும் சுவர்க்கத்துக்கு போகணும்னுதான் ஆசைப் படறேன். ஆனால் இந்த மீதி பசங்களும் அங்கே வந்திடுவாங் களே. இவங்களோட எனக்கு ஒத்துப் போகாது. இங்கேயே இவங்க எப்பவும் என்னை சீண்டி சண்டை போடுறாங்க. சுவர்க்கத் திலேயும் என்னை தொந்தரவு செய்வாங்க. நான் நரகத்துக்கே போறேன். அங்கே என்ன கஷ்டமிருந்தாலும் இந்த துஷ்டப் பசங்க இல்லாம இருந்தா போதும்," என்று அவன் விளக்கினான்.

என்னிடம் வந்து சிலர் புகார் செய்கிறார்கள். "சுவாமி, எங்களை முழுமையாக அழித்துக்கொண்டால் சாந்தி (பூரண அமைதி) பிறக்கும் என்று உபதேசிக்கிறீர்கள். நாங்கள் அழிந்துபோனால் அந்த அமைதியை யார் உணர்வது?" என்று கேட்கிறார்கள். நியாயமான கேள்வி. அவர்கள் நோய் தீரும் வழி கேட்கிறார்கள். அதற்கு நான் நோயாளியையே அழித்துவிடுங்கள்

என்று வழி சொல்கிறேன்! அதைக் கேட்டு கோபம் வரத்தானே செய்யும்.

ஆனால் ஆன்மிக உலகில் நோயாளிதான் நோயுமாகிறான். இரண்டையும் பிரிக்க முடியாது. ஆகவே நோயாளியும் நீயே. நோயும் நீயே. நீ நோயை ரசிப்பவனாயின் அதைப் போக்க மருந்தில்லை.

உன்னுடைய கைகள் பரமாத்மாவை நெருங்கினால் உருகிவிடும். இந்தத் கைகளால் நீ கடவுளைத் தொட முடியாது. இவற்றால் நீ பொருட்களைத்தான் எடுக்க, வைகக முடியும். இந்தக் கைகள் மூன்று பூதங்களால், நீர்-காற்று-மண் இவற்றால் ஆனவை. கடவுளைத் தொட வேறு விதமான கைகள் தேவை.

இந்தக் கண்களால் கடவுளைக் காண முடியாது. அவரது பேரொளியால் கண்கள் குருடாகிவிடும். இவற்றால் பொருட் களைத்தான் காண முடியுமே தவிர, அவற்றைக் கடந்து காண முடியாது.

இந்தக் கால்களால் கடவுளின் இல்லத்தைச் சென்றடைய முடியாது. இவை பூமியில் நடப்பதற்காக மட்டுமே படைக்கப்பட் டவை. உடலிலுள்ள கால்களால், மனத்தால் அவரிடம் போய்ச்சேர முடியாது. அதற்கு தியானம் என்னும் கால்கள் தேவை.

கடவுள் பசுமையானவர். நிரந்தரமாகப் பசுமையாக இருப்பவர். நீயும் சிறிதளவாவது கடவுளைப்போல் ஆக முயன்றால், அவரை நெருங்கிச் செல்ல வசதியாக இருக்கும். கடவுளைப் போல ஆக முயலுதல் என்றால், 'நீ' என்பவன் தேய்ந்து கரைய வேண்டும். உனது அகங்காரம் நீங்கி, நீயே மையத்திலிருப்பது போன்ற உணர்வு நீங்கி, உன் எல்லைகள் விசாலமாக வேண்டும். நீ என்று தனித்து ஒருவன் இல்லாதது போல் நீ ஆகிவிட வேண்டும்! உன் உள்ளத்தில் 'இல்லை' என்னும் எதிர்மறை நீங்கி 'உண்டு' என்னும் ஒலியே எதிரொலிக்க வேண்டும்.

என் பார்வையில் ஆத்திகனின் இலக்கணம் இதுதான். கடவுளை நம்புகின்றவனை மட்டும் நான் ஆத்திகன் என

நினைப்பதில்லை. ஏனெனில் கடவுளை நம்புகின்றவர்கள் கோடி-கோடியாக உள்ளனர். ஆனால் அவர்களிடம் ஆத்திகத் தன்மையை என்னால் காண முடிந்ததில்லை. அவர்கள் தங்கள் மதத்துக்குரிய கோயிலுக்குப் போகிறார்கள். அதனுடன் ஆத்திகம முழுமை பெற்றுவிடுவதில்லை.

நாத்திகர்கள் கடவுளைப் பற்றி பேச்சே எடுப்பதில்லை. ஆகவே அவர்களையும் கடவுளுடன் சம்பந்தப்படுத்தி வரையறை செய்யலாகாது. ஆத்திகம் ‘உண்டு’ (அஸ்தி) என்கிறது. நாத்திகம் ‘இல்லை’ (ந அஸ்தி) என்கிறது. *கிடைத்த வாழ்க்கையை ஏற்றுக்கொள்பவன் ஆத்திகன், ஆன்மிகன். வாழ்க்கையை எதிர்மறையான கண்ணோட்டத்துடன் பார்ப்பவன் நாத்திகன்.

கடவுளை அடைய வேண்டும் என்று உனக்குத் தீவிர விருப்பம் உள்ளதல்லவா? கடவுள் என்பவர் இல்லாது போயிருந்தால் அந்த விருப்பம் உனக்கு உண்டாகியிருக்காதே. இல்லாத பொருளின் மீது விருப்பம் உண்டாக முடியுமா? தாகம் எடுக்கிறது. அதைத் தணிக்கத் தண்ணீர் உள்ளது. தாகத்திற்கு முன்பே தண்ணீர் என ஒன்று இருந்து வந்திருக்கிறது. பசி எடுக்கிறது. அதைத் தணிக்க உணவு உள்ளது. பசி உணர்வுக்கு முன்பே உணவு என்பது இருந்து வந்திருக்கிறது. நீ ஒருவர்/ ஒருத்தியைக் காதலிக்கிறாய். உனக்குக் காதல் தோன்றும் முன்பே அந்த ஒருவர்/ஒருத்தி இருந்திருக்க வேண்டும். உன் மனத்தில் எந்த விருப்பம் எழுந்தாலும் சரி, அதைத் திருப்தி செய்யும் உபாயம் ஏற்கெனவே இந்த உலகில் இருந்து வந்திருக்கிறது. நமக்கு ஏற்படும் ஆன்மிகத் தாகம் ஆண்டவன் இருப்பதற்கான சாட்சியமாக அமைகிறது. உன் தாகத்தின்மீது நம்பிக்கை கொள். அதை ஏற்றுக்கொள். அந்தத் தாகத்தில் முழுமையாக நீ மூழ்கிவிடு. இதன் காரணமாகத் தாகம் மட்டுமே மிஞ்ச வேண்டும்; நீ காணாமல் போய்விட வேண்டும்! ‘நீ’ என்பவன் போனதும் கடவுள் வந்து நிற்பதும் ஒரே சமயம் நிகழும்! வேறுவிதமாகக் கூறுவதானால், ‘நீ’ என்பவனின் போதல்தான் ‘அவர்’ என்பவரின் வருதலாகும்.

---

* ‘கடவுள் இல்லை’யிலும் இருக்கிறார்!

மூன்றாவது கேள்வி (கேட்பவர்: தேவநிரஞ்சன்)

> **ஓஷோ அவர்களே! நான் ஜெபமாலை உருட்டி அரைமணி தியானம் செய்தேன். தங்கள் படத்தையே உற்று நோக்கியபடி இருந்தேன். சிறிது நேரம் கழித்து உங்கள் கண்கள் என்னை நோக்கித் திறந்தன. அப்போது நான் உங்களைப் பார்த்து, "ஒரு குழுவாக அமைத்து நான் ஆன்மிகப் பயிற்சி மேற்கொள்ள விரும்புகிறேன். ஆனால் என்னிடம் பணமில்லை," என்கிறேன். நீங்கள் அதற்கு, "கவலைப்படாதே. உனக்குத் தேவையான பணம் நான் தருகிறேன்," என்கிறீர்கள். நான், "இதெல்லாம் உண்மையா, பிரமையா?" என்று சந்தேகம் கேட்கிறேன். நீங்கள், "ஆம், பிரமைதான்," என்று பதில் கூறுகிறீர்கள்!**

**ஆ**ம். இது பிரமைதான். இயற்கையாகவே உன் மனம் நீ பார்ப்பதை உண்மை என்றே நம்பவே விரும்புகிறது. உனக்கு ஏற்பட்ட அனுபவத்தை ஒருவகைக் கனவு எனலாம். கனவு என்பது உன் ஆழ்மன விருப்பத்தின் விரிவாக்கம்தான். நீ கண்ணைத் திறந்து வைத்துக் கனவு கண்டதால் — நான் கண்களைத் திறந்து உன்னைப் பார்த்ததுபோலும், நீ கேட்டதைத் தர வாக்களித்ததாகவும் உனக்குத் தோன்றியிருக்கிறது.

என் புகைப்படம் ஓர் அடையாளம் ஆகும். ஆனால் அது ஒரு சாதனம் மட்டுமே. கடவுள் சிலைகளெல்லாம் சாதனங்கள் அல்லது ஊடகங்களேயாகும். அந்தச் சின்னங்களைக் கடந்தால், நீ உன் ஆழ்மனத்தில் மூழ்கி எழ முடியும். கடவுள் சிலையை தினமும் பார்த்துப் பார்த்து உனது மேல்மனம் சாந்தமடைகிறது. இந்த சாந்த நிலையில் உன் ஆழ்மனத்திலிருந்து செய்திகள் மேலே கிளம்பி வர ஆரம்பிக்கின்றன. ஆனால் அச்செய்திகள் உனக்கு வேறோர் உலகத்திலிருந்து வந்ததுபோல் (அசரீரிபோல்) ஒலிக்கின்றன. ஏனெனில் உனக்கு மனத்தின் ஆழமான பகுதிகளுடன் அறிமுகம் கிடையாது. உன் ஆழ்மனம்தான் உன்னிடம் பேசியது என்பது உனக்குத் தெரியவில்லை.. அதாவது

நீ கேட்டவன் மட்டுமில்லை, நீதான் பேசியவனும்கூட! ஆனால் எந்த இடத்திலிருந்து நீ பேசினாயோ அது உனக்குப் பழக்கமான இடமில்லை.

உன் மனத்தின் பரப்பில் எத்தனையோ பகுதிகள் உன்னால் உணரப்படவில்லை. அங்கேயெல்லாம் உன் சிந்தனை சென்றதில்லை. நீ உன் மனமாகிய மாளிகையை முழுமையாகச் சுற்றிப் பார்த்ததில்லை. மாளிகையின் புகுமுக மண்டபத்திலே (போர்ட்டிகோ) நீ நின்றுவிட்டாய். அவ்வளவுதான் வீடு என்று நினைத்தாய். ஆனால் படியேறி உள்ளே போனால் ஆங்காங்கேயுள்ள கதவுகள் எங்கெங்கோ அறைகள் உள்ளதைக் காட்டுகின்றன. நிலவறைகளும் (under-ground rooms) பல உள்ளன. நீ தெய்வக் குரலென நினைப்பது மனத்தின் நிலவறைப் பகுதிகளிலிருந்துதான் கிளம்பியிருக்கிறது.

முழு லயிப்புடன் கடவுள் சிலைமுன் நின்று வழிபடும் பக்தனுக்கும் எங்கிருந்தோ குரல் கேட்கிறது. அதை அவன் கடவுளின் நேரடியான குரலென நினைத்து பரவசம் அடைகிறான். ஆனால் கடவுள் பேசுவதில்லை! உன் ஆழ்மனத்தில் கடவுள் வசிப்பதால் அங்கிருந்து எழும் ஒலியைக் கடவுளின் குரலென்று சுற்றி வளைத்து வேண்டுமானால் அர்த்தம் எடுத்துக்கொள்ளலாம்.

சிலை, கீர்த்தனை, பஜன் முதலியவை உபாயங்கள் மட்டுமே ஆகும். எப்பொழுதும் அலைபாய்ந்து கொண்டிருக்கும் மனத்தைச் சில நிமிடங்களாவது சமனப்படுத்த இந்த உபாயங்கள் உதவு கின்றன. உன் மனம் எப்பொழுதும் கடல்போல் சலனத்துடனேயே இருந்தால், உன் ஆழ்மனத்திலிருந்து ஏதோ குரல் எழுந்தாலும், உன் மேல்மனம் வரை அது வந்தடைய முடியவில்லை. உன் மேல்மனத்தில் அத்துணை பேரிரைச்சல் நிலவுகிறது. ஆழ்மனத்திலிருந்து எழும் மெல்லிய ஒலி, மேல்மனத்தின் சந்தைக் கூச்சலில் கரைந்துவிடுகிறது. அங்கே டமார சத்தம் கேட்கிறது. கடவுள் அனுப்பும் ஆழ்மன ஒலி குசுகுசுப்பு அளவே இருக்கும். கடவுள் கத்திப் பேசுவதில்லை. அவர் உரக்கப் பேசினாலும், உன்னால் அதைக் கேட்க முடியாது. ஏனெனில் உன் காதுகள் உலக ஓசைகளால் நிரம்பியுள்ளன. உன் மேல்மனம் இடைவிடாத எண்ண அலைகளால் அலைக்கழிக்கப்படுகிறது.

ஆனால் நீ முயன்று அமைதியை வரவழைத்து உட்கார்ந்து பார். சுவர் கடிகாரத்தின் டிக்-டிக் ஒலிகூட உனக்குக் கேட்கத் தொடங்கும். இதயத் துடிப்பையும் உணர்வாய். மூச்சுவிடுவதும் மூச்சிழுப்பதும் உனக்குத் தெரிந்தே நடக்கும். ஊசி விழுந்தாலும் சப்தம் கேட்கும். புற்களிடையே ஊர்ந்து செல்லும் பாம்பின் சரசர ஒலியும் காதில் விழும். காற்று சற்று பலமாக வீசினால் இலைகள் அசையும் ஓசை வீட்டினுள் இருக்கும் உன்னிடம் வரும். ஆனால் நீ உலக நடவடிக்கைகளில் மும்முரமாக இருந்தால், கவலைகளால் மனம் சூழப்பட்டிருந்தால், மனம் முழுக்க சிந்தனை மேகங்கள் பரவியிருந்தால், எரிமலை வெடித்தாலும், இடி கர்ஜித்தாலும், நீ எந்த ஒலியையும் உணர்வதில்லை. ஆகவே உன் மனம் எந்த அளவிற்கு சாந்தமாக உள்ளதோ அதற்கேற்ப ஆழ்மன ஒலியை நீ கேட்கத் தொடங்குவாய்.

நீ ஜெபமாலை உருட்டியபடி என் படத்தைப் பார்த்துக் கொண்டே 30 நிமிடம் தியானம் செய்ததாகச் சொன்னாய். அப்போது உன் மனமெங்கும் அமைதி பரவியிருக்கும். நீ என் படத்திலேயே ஆழ்ந்துவிட்டதால், உன் மனத்தில் பரவிக்கிடந்த எண்ணங்களெல்லாம் சிதறியோடின. அப்போது உன் ஆழ்மனத் திலிருந்து ஏதோ பேச்சு எழும்புவதுபோல் தோன்றியிருக்கிறது. அது வெளியே இருந்து வருவதுபோல் தோன்றியிருக்கலாம். நீ என் படத்திலேயே லயித்திருந்ததால், அந்தப் பேச்சு என் படத்தை ஊடகமாகக் கொண்டு உன்னை வந்தடைந்தது. அப்போது படத்திலிருந்து நான் உன்னோடு பேசியதுபோல் உணர்ந்திருப்பாய். ஆனால் பேசினவன் நானல்லன். பேசினவன் நீயே — ஆழ்மனத்திலிருந்து பேசினாய். கேட்டவனும் நீயே — மேல்மனத்தால் கேட்டாய்!

இதனால்தான் உனக்குக் குழப்பம் ஏற்பட்டது. "இப்படியெல் லாம் நடக்குமா? சித்திரம் பேசுமா? இது பிரமையா?" என்று கேட்டிருக்கிறாய். "ஆம், பிரமைதான்," என்று பதில் சொன்னேன். அதாவது, பேசியது சித்திரம் என நீ நினைத்தது பிரமையாகும். ஒலி வந்தது உன் ஆழ்மனத்திலிருந்துதான்.

நீ உறக்கத்தில் காணும் கனவுகளும் பிரமையல்ல, போலியல்ல. உன் கனவிலும் நீதான் பேசுகிறாய். இதனால்தான்

உளவியல் அறிஞர்கள் மனிதர்களின் கனவுகளை ஆராய் கிறார்கள். நீ விழிப்பு நிலையில் இருக்கும்போது அவர்கள் உன் மனத்தை ஆராய்வதில்லை. தன்னிடம் ஆலோசனை கேட்க வந்தவரிடம் உளவியல் வல்லுநர், "உங்களுக்கு வரும் கனவுகளைச் சொல்லுங்கள்," என்றுதான் தூண்டுகிறார்.

விழிப்பு நிலை ஆராயப்படுவதில்லை. ஏனெனில் விழிப்பு நிலையில் நாம் மோசடிப் பேர்வழிகளாக இருக்கிறோம். நீ மற்றவர்களை ஏமாற்றுகிறாய் என்னும் அடிப்படையில் இதை நான் கூறவில்லை. நீ உன்னையே ஏமாற்றிக் கொள்கிறாய் என்பது என் கருத்து. நீ நல்லவன் என்று மற்றவர்களை நம்பவைக்க முயலுவதைப் பற்றி நான் கூறவில்லை. நீ நல்ல மனிதன் என்று உன் மனமே நினைக்கும்படி அதை ஏமாற்றிவிட்டாயே என்று வியப்படைகிறேன். திருடனும்கூட தான் திருடுவது ஒரு நல்ல காரணத்தை அடிப்படையாகக் கொண்டுதான் என்று நினைக் கிறான். சிலரிடம் குவிந்து கிடக்கும் செல்வத்தை, பணமின்றித் தவிப்பவர்களிடம் பரவலாகச் சென்றடையச் செய்பவர்களில் தன்னையும் ஒருவனாக நினைத்துக் கொள்கிறான். தன்னை சமதர்மவாதி, பொதுவுடைமைவாதி என்றும் கூறிக்கொள்வான். மனிதன் தன்னுடைய மோசமான செயல்களுக்கும் சிறந்த காரணங்களைக் கூறி, அவற்றை நியாயப்படுத்துவதில் கெட்டிக்காரனாக உள்ளான்.

**ச**ர்வாதிகாரியான ஹிட்லர் காரணமாக லட்சக் கணக்கில் அப்பாவி மக்கள் கொல்லப்பட்டனர். ஆனால் தனிப்பட்ட வாழ்வில் அவர் சுத்தமாக வாழ்ந்தார். தான் உத்தமன் என்னும் பிரமையிலேயே வாழ்நாள் முழுதும் கழித்தார். அவர் சிகரெட் முதலியவை பிடித்ததே கிடையாது. உணவு விஷயத்தில் மகா சைவம். பிராமணர்களைவிட அதிகம் கண்டிப்பு. வங்காள பிராமணர்கள் மீன் சாப்பிடுவார்கள். காஷ்மீர பிராமணர்கள் (பண்டிட்) அசைவம் சாப்பிடுவார்கள். நேரு ஓர் உதாரணம். அவர் காஷ்மீர பிராமணர். ஆனால் ஹிட்லரோ சமண மதத்தினரைப் போல சுத்த சைவம். ஹிட்லர் மது அருந்தமாட்டார். பிரம்ம சரியத்தைக் கடைப்பிடித்தார். தினமும் விடியலுக்கு முன்பே பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்துவிடுவார். நீண்ட நேரம்

தூங்கமாட்டார். தற்கொலை செய்துகொள்ள முடிவெடுத்தபின் அதற்கு முதல்நாள்தான் திருமணம் செய்துகொண்டார். இப்படி அவர் தூய்மையாக வாழ்ந்ததால் தன்னுடைய கொள்கைகளே சரி என நினைத்து, அவற்றை எதிர்த்தவர்கள் எல்லாரும் கொல்லப்படச் செய்தார். யூதர்கள் 60 லட்சமும் மற்றவர்கள் ஒரு லட்சம் பேரும் ஹிட்லரின் வெறித்தனத்தால் உயிரிழந்தனர்.

அதேசமயம் ஹிட்லர் யூதர்களைக் கொல்வதன் மூலம் உலகிற்கு நன்மை செய்வதாக நினைத்தார். கடைசி யூதர் உயிரோடு இருக்கும்வரை உலகிற்குக் கெடுதலென நம்பினார். அவர் யூதர்களைப் பாவிகள், குஷ்டரோகிகள்போல் அருவருப்பானவர்கள் என்று வெறுத்தார். இவர்களைக் கொல்வது சரி என்று பிறருக்கும் உபதேசித்து, தன் மனத்திலும் அதை நியாயப் படுத்தினார்.

இப்படிக்கூட நடக்குமா என நீ திடுக்கிடலாம். ஏனெனில் நீ யூதன் அல்லன். நீ யூதர்களுக்கு எதிரியுமல்லன். உனக்கு இது மாபெரும் முட்டாள்தனமான செயல் எனத் தோன்றும்.ஆனால் ஜகத்குரு என்று பெருமைப்படும் இந்தியாவைச் சேர்ந்தவர் களாகிய நாம் மட்டும் ஒழுங்கா? சுதந்திரப் போராட்ட காலத்திலேயே தொடங்கிவிட்ட இந்து-முஸ்லிம் கலவரங்கள் இன்னும் அடங்கியபாடில்லையே.

மனிதன் தன் கண்ணோட்டத்தை எப்படியாவது நியாயப் படுத்தி, மனத்தைத் தன் வழிக்குக் கொண்டுவருகிறான். தன் செயல்களை நியாயப்படுத்த தர்க்கத்தின் உதவியால் காரணங் களை முன்வைக்கிறான். ஒரு மாத்திரையின் மேற்புறத்தை சர்க்கரையால் இனிமையாக்குவதுபோல் அவன் நடந்து கொள்கிறான்.

உளவியல் நிபுணர்கள் ஒரு மனிதனின் வெளி வாழ்க்கையை வைத்து அவனைப் பற்றி முடிவுக்கு வரமுடியாது என்கின்றனர். உன் தூக்கத்தில் நடப்பவற்றை ஆராயச் சொல் கின்றனர். அப்போது உன் மனக்கட்டுப்பாடும் கண்டிப்பும் நெகிழ்ந்துபோயிருக்கும். விழிப்பு நிலையில் நீ வாரி வீசும் பொய்கள் உறக்கத்தில் வெளிப்படுவதில்லை.

எடுத்துக்காட்டாக, ஒருவர் துறவறம் மேற்கொண்டு, ஆசிரமம் அமைத்து, கட்டுப்பாடான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருப்பார். பெண்கள் எதிர்ப்பட்டால் அவர்களின் பாதங்களை நோக்கிப் பார்வையைத் தாழ்த்திக் கொள்வார். ஆனால் அவருடைய கனவுகளை ஆராய்ந்தால் அவை பெண்மயமாகவே இருக்கும் — அதுவும் ஆபாசத் தோற்றங்களில்! சந்நியாசிகள், பொதுவாக, கனவுகளில் பெண்களை அடிக்கடி காண்கின்றனர்.

இல்லறத்தார் கனவுகளில் பெண்கள் வருவது மிகக் குறைவு. அவர்கள் வீட்டிலும் வெளியிலும் ஏராளமான பெண்களைப் பார்ப்பதால் அவர்களைப் பற்றி விசேஷமாகச் சிந்திப்பதில்லை. அவர்கள் குடும்ப கஷ்டங்களையே நினைத்தபடி இருப்பதால், அவர்கள் தங்கள் கனவில் தாங்கள் சந்நியாசி ஆகிவிட்டது போலவும், பிட்சை பாத்திரத்தைக் கையிலேந்தி தெருக்களில் பஜன் பாடிக்கொண்டே செல்வதுபோலவும் காட்சிகளைக் காண்கிறார்கள்! ‘குடும்பத்துடன் அல்லாடியது போதும், சாமியாராகி நிம்மதியாக வாழலாம்’ என்னும் ஆழ்மன ஆசை கனவில் அவர்களுக்குக் காவித் துணியைக் கட்டிவிடுகிறது.

நிறைவேறாத ஆசைதான் கனவாக உருவெடுக்கிறது. அக்கனவு உனக்குச் சொந்தமானதுதான். நீ அமுக்கி, அழுத்தி, மறைத்த எண்ணங்களும் விருப்பங்களும் கனவாகப் பொத்துக்கொண்டு வருகின்றன. கனவில் உண்மையின் அம்சம் அதிகம் இருக்கும். அர்த்தம் புரியாது, உனக்கு சம்பந்தமற்ற கனவுகளிலும் உன்னைப் பற்றி ஏதோ சமிக்ஞை இருக்கிறது. ஆராய நேரமும் பொறுமையும் இல்லாததால் புரியாத கனவுகளை ஏதோ குழப்பக் கலவை என அலட்சியப்படுத்தி விடுகிறோம்.

நீ வெளிவாழ்க்கையில் மிகவும் எளிமையான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கலாம். எளிய வாழ்வே ஏற்றம் தரும் என்று முழங்கலாம். ஆனால் உன் கனவில் பேரரசர்போல் உன்னை அலங்கரித்துக் கொண்டு, அரியணையில் வீற்றிருப்பாய்! ஏனெனில் அதுதான் உன் அடிமனத்து ஆசை. உன் எளிமை ஊரையும் உன்னையும் ஏமாற்றும் வேலை.

நீ அகிம்சையை தீவிரமாகக் கடைப்பிடிப்பவனாக இருக்கலாம். குடிக்கும் நீரிலும் பூச்சி கலந்து தொண்டைக்குள்

இறங்கிவிடக் கூடாதென்று வடிகட்டி நீர் அருந்துபவனாக இருக்கலாம். இரவில் விளக்கெரிகையில் உணவில் பூச்சி விழுந்துவிடக் கூடாதென்று மாலையிலேயே உணவை முடித்துக் கொள்பவனாக இருக்கலாம். எக்காலத்திலும் புலால் உண்ணாதவனாக இருக்கலாம். ஆனால் இந்த அகிம்சைக் கொள்கை உனக்கு இயல்பாக இருந்தால் இதுபற்றிக் கனவு வராது. ஆனால் நீ சார்ந்துள்ள மதம், சமூகம் முதலியவற்றால் அகிம்சை உன்மீது திணிக்கப்பட்டிருந்தால், கனவில் நீ புலால் உண்பாய் அல்லது யாரையாவது வெட்டித் துண்டாக்கிக் கொலை செய்வாய்.

ஆகவே கனவுகளை முடிந்த அளவு நினைவிற்குக் கொணர்ந்து ஆராய வேண்டும். உன்னைப் பற்றிய உண்மையை கனவே அதிகமாகக் கூறும். 'இதுதான் நிஜமான நீ' என்று கனவு உன்னை உனக்கு அறிமுகப்படுத்துகிறது. நீ மேலே போர்த்திக் கொண்டிருக்கும் போர்வை உனக்கு நிரந்தரமாக உதவாது.

**சு**வாமி சர்தார் குருதயால் ஒரு கனவை என்னிடம் வர்ணித்தார். அவர் ஆதிவாசிகளின் காட்டில் அலைகிறார். கடுமையான தாகமும் களைப்பும் ஏற்பட்டது. ஓரிடத்தில் ஒரு குடிசையின் வாசலில் 'அன்னபூர்ணா ஹோட்டல்' என்னும் பலகை தெரிந்தது. பெயரின் கீழே 'உடனடி சேவைக்கு உள்ளே நுழைக' என்றும் எழுதியிருந்ததாம். குருதயால் உள்ளே நுழைந்ததும் அவரை ஆதிவாசிப் பெண் ஒருத்தி வரவேற்றாள் ஆடையே இல்லாமல்! தடுமாறிப் போன குருதயால், "ஒரு கோப்பை டீ போதும்," என்றார்.

தேநீர் வந்தது. பாலும் சர்க்கரையும் குறைவாக இருந்தது. ஆனால் அவர் அவசரமாகக் குடித்துவிட்டு வெளியேறினார்.

"ஏன் அவசரம்? சர்க்கரை, பால் ஏன் கேட்கவில்லை? வேறு எதுவும் ஏன் சாப்பிடவில்லை?" என்று விசாரித்தேன்.

அவள் ஆடை அணியாததால், நான் எதுவும் கேட்டால், அவளைப் பார்ப்பதற்காகவே தாமதப்படுத்துகிறேன் என்று அவள் நினைத்திருப்பாள். நானும் இதற்கு மேல் அவளை நீண்ட நேரம் பார்க்க ஆசைப்படாமல், மேற்கொண்டு மனம் சலனடையாமல் தப்பித்தேன்," என்றார்.

உன் கனவுகள் உனக்குச் சொந்தமானவை. அவை உனது உண்மையான ஆளுமையைப் படம் பிடித்துக் காட்டுபவை. உன் மனத்தில் நிழலாடுபவை எல்லாம் கனவுகளில் உருவம் தரித்து வெளிப்படுகின்றன. உன் கனவுகளைப் பற்றி சிந்தித்துப் பார். குறிப்பாக, ஆன்மிக சாதகர்கள் தங்கள் கனவுகளை நுணுக்கமாக ஆராய வேண்டும். நீ விழித்திருக்கும் நேரத்துச் செயல்களை டயரி வைத்து எழுதாவிட்டாலும் பரவாயில்லை. கனவுகளைக் குறித்துவைத்துக் கொள்ள ஒரு டயரி இருப்பது மிகவும் உபயோகப்படும்.

தினமும் காலையில் எழுந்ததும் இரவில் கண்ட கனவுகளில் நினைவிலிருக்கும் பகுதிகளை ஒரு டயரியில் எழுதிவா. கனவின் அர்த்தம் புரியாவிடிலும் எழுது. நாளடைவில் அர்த்தம் புரியும். என்ன முயன்றும் ஒரு கனவு புரியாவிடில் விழிப்பு நிலையில் அந்த அளவுக்கு உன் மனம் குழம்பியிருக்கிறது என்று அர்த்தம்.

காலப்போக்கில் கனவுகள் புரியத் தொடங்கியதும் உனக்கு உன் நிஜமான ஆளுமை புரியவரும். கனவுகளைப் புரிந்துகொள்ள நீ தொடர்ந்து முயன்றால், ஒரு காலத்தில் நீ கனவு காண்கிறாய் என்பதைக் கனவு நடைபெறும்போதே உணரத் தொடங்குவாய்! இந்த உணர்வு வலுப்பட்டதும் கனவுகள் வருவது நின்றுவிடும்! கனவுகள் நின்றுபோதல் உன் ஆன்மிக முன்னேற்றத்தில் புரட்சிகரமான திருப்பத்தைக் காட்டும்.

இரவுத் தூக்கத்தில் கனவுகள் வருவது நின்றுவிட்டால், பகல் வேளையில் எண்ணக் கொந்தளிப்புகளில் நீ தத்தளிப்பதும் நின்றுபோகும். கனவுகளை ரகசியமான வேர்கள் என்றால், எண்ணங்களை வெளிப்படையான இலைகள் எனலாம். கனவுகள் வருவதும், எண்ணங்கள் எழுவதும் நின்றுபோனால் பிறகு எது மிஞ்சியுள்ளதோ அதுவே சத்தியம் எனப்படுகிறது.

இந்தக் கேள்வியைக் கேட்ட தேவநிரஞ்சனுக்கு என் ஆலோசனை இதுதான் — 'நீ தொடர்ந்து என் படத்தை அடிப்படையாகக் கொண்டு தினமும் அரை மணி தியானம் செய். இப்போது போலவே உன் உள்மனம் அவ்வப்போது பேசும். நாளடைவில் நீ உள்மனம் பேசும் மொழிக்கு அர்த்தம்

புரிந்துகொள்வாய். இந்தத் திறமை ஆன்மிகப் பயணத்தில் மிகவும் உபயோகமாக இருக்கும்.

**ஆ**ந்திராவில் தெனாலிராமன் என்பவர் விதூஷகர் என்பதோடு அறிவாளியும்கூட. அவர் ஒரு நூலைப் பற்றிக் கூறும் விமர்சனத்துக்கு மாற்றுக் கருத்து இருக்க முடியாது. தெலுங்கு மொழியில் சிறந்த எழுத்தாளர் ஒருவர் ஒரு பெரிய நூல் எழுதி, தெனாலி ராமனிடம் கொடுத்து, கருத்துக் கேட்டார். ஐந்தாறு நிமிடங்கள்வரை நூலைப் புரட்டிய ராமன் பிறகு, "இது சாதாரணமான புத்தகம்," என்று கூறி, திருப்பிக்கொடுத்தார். மனமுடைந்துபோன எழுத்தாளர் வீடு திரும்பி, மனைவியிடம் தன் வருத்தத்தை வெளிப்படுத்தினார்.

"ராமன் எவ்வளவு நேரம் உங்கள் புத்தகத்தைப் படித்தார்?" மனைவி விசாரித்தாள்.

"ஐந்தாறு நிமிடங்கள்தான் ஆங்காங்கே படித்துவிட்டு, 'சாதாரணப் புத்தகம்' என்று சொல்லிவிட்டார்."

"அது போதும். அவரைப் போன்ற அறிஞருக்கு எந்த நூலுமே சாதாரணமாகத்தான் தோன்றும். ஆனால் ஐந்தாறு நிமிடங்கள் அவர் படிக்கும் அளவிற்கு உங்கள் நூலில் விஷயம் இருந்ததால் அது நிச்சயமாகச் சிறந்த நூல்தான்," என்று மனைவி நிலைமையை விளக்கினாள்.

இதுபோல் என் படத்தை வைத்து தியானம் செய்தபோது காதில் விழுந்த உள்மன ஒலி சாதாரண நிகழ்வு அன்று. அதற்கு நான் பொறுப்பல்ல, எனினும் கேள்வி கேட்ட உனக்குத் தற்செயலாக ஒரு மந்திரக்கோல்போல் கிடைத்துவிட்டது. இந்த வழியிலேயே உன் தியானத்தைத் தொடர்ந்துசெய். இதனால் உன் சிந்தனையின் ஆழம் அதிகரிக்கும். இதுவரை உன் மனத்தின் அறிமுகமாகாத பகுதிகளின் கதவுகள் திறக்கும்.

உனக்கு உள்மன ஒலி கேட்டதால், நீ பின்பற்றிய சித்திர தியான முறையே உன் சுபாவத்திற்குப் பொருத்தமானதெனத் தெரிகிறது. தியானத்திற்கு எது சிறந்த வழி என்று தேடக்கூடாது. எது உனக்கு உகந்த வழி என்றுதான் காண வேண்டும். உன்

வழியை நீ கண்டுகொண்டாய். வெளியார் கற்பிக்கும் தியானப் பயிற்சி உனக்குப் பொருந்தும் என்றும் சொல்ல முடியாது. நீ கண்டுகொண்ட வழி உனக்குள்ளேயிருந்து வந்தது. அதனால்தான் உன் தியானம் பலனளித்தது.

**அ**மெரிக்காவில் ஒருவன் பக்கத்து வீட்டுச் சிறுவனை மிகவும் நேசித்தான். அடிக்கடி அவனுக்குத் தின்பண்டம் வாங்கித் தருவான். தன்னுடன் உலாவ அழைத்துச் செல்வான். சிறுவனும் அவனை மிகவும் நேசித்தான். அவன் பெயர் கேய்ஸி.

ஒருமுறை அந்த மனிதன் நோய்வாய்ப்பட்டான். டாக்டர்கள் அவனது நோய்க்கு மருந்தில்லை என்று கூறிவிட்டனர். அவன் இறக்கும் நாள் நெருங்கிவிட்டது. சிறுவன் எப்போதும் நோயாளியின் அருகே இருந்தான். நண்பர் இறக்கப் போகிறாரே என்று அடிக்கடி அழுதான்.

ஒருமுறை சிறுவன் அதிகமாக அழுது மயக்க நிலைக்குப் போய்விட்டான். அப்போது பாதி மயக்கத்திலேயே அவன் சில வார்த்தைகள் சொன்னான். அவன் குறிப்பிட்ட மருந்தின் பெயரைச் சொல்லி, 'அதைப் பயன்படுத்தினால் நோய் குணமடையும்' என்றான்!

அவனோ சிறுவன். மருந்து பற்றி அவனுக்கு என்ன தெரியும்? நோயாளியும் அப்படி ஒரு மருந்தின் பெயரைக் கேள்விப்பட்டிருக்கவில்லை. அவன் டாக்டர்களை வரவழைத்து நடந்ததைச் சொன்னான். அவர்களும் அப்படியொரு மருந்து கேள்விப்பட்டிருக்கவில்லை. வேறு நாடுகளில் விசாரித்தபோது அந்தப் பெயருடைய மருந்து இங்கிலாந்தில் கிடைப்பது தெரிந்தது. அதை வரவழைத்து நோயாளிக்குக் கொடுத்ததில் அவன் உயிர்பிழைத்து குணமடைந்துவிட்டான்.

சிறுவன் கெய்ஸியின் புகழ் பரவியது. வீடுகளுக்கும் மருத்துவமனைகளுக்கும் அவனை வரவழைத்து நோய் குறித்து ஆலோசனை கேட்டனர். அவன் வளர்ந்து ஏராளமானவர்களைக் குணப்படுத்தினான். பிற்காலத்திலும் அவன் மருந்தியல் படிக்க வில்லை.

அவன் நோயாளியின் கட்டிலின் அருகே உட்காருவான். கண்களை மூடுவான். சில நிமிடங்கள் அவன் உடல் நடுங்கும். மயக்கமாக விழுந்துவிடுவான். அப்போது யாராவது அருகிலுள்ள வர் அவனது உடலை நோக்கி, "இதோ நோயாளியாகப் படுத்திருப்பவருக்கு என்ன மருந்து கொடுத்தால் குணமாகும்?" என்று கேட்பார். கெய்ஸி சொல்லும் மருந்தை வாங்கிக் கொடுப்பார்கள். நோய் நீங்கிவிடும்.

சில சமயம் கெய்ஸி சொல்லும் மருந்துகள் இதுவரை கண்டுபிடிக்கப்படாதவையாக இருக்கும்! சில மருந்துகள் இப்போதுதான் பரிசோதனை நிலையில் இருக்கும். கடைக்கு வரத் தாமதமாகும்.

"உன்னால் எப்படிச் சரியான மருந்தின் பெயரைக் கூற முடிகிறது?" என்று பலர் கெய்ஸியிடம் விசாரித்திருக்கிறார்கள். அதற்கு அவன், "எனக்கு எதுவும் தெரியாது. இந்த விஷயத்தில் நான் எதுவும் செய்வதில்லை. நான் மயக்கமாகிவிடுகிறேன். பிறகு என்ன நடக்கிறது என்பது பிறர் சொல்லித்தான் எனக்குத் தெரியும்," என்று பதிலளித்தான்.

கெய்சியின் ஆழ்மனத்திலிருந்து விடைகள் கிடைத்திருக் கின்றன. ஆழ்மனம் எப்படி மருந்துகளின் பெயரைக் கூறியது என்பது ஓர் அதிசயம்தான். அதேசமயம் மற்ற விஷயங்களில் ஆழ்மனம் அவனுக்கு உதவியதில்லை.

கேள்வி கேட்ட தேவநிரஞ்சனுக்கும் ஆழ்மனத்திலிருந்து சமிக்ஞைகள் கிடைத்திருக்கின்றன. அதைச் சரியாக உபயோகித் தால் பலருக்கும் உதவலாம்.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்கள் சொற்பொழி வுகளைக் கேட்டு நான் முகவரி இல்லாத வனாகி விட்டேன். பிறர் என்னைப் பற்றி விசாரித்தால், 'நான் யார்?' என்றெல்லாம் என்ன பதில் சொல்வது?**

**நே**ர்மையாக நடந்துகொள். பதில் ஆழ்மனத்திலிருந்து வராவிடில், 'எனக்கு எதுவும் தெரியாது' என்று சொல்லிவிடு. உண்மையைவிட்டு விலகாதே. உனக்கு உன்னைப் பற்றித் தெரியாவிடில் நீ என்ன பதில் சொல்ல முடியும்? உன் முகவரியை நான் சொன்னால், அது என் பதிலாகத்தான் இருக்குமே தவிர, உன் பதிலாக அமையாது. நான் உன்னை பிரம்மம், பரமாத்மா என்றெல்லாம் சொன்னால் என்ன பயன் உண்டாகும்? இவை நீ என்னிடமிருந்து கேட்டறிந்தவை; சுயமாக அறிந்தவை அல்ல. 'நீ ஆத்மா' என்று தினமும்தான் நான் சொல்கிறேன். நான் சொல்வது மட்டும் போதுமா?

என் பதில் உன் பதில் ஆகிவிடாது. அந்தப் பதில் உனக்கு வெளியே இருந்து வந்தது. உன் வாழ்க்கையில் இப்போது மங்களமான நேரம் வந்துள்ளது. அதனால்தான் நீ முகவரி இல்லாதவனாகிவிட்டாய். பாதிக் கிணறு தாண்டியாகிவிட்டது; பாதிப் பயணம் முடிந்துவிட்டது. அது முக்கியமான பகுதிதான். நீ ஓரளவு உன் பெயர், இருப்பிடம் ஆகியவற்றை மறந்துவிட்டாய். நடந்தது நல்லது. குப்பை கூளம் அகன்றது. அடுத்து, உண்மையான, சரியான பதில் உனக்குள்ளேயிருந்து எழும். கொஞ்சம் காத்திரு. நீ அவசரப்பட்டால், வெளியுலகப் பதில் எதையாவது பற்றிக்கொண்டு விடுவாய். நீ வெளியுலக வர்ணிப்புகளைக் கடந்துசென்றால்தான் முகவரி இல்லாமல் போனாய் என்பதை நினைவில் வை.

உன் பெற்றோர், உன் பெயர் என்ன என்று சொல்லி, அதை வைத்தே உன்னை அழைத்தார்கள். சற்று உணர்ந்தபின் சற்றிலுமுள்ளவர்கள் உன் வீட்டு விலாசம் என்ன என்று சொல்லி, வழி தவறிவிடாமல் இருக்க, மனப்பாடம் செய்யச் சொன்னார்கள். மேலும் சில ஆண்டுகளுக்குப் பின் உன் ஜாதி-மதம்-நாட்டின் பெயரையும் தெரிந்துகொள்கிறாய். இவ்வாறு பல 'லேபிள்கள்' உனக்கு வெளியில் ஒட்டப்படுகின்றன. ஆனால் உள்ளே நீ வெற்றிடமாகவே நீடித்தாய்.

நீ யார் என்று உனக்குத் தெரியாது. மற்றவர்கள்தான் உன் பெயர் ராமன்; நீ பிராமண சாதியினன்; நீ இந்துமதத்தவன் என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால் டப்பா உள்ளே காலியாக

இருக்கிறது! அந்த லேபிள்கள் கூறுவது உண்மையா என்றும் டப்பாவுக்குத் தெரியாது.

இந்த லேபிள்களின் அடிப்படையில்தான், இவற்றைக் காப்பாற்றத்தான் நீ போரிட்டாய். உயிரிழந்தாய், புரட்சி செய்தாய், கலவரத்தைத் தூண்டினாய்; வேறு லேபிள்காரர்களோடு மோதினாய். நீ பிராமணன். தாழ்த்தப்பட்ட ஜாதிக்காரன் அல்லது வேற்று மதத்தினன் உன்மீது பட்டுவிட்டான், உன்னைத் தீட்டாக்கிவிட்டான் என்று குளிக்க ஓடுகிறாய். நீ யார் என்று தெரியுமா? லேபிள் சொல்வதை நம்பி வாழ்கிறாயே.

நீ தியானப் பயிற்சி செய்ததால், என்னுடனேயே (சத்சங்கம்) இருந்ததால் உனக்குள்ளிருந்த குப்பை கூளம் அகன்றுவிட்டது. லேபிள்கள் அகன்றுவிட்டன. உனக்கு பயமாக உள்ளது. நீ காலியாகிவிட்டதுபோல் தோன்றுகிறது. லேபிள்கள் ஒட்டியிருந்த காலத்திலும் நீ உள்ளே காலியாகத்தான் இருந்தாய். முன்பு அந்த விஷயம் உனக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆகவே நீ மிகவும் அவசரப்படுகிறாய். இந்த டப்பாவின் மேல் (உன் மேல்) ஏதாவது எழுதும்படி கேட்கிறாய். நான் ஏதாவது எழுதினால் அதுவாகவே நீ கருதப்படுவாய். நான் எழுதுவது வெளிப்புறத்தில்தான் பதிவாகும்.

இம்முறை காத்திரு. அவசரப்படாதே. எதிர்பார்த்திரு. விதையிலிருந்து துளிர் வெளிப்படுவதுபோல் உன் உள்ளேயிருந்து இயற்கையாக சமிக்ஞை வெளிப்படட்டும். செடி தானாக வளரட்டும். பூ மலரட்டும். அந்தப் பூதான் உன் கேள்விக்கான பதில், அதற்கு முன்பாக, பக்குவமாகாத நிலையில் பதில் கிடைக்காது. அதற்கு முன் கிடைக்கும் பதில்கள் எல்லாம் பயனற்றவை.

உனது நிஜமான தன்மையை உன் பதிலாக உலகிற்குச் சொல்லு. 'என் மேல் ஒட்டியிருந்த லேபிள்களை அகற்றி விட்டேன்' என்று பிரகடனம் செய். 'நான் எந்த ஜாதியையும் மதத்தையும் சேர்ந்தவனல்லன். எனது பெயரை அன்றாட வாழ்க்கையின் நடவடிக்கைகளுக்காக மட்டும் விட்டுவைத் துள்ளேன்' என்று தெரிவித்துவிடு.

'நான் சந்நியாசம் தரும்போது சீடனின் பெயரை மாற்றி விடுவதைக் கவனித்திருப்பாய். பெயர் என்பது அடையாளம் காணும் வசதிக்காகவே என்பதையும், எந்தப் பெயரும் செல்லுபடியாகும் என்பதை நிரூபிக்கவே அவ்வாறு செய்கிறேன். இல்லாவிடில் சமூக வாழ்க்கையில் பல பிரச்சனைகள் தோன்றும். குறைந்தபட்சம் தபால்காரருக்கு உன் பெயர் தேவைப்படுகிறது. உனக்குப் பெயரில்லாவிடில் யாரும் உனக்குக் கடிதம் எழுத முடியாது, வங்கியில் பண விஷயங்களுக்கு உன் பெயர் தேவைப்படும்.

பெயர் என்பது நடைமுறை சத்தியம். அதுவே இறுதியான ஆன்மிக சத்தியம் அன்று. ஒரு கஷ்டமும் இல்லாமல் ஒருவர் பெயரை எப்படி ஒரு நிமிடத்தில் மாற்றிவிட முடியும் என்பதைக் காட்டவே புதிய தீட்சா நாமம் தருகிறேன். உன் பழைய-புதிய பெயர்களுக்கு விசேஷ மதிப்பு கிடையாது. துறவியானபின் நான் தரும் புதிய பெயர் உன் துறவற வாழ்க்கையின் அனைத்துத் தேவைகளுக்கும் போதுமானதாக இருக்கும். இதற்கு முன் 30-40 ஆண்டுகளாக உனக்கிருந்த பெயருடன் நீ ஒன்றிப்போயிருந்தாய். அதை நான் நகர்த்தி வைத்தேன். பெயர் எதுவாயினும் வேலை பாதிப்படையாது என்பதைக் காட்டவே அவ்வாறு செய்தேன். அ, ஆ, இ என்றெல்லாமோ, வெறும் எண்களை மட்டுமோ பெயராகக் கொண்டும் வாழலாம்.

அப்படித்தான் ஆகப்போகிறது. மக்கள் தொகை அந்த அளவிற்குப் பெருகிவருகிறது. பெயர்களால் பயனில்லை என்னும் காலம் வரப்போகிறது. எண்தான் உன் தனித்தன்மைக்குச் சான்றாக அமையும்.* இராணுவத்தில் அப்படித்தான் செய்கிறார்கள். ஏனெனில் ஒரே பெயரில் பலர் உள்ளனர். பெயர்களுக்கும் ஓர் எல்லை உண்டு. புது-புதுப் பெயர்களை உற்பத்தி செய்ய முடியாது. எண்களால் ஒவ்வொருவரையும் குறிப்பிட எல்லை இல்லை. அவற்றை நீட்டிக்கொண்டே செல்லலாம். இதனால் இன்னொரு நன்மை — அடையாள எண்ணை வைத்துக்கொண்டு ஒருவரின் ஜாதியையோ, மதத்தையோ கண்டுபிடிக்க முடியாது.

* நாற்பது ஆண்டுகளுக்கு முன் ஓஷோ கூறியது இன்று ஆதார் அட்டை வடிவில் வந்திருப்பது வியப்பூட்டுகிறது.

பெயர் என்பது அப்படி ஒன்றும் பெருமதிப்பு உடைய தில்லை. அது ஒரு சொத்து அன்று. ஆகவே விளையாட்டுப் போல் பெயரை மாற்றிவிடுகிறேன். அதனால்தான் தீட்சை சமயம் நான் விழா நடத்துவதில்லை. இது குறித்துச் சிலருக்கு மனத் தாங்கல் உண்டு. அவர்கள் என்னிடம், "ஏதோ ஒரு பொருளை எடுத்துத் தருவதுபோல் நீங்கள் சந்நியாசம் தந்துவிடுகிறீர்கள். மற்ற இடங்களில் ஒருவர் தீட்சை பெறும் நாளன்று மேள தாளத்துடன் சாரட் வண்டியில் அவர் அழைத்து வரப்படுவார். சுற்றிலும் மக்கள் கூட்டமாக வருவர். திருவிழாபோல் இருக்கும். நீங்கள் எந்தச் சிறப்பும் செய்யாமல் தீட்சை கொடுத்துவிடுகிறீர்களே," என்று புகார் செய்கிறார்கள்.

அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்வது — சந்நியாசம் ஏற்பது ஓர் எளிய விளையாட்டுப்போல் நிகழ வேண்டும் என நான் விரும்புகிறேன். அதை மிகைப்படுத்திக் காட்ட எனக்கு இஷ்டமில்லை. துறவற நிகழ்ச்சி உன் அகங்காரத்துக்குத் தீனி போடுவதுபோல் ஆகிவிடக்கூடாது என்பது என் கவலை. துறவறமும் ஆர்ப்பாட்டமும் ஒன்றுக்கொன்று முரணானவை.

மற்ற இடங்களில் தீட்சை பெறக் கிளம்புபவர் மேளதாளத் துடன் சாரட்டில் ஊர்வலமாக வருகிறார். மக்கள் மாலை போடு கிறார்கள். இப்பொழுதே அவரைக் கால் தொட்டு வணங்கு கிறார்கள். 'நீங்கள் கொடுத்துவைத்தவர். முன்பு செய்திருந்த மகாபுண்ணியத்தின் விளைவாக நீங்கள் இந்த ஊர்வலத்தின் நாயகனாக வருகிறீர்கள். நாங்கள் அதிர்ஷ்டம் கெட்டவர்கள். உலக வாழ்க்கையில் அழுந்தி அழுகுகிறோம். நாங்கள் சாக்கடைப் புழுக்கள். நீங்கள் தூய அன்னப் பறவைபோல் விண்ணில் பறக்கவுள்ளீர்கள்' என்றெல்லாம் வழியில் திரளும் மக்கள் பாராட்டுகிறார்கள். தங்கள் அகங்காரத்தை திருப்தி செய்கின்ற இத்தகைய பாராட்டுக்கு ஆசைப்படும் புதுத் துறவிகள் வேண்டுமானால் ஊர்வலமாகச் செல்லட்டும்.

சந்நியாசிகளுக்கு அதிக அளவில் மரியாதை கொடுப்பதை மக்கள் நிறுத்த வேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன். அப்பொழுது நூற்றுக்கு 99 சந்நியாசிகள் மீண்டும் குடும்ப வாழ்க்கைக்கே திரும்பிவிடுவார்கள் என்பது என் கணிப்பு!

ஆகவே என்னிடம் தீட்சை பெற வருபவரை மற்ற பார்வை யாளர்களைப் போலவே கருதுகிறேன். அவருக்கு விசேஷ வரவேற்பு தருவதில்லை. புதுப்பெயர் தருவதைச் சடங்காக நடத்துவதில்லை. காதில் ஓதும் அம்மந்திரம் காதோடு இருக்கட்டும். அவ்வாறு நான் ஓதுவது மற்றவர்களுக்குத் தெரிந்தாக வேண்டிய கட்டாயமென்ன? இரண்டாம் நபருக்குத் தெரியாமல் பெயரை மாற்றுகிறேன்; காவித் துணி அணியச் செய்கிறேன். விசேஷமான நடத்தைக் கட்டுப்பாடுகளை (ஆச்சாரம்) வற்புறுத்துவதில்லை.

துறவி குறிப்பிட்ட விதிகளின்படிதான் நடந்துகொள்ள வேண்டுமென்பது அவருக்கு அகங்காரம் நிறைந்த ஆளுமையைத் தந்துவிடுகிறது. சூழ்நிலை காரணமாகத் துறவி பட்டினி கிடக்க வேண்டியதில்லை. அப்போது அவர் ஹோட்டலில் சாப்பிடுவது தவறில்லை. ஆனால் ஆச்சாரம் என்ற பெயரில் சந்நியாசி, 'நான் சாதாரணமானவன் அல்லன், எனக்காகக் குறிப்பிட்ட விதத்தில், குறிப்பிட்ட உணவு சமைக்கப்பட வேண்டும். பிராமணர்தான் அரைப்பது முதலிய சமையல் வேலைகளைச் செய்ய வேண்டும். சுத்தமான நெய்யால் உணவு தயாரிக்க வேண்டும்' என்று நிபந்தனைகள் விதிக்கக்கூடாது.

துறவறம் ஏற்க வரும் உன்னை முற்றிலும் சாதாரண மானவனாக ஆக்க விரும்புகிறேன். அப்போதுதான் உன்னிடம் அகங்காரத்தின் சுவடே இருக்காது. மற்றவர்கள் வாழும் முறையி லிருந்து உன் வாழ்க்கை முறை அதிகமாக மாறுபட்டிருக்கக் கூடாது. நீ சிறப்பு மனிதன்போல் நடந்துகொள்ளக் கூடாது.

நான் தீட்சையை இப்படி எளிமைப்படுத்துவதால்தான் நீ முகவரி இல்லாதவனைப்போல் உணர்ந்திருக்கிறாய். உனது பழைய பெயர், இருப்பிட விவரம், ஜாதி, மதம் நீங்கிவிட்டது. உனக்காகப் புதிதாக எதையும் நான் உருவாக்கித் தரவில்லை. உன்னை காலியாக அப்படியே விட்டுவிட்டேன். நீ காலியாக இருந்தால்தான் உனக்குள் பதிந்துள்ள ஆன்மிக விதை முளைக்கும். நான் தீட்சையின் அடையாளமாக உபதேசம் போன்ற ஏதாவது தரவேண்டுமென எதிர்பார்க்கிறாய். அப்படிச் செய்தால்

நான் உனக்குப் பகைவன்போல் ஆகிவிடுவேன். பிறகு நான் கொடுப்பதை நீ கெட்டியாகப் பிடித்துக் கொள்வாய். அது உனக்குப் புதிய லேபிளாக அமைந்து உன் எல்லையைச் சுருக்கும். உன் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும்.

ஆத்ம ஞானம் பெறுவதற்குப் பொறுமையாகக் காத்திருத்தல் முக்கியம். யாராவது கேட்டால், "இதுவரை என்னைப் பற்றி நான் அறிந்திருந்த விவரமெல்லாம் தவறெனத் தெரிந்தது. லேபிள்கள் கூறியது பொய். என்னைப் பற்றி சரியான தகவல் வருவதற்காக நான் காத்திருக்கிறேன். அப்படி ஒரு தகவலும் வராவிடில், நான் இப்படியே காலியாக இருந்துவிடப் போகிறேன். புதிய ஆனால் தவறான லேபிள்களை ஒட்டிக்கொள்வதைவிட சும்மா இருந்துவிடுவதே மேல்," என்று சொல்லிவிடு.

நாம் நேர்மையாளனாக, நம்பத் தகுந்தவனாக இருக்க வேண்டும் என்று யாரும் சொல்லித் தருவதில்லை. அதனால் நமக்குப் பதில் தெரியாத கேள்விகளுக்கும் எல்லாம் தெரிந்தவன் போல் பதில் சொல்கிறோம். பொய் பேசக் கூடாது என்று தந்தை மகனுக்குக் கற்பிக்கிறார். ஒருநாள் மகன் தந்தையிடம் "கடவுள் என்பவர் உண்டா?" என்று கேட்கிறான். தந்தை "உண்டு" என்றாலும் "இல்லை" என்றாலும் இரண்டுமே பொய்தான்! ஏனெனில் இரண்டையுமே அவரால் நிரூபிக்க முடியாது. அவர் எந்தப் பதில் சொன்னாலும், வளர்ந்தபின் மகன் அவர் பொய் சொல்லித் தன்னை ஏமாற்றியதாகவே நினைப்பான். அவர்மேல் அவன் இதுவரை கொண்டிருந்த மரியாதையும் குறைந்துவிடும்.

**நா**ன் பள்ளிக்கூடத்தில் படிக்கையில் என் கணித ஆசிரியர், 'மாணவர்கள் உண்மையே எப்போதும் பேச வேண்டும். ஏனெனில் கணிதம் ஒருபொழுதும் பொய் சொல்லாது' என்பார். நான் ஒருநாள் அவர் வீட்டிற்குப் போய்க் கணக்குப் போட்டுக்கொண்டிருந்தேன். யாரோ கதவைத் தட்டியதும் சன்னல் வழியாக எட்டிப் பார்த்த ஆசிரியர் என்னிடம், "நீ போய்க் கதவைத் திற. ஆனால் நான் வீட்டில் இல்லையென்று சொல்லி விடு," என்றார்.

நான் திகைத்துப்போனேன். இப்பொழுது என்ன செய்வது என்று எனக்கு சங்கடமாகிவிட்டது. ஆசிரியரின் கட்டளையை நிறைவேற்ற வேண்டும். அதேசமயம், அவர் வற்புறுத்தியபடி பொய்யும் சொல்லக்கூடாது.

நான் கதவைத் திறந்தேன். வந்தவரை வணங்கி, "ஐயா, ஆசிரியர் வீட்டில்தான் இருக்கிறார். ஆனால் அவர் வீட்டில் இல்லை என்று உங்களுக்குத் தெரிவிக்கச் சொன்னார்! மாணவர்கள் பொய்யே சொல்லக் கூடாது என்று அவர் கற்பித்திருப்பதால் நான் பொய் சொல்லி உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. ஆசிரியர் கட்டளையை மீறக்கூடாது என்றும் அவர் கற்பித்திருப்பதால், அவர் சொன்னதைக் கூட்டாமல், குறைக்காமல் உங்களிடம் சொல்லிவிட்டேன்," என்றேன்.

"நீ பேசிய விதம் எனக்குப் பிடித்திருக்கிறது. ஆகவே உள்ளே போய் உன் ஆசிரியரை அவமானப்படுத்த விரும்ப வில்லை," என்று கூறி வந்தவர் சிரித்துக்கொண்டு போய்விட்டார்.

பிறகு விஷயம் தெரிந்து ஆசிரியர் என்மீது கோபப்பட்டார். நான் நிலைமையை விளக்கினேன். அவருக்கு வாயடைத்து விட்டது.

மகனுக்குத் தந்தையிடம் மரியாதை இருக்க வேண்டியது தான். ஒருபொழுதும் பொய் கூறாதே (ஸத்யம் வத) என்று தந்தை மகனுக்கு உபதேசிக்கிறார். ஆனால் அவ்ரே நிறையப் பொய் பேசுகிறார்! மகன் நாத்திகனாகிவிடக் கூடாது என்னும் பயத்தினால் அவர் மகனிடம், 'கடவுள் உண்டு' என்கிறார். அவர் மகனின் நன்மையை (ஹிதம்-இதம்) கருதியே அவ்வாறு பேசுகிறார். ஆனால் பொய்யால் யாருக்கும் நன்மை விளையாது. எது இதந்தருமோ அது உண்மையாக இருக்கும். எது உண்மையோ அது இதம் தரும். சத்தியத்தைத் தவிர வேறு நலம் கிடையாது. சத்தியத்தைத் தவிர வேறு மங்களம் கிடையாது.

ஆகவே நீ உனது நிலைமைக்கு எதிர்மாறாகப் பேசாதே. பதில் தெரியாவிடில் "மூளை காலியாக உள்ளது, கடவுள் உள்ளாரா என்று தெரியாது. எதிர்காலத்தில் பதில் தெரிந்தால் சொல்கிறேன்," என்று மகனிடம் உண்மையைக் கூறிவிடு.

இப்படி வாய்மையில் தோய்ந்து வாழ்வதே உண்மையான துறவறம். எது உள்ளதோ அதை மாற்றிச் சொல்லாமலிருப்பது துறவறம். எது எப்படி உள்ளதோ அதை அப்படியே ஏற்பதே துறவறம்.

உனக்குப் பதில் தெரியாது என்று ஒப்புக்கொண்டால் அதில் என்ன ஆபத்து உள்ளது? என்ன குழப்பம் உள்ளது? என்ன சிரமம் உள்ளது? மக்கள் உன்னை முட்டாள் என்பார்கள், அவ்வளவு தானே? ஆனால் உனக்கு 'நீ யார்' என்னும் அடிப்படையே தெரியாதே. பிறகு, கடவுளைப் பற்றி உனக்கு என்ன தெரிந்திருக்க முடியும்? நீ காவி உடையில் இருப்பதால் வழியில் சந்திப்பவர்கள், "நீங்கள் யார், சுவாமி? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே செல்கிறீர்கள்?" என்று கேட்கத்தான் செய்வார்கள். ஆனால் உனக்கு உண்மையான பதில் தெரியாதே. மற்ற வகைத் துறவிகள் பெயர்-ஊர்-போகுமிடம் சொல்வார்கள் அல்லது ஆத்மா-மோட்சம் என்றெல்லாம் சொல்லிக் குழப்புவார்கள்.

என்னிடம் துறவறம் பெற்றவர்களோ வித்தியாசமானவர்கள். ஆனால் மக்கள் காவி உடை அணிந்தவர்களை எல்லாம் மகாத்மாக்கள் என்றும், கடவுளின் ரகசியங்களை அறிந்தவர்கள் என்றும் நினைக்கிறார்கள். என் சீடர்கள் வேடதாரி சாமியார் களில்லை; போலிச் சாமியார்களில்லை. என் சீடர்கள் அசலான வர்கள், உண்மையானவர்கள், சுதந்திரமானவர்கள், இவர்கள் மீது நான் எந்தக் கருத்தும் நிபந்தனையும் திணிப்பதில்லை இவர்கள் உள் லயம் சீராக உடையவர்கள்; சுயமான கட்டுப்பாட்டைப் பின்பற்றுபவர்கள்.

நீ துறவறத்திலேயே நீடித்தால் அதன் பலனாக எதிர்காலத்தில் ஒருநாள் முக்தி (விடுதலை) பெறுவாய் என்று எதிர்பார்த்து நான் உனக்கு தீட்சை தரவில்லை. நான் உன்னைத் துறவியாக்கியபோதே நீ உலகிலிருந்து விடுதலை பெற்றுவிட்டாய். துறவுநிலை என்பதே விடுதலை பெற்ற மனநிலைதான். இதை மக்கள் புரிந்துகொள்வதில்லை. அதனாலென்ன வந்தது? மக்களின் ஆமோதிப்பை எதிர்பார்த்து நீ துறவியாகவில்லையே.

உன் சிக்கல் எனக்குப் புரிகிறது. "நீங்கள் யார்? உங்கள் நிஜ சொரூபம் யாது? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே செல்

கிறீர்கள்?'' என்று மக்கள் வினவும்போது, நீ அவர்களைப்போல் வழக்கமான, சராசரியான பதில் கூறாமல், பிரம்ம ஞானத்தின் அடிப்படையில் பதில் கூறி, ஞானி எனப் பாராட்டப்பட விரும்புகிறாய். ஆனால் உனக்கு பிரம்ம ஞானம் இன்னும் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லையே.

அப்படியானால் உலகிற்கு என்ன பதில் சொல்வது என்று கேட்கிறாய். உன்னை உறுத்துவது உலகின் கேள்வியன்று. நீ பதில் சொன்னால் பொய்யாக இருக்கும்; சொல்லாவிட்டால் நீ அஞ்ஞானியாகக் கருதப்படுவாய் என்னும் சங்கடம்தான் உன்னை உறுத்துகிறது.

எனது ஆலோசனைப்படி நீ செய்ய வேண்டியது என்னவெனில், 'நான் ஒரு முட்டாளுங்க' என்று ஒப்புக்கொண்டு விடுவதுதான். இவ்வாறு சொல்லுவதற்கான தைரியம் என் சந்நியாசிகளிடம் இருக்க வேண்டுமென நான் எதிர்பார்க்கிறேன். இதேபோல் அவர்கள் தன்னைச் சில பாவங்களைச் செய்தவர்கள் என்றும் தைரியமாக வெளிப்படுத்த வேண்டும். மேலும் அவர்கள், 'சாதாரணமான மனிதர்களின் எல்லைகள் என்னவோ அவையே என் எல்லைகளுமாகும், நான் ஒன்றும் விசேஷமானவன் இல்லை' என்றும் தைரியமாக அறிவிக்க வேண்டும்.

அப்படி நீ ஒப்புக்கொள்வதுதான் உன் சிறப்புத் தன்மையாக அமையும். அதுதான் துறவறத்திற்குப் பின் உனக்குப் புதிய உருவமாக அமையும். நீ அஞ்ஞானி எனில் அதைச் சொல்லிவிடு. உனக்கு ஞானம் நிரம்பாத நிலையில் நீ உனக்கு எதுவும் தெரியாது என்று சொல்லிவிட்டால் உன் மனம் நிர்மலமாகும். அது உண்மையும்கூட. உன்னிடம் சேர்ந்துள்ள ஞானம் கடன்வாங்கப் பட்டது, ஊசிப்போனது, உன் குருவிற்குத்தான் சொந்தமானது. ஆனால் உன் அஞ்ஞானம் (அறியாமை) உனக்கே சொந்தம். அறியாமையை இருட்டு எனலாம். ஆனால் அந்த இருட்டு உனக்குச் சொந்தம். உன் கையில் பிடித்திருப்பதாகக் கூறும் ஞான விளக்கு வேறொருவர் தந்தது. அதை அதிகமாக நம்பாதே. அது பாதியில் அணைந்துவிடும்.

சில விஷயங்கள் குறித்து ஞானம் பெறவே முடியாது. ஆகவேதான் வாழ்க்கை ரகசியமயமாக உள்ளது. பூரண சத்தியம்

ஞான வடிவத்தை எடுக்காது. அது உன் அனுபவமாக ஆகலாம். அந்த அனுபவத்தை நீ உணர்வாய். ஆனால் பிறரிடம் விளக்க முடியாது. சத்தியத்தின் உச்சக்கட்டத்தை விளக்குவது என்பது பேசமுடியாத குறையுடையவன் வெல்லக்கட்டியின் இனிப்பைக் கூற முயல்வது போன்றதாகும். நான் ஆரம்பத்தில் சொன்ன சாட்சி, தாவோ, ததாதா நிலைகளை அனுபவத்தால் அறியலாமே தவிர, மற்றவர்களுக்குப் புரியும்படி அதை வர்ணிக்க முடியாது.

இதற்காக நீ கலவரப்படாதே. விளக்குவதற்குச் சொற்கள் கிடைக்கவில்லையானால் அமைதியாக இருந்துவிடு. உன் மவுனமே பதிலாக அமைந்துவிடும்.

**பு**த்தரின் சிலைகளில் இந்த மவுனம் பிரதிபலிப்பாகிறது. மக்களின் அல்லது சீடர்களின் பல கேள்விகளுக்கு அவர் பதில் சொன்னதில்லை. இத்தனைக்கும் பாரதம் ஞானிகளின் தேசமாகும். இங்கே சாஸ்திர அறிவு பெற்ற பண்டிதர்களும் ஏராளமாக உண்டு. கடைக்காரர்கள்கூட ஆத்மா-பரமாத்மா என்றெல்லாம் பேசும் நாடு இது. மக்கள் இங்கே மிகவும் சாதாரணமாக 'பிரம்மம்' என்னும் மகத்தான சொல்லை உபயோகிக்கிறார்கள்.

கடவுளைப் பற்றி விவாதித்தபடி தெருவில் செல்பவர்கள் உள்ள இந்நாட்டில் புத்தர் மவுனமாய் இருந்தார். 'கடவுள் உண்டா?' என்று அவரிடம் கேட்டால் பதில் கிடைக்காது. மகாஞானியாகிய அவருக்குப் பதில் சொல்ல வேண்டும் என்றும் தோன்றியிருக்காதா? இந்த நாட்டிலுள்ள முட்டாள்கள்கூட இக்கேள்விக்குப் பதில் கூறுகையில், புத்தருக்கு மட்டும் அப்படி என்ன பிரச்சினை? அவர் என்ன பதில் சொன்னாலும் எல்லோரும் ஆர்வத்துடன் கேட்பார்களே. ஆனால் அவர் மவுனம் சாதித்தார் சிலர் அவரைப் பார்த்து, "உங்களுக்குப் பதில் தெரியாதென்றால் ஒப்புக்கொண்டு விடுங்கள்," என்பார்கள். அப்போதும் புத்தர் அசைந்து கொடுத்ததில்லை.

புத்தர் கேள்வி கேட்டவர்களே பதிலை முடிவு செய்யட்டும் என விட்டுவிட்டார். ஆனால் கடவுளைப் பற்றிய விஷயம் சொல்ல முடியாத ரகசியமாகும். எதைப் பற்றி சொல்ல முடியாதோ அதைச் சொல்ல முடியாது என்று சொல்வதுகூட வீணானது என்று

புத்தர் கூறியுள்ளார். அதுவும்கூட கடவுளைப் பற்றிக் கூறிய விஷயமாகிவிட்டது! அவரது ஒரு குணத்தை அல்லது அடையாளத்தை வெளிப்படுத்தியாகிவிட்டது. அதாவது அவர் சொற்களுக்கு அப்பாற்பட்டவர் என்பது அவரது குணங்களில் ஒன்று. இவ்வாறு அவரைச் சிறிதாவது வரையறுத்தாகிவிட்டது. இது எதிர்மறையான குறிப்புதான் எனினும் அதுவும் ஓர் அடையாளம்தானே. நேராகச் சொல்லாவிடிலும் சுற்றி வளைத்தாவது சொல்லப்பட்டுவிட்டது.

புத்தர் நேர்மையாளராக இருந்தார். அவரைச் சூழ்ந்திருந்தவர்களில், தரிசிக்க வந்தவர்களில் உண்மையான அறிவாளி ஒருவன் இருந்திருந்தாலும் அவன் அவரது மவுனத்தைப் புரிந்துகொண்டிருப்பான். அப்படி நூற்றில் ஒருவர் அமைவதுகூட அரிது. மீதி 99 பேர், 'இந்த புத்தருக்கு ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. இவர் இன்னும் ஒரு முடிவுக்கு வராமல் தத்தளிக்கிறார். இவரைவிட நம் ஊர் சாஸ்திரியாரே மேல். அவர் உறுதியாக, "கடவுள் உண்டு. கடவுள்தாம் உலகைப் படைத்தார். வேதங்களில் இதற்கான சான்றுகள் உள்ளன" என்றெல்லாம் நமக்கு நம்பிக்கையூட்டுகிறார்' என்று பேசிக்கொள்வார்கள்.

புத்தரின் மவுனமாகிய பதிலை ஏற்பவன் அதைப் புரிந்துகொள்வான். அவனும் சாந்தமாகி, அமைதியாகி விடுவான். இதை ஓர் அபூர்வமான அனுபவமாக அவன் உணர்வான்.

புத்தர் மனிதனின் ஆன்மிக வரலாற்றில் புதிய அத்தியாயத்தைச் சேர்த்தார். அதன் மையக் கருத்து என்னவெனில், 'எதைச் சொல்ல முடியாதோ அதைச் சொல்லாதே. பேசாமல் இருந்துவிடு' என்பதுதான். கேள்வி கேட்டவனே இந்த மவுன பதிலைப் புரிந்துகொள்ளட்டும். அவன் உன்னை முட்டாளென நினைத்தால் உனக்கென்ன கவலை? அது அவனது பிரச்சினை.

'ஆமாம், நான் முட்டாள்' என்று சொல்லிவிடு. 'அப்படியில்லை, நான் ஞானி' என்று வாதம் செய்யாதே. நீ அறியாமையை ஒப்புக்கொள்ளுவது உரம்போல் அமைந்து, உனக்குள் இருக்கும் ஞான விதை முளைக்க உதவும். உன் அறியாமையை ஒப்புக்கொள்வது பூமியில் மழை பெய்வதுபோல் பலன் தரும். நீ

ஞானம் பெற்றிருந்தாலும் அதை மற்றவர்கள் முன் நிரூபித்துக் காட்ட வேண்டிய அவசியம்தான் என்ன? இதற்கு என்ன அர்த்தம்? உன் அகங்காரம் பிறரால் மதிக்கப்படுவதை நீ எதிர்பார்க்கிறாய்.

உன் அகங்காரம் திருப்திகொள்ள இன்னொருவர் தேவை. நீ தனியாக இருந்தால் ஞானி என்று யாரிடம் சொல்வாய்? உன்னை ஞானி என்றழைக்க இன்னொருவர் இருப்பது அவசியம். நீ காட்டில் தனியாக வசித்தால் உன்னை ஞானி என்று கூறிக் கொள்வது பொருந்தாது. அங்குள்ள மரங்களும் விலங்குகளும் உன்னை ஞானி என்றா வணங்கும்? நீ ஞானியா, அஞ்ஞானியா என்று எடுத்துக்கூற இன்னொரு மனிதன் தேவைப்படுவான்.

ஆனால் யாராவது உன்னை அஞ்ஞானி (அறிவற்றவன்) என்றால் சட்டென அதை ஒப்புக்கொள். "நீங்கள் சொல்வது சரிதான். இதுதான் என் உண்மையான நிலை. எனக்கு எந்த விஷயமும் சரியாகத் தெரியாது," என்று கூறிவிடு.

உன்னை யாராவது ஞானி என்று பாராட்டினால், அதை எளிதில் ஒப்புக் கொள்ளாதே. "நீங்கள் என்னை மிகையாக மதிப்பிட்டுவிட்டீர்கள். நான் ஒன்றும் தெரியாதவன்," என்று கூறிப் பின்வாங்கிவிடு.

'எனக்குத் தெரியும் என்று சொல்கிறவன் உண்மையில் அறிந்திருக்கவில்லை என நீ புரிந்துகொள்.' (உபநிடதம்)

'நான் நன்கு அறிவை வளர்த்துக் கொண்டபின் நான் தெரிந்துகொண்ட ஒரே விஷயம் எனக்கு எதுவுமே தெரியாது என்பதுதான்!' (சாக்ரடீஸ்)

நீயும் சாக்ரடீஸ்போல் ஆகிவிடு. மற்றவர்களின் மதிப்பீட்டை நீ நம்பியிருக்க வேண்டியதில்லை என்னும் ரகசியத்தைத் தெரிந்துகொள். மற்றவர்கள் தரும் நற்சான்றைப் பற்றிய கவலையை நீ கைவிட்டால், நீ சமூகத்திலிருந்து விடுதலை பெற்று விட்டதாக அர்த்தமாகும். சமூகத்தை விட்டு வெளியேறி காட்டுக்குப் போய்விடுவதை நீ சமூகத்திலிருந்து விடுதலை பெற்றதாகக் கருத முடியாது.

சமூகத்தை விட்டுக் காட்டில் போய் வசிப்பவனும் 'இப்போது சமூகம் என்ன நினைத்துக்கொண்டிருக்கும்?' என்றே யோசிப்பான். காட்டு வழியாக எவராவது போனால், அவர்களிடம் 'மக்களுக்கு என்னை நினைவிருக்கிறதா? ஊர்க்காரர்கள் என்னைப் பற்றி என்னவென்று பேசிக்கொள்கிறார்கள்? நான் காட்டுக்குப் போய் ஞானம் பெற்றுவிட்டதாகப் பேச்சு எழுகிறதா? என்னிடம் எவராவது சீடராக வர விரும்புகிறானா?' என்றெல்லாம் அடுக்கடுக்காகக் கேள்விகள் கேட்டான்.

காட்டுக்குப் போய் தியானம் செய்ய முயன்றாலும் ஊர் ஞாபகமே சுற்றிச் சுற்றி வருகிறது. அவன் ஊருக்குத் திரும்புவதாக இல்லாத போதிலும் ஊர் மக்கள் தன் துறவறத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிய அவன் ஆவல் கொள்கிறான். வழிப்போக்கர்கள் அவனிடம் "ஊர்க்காரர்கள் நீ ஓடிப்போய்விட்டாய் என்று பழிக்கிறார்கள்," எனக் கூறினால், அவன் ஆத்திரமடைகிறான். அவன் பதிலுக்கு மனத்திற்குள் ஊர் மக்களைத் திட்டுகிறான். இதுவா சமூகத்தைவிட்டு விடுதலை பெறுதல் என்பது?

சமூகத்தின் அங்கீகாரம் பற்றி கவலைப்படாதவன், சமூகம் தன்னை உயர்வாக நினைக்கிறதா அல்லது தாழ்வாகவா என்று கவலைப்பட மாட்டான். யார் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிடுவான். 'என்னை மட்டம் தட்டுவதால் சிலருக்கு மகிழ்ச்சி என்றால் அதில் நான் குறுக்கிட விரும்பவில்லை' என்று பெருந்தன்மையுடன் கூறிவிடு.

இப்படியொரு பக்குவம் வளர்ந்துவிட்டால், அவன் சமூகத்திலிருந்து விடுதலை பெற்றவனாகிறான். பிறகு அவன் தியானம் செய்யக் காட்டிற்குப் போக வேண்டாம். அவன் கடைத்தெருவில் வியாபாரம் செய்துவந்தாலும் தாமரை இலைத் தண்ணீர்போலவே அவனது வாழ்க்கை அமையும்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ, ஞானம் கிடைத்தபின் புத்திக்கு [உலக அறிவுக்கு] இடமில்லை என்றீர்கள். ஞானமும் புத்தியும் எதிரெதிரான தன்மைகள்**

**என்றீர்கள். புத்தத்துவத்துக்கும் புத்திக்கும் இடையே சிறிதளவும் ஒற்றுமை கிடையாதா? ஹிந்துக்களின் காயத்திரி மந்திரம் புத்தியை அருளுமாறுதானே வரம் வேண்டுகிறது. இது முரண்பாடில்லையா?**

**பு**த்தி சூன்ய நிலையை அடையும்போது, வெறுமையாகி விடும்போது புத்தத்துவம் (புத்தநிலைமை) உருவாகிறது. ஆகவே அறிவும் புத்தத்துவமும் எதிரெதிரானவை அல்ல. புத்தி எனும் ஏணியில் நீ கால் வைத்ததும், புத்தத்துவத்துக்கும் உன் முயற்சி தொடங்கி விட்டதெனலாம். ஆகவே அறிவு ஏணி உபயோக மானது. ஆனால் நீ ஏணியில் ஏறி, ஏதாவது ஒரு படியைப் பிடித்துக்கொண்டு, ஞானம் பெற்றதாக அறிவித்தால் பிரச்சினை தோன்றுகிறது. ஏணிப் படிகள் முடிந்து மேலே ஏறிய பிறகுதான் அந்த அறிவிப்பு செல்லுபடியாகும்.

மொத்தமே இரண்டு படிகள் என வைத்துக்கொள்வோம். நீ முதற்படியில் காலை வைத்தபின் இனி மேலே போக வேண்டியதில்லை என்று கூறினால் இரண்டாம் படியுடன் விரோதம் எனக் கருதலாம். ஆனால் நீ இரண்டாம் படியிலும் ஏறி மேலே செல்ல வேண்டும் என்பதற்காகத்தானே முதற்படி அமைக்கப்பட்டது. முதல் படியிலேயே நின்றுவிட்டால், உனக்கு புத்தியின்மேல் பற்று தோன்றிவிட்டதாக அர்த்தம். படிகளிடையே விரோதம் கிடையாது. எப்படியிலாவது பற்று உண்டானால் பிறகு மேலே போக முடியாது.

அறிவு சாந்தமாகும்போது, சூன்யமாகும்போது, அதன் எல்லைக்கோடு முடிவடையும் இடத்தில் புத்தத் தன்மை ஆரம்பமாகிறது. அறிவிற்கு எல்லை உண்டு. புத்தத்துவம் விரிந்து பரந்தது. சன்னலருகே நின்று ஆகர்யத்தைப் பார்க்கிறாய். அதன் சட்டங்களின் எல்லைகளுக்கு உட்பட்டு ஆகாயம் தெரியும் அளவுதான் நீ பார்க்க முடியும். வீட்டிற்கு வெளியே வந்து நீ ஆகாயத்தைப் பார் என்று அந்த சன்னல் காட்டும் காட்சி உனக்குத் தூண்டுதல் தருகிறது. அறிவு சன்னல் அளவுதான். அதன் மூலம் தெரியும் ஆகாயம் அழகானதுதான். ஆனால் திறந்த வெளியில் நின்று நீ தலையை உயர்த்தினால், ஆகாயம் ஓர் அதிசய உலகமாகத் தெரியும்.

நீ என் சொற்பொழிவைக் கேட்கையில் அறிவு சிறிதளவு பார்வை சன்னலைத் திறக்கிறது. அதனுடன் நின்றுவிடாதே. என் சுவையான சொற்களைக் கேட்டதால் அறிவு சன்னல் திறக்கிறது எனில், நான் சொல்வதை அறிந்தும் கொண்டால், நீ அதிகச் சுவையை உணர்ந்து ரசிப்பாய். ஞானம் பெற்றவரின் அருகில் உட்கார்ந்தாலே பரவச உணர்வு வருடுகிறது என்றால், உன் அகக் கதவு திறந்து ஞானம் உனக்குள்ளேயே பிரவேசித்துவிட்டால் அப்போது நீ. அடையும் ஆனந்த போதையை வர்ணிக்க முடியுமா?

**மு**ல்லா நஸ்ருத்தீன் மது விற்கும் கடையில் இரு நண்பர்களுடன் சென்று குடிப்பார். அவர்கள் தெளிவாக இருந்த ஒரு சமயத்தில் 'எதற்காக இன்னொருவர் கடைக்குச் சென்று குடிக்க வேண்டும்? கடை வேலை நேரத்தில்தான் ஏன் செல்ல வேண்டும்? கடைக்காரர் லாபம் சம்பாதிப்பதற்காக நாம் ஏன் அதிக விலை கொடுத்து மது வாங்கிக் குடிக்க வேண்டும்?' என்று யோசித்தார்கள். அதன் விளைவாக, அவர்கள் மூவருமாக அந்தக் கடையையே மொத்தமாக விலைக்கு வாங்கிவிட்டனர்!

கடையை வாங்கிய பிறகு அவர்கள் அங்கே தங்கள் மூவருக்கும் தேவையானவற்றை மட்டும் வைத்துக்கொண்டு மீதி மேஜை, நாற்காலி, கோப்பைகள், குடுவைகள் போன்றவற்றை அகற்றிவிட்டனர். 'இந்த மதுக்கடை மூடப்பட்டுவிட்டது' என்று பெரிதாக ஒரு பலகையில் எழுதி வெளியே வைத்துவிட்டனர். அக்கடைக்கு வழக்கமாக வரும் 'குடி' மகன்கள் அறிவிப்பைப் பார்த்துத் திகைத்தனர். அவர்கள் கதவைத் தட்டியதும் முல்லா வெளிப்பட்டார். அவர்கள் பணத்தை நீட்டி மது கேட்டனர்.

முல்லா மிகவும் வெகுண்டார். "நீங்க என்னதான் நினைச்சுக்கிட்டிருக்கீங்க. இந்தக் கடையை நாங்க மூணு பேரும் எங்க உபயோகத்துக்காக மட்டுமே வாங்கியிருக்கோம். இனிமே நாங்க மூணு பேர்தான் இங்கே குடிச்சிட்டிருப்போம். இனிமே சில்லறை விற்பனை கிடையாது. உங்களுக்கு மது வேணும்னா வேற கடைக்குப் போங்க," என்று அவர்களை விரட்டிவிட்டார்.

உனக்குள்ளேயே ஆன்மிக மதுக்கடை உள்ளது. அக்கடை மொத்தத்திற்கும் நீ எஜமானன் ஆகிவிடு. உனக்குள் இப்பொழுது

ஒரு கிரணம்தான் இறங்கியுள்ளது. முழு ஒளியையும் இறங்கவிட்டு அதற்கு உரிமையாளன் ஆகு. உனது வீணையின் ஒரு தந்தியின் ஒலி எனது தந்தியுடன் இசைந்து ஒலித்தாலே மிகவும் சந்தோஷப்படுகிறாய். கடவுள் என்னும் மகாவீணையின் தந்தி ஒலிகளோடு உனது வீணையும் இசைந்தால் எந்த அளவிற்கு பரவசம் ஏற்படும் என்று வர்ணிக்க முடியாது.

புத்தியின் மூலம் ஞானத்தின் அனுபவம் சிறிதளவு கிடைக் கிறது. அந்தக் கட்டத்துடன் நின்றுவிடாதே. ஞானத்தை அடைந்து விட்டதாக நினைக்காதே. பயணத்தின்போது மைல்கற்களில் வரப்போகின்ற ஊரின் பெயர் (உதாரணமாக, தில்லி என்று) எழுதியிருக்கும். இதுதான் அந்த ஊர் உள்ள இடம் என்று மைல்கல்லைப் பிடித்துக்கொண்டு நாம் உட்கார மாட்டோம் அல்லவா? மைல் கற்கள் ஒவ்வொன்றையும் நாம் கடந்து ஊரை அடைவதுபோல், புத்தி ஏணியின் ஒவ்வொரு படியிலுமாக ஏறி மேலே செல்ல வேண்டும். புத்தியைக் கடப்பதற்காக நாம் புத்தியைப் பயன்படுத்த வேண்டும்!

**கா**யத்திரி மந்திரம் மூலம் புத்தி வரம் கேட்பது கூறப்பட்டது.

சமஸ்கிருதம், அரபி முதலிய பழைய மொழிகள் காவியத் திற்கேற்ற மொழிகள். அவற்றில் ஓர் எழுத்துக்கே பல அர்த்தம் உண்டு. அவை கணிதத்தில் வருகின்ற மொழி நடையிலிருந்து வேறுபட்டவை. கணக்கியலில் ஒரு சொல்லுக்கு ஓர் அர்த்தம்தான் உண்டு. எக்காலத்திலும் அந்த அர்த்தம் மாறுவதில்லை.

சமஸ்கிருதத்தில் 'தீ' (dhdhee) என்றால் ஓர் அர்த்தம் புத்தி — முதல் படி. இந்த 'தீ'யிலிருந்துதான் 'தியானம்' பிறக்கிறது. இது இரண்டாம் அர்த்தம் — இரண்டாம் படி. இதுபோல் காயத்ரி மந்திரமும் அர்த்த வேறுபாடுகளுக்கு இடம் தருகிறது.

காயத்திரி மந்திரம் பின்வருமாறு:

ஓம் பூ: புவ: ஸ்வ: தத்ஸவிதுர் வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி
திய: யோ ந: ப்ரசோதயரத்

ஓம் - பரமாத்மா அனைத்தையும் ரட்சிப்பவர்
பூ: - உயிரைவிட பிரியமானவர்
புவ: - துன்பங்களைப் போக்குபவர்
ஸ்வ: - சுகமே வடிவானவர்
தத்ஸவிதுர் - உலகைப் படைத்து, நடத்தி இயக்குபவர்
தேவஸ் ய - இத்தகைய தெய்விக குணமுடைய கடவுளின்
வரேண்யம் பர்கோ - பேரொளியை (நேசிக்கின்ற) நாம் மிகவும் வரிக்கின்ற
தீமஹி - நாம் தியானம் செய்வோம், வாரீர்!

தீமஹி என்பதற்கு இரு பொருள். 'அதைப் பற்றி சிந்திப் போம்' என்பது குறுகலான அர்த்தம். அதாவது, சன்னல் வழித் தோற்றம். தீமஹி என்பதன் வேறோர் அர்த்தம் 'அவரை தியானிப்போமாக' என்னும் விசாலமான அர்த்தம். அதாவது, திறந்த வெளியின் விரிந்த ஆகாயம்.

நீ முதல் அர்த்தத்திலிருந்து ஆரம்பி. இரண்டாம் அர்த்தத் துக்குப் போ. 'தீமஹி' என்பதில் இரண்டிற்கும் வாய்ப்புள்ளது. பண்டிதர்கள் முதல் அர்த்தம் மட்டுமே எடுத்துக்கொள்வார்கள். தாங்கள் பெற்ற அரைகுறை அறிவு ஞானமென நினைப்பார்கள். சன்னல் வழியே தெரியும் ஆகாயமே முழு ஆகாயம் என நம்பச் சொல்வார்கள். ஞானி இரண்டாவது அர்த்தத்தை (தியானிப்பதை) கூறுவான். தியானம் மூலம் கடவுளுடன் ஒன்றிவிடச் சொல்வான். நாம் தியானம் செய்ய நமக்குத் தீவிரமமான தூண்டுதல் தருமாறு அவரிடம் கேட்டுக்கொள்வோம்.

சொற்கள் சமமானவையாயினும் நீ கேட்கப்போகும் வரம் உன்னைப் பொறுத்தது. நீ கடவுளிடம் (காயத்திரி தேவதை மூலம்) 'என் அறிவு மேலும் சுடர் விடட்டும்' என்றும் வரம் கேட்கலாம். அல்லது 'நான் தியானம் செய்வதற்காக' என் ஆற்றலை வளர்த்து விடு' என்றும் நீ வரம் வேண்டலாம். அறிவு வளர்ச்சி குறுகலானது. தியான ஆற்றல் மகத்தானது.,இந்த இரண்டாவதையே தேர்ந்தெடு.

காயத்திரி மந்திரத்தின் சொற்களுக்கு மேலும் சில வகையான ஆழமான அர்த்தங்கள் உண்டு. நான் கூறியது சொற்களுக்கான நேரடி (literal) அர்த்தமாகும். உணர்வுகளுக்கு ஏற்றவாறு வேறு வகையான அர்த்தமும் கூற முடியும். மூளை

மூலம் சிந்திப்பவனுக்கு மேற்படி விளக்கம் சொன்னேன். இதயத்தின் (உணர்வுகளின்) மூலம் ஆராய்பவனுக்கு வேறு அர்த்தம் சொல்கிறேன்.

நான் சொன்ன விளக்கம் ஞானப் பாதையில் செல்பவனுக்கானது. இரண்டாவது அர்த்தம் அன்பு வழியில் செல்பவனுக்கு. இரண்டு விளக்கங்களுமே சரிதான். சிந்திப்பவனுக்கேற்றபடி சொற்களின் அர்த்தம் மாறுவது சமஸ்கிருதத்தின் சிறப்பு. தண்ணீரைக் கண்ணாடிக் குடுவையில் நிரப்பினால், ஓர் உருவமும், லோட்டாவில் நிரப்பினால் வேறு உருவமும் பெறுகிறது. தரையில் கொட்டிவிட்டால் அதுவும் தரைபோல் பரவுகிறது. தண்ணீருக்குத் திட்டவட்டமான உருவம் கிடையாது. அடுத்து, உணர்ச்சி வழியான அர்த்தத்தைச் சொல்கிறேன். இது பக்தனின் அர்த்தம்:

ஓம் - அன்னையின் மடியில் குழந்தைபோல் கடவுளின் மடியில் நாம்
பூ: - அவரது வாத்ஸல்யம் (நேரம்) எனக்குக் கிடைத்துள்ளது.
புவ: - எனவே நான் ஆபத்தின்றி உள்ளேன்
ஸ்வ: - ஆனந்தத்தில் தோய்ந்துள்ளேன்.
தத்ஸவிதுர் தேவஸ்ய - அவரது அழகால் பிரமித்துப்போயுள்ளேன்
தீமஹி - இயற்கையின் வடிவங்களை அவரது விஸ்தரிப்பெனக் கருதி தியானத்தில் ஆழ்வோம்
யோ ந: திய: ப்ரசோதயாத் - என்னைக் கடவுளிடம் ஒப்படைக்கிறேன். அவர் விருப்பப்படி நடக்கட்டும்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! சொற்பொழிவுகளின் கடைசியில் தவறாமல் ஹரி ஓம் தத்ஸத் என்று சொல்கிறீர்களே, இதன் பொருள் என்ன?**

**எ**ல்லாவற்றையும் நானே சொல்லிவிட வேண்டுமா? (சிரிக்கிறார்) எல்லாவற்றையும் நீ புரிந்துகொண்டாக வேண்டுமா? கொஞ்சம் அப்படியே விட்டுவையேன். கொஞ்சம் புரியாமல்தான் போகட்டுமே!

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

யஸ்ய போதோதயே தாவத்ஸ்வப்னவத் பவதி ப்ரம: |
தஸ்மை ஸுகைக ரூபாய நம: ஸாந்தாய தேஜஸே || 177

அர்ஜயித்வா அகிலானர்த்தான் போகாநாப்நோதி புஷ்கலான்|
நஹி ஸர்வபரித்யாக மந்தரேண ஸுகீ பவேத் || 178

கர்த்தவ்ய துக்க மார்த்தண்ட ஜ்வாலா தக்தாந்தராத்மன:|
குத: ப்ரஷமபீயூஷதாரா ஸாரம்ருதே ஸுகம் || 179

பவோ அயம் பாவனாமாத்ரோ ந கிஞ்சித் பரமார்த்தத:|
நாத்ஸ்யபாவ: ஸ்வபாவானாம் பாவா பார்வா வபா விநாம்|| 180

ந தூரம் ந ச ஸங்கோசால்லப்தமேவாத்மன: பதம்|
நிர்விகல்பம் நிராயாஸம் நிர்விகாரம் நிரஞ்சனம்|| 181

வ்யாமோஹ மாத்ரவிரதௌ ஸ்வரூபா தானமாத்ரத:|
வீதஸோகா விராஜந்தே நிராவரண த்ருஷ்டய:|| 182

ஸமஸ்தம் கல்பனா மாத்ரம் ஆத்மா முக்த: ஸநாதந:|
இதி விக்ஞாய தீரோ ஹி கிமப்யஸ்யதி பாலவத்|| 183

'எவரைப் பற்றிய ஞானம் மனத்தில் உதிப்பதால் எல்லா பிரமைகளும் கனவைப்போல் மறைந்துவிடுகின்றனவோ, அந்த ஆனந்த ரூபமான, சாந்தமான, ஒளிமயமான ஒன்றேயானதை வணங்குகிறேன்.' **(சுலோகம் 177)**

பரமாத்மா அல்லது இருத்தல் தத்துவம் அல்லது சத்தியத்தை நாம் மூன்று வடிவங்களில் பார்க்கலாம்.

**பக்தனின் வழி:** அவன் உரிமையுடன் கடவுளை 'நீ' என்று அழைக்கிறான். தன்னை அழித்துக்கொள்கிறான். 'நான்' என்னும் உணர்வை வீழ்த்துகிறான். காதலன் காதலியை, தாய்

குழந்தையைக் கூப்பிடுவதுபோல் பாசத்துடன் கடவுளைக் கூப்பிடுகிறான். கடவுளும் தோழன்போல் அவனை அணுகுகிறார்.

**ஞானியின் வழி:** அஹம் ப்ரஹ்மாஸ்மி (நான் பிரம்மம்) என்கிறான். அவ்விதமே கடவுள் அவனுக்குள் தன்னுணர்வாக பிரவேசிக்கிறார்.

மூன்றாம் வழியும் உள்ளது. அது பக்தனுடையதுமன்று, ஞானியினுடையதுமன்று. இப்பக்கமும் அப்பக்கமும் இன்றி சமநிலையில் உள்ளது. அவ்வழியில் கடவுள் 'அவர்' எனப்படு கிறார். அதாவது, 'நான்-நீ'க்கு இடமில்லை. இடம் கொடுத்தால் அவை ஒன்றுடனொன்று மோதும். 'நான்' என்பதை எவ்வளவு தான் புறக்கணித்தாலும், 'நீ' என்று கடவுளை அழைக்க ஒரு 'நான்' தேவைப்படுகிறது. 'நான்' என்பது இல்லையேல் 'நீ' என் பது அர்த்தமிழக்கிறது. 'நான் இல்லை' என்று சொல்லும்போதும் 'நான்' என்பதைத் தவிர்க்க முடியவில்லை. 'நான்-நீ' ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. 'நான்' என்பதையே சொல்லாமல், 'நீ-நீ' என்றே சொன்னாலும் அங்கேயும் 'நான்' மறைமுகமாகக் குறிப்பிடப்படுகிறது.

ஜலாலுத்தீன் ரூமியின் கவிதை ஒன்றில், காதலன், காதலி வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டுகிறான். அவள் யாரென்று கேட்க, "நான்தான், உன் காதலன்," என்கிறான். கதவு திறக்க வில்லை! காதலன் மீண்டும் கதவைத் தட்டுகிறான். "என் குரலை அடையாளம் காணவில்லையா? நான்தான், உன் காதலன் வந்திருக்கிறேன்," என்று மீண்டும் கூறுகிறான்.

"ஆஹா, உன் குரலைத் தெரிந்துகொண்டேன். ஆனால் காதல் எனும் இந்த வீடு சிறியது. இதில் இரண்டு பேர் வசிக்க முடியாது," என்று காதலி பதிலளித்தாள். காதலன் போய்விடு கிறான். நீண்ட காலம் தியானத்தில் ஈடுபட்டு யோசித்தபின் அவனுக்கு உண்மை புரிந்தது.

இப்போது அவன் மறுபடியும் காதலியின் வீட்டுக் கதவைத் தட்டினான். அவள் யாரென்று கேட்க, "வாசலில் நிற்பது நீதான், வேறு யாருமில்லை," என்றான் கதவு சட்டெனத் திறந்தது!

ஆனால் காதலி சட்டென்று கதவைத் திறந்திருக்கக் கூடாது என்றே நான் சொல்வேன். உபநிடதங்களின் கண்ணோட்டமும் என் கருத்துடன் ஒத்துப்போகிறது. கவிதை இன்னும் நீண்டிருக்க வேண்டும். ஏனெனில் காதலன் 'நான்' என்னும் சொல்லை முற்றிலுமாகத் தவிர்த்துவிட்ட போதிலும், அவன் 'நீ' என்று கூறியதால், 'நான்' என்பது இங்கே மறைந்து உள்ளதென்பது பெறப்படுகிறது. 'நீ' என்று சொன்னவன் யார்? இது யார் குரல்? 'நான்' என்பவன் குரல் கொடுக்காமல் 'நீ' என்னும் ஒலி கிளம்பியிருக்காதே!

நான் கவிதையைப் பின்வருமாறு நீட்டித்திருப்பேன். காதலி இரண்டாம் முறையும் காதலனை உள்ளேவிடவில்லை! 'நான்' என்று வெளிப்படையாகக் கூறாவிடினும், என்னையும் உன்போல் கருதி 'நீ' என்று சொன்னாய். இதனால் (இலக்கணப்படி) 'நான்' என்பது மறைமுகமாக உள்ளே வந்துவிட்டது! — இவ்வாறு கூறி, காதலி இரட்டைத் தாழ்ப்பாள் போட்டிருப்பாள்!

காதலன் திரும்பிப்போயிருப்பான். பிறகு காதலியைத் தேடி வந்திருக்கமாட்டான். திரும்பி வந்து கதவைத் தட்டினால், அவனுடன் 'நான்,' 'நீ' இரண்டும் சேர்ந்து வருமே! இப்பொழுது காதலிதான் அவனைத் தேடி போகிறாள்.

அதாவது — நீ கடவுளைத் தேடி போக வேண்டியதில்லை. 'நான்-நீ' ஆகியவை நீங்கிவிட்டால் கடவுளே வருவார். வரத்தான் வேண்டும். நீ நிபந்தனையை நிறைவேற்றி விட்டாய். தேட வேண்டுமென நினைத்தாலும் அதற்காக நீ எங்கே போவாய்? யாரைத் தேடுவாய்? தேடப்படுபவன் என ஒருவன் இருப்பின் தேடுபவனாகிய நீயுமல்லவா இருப்பாய். 'நான்' தேடுகிறேன் என்னும் உணர்வு 'நீ' இன்னமும் மிஞ்சியிருப்பதைக் காட்டுகிறது.

எப்பொழுதாவது கடவுள் உனக்குக் கிடைத்துவிட்டாலும் அது உன் அளவாகவே இருக்கும். ஹிந்து பக்தன் கிருஷ்ண ரையும், கிறிஸ்தவர் இயேசுநாதரையும் தரிசிப்பர். இது கற்பனை பின்னும் மாயவலை. உணர்ச்சிவசப்படலின் சிகர நிலை இது. இனிய உணர்வாயினும் இது கற்பனையின் நீட்டிப்புதான். தன் வசியம் (auto-hypnosis) எனலாம். அதற்கு மேல் சொல்ல

எதுவுமில்லை. தரிசன உணர்வு அழகானது. சுபமானது. ஆனால் சத்தியம் இல்லை.

சத்தியம் அழகானதோ, குரூபமானதோ அன்று; அது இனியதோ, கசப்பானதோ அன்று; அது மலரோ, முள்ளோ அன்று. சத்தியம் இவ்விதமான எல்லா இரட்டைகளுக்கும் அப்பாற்பட்டது. சத்தியம் 'நான்' என்பதோ, 'நீ' என்பதோ அன்று; 'அது' அல்லது 'அவர்' ஆகும். ஆகவே உபநிஷதம் 'தத்வமஸி' என்கிறது. இதன் பொருள் நீ என்பது அவர் (அது).

மனத்தில் ஞானம் உதிப்பது என்பது ஆத்ம உணர்வின் உதயமாகும். ஆத்மா என்பது 'நான்-நீ'யைக் கடந்தது. சூர்யோதயத்தின்போது இதுவரை முத்துகள்போல் ஒளிவீசிய பனித்துளிகள் மறைந்துபோகின்றன. அதுபோலவே ஆத்மா என்னும் மகாசூரியனின் தோற்றத்தால், இதுவரை மனத்தில் மண்டிக்கிடந்த தீய குணங்களும் பலவகை ஆசைகளும் காணாமல் போய்விடும்.

சாதாரணமாக மனிதன் தான் 'மோகம், சினம், பேராசை முதலியவற்றை அழித்துவிடுவேன். அப்போது கடவுளின் தரிசனம் கிடைக்கும்' என்கிறான். நான் சொல்வது இதற்கு எதிரானது. என் கருத்துப்படி, ஆத்ம ஞானம் பெற்றால் இவை எல்லாம் தாமாகவே நீங்கிவிடும். ஒவ்வொரு தீய உணர்வையும் தனித்தனியாக வெட்டிப்போட வேண்டியதில்லை. சூரியன் உதித்ததும் இருள் உடனே சுயமாகவே நீங்குவதுபோல் தீய இயல்புகளும் ஆத்மோதயத்தின்போது அழிந்து போகின்றன. எனவே ஆத்மாவை உணர்வதில்தான் நம் கவனம் குவிய வேண்டுமே தவிர, தீய உணர்வுகளைப் போக்குவதில் நம் கவனம் சிதறக்கூடாது.

சிலர் என்னைச் சந்திக்கையில் எனது சந்நியாச வழிமுறையைக் குறை கூறுகின்றனர். "நீங்கள் தியானம் செய்ய மட்டுமே சொல்கிறீர்கள். காமம், குரோதம், மோகம், லோப குணம் ஆகியவற்றைக் கைவிடுமாறு நீங்கள் சீடர்களுக்குக் கட்டளையிடுவதில்லை. குடும்பத்திலேயே அவர்கள் நீடிப்பதற்கும் தடை சொல்வதில்லை. அவர்கள் மாயையிலேயே உழலட்டும் என நீங்கள் நினைப்பது போலுள்ளது," என்கிறார்கள்.

நான் அவர்களுக்குச் சொல்லும் பதில், "முதலில் ஆத்ம உணர்வு உதிக்கட்டும். அதற்கு அமைதியான மனம், சூன்யமான மனம், எண்ண அலைகளற்ற மனம் தேவை. அப்பொழுது ஆத்மா விரிவதற்கு காலியிடம் கிடைக்கிறது. இதற்கு மேல் மனிதனால் எந்த தயாரிப்பும் செய்ய முடியாது," என்பதாகும்.

கடவுளை அடைதல் மனிதனின் வசத்தில் இல்லை. மனிதன் தனது ஆன்ம தாகத்தை மட்டுமே வெளிப்படுத்த முடியும். சப்தமிட்டு அவரை அழைக்க முடியும். ஆனால் அவரைத் தன்னிடம் பிடித்திழுத்து வருவது மனிதனால் முடியாத செயல். மனிதன் இழுத்து அவர் வந்துவிட்டால், பிறகு அவர் என்ன கடவுள்? அவரை ஒரு வாளியில் தண்ணீரைக் கொண்டுவருவது போலவா பிடித்துவர முடியும்?

அது முடியாது. நீ உரக்கக் கூப்பிடலாம். அன்பை அழுகையில் வெளியிடலாம். அவரைப் போற்றிப் பாடலாம். மகிழ்ச்சியால் ஆடலாம். மனத்தை வெற்றிடமாக ஆக்கிக் கொண்டால் போதும். 'நான் வரவேற்க தயாராக உள்ளேன். நீ கிளம்பிவா,' என்று தெரிவித்தால் போதும். நீ கதவைத் திறந்தால் போதும். சூரியனின் கிரணங்களை நீ இழுத்துவர முடியாது. கதவைத் திறந்து வைத்திரு.

உண்மையிலேயே தேடுபவன் குறிப்பிட்ட முயற்சி எதுவும் மேற்கொள்வதில்லை. அவன் தன்னை தியானத்திற்குள் ஆழமாக இறக்குவது மட்டும் செய்கிறான். தியானம் என்றால் மனத்தை வெற்றிடமாக்கிக் கொள்வது என்று பொருள். அவன் இதயக் கதவை தயாராகத் திறந்துவைக்கிறான். கடவுள் தடையின்றி உள்ளே பிரவேசித்துவிடலாம். அவரும் உன்னைத் தேடி வந்து கொண்டிருக்கிறார். ஆகவே ஆன்மிகம் என்பது ஒரு தரப்புத் தேடுதல் இல்லை. கடவுள் எந்த சமயம் எவ்வுருவில் வருவார் என்று தெரியாது. அவர் வருவாரா என்ற சந்தேகமும் கூடாது. சந்தேகம் எழுந்தால் அவர் வருவதும் போவதும் தெரியாமல் போய்விடும்.

**இ**ரவீந்திரநாதரின் கீதம் ஒன்றின் சாராம்சம் பின்வருமாறு.

.ஒரு மாபெரும் கோயிலின் தலைமை பூசாரி ஒருநாள் கண்ட கனவில் கடவுள், 'நாளை நான் இந்தக் கோயிலுக்கு வரவுள்

ளேன்' என்று அறிவிக்கிறார். பூசாரியால் கனவில் கேட்டதை நம்ப முடியவில்லை. பெரும்பான்மை பூசாரிகள் கோயில் பணியை வருமானம் தரும் தொழிலாகத்தான் பார்க்கிறார்கள். ஆன்மிகத் தின் உந்துதலால் அவர்கள் அர்ச்சகர்கள் ஆனவர்களில்லை.

பூசாரி கடவுளைக் கற்சிலையாகத்தான் பார்க்கிறார். ஏனெனில் சிலைக்கான கல் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து அது முழு உருவமும் பெறும்வரை பூசாரி அப்பணியில் முன்னேற்றத்தைக் கவனித்திருக்கிறார். ஆகவே அவர் மனத்தில் அச்சிலையை நோக்கி பக்தி உணர்வு எழுவது சிரமம்.

மேலும், இரவில் சிலையின் மீது எலிகள் ஏறி இறங்குவது பூசாரிக்கு தெரியும். சிலை அவற்றை விரட்ட முடிவதில்லை. ஒவ்வொரு பூஜை சமயமும் விதம் விதமான தின்பண்டங்கள் சிலையின் முன் சமர்ப்பிக்கப்படுகின்றன. அவை கடைசியில் பூசாரியின் வீட்டிற்குப் போய்ச்சேருகின்றன. கற்பூரத் தட்டில் வைக்கப்படும் சில்லறையையும் அவர்தான் எடுத்துக்கொள்கிறார். கடவுளின் சந்நிதியில் என்ன செய்தாலும் சிலை தன்னைத் தடுக்காது என்று பூசாரிக்குத் தெரியும். ஆகவே ஒவ்வொரு பூசாரியிடமும் அவரை அறியாமலே நாத்திக உணர்வு சிறிதாவது குடிகொண்டிருக்கும்.

எனவே மேலே கூறிய தலைமை பூசாரிக்குக் கனவில் கேட்ட அறிவிப்பை நம்புவதா என்று புரியவில்லை. அதே சமயம் அவருக்கு பயமும் உண்டானது. உண்மையாகவே கடவுள் வந்துவிட்டால் என்ன செய்வது என்று பதற்றப்பட்டார். பல நூற்றாண்டுகள் பழைமையான அக்கோயிலின் வரலாற்றில் இப்படி ஓர் அறிவிப்புச் செய்து கடவுள் வந்ததில்லை. தன்கீழ் பணி புரியும் மற்ற பூசாரிகளிடம் சொன்னால் சிரிப்பார்கள் என நினைத்தார். சொல்லாவிட்டால், கடவுள் வந்தால், மற்றவர்கள் தயாராக இருக்க வேண்டுமே என்றும் கவலைப்பட்டார்.

பிறகு சமாளித்துக்கொண்டு அவர் மற்ற பூசாரிகளிடம் கனவைப் பற்றி சொன்னார். ஆம், அவர்கள் முதலில் சிரித்தனர். பிறகு சுதாரித்துக் கொண்டனர். அவர்களையும் கவலை சூழ்ந்தது. அவர்கள் தயார் நிலையில் இருக்க முடிவெடுத்தனர். அப்படிக்

கடவுள் வராவிட்டாலும் கோயிலை ஒருமுறை தூய்மைப்படுத்தி அலங்கரித்ததாக ஆகுமே என நினைத்தனர். தினமும் படைக்கும் தின்பண்டங்களையும் பணத்தையும் கடவுள் எடுத்துச் சென்று விடுவதில்லை. ஆகவே கடவுள் வருவதால் பிரச்சினை ஒன்றுமில்லை என்று உணர்ந்தனர்.

அடுத்த நாள் அவர்கள் சுறுசுறுப்பாக இயங்கினர். உத்சவ தினம்போலக் கோயிலை சுத்தப்படுத்தினர். தோரணங்களாலும் பூக்களாலும் அலங்கரித்தனர். ஆனால் மறுநாள் இரவு பூஜை முடியும்வரை கடவுள் வந்ததாகத் தெரியவில்லை. நள்ளிரவில் அவர் வந்தால் என்ன செய்வது என்ற அச்சத்தால் அவர்கள் வீட்டிற்குப் போகாமல் கோயிலிலேயே தங்கிவிட்டனர். பிரசாதங் களையே உணவாகச் சாப்பிட்டுவிட்டு, ஆங்காங்கே படுத்துத் தூங்க ஆரம்பித்துவிட்டனர். கோயில் கதவுகள் மூடப்பட்டன.

இரவு சில மணி நேரம் கழிந்ததும் கடவுள் வந்தார்! அவர் வந்த தேரின் ஒலி கேட்டு ஒரு பூசாரி கண்விழித்தார். மற்றவர் களை எழுப்பி தேர்ச் சக்கரங்களின் ஓசை கேட்டதால் கடவுள் கோயில் வாசலுக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது என்றார். மற்ற பூசாரிகள் நம்பவில்லை. ‘தலைமை பூசாரி கனவு கண்டது போதாதா? உனக்கும் ஒரு கனவு வந்துவிட்டதா?’ என்று அவரை அவர்கள் கிண்டல் செய்தனர். சிலர், ‘இடி இடித்திருக்கும். கடவுள் வருவார் என்னும் பிரமையால் இவருக்கு இடி சத்தம் தேர் வருவதுபோல் ஒலித்திருக்கும்’ என்றனர்.

தேர் கோயிலின் வாசலுக்கு வந்து நின்றது. கடவுள் இறங்கினார் படிகளில் ஏறிக் கதவைத் தட்டினார். ஒரு பூசாரி தூக்கம் கலைந்து மற்றவர்களை எழுப்பினார். "யாரோ கோயில் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கடவுள் வாசலில் நிற்கிறார் போலுள்ளது," என்றார். மற்றவர்கள் நகைத்தனர். “நீயும் கனவு காண ஆரம்பித்துவிட்டாயா? கடவுள் ஏன் கதவைத் தட்ட வேண்டும்? எத்தனை கதவுகள் மூடியிருந்தாலும் அவற்றைத் திறக்காமல் ஊடுருவி அப்படியே வரக்கூடிய சர்வ வல்லமை படைத்தவராயிற்றே கடவுள். காற்று வேகமாக அடித்துக் கதவு அசைந்திருக்கும். கடவுள் வருகையை எதிர்பார்ப்பதால் கதவு

அசையும் ஒலியை கதவைத் தட்டிய ஒலியாக நினைத்துவிட்டாய். போதும் இந்த எதிர்பார்ப்பு. எல்லோரும் தூங்குவோம்.'' என்று கூறியபடி நன்கு உறங்கிவிட்டனர்.

மறுநாள் காலை. பூசாரிகள் வீட்டிற்குச் செல்ல கோயில் கதவைத் திறந்தனர். வாசல் புழுதியில் தேர்ச் சக்கரங்களின் தடங்கள் பதிந்திருந்தன. படிக்கட்டுகளில் யாரோ ஏறி இறங்கியதுபோல் விரல் அடையாளங்கள் தெரிந்தன. கதவில் யாரோ அதைத் தட்டியதற்கு அடையாளமாகக் கைவிரல்களின் முத்திரை படிந்திருந்தது. எவருக்கும் என்றைக்கும் கிடைக்க முடியாத அரிய வாய்ப்பை இழந்தமைக்காக பூசாரிகள் அழுதனர்.

இரவீந்திரநாதர் இக்கவிதைக்கு 'நழுவிய வாய்ப்பு!' என்று பொருத்தமான தலைப்புச் சூட்டியிருந்தார். இந்தக் கவிதை ஒரு கதைபோல் தோன்றலாம். ஆனால் இது ஆழமான அர்த்தம் உடையது. மறைமுகமாக இது தியானத்தை வலியுறுத்துகிறது. பூசாரிகள் கடவுளை தினமும் பல மணி நேரம் அருச்சித்தாலும் முழுமையான ஆத்திகர்கள் அல்லர். கடவுள் வருவார் என்று அவர்களே நம்புவதில்லை. அந்த அளவிற்கு அவர்களின் மனம் அன்றாட வாழ்க்கையின் சிந்தனைகளால் நிரம்பிக் கிடக்கிறது. மனம் வெற்றிடமாக வேண்டும். உள்ளே படர்ந்திருக்கும் எண்ணங்களை விரட்டிவிட்டுக் கதவைத் திறந்து வை. வாசலில் விழிப்புடன் அமர்ந்திரு. பாதையில் பார்வையைச் செலுத்து. வருகையை எதிர்பார்த்திரு. கண்களிலும் உலகப் பொருட்கள் தென்பட விடாதே. இதற்கு தியானம்தான் ஒரே வழி.

மதத் தலைவர்களும் சாஸ்திர வல்லுநர்களும் உலகை மாயை என்று சொல்வதை நீ அடிக்கடி கேட்டிருப்பாய். உலகை அவ்வளவு சட்டென்று சுலபமாக மாயை என்று கூறிவிட முடியாது. அப்படிச் சொல்வதால் அது மாயை ஆகிவிடாது. இறை அனுபவம் உனக்கு உண்மையில் ஏற்படும்வரை உலகத்தை மாயை என்று ஒதுக்கித் தள்ளாதே. மற்றவர்கள் சொல்வதை நீயும் கிளிப்பிள்ளைபோல் சொல்லாதிரு. அது உனது அனுபவமன்று.

மாயை என்பது தத்துவவகைக் கோட்பாடு இல்லை. அது ஒளி என்றால் என்ன என்பது தெரியாமல் இருட்டிலேயே நீடிப்பது

போன்ற அனுபவம். இருட்டு காரணமாக உனக்குத் தடுமாற்றம் ஏற்படுகிறது. கீழே விழுந்து உனக்குச் சேதம் உண்டாகிறது. இந்த இருளை, மாயையை, உண்மையென நம்புகிறாய். ஒளி என்பது வந்ததும் உன் தடுமாற்றம் நீங்கிவிடும். நீ எதன் மீதும் இடித்துக்கொள்ளாமல் ஆன்மிகப் பாதையில் முன்னேறுவாய். அந்த ஒளி தோன்றிய பிறகுதான் உண்மையில் இதுவரை நீ வாழ்ந்த சூழ்நிலையை மாயை எனப் புரிந்துகொள்வாய்.

நீ உலகை உண்மையென்று கருதுகிறாய்; உண்மையென்றே அறிந்துள்ளாய். ஆனால் எவரோ சாமியார் சொன்னதைக் கடன் வாங்கி, நீயும் ‘உலகம் ஒரு மாயை’ என்று திருப்பிச் சொல்கிறாய். ‘இருள் என்பது ஒரு பொய்’ என்று கூறிவிட்டு, கையில் டார்ச் விளக்கு எடுத்துச் செல்வதுபோல்தான் இதுவும். உலகை மாயை-என்கிறாய், ஆனால் மாயையை விரும்பி அனுபவிக்கிறாய்.

மதத்தலைவர்களும் ஒருபுறம் உலகை மாயை என்கிறார்கள்; மறுபுறம், எல்லாவற்றையும் தியாகம் செய்யுமாறு உபதேசிக்கிறார்கள். எல்லாம் மாயை என்றால் அவற்றை எப்படிக் கைவிடுவது? இல்லாத ஒன்றை விடுவது எப்படி? அவர்கள் உலகத்தைப் பொய்த் தோற்றமென அறிவிக்கிறார்கள். மறுபுறம், பெண்ணாசையையும் பொன்னாசையையும் உதறித்தள்ளச் சொல்கிறார்கள். உலகம் பொய் என்றால், அதிலுள்ள பெண்ணும் பொன்னும் பொய்தானே. பிறகு, விடுவதற்கு என்ன இருக்கிறது? உலகிலுள்ள நீயும் மாயைதானே! பிறகு யார் யாரை அல்லது எதை விடுவது?

ஞானோதயம் தோன்றும்போது இருள் சுயமாகவே நீங்கிவிடும். உனக்குள்ளே தூங்குகிறானே அவன் விழித்தால் போதும். புரண்டு எழுந்து உட்கார்ந்தால் போதும். எங்கும் வெளியே போக வேண்டாம். சற்று கண்ணைத் திறக்க வேண்டும்; சற்று சுய உணர்வு பெற வேண்டும். அந்த ஞான ஒளிக்கு நமஸ்காரம் என்று அஷ்டாவக்ரர் இந்த சுலோகத்தில் தெரி விக்கிறார்.

ஆகவே அஷ்டாவக்ரர் கூறும் நமஸ்காரம் எந்த சம்பிரதாயத்தையோ, மதத்தையோ சார்ந்ததன்று. அது குறிப்பிட்ட

ஜாதி, நாடு அல்லது சமூகத்துடன் சம்பந்தப்பட்டதன்று. ராமனை நமஸ்கரித்தால் அது இந்துக்களுடையதாகும். புத்தரின் திருவடி களை வணங்கினால் அது பௌத்தர்களுடையதாகும். ஞானத்தை வணங்கினால் அது படைப்பு முழுவதற்கும் சொந்தமாகும். அப்போது நீ கோயில், பள்ளிவாசல், அல்லது குருத்துவாரா போன்ற எல்லைகளைக் கடந்துவிடுவாய். எல்லைகளற்ற ஞானத்தை நீ நமஸ்கரிக்க முடியும்போது நீயும் எல்லையற்ற வனாகவே ஆகிவிடுவாய்.

நமஸ்காரம் என்றால் வளைந்து குனிவது. நமன் என்றால் லயித்துப்போதல், மூழ்கிவிடுதல் என்றும் பொருளுண்டு. நதி பாய்ந்து சென்று கடலில் கலப்பதைப் பார். அது குனிந்து கடலை வணங்குவதைப்போல் இருப்பதுடன், அது கடலுடன் இரண்டறக் கலந்துவிடுகிறது. ஆகவே ஞானத்தை நமஸ்கரித்த பிறகும் நீ மிஞ்சியிருந்தால் அது நமஸ்காரம் ஆகாது. நீ ஆத்ம உணர்வில் இன்னும் முழுமையாக லயிக்கவில்லை, மூழ்கவில்லை என அர்த்தப்படும். உண்மையான நமஸ்காரத்துக்குப் பின் நீ மிஞ்சியிருக்கமாட்டாய்.

**ப**ட்டோஜி தீட்சித் என்பவர் வங்காள மொழி இலக்கணத் தில் சிறந்த அறிஞராகத் திகழ்ந்தார். வயது 60 இருக்கும்போது அவருடைய தந்தைக்கு வயது 80. தந்தை மகனை அடிக்கடிக் கண்டித்தார். "எப்போதும் இப்படி இலக்கணத்திலேயா ஆழ்ந்து கிடப்பது? கோயிலுக்குப் போ. கடவுளை வணங்கு. அவர் பெயரை உரக்கச் சொல்லு. நீயும் கிழவனாகி வருகிறாய்."

ஆனால் மகன் அவர் பேச்சைக் கேட்கவில்லை. சிரித்துவிட்டு நழுவிவிடுவார். ஒருநாள் தந்தை மகனிடம், "நான் இறக்கும் நேரம் நெருங்கிவிட்டதுபோல் உணர்கிறேன். நான் உயிருடன் இருக்கும்போது நீ கோயிலுக்குப் போவதில்லை; கடவுளை தியானிப்பதில்லை. இலக்கண சாஸ்திரம் வெறும் குப்பை. அதில் அப்படி என்ன உள்ளது? அந்த நேரத்தைக் கடவுளுக்குச் செலவழி," என்று கேட்டுக்கொண்டார்.

மகன் கூறினார்: "அப்பா, நீங்கள் இவ்வளவு வற்புறுத்துவ தால், நான் ஒரு விஷயம் சொல்லித்தீர வேண்டியுள்ளது. நீங்கள்

பல்லாண்டுகளாகக் கோயிலுக்குப் போகிறீர்கள். ஆனால் நீங்கள் லயித்து நமஸ்காரம் செய்வதாகத் தெரியவில்லை. திரும்பி வருகையில் உங்களிடம் எந்த மாறுதலும் தென்படுவதில்லை. போனவரே திரும்பிவந்திருக்கிறீர். சுமார் 40-50 வருஷமாக கோயில் செல்லும் வழக்கம் உங்களிடம் உள்ளதை நான் வளர்ந்தபின் கவனித்திருக்கிறேன்.

"உங்களிடம் ஆன்மிக ஒளி பிரதிபலிக்கவில்லை. ஆகவே நான் கோயிலுக்குப் போனால் மட்டும் என்னிடம் ஏதோ மாறுதல் ஏற்படுமென நம்ப முடியவில்லை. தந்தைக்கு வசப்படாதது மகனுக்கு எப்படி வசப்படும்? சரி, ஒருநாள் கோயிலுக்குப் போகிறேன். அங்கே ஒரே ஒருமுறை கடவுளை தீவிரமாக தியானிக்கிறேன். சமஸ்கிருத இலக்கணத்திலும் 'ராமா-ராமா' என்று பல முறை சொல்லத் தேவையில்லை; 'ராமாஹ' என்று ஒருமுறை சொன்னாலே பலமுறை சொன்னதாகும். முடிந்தது விஷயம். வாழ்க்கை முழுவதும் 'ராமா, ராமா' எத்தனை தடவைதான் சொல்வது? பன்மையைக் காட்ட 'ராமாஹ' என்று ஒருமுறை சொன்னால் போதும். யாருக்கு இந்த இலக்கண நுணுக்கம் புரிந்தால் போதுமோ, அந்த ராமன் புரிந்துகொள்வான்."

மகன் அவ்வாறே கோயிலுக்குச் சென்றார். அங்கிருந்த மற்றவர்கள் அவர் சப்தமாக ஒரே ஒருமுறை 'ராமாஹ' என்று கூவியதைக் கேட்டனர். அப்படியே அவர் தரையில் விழுந்தார். அவரது உயிர் நீங்கிவிட்டது. செய்தி கேட்ட தந்தை கோயிலுக்கு ஓடிவந்தார். ஊர் மக்களும் திரண்டனர். கோயிலுக்கு அவர் வந்த முதல்நாளே அவரது வாழ்வின் கடைசி நாளாகவும் அமைந்தது கண்டு மக்கள் திகைத்தனர், குழம்பினர்.

தந்தை புலம்பினார் 'அவன் கடவுள் பெயரை ஒருமுறை தான் சொல்லுவேன். ஆனால் முழு உயிர் சக்தியையும் உபயோகித்து திருப்பெயரை உச்சரிப்பேன். தினம்-தினம் பெயரை லயிப்பின்றி ஒப்பிப்பது அர்த்தமற்றது என்று கூறினான். தான் சொன்னதை நிரூபித்துவிட்டான்' என்று கதறினார்.

மந்திரம், துதிப்பாடல் போன்றவற்றை தினந்தோறும் சொல்வதால் அது பழக்கமாகிவிடுகிறது. அதன்பின் உன் மனம்

எங்கோ இருக்க, உன் வாய் இயந்திரம்போல் அவற்றை உச்சரிக்கிறது. இதேபோல் கோபுரம் தெரிந்தால் உடனே தலைதாழ்த்தி வணங்குகிறாய். அதுவும் கண் சிமிட்டும் நேரம்தான். ஆனால் இயந்திரம்போல் செயல்படுகிறாய். பாதையில் செல்கையில் 'கோபுரத்தைப் பார்க்கையில், கோயிலைக் கடக்கையில் கன்னத்தை அல்லது முகவாயை இலேசாகத் தட்டுகிறாய் அல்லது நெஞ்சைத் தொடுகிறாய். எல்லாம் இயந்திரம்போல் நடக்கிறது. அப்போது பெரும்பாலோர் காலணிகளைக் கூட அகற்றுவதில்லை என்பது கடவுளை அவமதிப்பதாகும்.

**ஒ**ருமுறை நான் பல ஊர்களுக்கு யாத்திரையாகச் சென்றேன். என் குழுவில் ஒரு பெண்மணியும் இருந்தார். அவர் திகம்பர சமணப் பிரிவினர். எந்த ஊரிலும் அவர் சமணக் கோயிலுக்குப் போகாமல் எதுவும் சாப்பிடமாட்டார். அப்படி ஒரு விரதத்தைக் கடைப்பிடித்தார். சமணர் கோயில் இல்லாத ஊரெனில் பட்டினி கிடப்பார். ஓர் ஊரில் நான் சமணர் கோயில் இருக்குமிடம் அறிந்து அங்கே அவரை அனுப்பினேன். அவர் திரும்பிவந்து வருத்தத்துடன், "அது எங்கள் கோயில் இல்லை," என்றார். அது சுவேதாம்பர ஜைனக்கோயில் என்றும் திகம்பர ஜைனக்கோயிலுக்குத்தான் அவர் செல்வார் என்றும் கூறினார். "நான் நிர்வாண நிலையிலுள்ள மகாவீரர் சிலையைத்தான் வணங்குவது வழக்கம். ஆடை அலங்காரமெல்லாம் செய்யப்பட்ட மகாவீரர் சிலையை நான் வணங்குவதில்லை" என்று தெரிவித்தார்.

சமணர்களில் இரண்டு பிரிவினர் உண்டு என்பது நினைவிற்கு வந்தது.* அப்பிரிவுகள் சுவேதாம்பரர் (ஸ்வேத அம்பரர்)-வெண்ணிற ஆடை அணிந்த மகாவீரர்; திகம்பரர்-(திக்கு திசைகளையே அணிந்த, வெட்டவெளியான) ஆடை அணியாத மகாவீரர் என்பவை அப்பிரிவுகள்.

**ஜ**பல்புரில் நான் பல ஆண்டுகள் வசித்தேன். விநாயக சதுர்த்தியின்போது ஒவ்வொரு தெருவிலிருந்தும் விநாயகர் சிலை ஊர்வலமாக எடுத்துவரப்படும். அங்கு பின்பற்றிய வழக்கப்படி,

* ஓஷோ என்று பின்னாளில் அறியப்பட்ட ஆச்சார்ய ரஜ்னீஷ் (1931-1990) பிறப்பால் சமண மதத்தவர். சிறுவயதில் அவரது பெயர் சந்திரமோகன் ஜெயின்.

முதலில் பிராமணத் தெரு விநாயகர் புறப்பாடு நடைபெறும். பிறகு ஜாதி வரிசைப்படி இறங்கு வரிசையாக வந்து கடைசியில் சக்கிலியர் தெரு விநாயகர் எழுந்தருள்வார்!

ஒருமுறை ஏதோ தாமதத்தால் சக்கிலியர் தெரு விநாயகர், பிராமணர் தெரு விநாயகரை முந்திவிட்டார். பிராமணர்கள் பலத்த சண்டையிட்டார்கள். ஜாதிக் கலவரம் வெடிக்கும்போலிருந்தது. பிறகு பஞ்சாயத்தார் சமாதானப்படுத்தி பிராமணர்களின் பிள்ளையார் ஊர்வலம் முதலில் செல்ல வழியேற்படுத்தித் தந்தனர்.

கடவுளைப் பற்றி மக்களின் கண்ணோட்டம் இவ்வளவு குறுகலாக உள்ளது. விழுந்து நமஸ்கரிக்கும்போதும் தெய்வத்திற்கு ஏற்றபடி அல்லது வணங்குபவரின் ஜாதிப்படி நமஸ்காரத்தின் எண்ணிக்கை யும் நிச்சயிக்கப்படுகிறது. நமஸ்காரத்திற்குக் கூடவா கணக்குப் பார்ப்பது? கண்ணெதிரே தெரியும் விசாலமான படைப்பை எத்தனை தடவை வேண்டுமானாலும் வணங்கு. நதி கடலில் கலப்பதைப்போல் நீ படைப்பில் லயித்துவிடு.

புத்தரை தரிசிக்க வந்தவர்கள் 'புத்தம் சரணம் கச்சாமி' என்று கூறியதைக் கேட்டு ஒருவன் புத்தரிடம் விசாரித்தான். "நீங்கள் யார் காலிலும் விழக்கூடாது என்பீர்களே. ஆனால் இவர்களை ஏன் தடுப்பதில்லை?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான் யார் தடுப்பதற்கு? அவர்கள் என்னையா வணங்கு கிறார்கள்? அவர்கள் வணங்குவது புத்தரையன்று. புத்தத்தை, அதாவது, ஞானத்தையல்லவா வணங்குகின்றனர். புத்தம் என்பது புத்தரையல்ல, ஞான விழிப்பைக் காட்டுகிறது. அவர்கள் என்னைத் தனி மனிதராக நினைத்து வணங்கினால் அது அவர் கள் தவறேயன்றி நான் பொறுப்பில்லை," என்று பதிலளித்தார்.

உனது நமஸ்காரம் ஒளிவடிவான, அமைதி வடிவான, ஆனந்த ரூபமான கடவுளை நோக்கி அமைய வேண்டும். அதன் விளைவாக, உலகத்தின் உண்மை சொரூபம் உனக்குப் புரிந்துபோகிறது.

**சே**ட்டு ஒருவர் குளத்தில் தவறி விழுந்து தத்தளித்தார். அதைப் பார்த்த ஒரு பிச்சைக்காரன் நதியில் குதித்து அவரைக் காப்பாற்றினான். மாமிச மலைபோலிருந்த அவரைக் கரை

சேர்ப்பதற்குள் அவனுக்கே உயிர் போய்விடும்போலிருந்தது. சேட்டு சுயநினைவு பெற்று கண் விழித்ததும் ஒரு ரூபாய் எடுத்து பிச்சைக்காரனிடம் கொடுத்தார். அக்கம் பக்கம் கடையில் இதை மாற்றி ஐம்பது பைசா என்னைக் காப்பாற்றியதற்காக நீ எடுத்துக் கொள். மீதி ஐம்பது பைசாவை என்னிடம் தந்துவிடு," என்றார்!

அதற்குப் பிச்சைக்காரன், "அருகில் கடை எதுவும் கிடையாது. அடுத்த முறை நீங்கள் குளத்தில் விழுந்தால் சொல்லி யனுப்புங்கள். நான் முழு ஒரு ரூபாயை அப்போது வாங்கிக் கொள்கிறேன்," என்று கூறிப் போய்விட்டான்.

மனிதன் இறக்கும் தறுவாயிலும் உலகைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறான். காரணம், அவன் அதை மதிப்பு மிக்கதாக நினைப்பதுதான் பணம், பதவி, கௌரவம் இவற்றையே மதிப்புள்ளவையாகக் கருதுகிறான். கடவுள் ஆனந்தமயமானவர் என்று கேள்விப்பட்டிருக்கிறாய். ஆனால் நீ அதை மாற்றி சுகமே கடவுள் என்பதுபோல் நடக்கிறாய். பணத்தால் சுகம் என்று நீ கருதுவதால், **பணமே உனக்குக் கடவுளாகி விட்டது. ரூபாயைக் கண்களில் ஒத்திக்கொள்வது இதனால்தான்.** பணத்தை உபயோகிப்பதில் தவறேதுமில்லை. ஆனால் அதற்கு நீ பூஜை செய்யாதே. தீபாவளி சமயம் வடக்கில் லக்ஷ்மி பூஜை என்ற பெயரில் பணம் வணங்கப்படுகிறது. பண்டமாற்றுக்குப் பணம் தேவை. அதன் மூலம் பல வசதிகளும், வசதிகள் மூலம் சுகமும் ஏற்படுவதை மறுக்க முடியாது. ஆனால் காசேதான் கடவுள் என நினைப்பது மிகை.

ஓர் அரசியல்வாதி ஊருக்கு வருகிறார். என்றால் மக்கள் நூற்றுக்கணக்கில் கூடுகிறார்கள். அது அவருக்கு அவர்கள் செய்யும் மறைமுகமான வணக்கம்தான். இது பதவிக்குச் செய்யும் பூஜையாகும். அதாவது, பதவியே கடவுள். இதுகூட பரவாயில்லை. ஆனால் அந்த அரசியல் தலைவரும் தன்னை ஒரு கடவுள்போல் நினைத்து ஆணவமாக நடந்துகொள்கிறார். ஆனால் பதவி போய்விட்டால் அவர் ரயிலிலிருந்து இறங்கும்போது அவரை வரவேற்க ரயில்நிலையத்தில் சுற்றும் நாய்தான் வரும்! எனவே பதவியோ, பதவியிலுள்ளவரோ கடவுள் இல்லை.

புத்தர் ஓர் ஊருக்கு விஜயம் செய்தார். அது தலைநகராத லால் அரசரிடம் அமைச்சர் சென்று புத்தரை வரவேற்குமாறு ஆலோசனை கூறினார். அரசர் மறுத்துவிட்டார். "புத்தரிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கிறது. வீடு வீடாகச் சென்று பிட்சையெடுப்பவர்தானே அவர் நமது அரண்மனைக்கும் பிட்சை கேட்க வருவாரல்லவா? அப்பொழுது அவர் என்னைச் சந்திக்க வாய்ப்புத் தருகிறேன்," என்று அரசர் திமிராகக் கூறினார்.

"அப்படியானால் நான் என் பதவியிலிருந்து விலகிக்கொள்கிறேன்," என்று அமைச்சர் தெரிவித்ததும் அரசர் பயந்துவிட்டார். அவர் சிற்றின்ப பிரியரானதால், நாட்டு நிர்வாகத்தை அமைச்சர்தான் நடத்தினார். அவர் நேர்மையானவர் என்பதால் அரசனை விரட்டிவிட்டு நாட்டை அபகரிக்கவில்லை.

"நான் புத்தரைப் பார்க்கப் போகாவிடில் உமக்கு ஏன் இவ்வளவு கோபம் வருகிறது? பதவியைத் துறக்கும் அளவிற்கு இது என்ன பெரிய விஷயமா?" - அரசர் கேட்டார்.

"நம் ஊருக்கு புத்தர் வருகை தருவது அதிர்ஷ்டமான நிகழ்ச்சி. அவரை வரவேற்க எவர் முன்வரவில்லையோ அத்தகையவர் அருகிலே உட்காருவதுகூட ஆபத்தான விஷயம். தொற்றுநோய்போல் அவரது தீய குணம் பிறரையும் பற்றும். நான் வேண்டிக் கொண்டவுடன் மறுபேச்சின்றி புத்தருக்கு கௌரவம் செய்ய நீங்கள் கிளம்பவில்லை. ஆகவே இனி நீங்கள் மனம் மாறி புத்தரை தரிசிக்கப் போனாலும் நான் இனி இப்பதவியில் இருக்கமாட்டேன்.

"நினைவில் வையுங்கள். நம் நாட்டைவிட மிகப்பெரிய நாடு புத்தருக்குச் சொந்தமாக இருந்தது அல்லவா? அவர் அதை உதறித்தள்ளியதுபோல் உங்களால் செய்ய முடியுமா? புத்தருடைய ஏழைமை அவரே விரும்பி ஏற்றதாகும். இப்போது அவர்தான் உலகில் முதன்மையான செல்வந்தர். அரசர்களுக்கெல்லாம் மேலான ராஜாதிராஜன். உம்மிடம் அகங்காரம் தவிர வேறு என்ன உள்ளது?" என்று கூறி அமைச்சர் வெளியேறிவிட்டார்.

'மனிதன் எல்லா செல்வங்களையும் சம்பாதித்து பெரிய இன்பங்களில் திளைக்கிறான். ஆனால் உண்மையான சுகம்

எல்லாவற்றையும் தியாகம் செய்வதில்தான் அடங்கியுள்ளது.' **(சுலோகம் 178)**

**எ**ல்லா செல்வமும் என்று கூறியதற்கு, சுகம் கிடைக்கும் என நீ நம்புகின்ற எதுவுமே செல்வம் என்றே கருதப்படும். பணத்தைச் சேகரிப்பவனுக்கு அதுவே செல்வம் என்று வெளிப்படையாகத் தெரிகிறது. அதேசமயம் தபால்தலைகளைச் சேகரிப்பவனுக்கு அவையே செல்வமாகும். அவற்றை வெறும் காகிதம் என பிறர் நினைப்பது வேறு விஷயம். ஞானத்தைத் தேடி சேகரிப்பவனுக்கு அதுவே செல்வம். சுருக்கமாக, எவர் எதை ஆர்வத்துடன் சேகரித்துப் பாதுகாக்கிறாரோ அதுவே அவருக்குச் செல்வமாகும்.

சராசரி மனிதன் போகத்தால் (உடல்சார் இன்பங்களால்) சுகமென நினைக்கிறான். ஆனால் அஷ்டாவக்ரர் போகமும் சுகமும் வெவ்வேறு என்கிறார். இது ஆழமாக யோசிக்க வேண்டிய விஷயம். உடல்வழி சுகம் உண்மையானதன்று. அதில் இறுக்கமும் (டென்ஷன்) மறைந்திருக்கிறது. அந்த இன்பம் காய்ச்சலடிப்பதுபோன்ற பதற்ற நிலைதான். அதன் மூலம் அமைதி கிடைக்க வழியில்லை. அமைதியில்லாத மனம் சுகத்தை எப்படி உணரும்? எந்தச் செல்வமானாலும் அதைச் சேகரிப்பது என்பது எதிர்காலத்தில் அதன்மூலம் சுகம் கிடைக்கும் என்ற நம்பிக்கை யால்தான். ஆனால் அந்தச் செல்வத்தை திரட்டுவதற்குப் படாதபாடுபட்டு, நிகழ்காலத்திலும் நாம் வாழ முடியாமல் போய்விடுகிறது. நோய்களால் தாக்குண்டு அந்த எதிர்காலம் வருவதற்கு முன்பே ஆயுள் முடிந்துபோகிறது.

செல்வத்தைக் குவிக்கும் அமெரிக்க குபேரர்கள் 40 வயதிலேயே உயர் ரத்த அழுத்தம் மற்றும் இத்யநோய்க்கும் ஆளாகின்றனர். குறைந்த பட்சம் வயிற்றுப்புண் (அல்சர்) நிச்சயமாக வரும். ஏனெனில் கவலைதான் அமிலமாகச் சுரந்து புண்ணாக மாறுகிறது. சாதனையாளர்கள் எல்லோருக்கும் வயிற்றுப் புண் இருப்பது சகஜம். இதை அறிந்தபின்னரும் அவர்கள் இதற்குமேல் வேறு பிரச்சினை வராது என்ற நம்பிக்கையுடன் தொடர்ந்து கடுமையாக உழைக்கிறார்கள் இதனால் பெரிய நோய்களால் அவர்களது உடல் சேதமடைகிறது.

**கொ**ல்கத்தாவில் நான் ஒருமுறை பெரும் பணக்காரர் ஒருவரின் பங்களாவில் தங்கியிருந்தேன். ஒருநாள் இரவு நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். நான் 11 மணிக்குத் தூங்கும் பழக்கம் உடையவன். அதற்காக நான் எழுந்ததும் அவர் தடுத்தார். "இன்னும் கொஞ்ச நேரம் பேசலாமே. எனக்கு சீக்கிரம் தூக்கம் வருவதில்லை," என்றார்.

"பணம் இல்லாவிட்டால்தான் அதே கவலையால் மக்கள் தூங்குவதில்லை. உமக்கு என்ன கேடு? ஏராளமாகச் செல்வம் சேர்த்தாகிவிட்டதே. இதுவே போதும் என்று நிம்மதியாகத் தூங்க வேண்டியதுதானே," என்று நான் கேட்டேன்.

"நான் நீண்ட காலம் தூங்குவதைத் தள்ளிப்போட்டுப் பணம் சம்பாதிப்பதிலேயே மூழ்கியிருந்தேன். இதனால் இப்படித் தாமதமாகத் தூங்குவது பழக்கமாகவே மாறிவிட்டது. இப்போது பஞ்சணை உள்ளது. தூக்கம்தான் வருவதில்லை. பால், பழம், இனிப்பு எல்லாம் உள்ளது. ஆனால் பசியெடுப்பதில்லை. உழைப்பது பழக்கமாகிவிடுவதுபோல் ஓய்வெடுப்பதும் பழக்கமாக வேண்டும். சிலரால் உழைக்கமட்டுமே முடிகிறது. ஓய்வு எடுப்பதை நேரம் வீணாகிவிட்டதாகக் கருதித் தவிக்கிறார்கள். ஓய்வெடுப்பதும் ஒரு கலை. மனமோ, உடலோ, இரண்டுமோ 'உழைத்தது போதும்' என்று சொன்னதும் உடனடியாக நீ ஓய்வெடுக்கப் பழக வேண்டும். அப்போது மனமும் உடலும் அந்த ஓய்விற்குப் பின் முன்பைவிடச் சுறுசுறுப்பாக இயங்கும். ஆனால் பணத்தாசை பிடித்தவனால் ஓய்வெடுக்க முடிவதில்லை என்பதுடன், பாசம்-அன்பு-காதலை வெளிப்படுத்தி வாழ்க்கையை அனுபவிக்கவும் அவனுக்கு நேரமில்லை.

**ஒ**ரு நண்பரின் வீட்டில் நான் சில நாள் தங்கியிருந்தேன். வசதியானவர் பெரிய வீடு, அழகான தோட்டம், ஆனால் அவர் தன் மனைவியிடம் மிகக் குறைவாகவே பேசினார். அதில் இனிமையும் இல்லை. பிள்ளைகளுடனும் சேர்ந்து விளையாடி கலகலப்பாகப் பழகவில்லை. காலையில் அவசரமாகக் கடைக்குச் செல்வார். இரவில் தாமதமாகத் திரும்பி, சாப்பிட்டதும் படுக்கைக்குப் போய்விடுவோம். என்னுடன் பேசவும் அவருக்கு

நேரமில்லை. நான் ஒருநாள் கடைக்குப் போய் அவரைப் பிடித்துக் கொண்டு. "ஏன் வீட்டில் இப்படி விசித்திரமாக எல்லோரிட மிருந்தும் விலகி இருக்கிறீர்கள்?" என்று விசாரித்தேன். அவர் கூறிய விளக்கம் அதைவிட விசித்திரமாக இருந்தது.

"யாரிடமும் நெருங்கிப் பழகுவது ஆபத்தானது. பிள்ளைகளுடன் இனிமையாகப் பழகினால் அவர்கள் பொம்மை, தின்பண்டங்களுக்காகப் பணம் கேட்டு நச்சரிப்பார்கள். அதிகச் செல்லம் கொடுத்தால், அவர்கள் தாங்களாகவே என் சட்டைப் பையிலிருந்து பணம் எடுத்துவிடுவார்கள். மனைவியிடம் இனிமையாகப் பழகுவது ஆபத்து. அதன் விளைவாக நகை, புடைவைக்காகப் பணம் செலவழிக்க நேரிடும். நான் புன்முறுவல் காட்டினாலும் செலவு வந்துவிடுகிறது," என்று அவர் விளக்கினார்.

இந்த மனிதர் வாழ்வதற்காகத்தான் சம்பாதித்தார். நிறையவும் சம்பாதித்தார். ஆனால் எங்கே வாழ்ந்தார்? அவரது வாழ்க்கை அன்பின்றி வறண்டுவிட்டது. எப்போதும் இறுக்கமாக, கடுகடுப்பாக வாழ்ந்தவரின் வாழ்க்கையில் சுகத்திற்கு வாய்ப்பேது?

ஒரு குறிப்பிட்ட லட்சியத்திற்காக நாம் சேகரிப்புச் செய்கிறோம். ஆனால் சேகரிப்பிலேயே மாட்டிக்கொண்டு விடுகிறோம். பிறகு சுகம் கிடைக்காமல்போய் மக்களுக்குத் திகைப்பு உண்டாகிறது. நம்மிடம் எல்லாம் இருந்தும் சுகம் ஏன் உணரப்படவில்லை என்று வியக்கிறார்கள்.

பணத்திற்கும் சுகத்திற்கும் சம்பந்தம் கிடையாது. சுகம் என்பது வாழ்க்கையின் ஆழத்துடன் சம்பந்தப்பட்டது. வாழும் கலை உனக்கு வசப்பட வேண்டும். அப்போது அன்றாட, சாதாரண சாப்பாட்டிலும் ருசி தெரியும். பக்குவம் பெறாவிடில் ஆடம்பரமான உணவு வகைகளும் வீண்தான். கிடைத்ததில் திருப்தி காண்பதுதான் சுகத்திற்குக் காரணமாக அமையும்.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சிலர், "நீங்கள் எங்களை தியானம் செய்யச் சொல்கிறீர்கள்? அதனால் என்ன லாபம்?" என்று கேட்கிறார்கள். விநோதமான கேள்வி. தியானத்தால் வங்கியில் பணம் சேருமா என்று கேட்பதுபோல் உள்ளது

அவர்கள் கேள்வி. தியானத்தின் மூலம் கிடைக்கும் ஆத்ம சுகத்திற்கு சமானமானது எதுவுமுண்டா? மயில் ஆடுவதால் என்ன லாபம்? குயில் பாடுவதால் என்ன லாபம்? செடிகளில் பூக்கள் மலர்வதால் என்ன லாபம்? அவை தமது சொந்த சுகத்துக்காக (ஸ்வாந்த: ஸுகாய), எந்த எதிர்பார்ப்புமின்றி, ஆத்ம சுகத்திற்காக அவ்வாறு செய்கின்றன.

மனிதனைத் தவிர இயற்கையின் மற்ற படைப்புகள் பொருளாதார நிபுணர்களை நம்பி வாழவில்லை. இந்த நிபுணர்களை நம்பி மக்களின் வாழ்க்கை குழப்பமயமாகிவிட்டது. ‘இதனால் என்ன நன்மை?’ என்று கேட்பதே பொருளாதாரத்தின் வழக்கமாகிவிட்டது.

துளசிதாசர் தமது ராமாயணத்தின் தொடக்கத்தில் அதை எழுதுவதன் காரணத்தை வெளிப்படுத்துகிறார். ‘ஸ்வாந்த: ஸுகாய துளஸி ரகுநாத காதாம்’ — சொந்த (ஆத்ம) சுகத்திற்காக ராமன் கதையை பாடுகிறேன் என்கிறார். அவர் ராமாயணம் இயற்றியது எதையும் வரமாகப் பெறுவதற்காக அன்று; ராமபிரானை மகிழ்விப்பதற்காகவும் அன்று. எதையும் பெறுவதற்காக லஞ்சம் கொடுப்பதுபோலும் ராமாயணம் எழுதவில்லை. சுவர்க்கத்தில் தனக்கு வசதியான இடம் கிடைக்குமென்ற ஆசையாலும் எழுதவில்லை. ராமனைப் பாடுவதே பரமானந்தம் அன்றோ?

நீ யோசித்துப் பார். எதையும் எதிர்பார்க்காமல் நீ ஒரு வேலையைச் செய்யும்போது சுகமாக உணர்கிறாய். எதையும் பெறுவதற்காக நீ பணியில் ஈடுபடும்போது துக்கம், இறுக்கம் எல்லாம் ஏற்படுகிறது. பணத்தால் சுகம் வராது. ஏனெனில் பணம் என்பது கருவி மட்டுமே. சுகம் என்பது அதன் மூலம் பின்னால் கிடைப்பது. ஆனால் பணம் சம்பாதிப்பதிலேயே மனிதன் அசுரத்தனமாக ஈடுபடுவதால், சுகத்தை அனுபவிப்பது தள்ளிப்போகிறது. சிலர் தீர்த்த யாத்திரை செல்ல விதம்விதமான திட்டங்கள் தயாரிப்பார்கள். ஆனால் கிளம்பமாட்டார்கள், திட்டங்கள் தயாரிப்பதிலேயே ஆழ்ந்து விடுகிறார்கள்.

உலகில் பெரிய செல்வந்தர்களும் ஏழைகளைவிட அதிக மனக்கஷ்டத்துடன் வாழ்கிறார்கள். பணம் சம்பாதிப்பதற்கான

போராட்டம் காரணமாக அவர்களுக்கு நிம்மதியே இல்லை. அவர்களிடமுள்ள ஆடம்பர வசதிகளைப் பார்த்து நாம் ஏமாறக்கூடாது. எதிர்காலத்தில் ஒய்வாக சுகத்தை அனுபவிக்கப் போவதாக நினைத்து நிகழ்கால சந்தோஷங்களையும் அவர்கள் கோட்டைவிடுகிறார்கள்.

சுகம் என்பது இங்கேயே (here and now) உள்ளது. அடுத்த நிமிடத்தில் சுகம் என நினைத்தால், அந்த அடுத்த நிமிடம் வரப்போவதேயில்லை. சுவர்க்கத்தில் சுகம் கிடைக்கும் என நினைப்பவனும் பைத்தியக்காரன்தான். கடவுளை அடைந்தபின் சுகம் கிடைக்கும் என எதிர்பார்ப்பவனும் மூளைக்கோளாறு உடையவன். சுகம் கிடைக்கும், சுகம் விளையும், ஒரு செயலின் பலனாக சுகம் உண்டாகும் என்றெல்லாம் நினைப்பது எதிர்காலத்தின் அடிப்படையிலாகும். எதிர்காலம் குறித்து யாரும் உத்தரவாதம் தர முடியாது. இப்போதே சுகம், இல்லாவிட்டால் எப்போதுமே இல்லை என்பதுதான் உண்மை.

இப்போதே சுகமாக உணராமல் எதிர்காலம் குறித்துச் சிலர் என் சொற்பொழிவின்போதே சிந்திப்பதை நான் கவனித்திருக் கிறேன். ஒரு டாக்டர் என் பேச்சின் அம்சங்களை ஒரு நோட்டில் எழுதிக்கொள்வதைப் பார்த்து நான் அவரிடம் காரணம் கேட்டேன். "இந்தக் குறிப்புகள் எதிர்காலத்தில் நான் பின்பற்றுவதற்கு உபயோகமாக இருக்கும்," என்றார்.

நான் சொன்னேன்: "எதிர்காலம் பற்றிக் கவலைப்படாதீர்கள் என்று எத்தனையோ தடவை உங்களுக்கெல்லாம் அறிவுறுத்திக் களைத்துப் போனேன். நான் தற்சமயம் உங்கள் எதிரில்தானே உரை நிகழ்த்துகிறேன். அதைக் கேட்கும் தற்கால சுகத்தை அனுபவியுங்கள். இந்த சுகமான நேரத்தை நோட்டில் குறிப்புகள் எடுத்துப் பாழ்படுத்தாதீர்கள். இந்தக் குறிப்புகளைப் பிறகாலத்தில் படிப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்? என் உரையையாவது தற்பொழுது சுகமாகக் கேளுங்கள். டைம் டேபிள் (கால அட்டவணை) தயாரித்தபடி இருக்காதீர்கள். சட்டென்று பயணத்தைத் தொடங்குங்கள்."

நான் ரயிலில் பயணித்த போதெல்லாம் வெளிப்புற இயற்கைக் காட்சிகளை ரசித்து சுகத்தை அனுபவித்தபடி

செல்வேன். ஆனால் சக பயணிகளில் பலர் டைம் டேபிளையே புரட்டிக்கொண்டு ஆழ்ந்திருப்பது கண்டு இரக்கப்படுவேன். டைம் டேபிளை முன்கூட்டியே பார்த்துக்கொள்ளலாமே. தற்சமயம் காணும் இயற்கைக் காட்சிகளின் சுகத்தை அனுபவிக்காவிடில் பிறகு அவை காணக் கிடைக்காதே.

உன் வாழ்க்கையும் ஏதோ டைம் டேபிளை அனுசரித்துத் தான் நடைபெறுவதை நீ உணரவில்லையா? பணம், பதவி, அந்தஸ்து, சொந்த வீடு, கார் இவை வரிசையாக அமைந்து நீ சுகமாக வாழப்போவதாக நினைக்கிறாய். இதெல்லாம் நடக்கும் என்று உறுதி கூற முடியாது. எவ்வளவு காலமாகும். எத்துணை உழைப்பு தேவைப்படும் என்றும் தெரியாது. இப்போதே சுகம். இல்லாவிட்டால் எப்போதும் இல்லை என்பதை நினைவில் வைத்திருங்கள்.

இந்த சுலோகத்தில் (178) அஷ்டாவக்ரர் தியாகம் செய்யச் சொல்கிறார் என்றால் காட்டுக்கு ஓடு என்று அர்த்தமில்லை. காட்டுக்குப் போய்விட்டால் சுகமாக இருக்கும் என நீ நினைப்பதும் பிரமை. மனத்தின் ஏக்கம் அங்கேயும் தொடர்ந்து வரும். சுகம் என்பது எங்கேயோ வெளியே சென்று அடைவதல்ல. இருந்த இடத்திலேயே மனத்தின் உதவியால் சுகமாக இருக்கலாம்.

நாம் எந்தப் பின்னணியைச் சேர்ந்தவர்களாயினும் மனத்தளவில் வியாபாரிகள்தாம். தியாகத்திற்கும் கணக்கு வைத்திருக்கிறோம். எந்த அளவில் தியாகம் செய்தால் எந்த வகை மோட்சம்; எத்தனை நாள் உபவாசம் (நோன்பு) இருந்தால் என்ன பலன்; ஒரு மந்திரத்தை எத்தனை-எத்தனை தடவை திருப்பிச் சொன்னால் (ஆவ்ருத்தி) என்னென்ன நன்மை என்றெல்லாம் நம்மிடம் பட்டியல் உள்ளது.

ஆன்மிகப் பக்குவம் பெற்றவன் சுகத்தைத் தேடி பெறவேண்டியதில்லை என்பான். சுகமாக இருத்தல் நமது சுபாவம். அதை நாளைக்கு அடைய வேண்டியதில்லை. இப்போதே நாம் அதில் ஆழ்ந்துவிட முடியும்.

'பணிகள் செய்து உண்டாகிய துன்பம் என்கிற சூரிய வெப்பத்தால் எவர் மனம் எரிந்து கிடக்கிறதோ, அத்தகைய வருக்கு சாந்தம் (மன அமைதி) என்கிற அமிர்த மழையின்றி சுகம் எங்கே?' **(சுலோகம் 179)**

**ப**ணிகள் அல்லது கடமைகள் எல்லோருக்கும் உண்டு. அவற்றைச் செய்பவன் நான் (கர்த்தா) என நினைப்பதால் அச்செயல்களினால் விளையும் துன்பங்களையும் அனுபவித்தாக வேண்டியுள்ளது. அந்தத் துன்பம் கடுமையான சூரிய வெப்பம் போன்றது. அமைதியாக இல்லாமல் 'இப்படிச் செய்வேன்-அப்படிச் செய்வேன்' என்று ஆர்ப்பாட்டம் செய்தபடி இருந்தால் மனம் எப்போதும் கொதித்துக்கொண்டே இருக்கும். உன்னைச் சுற்றிலும் பார். உன் தயவின்றி உலகில் எவ்வளவோ செயல்கள் நடந்துகொண்டிருக்கின்றன. உன்னை மையமாக வைத்து உலகம் படைக்கப்படவில்லை; செயல்படவில்லை.

ஆகவே, 'நானும் உலகத்தை நடத்தவில்லை, என்னையும் ஒருவன் நடத்துகிறான்' என்பது புரிந்தால் அது கடவுளுக்குச் செய்யும் நமஸ்காரமாகும். அவன் ம்னித எல்லையைக் கடந்து எல்லைகளற்ற இறைவனுடன் இணைகிறான். அவன் கடவுளை, நினைத்து 'நீதான் எனக்குள்ளிருந்துகொண்டு சுவாசித்தல், உண்ணுதல், சீரணித்தல், இளமை-முதுமை ஏற்படல், கடைசியில் மரணம் என்று எல்லாச் செயல்களையும் நிகழ்த்துகிறாய். நான் கர்த்தா அல்லன். நான் எதுவும் செய்பவனில்லை. நான் ஒரு கருவி. என் மூலம் செயல்கள் நிகழவிடுகிறேன், அவ்வளவுதான். நான் மூங்கில் புல்லாங்குழல். அதில் நிரம்பி வெளிப்படும் இனிய ஒலி நீயே,' என்று போற்றுவான்.

கபீர்தாசர் சொல்கிறார்: 'நான் ஒரு மூங்கில் புல்லாங்குழல். நீ அதனை ஒலித்தால் அந்த ஒலியைப் பரவ விடுவேன். நீ பாடாவிட்டால் நானாக ஒலியெழுப்பப் போவதில்லை. நான் இடையில் குறுக்கிட மாட்டேன்'. இதுவே கபீர்தாசர் கடவுளுக்குச் செய்யும் நமஸ்காரம். இதுவே சமர்ப்பணம், பிரார்த்தனை, ஆத்திகம், பக்தி முதலிய எல்லாம். இவை அனைத்தின் சாரமும் என்னவெனில் கடவுள்தான் எல்லாம் செய்பவர்; நாம் கர்த்தா

அல்லர் என்பதாகும். அப்படிப் பணிவானவனிடம் கடவுள் இறங்கி வருகிறார். மலைமேல் பெய்யும் மழை வழிந்து ஓடுகிறது. பள்ளத்தில் கொட்டும் மழை அதை நிரப்புகிறது. அதாவது, மனம் காலியாக இருந்தால் கடவுளின் அமிர்த அருள்மழை அதை நிரப்பும். மலைபோல் திமிரால் மனம் பூரித்து நின்றால் கடவுளின் அருள்மழை அங்கு தேங்காமல் வழிந்துவிடும். மனம் காலியாக இருந்தால் கடவுள் அருள் அங்கு இறங்கி நீ சாந்தமாக உணர்வாய்.

'இந்த உலகம் வெறும் எண்ண உலகம். உலகியலைக் கடந்த சிந்தனை இங்கு எதுவுமில்லை. எண்ணங்களாலான மற்றும் எண்ணங்களால் பாதிக்கப்படாத பொருட்களின் சுபாவம் அப்படியே இருக்கிறது. **(சுலோகம் 180)**

**நீ** உலகில் காணும் பொருள்/நபர் உண்மையில் அப்படி இருக்கவில்லை. உண்மை நிலையைப் பார்க்க சூன்யமான, காலியான கண்கள் தேவை. உன் கண்கள் உணர்ச்சிகளால் நிறைந்துள்ளன. அந்த உணர்ச்சிதான் நீ காணும் பொருள் மீது பிரதிபலிப்பாகிறது. நீ எதைப் பார்க்க விரும்புகிறாயோ அதைத்தான் உலகம் என்னும் திரையில் காண்கிறாய். எப்படிப் பார்க்க விரும்புகிறாயோ அப்படியே காண்கிறாய்.

உண்மையில் எது உள்ளதோ அதை நீ காண்பதில்லை. உண்மையில் எது உள்ளதோ, அதை ஞானோதயம் பெற்றவனால் தான் காண முடியும். கடவுளின் கிரணம் உள்ளே இறங்கி, விழிப்புப் பெற்றவனால்தான் காண முடியும்.

ஒருவன் சாப்பிடாமல் தூங்கிவிட்டால் அவன் அரச மாளிகையில் அறுசுவை உணவு உண்பதாகத்தான் கனவு காண்பான். நீ சில நாள் உபவாசம் இருந்துபார். கண்ணில் படுவதெல்லாம் தின்பண்டங்களாகவே தெரியும். உனக்கு வாழ்க்கையில் எதன் மீது தீவிர விருப்பம் இருந்து அது கிடைக்காமல் போயிற்றோ, அது கனவாக வந்து விடும்.

இரவில்தானே கனவு என நீ நினைக்கலாம். உனது பகல்வேளையும் உனது இரவிலிருந்து வேறுபட்டதன்று. பகல்,

இரவு என இரண்டு வேளைகளாயினும் மனம் என்பது ஒன்றுதானே உள்ளது. பகலில் நீ கூடுதலாக எச்சரிக்கையுடன் இருக்கிறாய். அவ்வளவுதான் வேறுபாடு.

**க**ங்கை நதியின் படிக்கட்டில் நான் ஒரு நண்பருடன் இருந்தேன். திடீரென்று அவர் எழுந்தார். "அதோ சற்றுத் தொலைவில் ஒரு பெண் கூந்தலை வாரிக்கொண்டிருக்கிறாளே. அவளது முதுகு அழகாகத் தெரிகிறது. அவள் முக அழகையும் பார்த்துவிட்டு வருகிறேன்," என்றார்.

"சரி. உன் ஆசையில் நான் குறுக்கிட விரும்பவில்லை தடுத்தால் நீ ஏக்கத்தால் தவிப்பாய்," என்று கூறி அவரை அனுப்பி வைத்தேன்.

சில நிமிடங்களிலேயே அவர் தலையிலடித்துக்கொண்டு திரும்பினார். என்ன விஷயம்? அவள் பார்க்க குரூபமாக இருக்கிறாளா?" என்று கேட்டதற்கு, "அங்கிருந்தது பெண்ணே இல்லை. அவள் குரூபியாக இருந்தால் முதுகாவது அழகாக உள்ளதே என திருப்திப்பட்டிருப்பேன். யாரோ ஒரு இளம் வயது சாமியார் சட்டை போடாமல் உட்கார்ந்திருந்தார். கருகருவென்ற நீண்ட கூந்தலை வாரியபடி இருந்தார். இந்த சாமியார்கள் பெரிய தொந்தரவு. உடம்பாலும் ஏமாற்றுகிறார்கள்," என்று அவர் கூறினார்.

நான் தடுத்துக் கூறினேன், "அந்த சாமியார் தப்பேதும் செய்யவில்லை. அவர் உன்னை ஏமாற்றுவதற்காக அப்படித் தோற்றமளிக்கவில்லை. அவருக்கு நீ வந்ததும் போனதும்கூட தெரிந்திருக்காது. தவறு உன் மீதுதான். பெண்ணுடல் மீது உனக்கிருந்த கவர்ச்சி உணர்வை அவரது முதுகின்மீது ஏற்றிவைத்தாய்."

உனக்கு எதன் மீது ஆசையோ அது உனக்கு உலகப் பொருட்களில் பிரதிபலிப்பாகிறது. இந்த உலகம் உன் உணர்வுகளுக்கு ஏற்றபடி உன் கண்களுக்குத் தெரிகிறது. நீ எந்த உணர்வாலும் பாதிக்கப்படாத நிலைக்கு வந்தால், உலகம் உண்மையில் உள்ளவாறு உன் கண்களுக்குப் புலப்படும். அப்போது உனக்கு ஓர் ஆச்சரியம் உண்டாகும். இதுவரை உன் கண்ணையும் கருத்தையும் கவர்ந்திழுத்த ஏராளமான பொருட்கள் காணாமல் போய்விடும்.

ஒரு பெண்மணி என்னிடம் சந்நியாச தீட்சை கேட்டு வந்தார். அவரது வீட்டிற்கு முன்பு போயிருக்கிறேன். பீரோவில் 300 புடைவைகளுக்கு மேல் வைத்திருந்தார். என்னைச் சந்திக்கும் போதெல்லாம் அவள், "எனக்கு சந்நியாசினியாக வேண்டுமென்ற விருப்பமுள்ளது. ஆனால் இந்தப் புடைவைகளை என்ன செய்வது என்று தெரியாததால் தயங்குகிறேன்," என்று வருத்தத்துடன் கூறினாள்.

"இதோ பாரம்மா, புடைவைகளின் காரணத்தால் நீ தயங்குவதாயின் ஆயுள் முடியும்வரைகூட நீ சந்நியாசினி ஆக முடியாது. புடைவையா, காவியுடையா என்று நீயே முடிவுசெய்," என்றேன்.

பிறகு ஒரு கட்டத்தில் அவள் துணிந்து துறவறம் ஏற்றாள். துவராடையே அணிந்தாள். யாத்திரை சென்றுவந்தாள். என்னைச் சந்தித்தபோது அவள், "என் வாழ்க்கையில் பெரிய மாற்றம் நிகழ்ந்தது. முன்பெல்லாம் நான் கடைத்தெருவிற்குச் சென்றால் துணிக்கடைகளே கண்ணில் படும். வீட்டில் வேலைகள் நிறைய இருந்தாலும் நான் துணிக்கடைகளில் ஏறி இறங்கி புதிய ரகப் புடைவைகள் வந்துள்ளனவா என்று நான் பார்க்கத் தவறிய தில்லை. ஆனால் திடீரென்று ஒரு மாறுதல். இப்பொழுதெல்லாம் என் கண்ணில் துணிக்கடைகளே தெரிவதில்லை," என்று வியந்து கூறினாள்.

நான் விளக்கினேன். "அம்மணி! இந்த மாறுதல் திடீரென நிகழ்ந்ததன்று. அதற்கு காரணமுண்டு. இனி காவி ஆடையே அணிய வேண்டுமென்ற நிலையில், துணிகளின் தராதரம் குறித்து மனம் மதிப்பீடு செய்வதை நிறுத்திவிட்டது. பிறகு, வகை வகையான துணிகளை நாடும் அவசியம் நீங்கிவிட்டது. எனவே துணிக்கடைகள் கண்ணில் படாமல் போவது இயற்கையே.

செருப்புத் தொழிலாளர் உன் காலணிகளையே பார்க்கிறார். உன் முகத்தைப் பார்ப்பதே இல்லை. அவருடைய உலகம் செருப்புகளால் மட்டும் நிறைந்து விளங்குகிறது. செருப்புகள் வருகின்றன; செருப்புகள் செல்கின்றன. நல்ல செருப்புகள், கிழிந்த செருப்புகள், ஏழையின் செருப்பு, பணக்காரரின் செருப்பு, கற்றவர்

செருப்பு, கல்லாதவர் செருப்பு. எங்கும் செருப்புகளே அத்தொழிலாளரின் கண்ணில் தெரிகின்றன.

நீ எதைப் பார்க்க விரும்புகிறாயோ அது மட்டுமே கண்ணுக்குப் புலப்படும்.

**மு**ல்லா நஸ்ருத்தீனை கைதுசெய்து ஒருமுறை சிறையில் தள்ளிவிட்டார்கள். பார்க்க வந்த நண்பர் என்ன காரணம் என்று கேட்டார். "எல்லாம் இந்த சளித்தொந்தரவால் வந்த வினை," என்றார் முல்லா. நண்பர் ஆச்சரியப்பட்டார். "இது ஒரு குற்றமா? எனக்கும் ஜலதோஷம் இருக்கிறது. அது தெரிந்தால் என்னையும் சிறையில் அடைப்பார்களா?" என்று அவர் கேட்டார்.

நஸ்ருத்தீன் விளக்கினார். "கடைத்தெருவில் கூட்டமாக இருந்தது. என் அருகே வந்துகொண்டிருந்த ஒருவரின் சட்டைப் பையில் கனமான பர்ஸ் தெரிந்தது. அவருக்குத் தெரியாமல் நான் பர்சை லாவகமாக எடுத்த சமயம் தொடர்ந்து சளி இருமல் வந்து அகப்பட்டுக்கொண்டேன்," என்றார்.

இங்கும் கண்ணோட்டம்தான் வேலை செய்கிறது. திருட முயற்சித்தது முக்கியமாகத் தெரியாமல் ஜலதோஷத்தில் அவர் கவனம் பதிந்திருந்தது.

மனிதன் எந்த நிகழ்ச்சிக்கும் தன் போக்கிலேயே காரணமும் கண்டுபிடிக்கிறான். அதுதான் உண்மையான காரணம் என்று எடுத்துக் கொள்வதற்கில்லை. அவன் அந்த காரணத்தைக் கூறுவதற்கும் ஒரு காரணம் இருக்கும்!

உனக்கு மகன் மீது கோபம். அடித்தும் விடுகிறாய். மகனை அடிக்கலாமா என்று எவராவது கூறினால், "அடியாத மாடு படியாது. இவன் திருந்த வேண்டும் என்பதற்காக அடித்தேன்," என்று காரணம் கூறுகிறாய். ஆனால் அதன் கீழே வேறொரு காரணம் இருக்கலாம். உன் பேச்சை அவன் கேட்கவில்லை என்று உன் அகங்காரம் வாங்கிய அடியை நீ மகனுக்குத் திருப்பிக் கொடுக்கிறாய் என்றும் விளக்கலாம். அதுவே உண்மையாகவும் இருக்கலாம்.

அலுவலகத்தில் அதிகாரியிடம் திட்டு வாங்கிய பியூன். தன் கோபத்தை அவரிடம் வெளிப்படுத்த முடியாது. வீட்டுக்குத் திரும்பியதும் ஏதாவது காரணம் சொல்லி மனைவியை விளாசுகிறான். அவளுக்கு அலுவலகத்தில் வெளிப்படுத்தாத கோபம்தான் உண்மையான காரணம் என்று தெரியாது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருமுறை இரவு 2 மணிக்குத் தெருவில் செல்வதை ஒரு போலீஸ்காரர் பார்த்தார். அவர் முல்லாவைத் தடுத்து இந்த அகால வேளையில் அலைவதன் காரணம் கேட்டார். "சொற்பொழிவு கேட்பதற்காக போகிறேன்," என்றார் முல்லா. போலீஸ்காரர், "யாரை ஏமாத்தப் பார்க்கிறே? இந்த நேரத்தில யார் சொற்பொழிவு செய்வாங்க, குடிச்சிருக்கியா?" என்று அதட்டினார்.

முல்லா சொன்னார்: "உங்களுக்கு என் சம்சாரத்தைத் தெரியாது. நான் வீடு திரும்ப எத்தனை மணியானாலும் விழிச்சுக்கிட்டு உட்கார்ந்திருப்பா. என்னைப் பார்த்ததும் திட்டி ஒரு சொற்பொழிவு செய்யாம அவளால தூங்க முடியாது."

நீ இதுவரை பார்த்த உலகம் உன் உணர்ச்சிகளுக்கேற்றபடி உருவான உலகமாகும். ஆகவே உண்மை உலகை நீ பார்க்கவில்லை. அந்த உண்மை உலகை ஜே.கிருஷ்ணமூர்த்தி That which is என்கிறார். நீ உலகை எப்படிப் பார்க்க வேண்டுமோ அவ்வண்ணமே அது கண்ணுக்குத் தெரியாது. உண்மையில் உள்ள உலகை நீ காணாமல், உன் உள்ளத்தில் உள்ள உலகையே வெளியில் நீ கண்டாய். உண்மையில் கிடந்தது கயிறு. நீ அதைப் பாம்பென நினைத்தாய். மூச்சிரைக்க ஓடி, கீழே விழுந்து அடிபட்டது.

கயிற்றைப் பார்த்தால் பாம்புபோல் தெரிகிறது. அது பயத்தின் காரணமாக ஏற்படுகிறது. நாம் பய உணர்வை கயிற்றின் மீது பதிவு செய்கிறோம். நாம் காணும் எல்லாவற்றிலும் நமது உணர்ச்சிகளின் பிரதிபலிப்பு உள்ளது. ஓர் எச்சரிக்கை. உலகை மாயை என்பதும், உலகைப் பொய் (மித்யா) என்பதும் வெவ்வேறு அர்த்தமுடையவை. அஷ்டாவக்ரர் உலகம் மாயை என்று

கூறும்போது, உன்னிடமுள்ள பயம், பேராசை, மோகம், குரோதம், பொறாமை முதலிய திரைகளின் வழியாக நீ பார்ப்பதால், உலகம் உண்மையில் உள்ளதுபோல் உன் கண்ணுக்குத் தெரிவதில்லை.

உண்மையில் கிடப்பது கயிறு. இருட்டில் நீ அதைப் பாம்பாகப் பார்த்து நடுங்குகிறாய். சராசரி மனிதர்கள் மட்டுமில்லை, சாமியார்களும்கூட இரவில் கயிற்றைப் பார்த்துப் பாம்பெனத் திடுக்கிடுவார்கள். பகல்வேளையில் அவர்கள் 'கயிறைப் பாம்பென நினைத்து மருளாதே; எல்லாம் தோற்றம்' என்றெல்லாம் உபதேசிப்பது வேறு விஷயம்.

இந்த உலகத் தொடர்புகளும் நீயாக உருவாக்கிக் கொண் டவை. அடிப்படையில் அவை அப்படியில்லை. ஒருத்தியை மனைவி என்று கருதினாய்; ஒவ்வொருவரையும் ஒவ்வொரு விதமாக, மகன்-பந்து-பகைவன்-நண்பன் என்றெல்லாம் நீயாகக் கற்பிதம் செய்துகொண்டாய்.

உன் மனைவி என்கிறாயே அவள் யார்? சுமார் 20-25 ஆண்டுகள் அப்படி ஒரு பெண் இருந்ததே உனக்குத் தெரியாது. பிறகு ஒரு சோதிடரின் ஆமோதிப்புடன், புரோகிதர் மந்திரம் ஓத அவளுக்குத் தாலி கட்டினாய். உடனே அவள் மீது உனக்கு உரிமை என்கிறாய். அவளை உன் உடைமை என்கிறாய். சில ஆண்டுகளில் திருமண வாழ்க்கை சலித்துவிடுகிறது. அப்படியும் அவள் மீதுள்ள உரிமையை நீ கைவிட இஷ்டப்படுவதில்லை.

உனக்குப் பிரியமானவை, நீ ஏற்படுத்திக்கொண்ட உறவுகள், உன்னைக் கவர்ந்திழுப்பவை, நீ வெறுப்பவை முதலியவை எல்லாம் குறுக்கும் நெடுக்குமாக ஓடி, பின்னுகின்ற வலையின் பெயரே உலகம். உணர்ச்சிகளால் உருவான இந்த உலகத்தை அது உள்ளபடியே நீ பார்க்க வேண்டுமானால், உணர்ச்சிகளுக்கு வசப்படாத சாட்சி மனப்பான்மையை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

'ஆத்மாவின் சுபாவம் (இயல்பு) தொலைவில் இருப்பதன்று. அது அருகிலும் இருக்கவில்லை. அது மாற்றுகள் அற்றது (இரண்டு ஆத்மா கிடையாது). அது சிரமப்படாமல் சகஜமாக அமைந்

துள்ளது. அது மாறுதல்கள் அடைவதில்லை. அது எதனாலும் பாதிக்கப்படுவதில்லை.' **(சுலோகம் 181)**

**ஆ**த்மா தொலைவிலும் இல்லை. அருகிலும் இல்லை. அது உனக்குள்ளே இருக்கிறது. தொலைவு, அருகில் ஆகிய சொற்கள் வெளிப்பொருட்களுக்குத்தான் பொருந்தும். 'அருகில்' என்னும் சொல்லும் சிறிதளவாவது தொலைவில் இருப்பதையே காட்டுகிறது. 'அருகில்' என்பதும் ஓர் இடைவெளி இருப்பதைக் காட்டுகிறது. அந்த இடைவெளியையும் தூரம் என்று சொல்லலாம். 'அருகில்' என்பதும் தூரத்தை அளக்கவே உதவுகிறது. உன் உடலும் நிஜமான உள்மனிதனிலிருந்து சற்றுத் தொலைவில்தான் உள்ளது.

ஆத்மாவின் சில குணங்களில் ஒன்று **நிர்விகல்பம்.** அதற்கு மாற்று கிடையாது. உடலின் சேதமடைந்த உறுப்புகளுக்கு மாற்று உறுப்புகள் சேர்ப்பதுபோல் இரண்டாவது ஆத்மா என்று தேர்ந்தெடுப்பதற்கு எதுவுமில்லை.

ஆத்மா **நிராயாசம்,** ஆயாசம் தராதது. அதை அறிய சிரமமான முயற்சி செய்யவேண்டியதில்லை. அது ஏற்கெனவே நமக்குக் கிடைத்துள்ளது. அதை என்றும் நீ இழந்ததில்லை. ஆத்மா என்னும் பொக்கிஷம் எப்பொழுதும் உனக்குள்ளே பாதுகாப்பாக இருக்கிறது.

ஆத்மா **நிர்விகாரம்,** விகாரம் அல்லது மாறுதல்கள் அற்றது. உன்னை எவராவது புண்ணியாத்மா என்று போற்றி னாலும் சரி, பாபாத்மா என்று தூற்றினாலும், ஆத்மா உண்மையில் பாவம், புண்ணியத்திற்கு அப்பாற்பட்டது.

ஆத்மா **நிரஞ்சனம்** எனப்படுகிறது. அதன் மீது எப்பொருளும் தன் சாயத்தைப் பூசிவிட முடியாது. தன் பாதிப்பை ஏற்படுத்திவிட முடியாது. அதன் மீது எதுவும் ஒட்டிக்கொள்ள முடியாது. அது கறைபடாதது. உன்னை நரகத்தில் தள்ளினாலும் ஆத்மாவுக்குச் சேதமில்லை. உன்னிடம் இருக்கும் மாபெரும் செல்வமாகிய ஆத்மாவைப் பிறர் பிடுங்கிச்செல்ல இயலாது. அதைச் சிதைக்க முடியாது. திருடர்கள் அபகரிக்க வாய்ப்பில்லை.

ஆனால் ஆத்மா உள்ளே இருப்பது உனக்குத் தெரியவில்லை. நீ வெளிப்புறக் காட்சிகளைப் பார்த்து வாழ்க்கையை ஓட்டுகிறாய்.

சிலர் மூக்குக் கண்ணாடி அணிந்திருப்பார்கள். ஆனால் அதை எங்கேயோ வைத்துவிட்டதாகத் தேடுவார்கள். காதிலே பென்சில் செருகியிருக்கும். ஆனால் பென்சிலைக் காணோம் என்று மேசை டிராயரைக் குடைவோம். உள்ளே இருக்கும் ஆத்மாவை நீ வெளியே தேடுகிறாய். அது வெளியே கிடைக்காததால் உன் தவிப்பு அதிகரிக்கிறது. அல்லது உள்ளேயும் தேடாமல், வெளியேயும் கிடைக்காமல், நீ ஆத்மா என்பது பொய் என முடிவு செய்கிறாய்.

கொஞ்சம் சாந்தமாக உட்காரப்பா. தியானம் என்பதன் அடிப்படையே உட்காருதல்தான். அதன் ஆரம்பமே உட்காருதல் தான். ஓடாதே. தேடாதே. கலங்கிய நீரில் எதுவும் தென்படாது. மனம் சாந்த நிலைக்கு வந்தால் உன் பார்வை தெளிவாகும்.

ஒரு கதைப்படி 10 முட்டாள்கள் ஆற்றில் இறங்கி நடந்து அக்கரை சேர்கிறார்கள். எல்லோரும் வந்துவிட்டனரா என்று எண்ணிப் பார்க்கின்றனர். எண்ணும்போது தன்னை மறந்துவிட்டதால் ஒருவன் ஆற்றில் முழுகி இறந்துவிட்டான் என அழுது புலம்பினர். யார் எண்ணினாலும் ஒன்பதே வந்தது. அவ்வழியே சென்ற ஒருவர் இவர்களின் முட்டாள்தனத்தைக் கண்டு ஆளுக்கு ஓர் அடி கொடுத்து அவர்கள் பத்து பேரும் உயிருடன் இருப்பதை நிரூபித்தார். அறிஞர்களும் இம்மாதிரித் தவறு செய்வதுண்டு. அவர்கள் தங்களை விட்டுவிட்டு ஊருக்கு உபதேசம் செய்கிறார்கள். மேற்கண்ட முட்டாள்களுக்கு எண்ணத் தெரிவதால் முழுமையான முட்டாள்கள் என்று சொல்லிவிட முடியாது.

குருவும் இதைவிட அதிகமாக உணர்த்துவதில்லை. உன்னை ஒருமுறை தட்டி, 'நீதான் பத்தாவது ஆள். நீ இல்லாமல் போகவில்லை. நீ யாரைத் தேடுகிறாயோ அந்த நபர் நீதான். தத்வமஸி.' இவ்வளவுதான் குரு சொல்ல முடியும்.

'எல்லா மோகங்களிலிருந்தும் (பற்றுகளிலிருந்தும்) விடுபட்டு, தனது உண்மையான உருவத்தை (சுயரூபத்தை, சொரூபத்தை)

அறிந்தேற்றவன் சோகங்களைக் கடந்து, நிர்மலமான பார்வை பெற்றுப் பேரழகனாகத் திகழ்கிறான்.' **(சுலோகம் 182)**

**மோ**கம் (பற்று) ஒரு திரை மாதிரி. அது அகன்றால் உலகிலுள்ள எல்லாம் உண்மையில் உள்ளபடியே தெரியும். அப்படிப் பார்க்க இயன்றவன் எதையும் 'இது எனது, இது எனதன்று' என்று பிரிக்கமாட்டான்.

உன் சுயரூபத்தை அறிய நீ பிரயத்தனப்பட வேண்டிய தில்லை. அது உன்னிடம் ஏற்கெனவே அமைந்துள்ளது. நீதான் அதை மறந்துபோனாய். இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்பதையும், அப்படிக் கூட்டாவிட்டாலும் கூட்டுத்தொகை மாறாது என்பதையும் நீ நினைவில் வைக்கவில்லை உன் சொரூபத்தை வெளியிலிருந்து ஏற்க வேண்டியதில்லை. அது உன்னிடம் உள்ளதை நினைவுபடுத்திக் கொண்டால் போதும்.

இப்படி சொரூபத்தை (தான் யார் என்பதை) அடையாளம் கண்டுகொண்டவன் துன்பங்களைக் கடந்துசெல்கிறான். அவனது பார்வை தெளிவடைகிறது. அவனைத் தூய்மை சூழ்ந்து விளங்குகிறது. மனக்கோணல்கள் ஏதுமற்ற அம்மனிதன் தெய்விக ஒளியுடன் (தேஜஸ்) திகழ்கிறான்.

அத்தகையவனைத்தான் நாம் இந்தியாவில் போற்றிக் கொண்டாடுகிறோம். செல்வம், பதவி, அரசாட்சி, பேரரசு முதலிய வற்றிற்காக ஒருவரை உயர்ந்தவராக ஆன்மிக உலகில் கருதுவ தில்லை. ஆன்மிகத்தில் உனக்குள் அமைந்துள்ள சாம்ராஜ்ஜியம் தான் கவனிக்கப்படுகிறது.

பார்வையின் மீது திரை (ஆவரணம்) ஏதும் இல்லாதவன் அவன் எதையும் நேராக, அது உள்ள விதமாகவே பார்க்க முடிகிறது. எதை எப்படிப் பார்ப்ப வேண்டும் என்று அவன் திட்டமிடுவதில்லை. அத்தகையவன் ஆன்மிக அழகனாக விளங்குகிறான்.

'அனைத்துலகமும் கற்பனை மட்டுமே. ஆத்மா சுதந்திர மானது, நிரந்தரமானது. இவ்வாறெல்லாம் அறிகின்றவனை ஆன்மிக வீரன் எனலாம். அவன் குழந்தைத்தனமாக எதுவும் செய்யமாட்டான்.' **(சுலோகம் 183)**

**உ**லகத்தை உண்மையென்று நினைக்கின்ற வரையிலும் ஆத்மா கட்டுண்டு கிடக்கிறது. உலகம் நமது கற்பனை என உணர்ந்ததும் ஆத்மா சுதந்திரமாகிவிடுகிறது. உலகம் என்னும் பிரமைதான் விலங்காக நம்மைப் பூட்டுகிறது. இது உண்மையான விலங்கன்று. நீ நினைத்த மாத்திரத்திலேயே உடைத்து எறியலாம்.

குழந்தைகள் எதற்கும் பயிற்சி மேற்கொள்ளுகிறார்கள். மொழி கற்கவும் பயிற்சி செய்கிறார்கள். ஆனால் கற்ற மொழியை மறப்பதற்குப் பயிற்சி இருக்க முடியுமா? சம்பாதிக்கக் கடும் முயற்சி தேவை. செலவழிக்க முயற்சியா செய்யவேண்டியுள்ளது?

**ரா**மகிருஷ்ணரிடம் ஒரு பக்தன் 500 வெள்ளிக் காசுகள் சமர்ப்பித்தான். தானமாக ஏற்றுக்கொள்ள பிரார்த்தித்தான். ராமகிருஷ்ணர் அவனிடம், "நான் உன் தானத்தை ஏற்றுக் கொண்டேன். இப்போது இந்தக் காசுகள் எனக்குச் சொந்தம். நீ ஒரு காரியம் செய். இவற்றை எடுத்துச் சென்று என் சார்பாக கங்கை நதியில் எறிந்துவிட்டு வா," என்றார்.

பக்தனுக்கு சங்கடமாகிவிட்டது. ராமகிருஷ்ணர் தானம் ஏற்க மறுத்திருந்தால் பணத்தை வீட்டுக்குத் திரும்ப எடுத்துச் செல்ல முடியும். 'ஏற்றுக் கொண்டபின் நதியில் எறியச் சொல்கிறாரே. அவர் கட்டளையை மீற முடியாதே' என்று தயங்கியபடியே அவன் ஆற்றங்கரைக்குச் சென்றான்.

நீண்ட நேரமாகியும் அவன் திரும்பி வராததால், ராமகிருஷ்ணர் தன் அருகிலிருந்தவரிடம், "போய் தேடிப்பார். கங்கைக்குப் போனானா, இல்லியா? இப்பொழுது அவன் எங்கே? பணத்தைத் தண்ணீரில் எறிந்துவிட்டு வர இவ்வளவு நேரம் ஆகாதே," என்றார்.

அவர் அனுப்பிய ஆள் கங்கைக் கரைக்குச் சென்று பார்த்தார். அங்கு கூட்டமாக இருந்தது. பக்தன் ஒவ்வொரு காசாக எடுத்து, படியில் தேய்த்துப் பார்த்தபின், 'ஒன்று, இரண்டு' என்று கூறியபடி தண்ணீரில் எறிந்துகொண்டிருந்தான். இதனால் நேரம் ஓடியது.

இதைக் கேள்விப்பட்டதும் ராமகிருஷ்ணரே ஆற்றங் கரைக்குப் போனார். பக்தனைப் பார்த்து அவர், "ஏ பைத்தியமே! பணம் சம்பாதிக்கையில்தான் எல்லாரும் பணத்தை எண்ணு வார்கள். சில காசுகளை உரசியும் அசலா, போலியா என்று ஆராய்வார்கள். பழைய பழக்கம் உனக்கு நீங்கவில்லையா? மீதியுள்ள காசுகளை மொத்தமாகத் தண்ணீரில் எறிந்துவிட்டுப் போ." என்றார்.

சேகரிக்கும்போது பயிற்சி தேவைப்படுகிறது. போக இன்பங்களை முயன்று பெற்று அனுபவிக்கிறோம். தியாகம் செய்ய முயற்சியோ, பயிற்சியோ தேவையில்லை. விரல் சொடுக்கும் நேரத்தில் தியாகம் நிகழ்ந்துவிட முடியும். ஞானத் திற்கும் பயிற்சி தேவையில்லை. ஏனெனில் ஞானம் உனது சுபாவம். இதை உணர்ந்தால் தாமதமின்றி ஞானம் கிடைத்துவிடும். எது உனது சுபாவம் இல்லையோ அதை அடையத்தான் முயற்சி தேவை. குழந்தை பிறக்கும்போது அது எந்த மொழியும் அறிந்திருக்காது. ஏனெனில் மொழித்திறன் நமக்கு இயற்கையாக அமைந்திருக்கவில்லை. மொழி கற்க முயற்சி தேவை. மௌனமாக இருத்தல் எல்லாருக்கும் சுபாவமானது. அதற்கு முயற்சி தேவையில்லை.

நீ அடைய வேண்டியது உன்னிடம் ஏற்கெனவே உள்ளது. நீ விழித்துக்கொண்டால் போதும். உனக்குரியதைக் கேட்டுப் பெறு. இறைவன் நமது பிறப்புரிமை. அவ்வுரிமையைச் செயல்படுத்துவது நம் கடமை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்களை பின் தொடர்ந்தே இதுவரையிலும் நான் அலைந் தேன். எதிர்காலத்தில் நான் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்வீராக!**

**செ**ய்தல் என்பது தவறான அணுகுமுறை. அதில் அலைச்சல் அடங்கியுள்ளது. அலைவது உனக்குப் பிடித்திருக்கிறதோ என்று சந்தேகம் ஏற்படுகிறது. இப்படி கர்த்தாவாக இருக்காதே. சாட்சியாகிவிடு. கர்த்தா உணர்வு நீடிக்கும்வரை என்னுடனான தொடர்பும் உனக்குப் பயன் தராது. மனம் சுலபத்தில் சாட்சியாகிவிடாது. அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்றே அது நச்சரிக்கும்.

நீ எதுவும் செய்யாமலிருந்தால் எல்லாமும் நடைபெறும்! ஆனால் எப்போதும் ஏதாவது செய்தபடி இருக்க வேண்டுமென நீ பிடிவாதமாக இருக்கிறாய். இதுவரை நீ செய்து-செய்து தோல்வி காணவில்லையா? உன் செயல்களுக்கு நீ என்ன பலன் கண்டாய்? ஆனால் மனம் சும்மாவிடாது. அடுத்த முறை உன் செயல் பலன் தரும் என்று உன்னைச் செயலுலகத்தில் (world of action) தள்ளிவிடும். நீ இருக்கவேண்டியது சிந்தனை உலகில் (world of contemplation) ஆகும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருசமயம் செருப்புக்கடையில் உதவியாளராக வேலை பார்த்தபோது ஒருவர் செருப்பு வாங்க வந்தார். அவர் தேர்ந்தெடுத்த செருப்பு ஜோடி விலை ரூ.160. அவர் தன்னிடம் ரூ.150தான் உள்ளதால் செருப்பை

எடுத்துச்சென்று வீட்டில் வைத்துவிட்டு மீதி பத்து ரூபாயைக் கொண்டு வருவதாகச் சொன்னார். முல்லா அவரை முதலாளி யிடம் அனுமதி கேட்டுவரும்படி அனுப்பினார். முதலாளி 'முடி யாது' என்று சொல்ல நினைத்தபோது முல்லா செருப்புகளைப் பெட்டியில் வைத்து நூலால் கட்டி வந்தவரிடம் கொடுத்தார். முதலாளியைப் பார்த்து, 'செருப்பைக் கொடுத்துவிடலாம். இவரை நம்பலாம். பத்து ரூபாய் கொண்டுவந்துவிடுவார்,'' என்றார்.

வந்தவர் செருப்புப் பெட்டியை எடுத்துச்சென்ற பிறகு முதலாளி, "நஸ்ருத்தீன், உனக்கு அந்த ஆளை ஏற்கெனவே தெரியுமா?'' என்று கேட்டார். அதற்கு நஸ்ருத்தீன், "ஐயா, எனக்கு அவரைத் தெரியாதுங்க. இதுக்கு முன்னாடி அவரைப் பார்த்த தில்லீங்க. இந்த ஊர்க்காரர்தானான்னும் தெரியலீங்க. ஆனா அவர் கட்டாயம் திரும்பிவருவாருங்க. எங்கே ஏமாத்திவிடுவாரோன்னு பயப்பட வேணாம். ஏன்னா ஒரே காலுக்கான ரெண்டு செருப்பை கட்டிக் கொடுத்திருக்கேன்,'' என்றார்!

ஒரு காலுக்கான இரண்டு செருப்புகளை இரண்டு கால்களில் மாட்டிக் கொள்ள முடியாது அல்லவா? கடவுளும் நீ தவறான செருப்புகளை மாட்டிக்கொண்டு உலகில் அலையக் கூடாதென நினைக்கிறார். நீ திரும்பி வந்துவிட வேண்டுமென விரும்புகிறார். உலகம் ஒரு பயிற்சிக் களம். இங்கே விழிப்பதைக் கற்றுக்கொள்ள வேண்டும். செய்வதிலேயே (கர்மத்திலேயே) உழன்றுகொண்டிருந்தால் ஆன்மிகப் பலன் விளையாது.

கடவுள் வழிபாட்டிற்காக கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டதாகவும் சிலர் கூறுவர். ஆனால் கடவுளை வழிபடச் சிறிதளவும் கஷ்டமான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டிய தில்லை. பிரார்த்தனை என்பது முள்ளில்லாத பூ போன்றது. பிரார்த்தனை மென்மையானது.

கடவுளின் அருளைத் தேடும் முயற்சியில் கஷ்டம் இருக் காது. நீ கடினமான வழிமுறைகளை மேற்கொள்ள வேண்டிய தில்லை. அவை உன் அகங்காரத்தின் வெளிப்பாடு ஆகும். அவை ஊராரின் கவனத்தைக் கவருமேயல்லாது கடவுளின் கவனத்தை ஈர்க்காது. "கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதித்தேன்.

கஷ்டப்பட்டு இந்தப் பதவியை அடைந்தேன்'' என்றெல்லாம் சொல்வதுபோல் கடவுள் விஷயத்தில் 'கஷ்டப்பட்டு அவரை அடைந்தேன்' என்று சொல்வது பொருந்தாது.

கடவுளை சந்தோஷப்படுத்துவதற்காக கஷ்டங்களை மேற்கொண்டு தன் சுகத்தை அழித்துக்கொண்டதாகச் சிலர் கூறுவர். கடவுளுக்கு எது சந்தோஷம் தரும் என்று யாருக்குத் தெரியும்? உன்னிடம் ஏற்கெனவே சந்தோஷம் இருந்ததெனில் கடவுளைத் தேடும் சிரமத்தை ஏன் எடுத்துக் கொள்ளப்போகிறாய்? சுகமான வாழ்க்கை நடத்தும் மனிதன் கடவுளை எப்போதாவது நினைப்பதைப் பார்த்திருக்கிறாயா? நீ ஏற்கெனவே துன்பத்தில் ஆழ்ந்திருந்தால்தானே கடவுளை நினைப்பாய்?

கவிதைகள் அழகாக உள்ளன. இதனால் அவை உண்மையாகிவிடுவதில்லை. சத்தியம் அழகானது. ஆனால் அழகானவை எல்லாம் சத்தியமல்ல. ஒரு பொருள் அழகாக உள்ளதெனில் அது சத்தியமாகிவிடாது. நீ அழகு என நினைப்பவை உடலழகுபோல் அழுகுபவையாக உள்ளன. உடல் சத்தியமில்லை; வானவில் சத்தியமில்லை; கனவுகள் உண்மை யில்லை. சத்தியம் உனக்குள் மட்டுமே ஆத்மாவாக இருக்கிறது.

கடவுள் பக்தர்களிடம் உடல் கஷ்டமோ உயிர்பலியோ எதிர்பார்க்கவில்லை. கடவுளுக்காக உயிர்பலி கொடுக்கச் சொல்பவர்கள் மோசடிக்காரர்கள். உன்னையே கூட தர்மத்தைக் காக்க உயிர் தியாகம் செய்யத் தூண்டுபவர்கள் உள்ளனர். மதத்தைக் காக்க உயிர் நீத்தால் சுவர்க்கம் கிடைக்குமென மதத்தலைவர்கள் சொல்கிறார்கள். மதம் அடிப்படையில் அன்பு வழியைத்தானே போதிக்குமே தவிர, போரைத் தூண்டாது.

கடவுள் உன்னை உயிர் தியாகம் செய்யச் சொல்லவில்லை. அவர் உன்னிடம் திருவிழா மனநிலையை எதிர்பார்க்கிறார். நீ அழுதும், புலம்பியும், கெஞ்சியும், கோயிலில் உருண்டும், உன்னை வருத்திக் கொண்டும் அணுகுவதைக் கடவுள் விரும்பவில்லை. நீ அலங்கரித்துக் கொண்டு, நறுமணம் பூசி, ஆடியபடி, பாடியபடி தன்னை நெருங்க வேண்டும் என்பதே அவரது எதிர்பார்ப்பு.

இளைஞன் இளமைக் காலத்தைவிட குழந்தைப் பருவத்தில் அதிக சந்தோஷம் இருந்ததாகக் கூறுகிறான். முதியவர் இளமைக் காலமே இனிமையாக இருந்தது என்கிறார். மரணப் படுக்கையில் இருப்பவர் கடந்தகால மொத்த வாழ்க்கையே இன்பமாக இருந்தது என்பார். இவ்வாறு நீ இருக்கின்ற கட்டத்தில் உனக்கு சந்தோஷமாக இல்லை. அதைவிட்டு அகன்றதும் நீ விட்டுச்சென்ற சூழ்நிலை இனிமையாகத் தோன்றுகிறது.

குழந்தைப் பருவம் உண்மையிலேயே சந்தோஷமாக இருந்ததா? வளரும் பருவமாதலால் வலியைப் பொறுத்துக் கொண்டே எதையும் கற்க நேர்ந்தது. எதற்கும் பிறர் உதவி தேவைப்பட்டது. ஆகவே அவர்களிடம் திட்டும் அடியும் வாங்க நேர்ந்தது. அப்பா, அம்மா, அண்ணன், அக்கா, ஆசிரியர் என மூத்தவர்கள் திட்டுகிறார்கள், மிரட்டுகிறார்கள். குழந்தைப் பருவத்தைக் கொண்டாடும் கவிதைகள் தமது குழந்தைப் பருவத்தை முற்றிலும் மறந்துபோன கிழவர்களாலேயே எழுதப்பட்டவையாகும்!

பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் சிறுவனை அடிக்கிறார். பிறகு தன் செய்கையை நியாயப்படுத்துவதுபோல், "நான் உன்னை நேசிக்கிறேன். அதனால்தான் அடித்தேன். அப்போது நீ சீர்திருந்துவாய். வாழ்க்கையில் முன்னேறுவாய்," என்கிறார். சிறுவன் தன் மனத்துக்குள், 'நானும்தான் உங்களை நேசிக்கிறேன். நீங்கள் தலைமை ஆசிரியராக உயர வேண்டும் என விரும்புகிறேன். அதற்காக நான் உங்களை அடிக்க முடியுமா?' என்று கேட்டுக்கொள்கிறான்.

குழந்தைகள் தாங்கள் விரும்பும் எப்பொருளையும் பெற, பிறரை நம்பியே உள்ளனர். இனிப்பு, ஐஸ்க்ரீம் முதலியவை கேட்டாலும் கிடைப்பதில்லை. 'பல் கெட்டுப்போகும், வயிற்றில் பூச்சி வரும்' என்று பெரியவர்கள் பயமுறுத்தி அடக்கி விடுகிறார்கள். அது மட்டுமல்ல, வாய்க்குச் சப்பென்று இருக்கிற கீரை முதலியவற்றையே உண்ணும்படி சிறுவர்கள் வற்புறுத்தப் படுகிறார்கள். அவற்றிலுள்ள வைட்டமின்கள் பற்றி ஆசிரியர்கள் படங்கள் மூலமாகவும், பாடங்கள் மூலமாகவும் அறிவுறுத்து கிறார்கள்.

குழந்தைகள் வாழ்க்கையை சுகமென நினைப்பதில்லை. நீ இளைஞன் ஆனபின் துன்பங்களையும் சவால்களையும் எதிர்கொள்ள நேரிடும்போது குழந்தைப் பருவம் சுகமானதாக இருந்ததுபோல் நினைப்பாய். ஆனால் அது பொய்யான கற்பனை. இக்காலம் சுகமாக இல்லையெனில் இரண்டு மாற்றுகள் உள்ளன: கடந்த காலம் சுகமாக இருந்ததென நினைப்பது; எதிர்காலம் சுகமாக அமையுமென நம்புவது. எதிர்கால சுகம் பற்றி ஊகிக்க முடியாது. ஆனால் கடந்த காலம் முடிந்துபோனது. அதன் வழியாகத்தானே இளமைப் பருவத்தை வந்தடைந்துள்ளாய். கடந்த காலம் பற்றி நினைக்கையில் அப்போதைய வாழ்வின் கூரான கற்கள், முள்செடிகள், தும்பு-தூசி எல்லாம் மறந்துபோய் இனிய நினைவுகளே மிஞ்சியுள்ளன.

ஒரு நண்பரும் நானும் மலைவாசஸ்தலம் (hill station) ஒன்றில் சில நாள் தங்கினோம். தினமும் குன்றுகளில் ஏறி இறங்கினோம். அவர் எதையும் அனுபவிக்கவில்லை. எப்போதும் சிடுசிடுப்புடன் குறை கூறியபடியே இருந்தார். ரயிலில் ஊர் திரும்பினோம். எங்கள் பெட்டியில் இருந்த இன்னொருவர் எங்களிடம், "மலையிலிருந்து வருகிறீர்கள் போலுள்ளதே. அங்கெல்லாம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். என் நண்பர் என்னை முந்திக்கொண்டு, தான் தங்கிய ஊர் வசதிகளுடன் இருந்ததாகவும், ஒவ்வொரு நாளும் சுகமாகக் கழிந்ததாகவும் விவரமாக வர்ணித்துக் கூறினார்! வெளியூர் அல்லது வெளிநாடு சென்று வருபவர்கள் அங்கு எவ்வளவு சிரமப்பட்டிருந்தாலும், கௌரவம் கருதி அதை மறைத்துவிடுவார்கள். கேட்பவரையும் அங்கு போகத் தூண்டும் அளவிற்கு அந்த இடத்தைப் புகழ்ந்து பேசுவார்கள்.

வயதானவர் நடுத்தரப் பருவம் இனிமையாக இருந்ததாகக் கற்பனை செய்வார். ஆனால் நடுவயதில்தான் வாழ்க்கையில் அதிகபட்சப் போராட்டங்கள், சவால்கள், தொழில் போட்டிகள், கவலைகள், தோல்விகள் ஆகியவற்றை நாம் சமாளிக்க வேண்டியுள்ளது. மரணப் படுக்கையில் உள்ளவனோ வாழ்க்கை முழுவதுமே இனிம்மையாக இருந்ததாக நினைத்துக்கொண்டு, உலகை விட்டுப் போகிறேனே என வருந்துகிறான்.

ஆகவே சுகம் இல்லாத இடத்தில் சுகம் உள்ளதாக நீ கற்பனை செய்யாதே. துன்பத்தை அப்படியே துன்பமாக நினை. இன்பமோ, துன்பமோ அதை அப்படியே ஏற்றுக்கொள்.

கடவுளை வழிபடுவதெற்கென்று காசி, சாரநாத், கயா என்றெல்லாம் குறிப்பிட்ட இடத்திற்குச் செல்ல வேண்டியதில்லை. பொழுதுபோக்காக இம்மாதிரி ஊர்களுக்குச் செல்வதில் ஆட்சேபணையில்லை. நீ எங்கே தலைகுனிந்து வணங்குகிறாயோ, அங்கே கடவுள் வருகை தருகிறார். பிறகு அவரைத் தேடி வேறிடம் செல்ல வேண்டிய அவசியமென்ன? வேறு எந்த விலாசத்தில் அவர் உறைகிறார் என்று உனக்குத் தெரியுமா? நீ எந்த புனிதத் தலத்திற்குச் சென்றாலும் நீ நீயாகவேதான் இருப்பாய். அங்கெல்லாம் ஏன் அலைய வேண்டும்? கற்சிலைகள் எல்லா ஊரிலும் உள்ளனவே. காசிக்குப் போனால் புண்ணியம் என்கிறாயே. காசியில் வாழ்பவர்கள் எல்லாம் புண்ணியவான்களா?

**கா**சியில் இறந்தால் சுவர்க்கம் என்றும், அருகிலுள்ள மகஹர் என்னும் ஊரில் இறப்பவர் மறுபிறவியில் கழுதையாகப் பிறப்பார் என்றும் ஒரு மூடநம்பிக்கை உண்டு. கபீர்தாசர் வாழ்ந்ததெல்லாம் காசியில்தான். ஆனால் இறக்கும் சமயம் அவர் மகனை அழைத்து, "என்னைக் கட்டிலுடன் எடுத்து மகஹரில் கொண்டுபோய் வைத்துவிடு," என்று கட்டளையிட்டார்!

"அப்பா, உங்களுக்கு வயதாகிவிட்டதால மூளை குழம்பிப் போச்சா? மகஹரில் இறந்தால் கழுதையாக பிறக்க நேரிடும் என்று அவ்வூர்க்காரர்களே அஞ்சுகின்றனர்," என்று மகன் யதார்த்தத்தைச் சுட்டிக்காட்டினான்.

கபீர்தாசர் காரணம் சொன்னார். "நான் கழுதையாகப் பிறப்பதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் காசிக்குக் கடன்பட்டிருப்பதை நான் விரும்பவில்லை. என் சொந்தப் பொறுப்பில் நான் சுவர்க்கத்தை அடைய முடியுமானால் சம்மதம் தான். காசியில் இறப்பதால் மட்டும் சுவர்க்கம் கிடைக்குமானால் அதில் என்ன சிறப்பு இருக்கிறது? எந்த முகத்தோடு கடவுளை நான் காண்பேன்? கடவுள் சொல்வார், 'காசியில் இறந்ததால் கபீர் சுவர்க்கத்திற்கு வர முடிந்தது. மகஹரில் இறந்திருந்தால் கழுதைப்

பிறவியல்லவா கிடைத்திருக்கும்?' ஆனால் நான் மகஹரில்தான் இறக்கப்போகிறேன். அங்கு இறந்தும் எனக்கு சுவர்க்கம் கிடைத்தால் அது எப்பேர்ப்பட்ட பெருமை! என் புண்ணிய பலத்தால் சுவர்க்கம் கிடைத்ததே தவிர, காசிக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று கர்வமாகச் சொல்லிக்கொள்ள முடியும்'' என்று அவர் விளக்கினார்.

நீ கடவுளைத் தேடி புண்ணியத் தலங்களுக்குப் போவது உனது அறியாமையால்தான் அதற்குக் கடவுள் பொறுப்பாக மாட்டார். கடவுள் யாரையும் அலையச் சொல்லவில்லை.

மேற்கொண்டு என்ன செய்வதென்று கேட்டாய். என்ன செய்வது என்று சொல்லித்தந்தால் நான் உனக்கு எதிரிபோல் ஆகிவிடுவேன். நீ நிறையத்தான் செய்துவிட்டாய். இனி எதுவும் செய்யாத நிலையில் வீற்றிரு. சாட்சியாகிவிடு. பிறகு பார் — கர்த்தாவாக அல்ல, பார்வையாளனாக. அமைதியாக உட்கார். கடவுள் காட்டுவதைப் பார். உன் மூலம் கடவுள் செய்விப்பதைச் செய். ஆனால் கர்த்தா என உன்னை நினைக்காதே. பசியெடுத்தால் உணவு தேடு. தாகமா? குளத்துக்குப் போ. தூக்கம் வருகிறதா, படுத்துவிடு. தூங்கி முடித்ததும் எழுந்துவிடு. ஆனால் எப்போதும் சாட்சி மனநிலையிலேயே இரு.

உனக்குப் பசியெடுத்தால் 'எனக்குப் பசி' என்று கூறாதே. என்னுள் இருக்கும் 'கடவுளுக்குப் பசிக்கிறது' என்று சொல். தூக்கமா? 'கடவுளுக்குத் தூக்கம் வந்துவிட்டது' என்று சொல். தாகமெடுத்தால் நீர் பருகு. ஆனால் கடவுள் குடித்ததாக நினைத்து 'திருப்தியா?' என்று கேள். இப்படியே பழகிக்கொண்டே போனால் ஒரு கட்டத்தில் நீயும் கடவுளும் வெவ்வேறு அல்லர் என்று நினைக்கும் நிலை உருவாகும்.

மருத்துவமனை ஒன்றில் கம்பவுண்டர் ஒரு சிறுவனின் காலில் துணிக்கட்டு போட்டுக்கொண்டிருந்தார். சிறுவன் வீறிட்டழுதான். கட்டுப்போடவிடாமல் தடுத்தான். டாக்டர் கோபமாக உள்ளே வந்து கம்பவுண்டரை, "தள்ளி நில். நான் கட்டுப்போடுகிறேன்," என்று விலக்கினார். பிறகு சிறுவனிடம், "கத்தினால் பெரிய ஊசி போடுவேன்," என்று பயமுறுத்தினார்.

டாக்டர் கட்டுப்போடும்போது சிறுவன் தடுத்து நடுவில் ஏதோ சொல்ல வாய் திறந்தான். ஆனால் டாக்டர், "வாயைத் திறந்தா ஊசி போட்டிடுவேன்." என்று மீண்டும் மிரட்டினார். பிறகு கட்டுப்போட்டு முடியும்வரை சிறுவன் அமைதியாக இருந்தான். கம்பவுண்டரை வெற்றிப் புன்சிரிப்புடன் பார்த்தபின், டாக்டர் பையனிடம், "நீ நடுவில் என்னவோ சொல்லவந்தாயே, என்ன விஷயம்?" என்று விசாரித்தார்.

"டாக்டர் அங்கிள், நான் தடுத்துச் சொல்லவந்தது என்னவென்றால், எனக்கு வலது காலில்தான் அடிபட்டு காயம் ஏற்பட்டது. நீங்களோ இடது காலுக்குக் கட்டுப்போடுகிறீர்களே என்பதுதான்!" என்று சிறுவன் விளக்கினான்.

கர்த்தா உணர்வில்தான் நோயுள்ளது. அதற்குத்தான் மருந்து தர வேண்டும். சாட்சி மனப்பான்மைதான் அந்த மருந்து. நீயோ உன் பிரச்சினைகளுக்கு வேறு இடங்களில் சிகிச்சை தேடுகிறாய்.

ஜென் துறவி ரின்ஜாயியிடம் ஒருவன் வந்து, "நீங்கள் ஞானம் பெற்றுவிட்டீர்கள். உங்களுக்கு ஞானம் எப்படிக் கிடைத்தது என்று சற்று சொல்லுங்கள். நான் ஞானம் பெற என்ன செய்ய வேண்டும்?" என்று விசாரித்தான்.

"சரியப்பா, வழி காண்பிக்கிறேன். நீ அமைதியாக இருந்து நான் என்ன செய்கிறேன் என்று பார்," என்றார் ரின்ஜாயி. சட்டென்று அவர் கண்களை மூடிக்கொண்டார். ஐந்து நிமிடங்கள் கழித்துக் கண்களைத் திறந்தார். 'புரிகிறதா?' என்று கேட்டார். வந்தவன் ஒன்றும் புரியாமல் விழித்தான்.

ரின்ஜாயி விளக்கினார். "ஞானம் பெறுவதற்குக் கண்களை மூடி, சிறிது சிந்தித்து, பிறகு திறந்தால் போதும். அதற்குமேல் எதுவும் செய்ய வேண்டியதில்லை. முதலில் நான் உறக்க நிலையில் இருந்தேன். இப்போர்து விழிப்பு நிலையில் உள்ளேன். முதலில் சுய உணர்வு அணைந்திருந்தது. இப்போது சுய உணர்வென்னும் தீபம் எரிகிறது. ஞானபிரகாசம் பரவுகிறது," என்றார்.

புத்தர்கள் எனப்படுவோரும் உன்னைப் போன்றவர்களே. அவர்கள் ஒரு விஷயத்தில்தான் உன்னிடமிருந்து வேறுபடு

கிறார்கள். நீ கண்களை மூடியபடி உட்கார்ந்திருக்கிறாய். அவர்கள் கண்களைத் திறந்துவைத்திருக்கிறார்கள். இமைகள் மூடியிருப் பதும் திறந்திருப்பதும்தான் நமக்கும் ஞானிகளுக்கும் இடையே யுள்ள வேறுபாடு.

மேற்கொண்டு என்ன செய்யலாம் என்று கேட்கிறாய். செய்தால் கிடைப்பது உலக வாழ்க்கை. செய்யாமலிருந்தால் கிடைப்பவர் கடவுள். செய்யாநிலையை அடைவதற்காக நீ சாட்சியாகிவிடு. என்னிடம் வந்துவிட்டாயல்லவா? அடுத்து, இப்படி உட்காரு. முதல்தரமான ஆன்மிகச் சோம்பேறி ஆகிவிடு!

சாதாரணச் சோம்பேறிக்கும், ஆன்மிகச் சோம்பேறிக்கும் இடையே என்ன வித்தியாசம்? சாதாரணச் சோம்பேறி எதுவும் செய்வதில்லை; கை-காலை அசைப்பதில்லை; இருந்த இடத்தில் அப்படியே கிடக்கிறான்.

ஆன்மிகச் சோம்பேறி செயல்கள் புரிகிறான்; கடமைகளை நிறைவேற்றுகிறான். ஆனால் கடவுள்தான் தன்னைக் கொண்டு அனைத்தும் செய்விப்பதாகக் கருதுகிறான். அவன் தன்னை கர்த்தா என்று நினைப்பதில்லை. அவன் புதிது புதிதாகச் செயல் திட்டங்கள் தயாரிப்பதில்லை. கடவுள் இயக்கினால் செயல் புரிகிறான். பிறகு ஒதுங்கி உட்கார்ந்து விடுகிறான். கட்டளை கிடைத்தால் செய்கிறான் கிடைக்காவிடில் ஓய்வெடுக்கிறான். செயலையே கைவிடுபவன் சாதாரணச் சோம்பேறி. தான் செயல்புரிபவன் என்னும் எண்ணத்தைக் கைவிட்டு, எல்லாம் செய்தும் எதுவும் செய்யாதவன்போல் இருப்பவன் ஆன்மிகச் சோம்பேறி. நீ ஆன்மிக சோம்பேறித்தனத்தின் சிகரத்தைத் தொடுவாயாக! எனது உபதேசமும் இதுவேயாம்.

## இரண்டாம் கேள்வி (கேட்பவர் கிருஷ்ணப்ரியா)

**ஓஷோ அவர்களே! எனது பேச்சு, எண்ணம், உணர்வு, அன்பு, பிரார்த்தனை, சிரிப்பு, அழுகை எல்லாமே பொய் என எனக்குத் தோன்றுகிறது. நான் என்னை நடமாடும் பொய் மூட்டையோ என சந்தேகிக்கிறேன். நான் இந்தக் கேள்வியைக் கேட்பதே பொய்யோ என்று எனக்கு பிரமை தட்டுகிறது.**

**உ**னக்குள் சத்தியத்தின் கிரணம் இறங்கியிருப்பதாகத் தெரிகிறது. அப்படியானால் பாதி வேலை முடிந்துவிட்டதெனப் பொருள். நிர்வாண நிலை அதிகத் தொலைவில் இல்லை. சத்தியத்தை நெருங்கும் போதுதான் எதெல்லாம் பொய் என்பது தெளிவாகிறது. இது சுபமான விஷயம். இந்த நிலையை நீ தற்போது அடைந்துள்ளமைக்காக பயப்படாதே. இந்த சங்கடமான நிலையைப் பொறுத்துக்கொள்.

நீ ஒருவருடன் பேசுகையில், "நான் சொல்வது பொய். இதை அப்படியே ஏற்றுக்கொள்க," என்றால் அவர் திகைப்பார். "உனக்குக் கிறுக்கா? நீயே பொய் எனச் சொல்வதை நான் எப்படி ஏற்க முடியும்?" என்று கேட்பார். மக்கள் உண்மையை ஏற்பார்கள்; பொய்யை ஏற்கமாட்டார்கள்.

ஆனாலும் நாம் பொய்யை ஆதாரமாகக் கொண்டு வாழத் தயங்குவதில்லை. ஏனெனில் உண்மை எதுவென நமக்குத் தெரியாது. உயிர் வாழ ஏதாவது ஆதாரம் வேண்டும். வாழ்வதற்கு காரணமாக ஏதாவது சாக்குத் தேவை. அதற்குப் பொய் உதவுகிறது. உட்கார நிழல் தேவை. அது நமது நிழலேயானாலும் சரிதான். உண்மை எது என்ற தெரியாத நிலையிலும் நாம் வாழ வேண்டியிருப்பதால், பொய்யையே உண்மையெனக் கருத வேண்டியுள்ளது.

**ஜெ**ர்மானிய தத்துவ அறிஞரான ஃப்ரடரிக் நீத்ஸே (1844-1900) 'கடவுள் இறந்துவிட்டார். மனிதன் சுதந்திரமானவன்' என்று அறிவிப்புச் செய்தார். ஆனால் மனிதன் வாழ ஓர் ஊன்றுகோல் தேவை என்பதை அவர் புரிந்துகொள்ளவில்லை. ஆகவே கடவுள் இல்லையென்றால் புதிதாகக் கடவுளைப் படைக்க வேண்டியுள்ளது. பொய்க் கடவுள் எனத் தெரிந்தாலும் அவர் ஓர் ஆதாரமாக உதவுகிறார். கடவுள் இல்லாமல் மனிதனால் வாழ முடியாது. கடவுளை மறுத்த நீத்ஸேயும் மனக்கோளாறால் 10 ஆண்டுகள் (1878-88) கஷ்டப்பட்டார். கடவுள் இறந்துவிட்டார் என்பதை மனிதன் சுதந்திரமானவன் என்பதுடன் சேர்த்துப் பார்க்க வேண்டும். கடவுள் இல்லாமலே சுதந்திரமாகச் செயல்படுவதற்கு மனிதன் விசேஷமான வலிமை பெற்றவனாக இருக்க வேண்டும். நீத்ஸேயிடம்கூட அந்த வல்லமை இல்லை. அவர் தமது

நாட்குறிப்பில் ஓரிடத்தில், 'மனிதன் பொய்யின் உதவியின்றி வாழ முடியாதென எனக்குத் தோன்றுகிறது. அது எந்த வகைப் பொய்யாக வேண்டுமானாலும் இருக்கலாம். நான் எல்லாப் பொய்களையும் கைவிட்டேன். அதனால்தானோ என்னவோ, எனக்கு மூளைக் குழப்பம் அதிகரித்தபடியே செல்கிறது' என்று எழுதியுள்ளார்.

நீ 'என் சிரிப்பும் என் அன்பும் பொய்யாகத் தோன்றுகிறது' என்று சொல்வதால், உலகில் உண்மையான சிரிப்பும், உண்மையும் இருக்க வாய்ப்புள்ளது என்பது தெளிவாகிறது. எல்லாக் காசுகளும் போலி என்றால், செல்லும் காசே கிடையாதெனில், போலிக் காசுகளை எந்த அடிப்படையில் போலி என்று கூறுவாய்? ஒன்றைப் போலியானது என்று கூற, ஒப்பீட்டுக்காக, அசலான ஒன்றும் இருந்தாக வேண்டும். அசலான ஒன்று இல்லாமல் நகல் என்று தனியாக இராது.

நீத்ஸேயின் பார்வையில், உண்மை என்பதே கிடையாது. மனிதன் ஏற்றுக்கொண்டவை எல்லாம் பொய்யின் வகைகள். அவர் சொன்னதில் பாதி சரி. உலகம் மாயை என்றும் சொன்னார். இது புதியதன்று. எல்லா ஞானிகளும் இதைக் கூறியுள்ளனர். ஆனால் உலகம் ஏன் மாயை என்றால், அதன் புகைமூட்டத்தின் பின்னணியில் பிரம்மமும் வீற்றிருக்கிறார். அவர்தான் நிஜம் (ப்ரஹ்ம ஸத்யம்). கனவு பொய். ஏனெனில் அந்தக் கனவின் பின்னணியில் அதைக் காண்பவன் ஒருவன் நிஜமாக உள்ளான். நீத்ஸே இந்தப் பின்னணியைக் கவனிக்கவில்லை.

இந்த அரைக் கிணறுவரையே தாண்டிய முயற்சியால், நீத்ஸேயின் கருத்தை ஏற்றுக்கொண்ட நாடுகளில் குழப்பமே தலைதூக்கியது. நீத்ஸே 'கடவுள் இல்லை' என்று சொன்னதை ஜெர்மனி ஏற்றுக்கொண்டது. விளைவு? அங்குதான் ஹிட்லர் தோன்றினார். மனிதனுக்குச் சார்ந்து நிற்பதற்கு யார் தோளாவது தேவைப்படுகிறது. கடவுள் பொய்யென்றால், இயேசுநாதர் வேண்டாம் என்றால், மக்கள் ஹிட்லரை நம்பத்தொடங்கினர். இந்த நம்பிக்கையின் காரணமாக உலக வரலாற்றில் பயங்கர விளைவுகள் உண்டாயின.

கார்ல் மார்க்ஸ் மனிதனுக்கு மதம் தேவையில்லை என்றார். மதத்தை அபினிக்கு ஒப்பிட்டார். இக்கொள்கை ருசிய நாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதன் விளைவாக நாடே கடவுள் நிலையை அடைந்துவிட்டது. அதன் பிரதிநிதியாக ஸ்டாலின் சிம்மாசனத்தில் அமர்ந்தார். கடவுளின் கருணை ஆட்சிக்குப் பதில் ஸ்டாலினின் கொடுங்கோல் ஆட்சி அமலுக்கு வந்தது.

இக்கேள்வியைக் கேட்டவருக்கு நான் சொல்லிக்கொள்வது: எல்லாம் பொய்யெனத் தெரிந்தால், பாதிக் கிணறு தாண்டியாகி விட்டது. மீதியைக் கடக்கப் பொறுமையாக முயன்றால் உண்மை என்னும் கட்டத்தை அடையலாம். பொய் என்பது இருந்தால் உண்மையும் நிச்சயமாக இருக்கும். எனவே பொய்யிலிருந்து உண்மைக்குச் செல் (அஸதோ மா ஸத்கமய).

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! தாங்கள் சந்நியாசம் வழங்கும்போதே முக்தியும் [விடுதலையும்] தந்துவிடுவதாகக் கூறினீர்கள். உடனே மோட்சநிலை என்றால் இதுவரை சேர்ந்துள்ள கர்ம பலன்கள் என்ன ஆகும்? அவற்றை அனுபவித்த பிறகுதானே முக்தி சாத்தியப்படும்? சஞ்சிதம் எனப்படும் பழைய வரவுகளின் நிலை என்ன?**

முக்தி என்பது உனது சுபாவத்திலேயே அமைந்துள்ளது. நான் உனக்கு ஆன்ம விடுதலை தருபவனில்லை. நீ யார் என்பது உனக்கு நினைவு வந்ததும் நீ விடுதலை பெற்றுவிடுகிறாய். இதை நினைவூட்டுவதற்குமேல் நான் எதுவும் செய்ய முடியாது. நீ கையில் விலங்கு பூட்டியிருப்பதாக நினைக்கிறாய். உன் கையில் விலங்கில்லை என்று மட்டுமே நான் சொல்ல முடியும்.

முக்தி என்பது சம்பாதிக்க வேண்டிய பொருளன்று. அதற்காகப் பயிற்சிகள் செய்ய வேண்டியதில்லை. நீ பிறக்கும் போதே சுதந்திரமானவனாகத்தான் பிறந்தாய். அப்படியே நீ இறப் பாய். நடுவில் உள்ள காலத்தில் விலங்குகள் மாட்டப்பட்டதுபோல் உனக்குத் தோன்றியது.

உதாரணமாக, ஒருநாள் கனவில் நீ கைதாகிச் சிறையிலிருக்கிறாய். அதற்குமேல் என்ன நடக்குமோ என்று கவலைப்படுகிறாய். அழுத்தமான கனவு. இரவு நீண்ட நேரம் நீடித்தது. ஆனாலும் காலையில் எழுந்தபின் நீ 'நேற்றிரவு முழுவதும் நான் சிறையில் கஷ்டப்பட்டேன்' என்றா சொல்வாய்? மாறாக, கனவை நினைத்துச் சிரிப்பாய். அந்த விழிப்பு நிலைதான் முக்தி. இதையே விஸ்தரிக்கலாம். கனவு என்பது சிறை, விழிப்பு என்பது விடுதலை என்பதுபோல், உலக வாழ்க்கையைச் சிறை என்றும், சந்நியாசத்தினால் கிடைக்கும் ஆன்மிக வாழ்க்கையை விடுதலை என்றும் கருதலாம்.

நான் உனக்கு சந்நியாசம் வழங்கும்போது, "நான் விழிப்புடன் இருப்பதைப்போல் நீயும் உடனே விழிப்புப்பெறு," என்று மட்டும் சொல்கிறேன். எப்படி முக்தி பெறுவது என்று நான் உபாயம் சொல்ல வேண்டும் என்கிறாய். அப்படி நான் வழிமுறை சொன்னால் அது பொய்யாகும்.நானே இன்னும் முக்திநிலையை அடையவில்லை என்று அர்த்தமாகும். ஏனெனில் முக்தி என்பது முயன்று பெறுவதல்ல. சந்நியாசமும் விடுதலை உணர்வும் ஒன்றாக நிகழும். சிறுவர்கள் பாடப் பயிற்சி செய்வதுபோல் முக்திக்கெனப் பயிற்சி கிடையாது.

குடிகாரன் ஒருவன் நிறையக் குடித்துவிட்டு வீடு திரும்பினான். போதை காரணமாக, தனது வீடுதான் அது என்பதை அவன் உணரவில்லை. கதவைத் தட்டினான். அவன் அம்மா கதவைத் திறந்தாள். அவளிடம் அவன், அம்மணி! நான் யார் என்றும் என்வீடு எது என்றும் உங்களால் சொல்ல முடியுமா?" என்று கேட்டான்.

அவள் சிரித்தாள். "ஏ கிறுக்கு? யாரைப் பார்த்து நீ இந்தக் கேள்வி கேட்கிறாய்? இது உன் வீடுதான்," என்றாள்.

ஆனால் அவன் தாயாரையும் வீட்டையும் மேலும் கீழுமாகப் பார்த்தான். "இது என் வீடில்லை. எனக்கு நிச்சயமாக ஒரு வீடு உள்ளது. அக்கம்பக்கத்தில்தான் உள்ளது. அதிகத் தொலைவில் இல்லை. என்னை எப்படியாவது என் வீட்டில் சேர்ப்பித்து விடுங்கள்," என்று குடிகாரன் அவளை வேண்டினான்.

சத்தம் கேட்டு வந்த சிலரும், "இந்தாப்பா, உனக்குக் கிறுக்கா? எதிரே இருப்பது உன் வீடுதான். வாசலில் நிற்பவர் உன் தாயார்தான்," என்று சுட்டிக்காட்டினர். அவனோ அழத் தொடங்கிவிட்டான்! "என்னை இப்படியெல்லாம் குழப்பாதீர்கள். என் அம்மா நான் வீடு திரும்புவதை எதிர்பார்த்தபடி இருப்பாள். இரவு அதிக நேரமாகிவிட்டது. திரும்பத் தாமதமாகிவிட்டது. அம்மா என்னைக் காணாமல் துடிப்பாள். என்னை உங்களில் எவராவது என்னை என் வீட்டிற்கு அழைத்துச் செல்லுங்கள்," என்று கெஞ்சினான்.

அதேசமயம் இன்னொரு குடிகாரன் மாட்டுவண்டி ஓட்டியபடி வந்தான். அவன் காதிலும் இந்தப் பேச்சைக் கேட்ட அவன், "இந்தா தம்பி, இப்படி வந்து வண்டியில் ஏறிக்கொள். உன்னை நான் உன் வீட்டில் இறக்கிவிட்டுப் போகிறேன்," என்று அழைத்தான். அங்கு நின்ற சிலர், "வண்டியில் ஏறாதே. அவன் உன்னை வீட்டிலிருந்து வேறு எங்கோ அழைத்துப் போகிறான்," என்று கத்தினர்.

ஆகவே, நீ எங்கே இருக்கிறாயோ, எப்படி இருக்கிறாயோ அப்படியே இரு. நீ வேறெங்கும் போகவேண்டாம். வேறு விதமாக ஆக வேண்டாம். ஆன்ம விடுதலை உன் சுபாவத்திலேயே ஊறியிருக்கிறது.

இன்னொரு கேள்வி. 'வாழும்பொழுதே நான் எப்படி முக்தராக முடியும்? நான் பாவங்கள் செய்தவன். முற்பிறவி வினைகளால் அழுந்துபவன். முக்தி என்பது மகாவீரர், புத்தர், கிருஷ்ணர் விஷயத்தில் சரி. எனக்கோ மனைவி, குழந்தைகள் உள்ளனர். அலுவலகம், கடை உள்ளது. வீடு, நிலமும் உண்டு. எனக்கும் முக்திக்கும் தொடர்பே கிடையாது' என்பாய்.

நீ சொல்பவை கனவுலகத்துடன் சம்பந்தப்பட்டவை. உன்னுடையவர் என்று யாரைச் சொல்கிறாய்? நீ யாருக்குச் சொந்தம்? யார் உனக்கு உறவாக முடியும்? நீ உனக்கு மட்டுமே உரியவன். மீதி உறவெல்லாம் உன் கண்ணோட்டத்தால் அமைபவை, தற்செயலாக உருவானவை. இந்நிலையில், நீயாக கற்பனை உறவுகளை ஏற்படுத்திக் கொண்ட நிலையில், மனைவி-மக்களை விட்டு ஓடிப்போக நினைப்பது அர்த்தமற்றது.

முக்தியை முயன்று பெற வேண்டுமென நீ நினைக்கிறாய். எதையும் சம்பாதித்துப் பெறுவது என்பது அகங்காரத்தின்கீழ் அடங்கும். ‘பணம் சம்பாதித்ததைப்போல் தியானம் சம்பாதிப்பேன். வீட்டைக் கட்டியதுபோல் கோயில் கட்டுவேன். உலகை உருவாக்கியதுபோல் மோட்சத்தை உண்டாக்குவேன்’ என்றெல்லாம் சொல்வது அகங்காரத்தின் குரல்.

படைக்கப்படுவது உலகம். ஏற்கெனவே படைக்கப்பட்டு, ஞானம் கிடைத்தபின் உணரப்படுவது மோட்சம். ‘பதவிகளைப் பெற்றதுபோல் பரமாத்மாவையும் பெறுவேன்’ என்கிறாய். அதற்குப் பொருத்தமாகக் கடவுள் நிலையை பரமபதம் (தலைசிறந்த பதவி) என்கிறாய்.

கர்ம பலன் என்பது நீ கர்மங்களைச் செய்பவனாக, கர்த்தாவாக, உன்னைக் கருதும்போதுதான் பாதிக்கிறது. கர்த்தா உணர்வு நீங்கினால், வேரே வெட்டப்பட்டால், கர்மம் என்பதும் இல்லாமல் போய்விடும். பிறகு கடவுள் உன்மூலம் செய்விப்பதைத்தான் நீ செய்கிறாய். அவர் விருப்பப்படியே நடக்கிறது. அவனின்றி ஓரணுவும் அசையாதெனில் கர்மங்களின் தொகுப்பு உன் தலையில் எப்படி ஏறும்?

நீ கர்த்தாவாக உன்னை நின்னத்தால் நீ கர்மம் (செயல்) செய்பவனாகவும் ஆகிறாய். அப்போது பாவ கர்மம் செய்து விட்டால் புண்ணிய கர்மம் செய்து அதைச் சமன் செய்ய வேண்டும். நீதான் கணக்குப் போடுவதில் கெட்டிக்கார னாயிற்றே. உனக்கு வியாபாரியின் மூளை இயல்பாகவே வாய்த்திருக்கிறதே! சுபம்–அசுபத்தைக் கடந்தவன் முக்தனாகிறான். பாவம்–புண்ணியம் இரண்டையும் கடந்தவன் முக்தனாகிறான். அவ்வாறு கடக்க என்ன செய்வது? எதுவும் செய்தால் கர்மத்தில் சிக்குவாய். மேற்சொன்னவை போன்ற இரட்டைகளைக் கடப்பதற்கு ஒரே வழி எதுவும் செய்யாதே என்பதுதான்! நடப்பதை நடக்கவிடு. கருவி நீதான், ஆனால் கர்த்தா அல்ல.

கேள்வியில் மிஞ்சியுள்ள பகுதி; சந்நியாசம் ஏற்றதும் முக்தி நிகழாவிடில், கர்மங்களின் பலனாகிய கனத்த போர்வையால் இன்னமும் மூடப்பட்டுள்ளேன் என்றா அர்த்தம்?

என் பதில்: போர்வையை விடு. போர்வை எங்கும் இல்லை.

முல்லா நஸ்ருத்தீன் கனவு கண்டார். அதில் அவர் துணிக்கடை வியாபாரி. ஒரு வாடிக்கையாளர் ஒரு துணியைக் காண்பித்து, குறிப்பிட்ட நீளம்வரை வெட்டித்தரச் சொல்கிறார். முல்லா அவ்வாறு துணியைக் கிழித்தார். அது உண்மையில் அவர் போர்த்தியிருந்த போர்வை!

சத்தம் கேட்டு மனைவி "போர்வையை ஏன் கிழிக் கிறீர்கள்?" என்று கத்தினாள். முல்லா பதிலுக்கு, "வாயை மூடு. வீட்டில்தான் அதிகாரம் செய்கிறாய் என்றால், கடையிலுமா அதிகாரம் காட்ட வேண்டும்? துணி வாங்கவந்தவர் தப்பாக நினைக்கமாட்டாரா?" என்ற கேட்டார்!

நீ ஏதோ கனமான போர்வை பற்றிச் சொன்னாயே, அது என்ன போர்வை? முக்தியடைய நீ ஏன் இவ்வளவு பயப்படு கிறாய்? நீ எதிலாவது கட்டுண்டு இருப்பதை ஏன் விரும்புகிறாய்? காரணம் சொல்லட்டுமா? உனக்கு முக்தி கிடைக்கிறது என்றால் பயப்படமாட்டாய். உனக்கு உன்னிடமிருந்தே முக்தி என்பது அச்சம் தருகிறது.

அதாவது, நீ முக்தி அடைவதில்லை. நீ மிஞ்சினால் முக்திக்கு இடமேது? முக்திநிலையில் முக்தி மட்டுமே மிஞ்சுகிறது. நீ மறைந்துவிடுகிறாய்! இதனால்தான் உனக்கு பயம். ஆகவே கொஞ்சம்-கொஞ்சமாக முக்தியை நோக்கி முயன்றாலென்ன என்று நீ நினைக்கிறாய். நதி, கடலில் கலக்கும் சமயம் அப்படியா நினைக்கிறது, தயங்குகிறது?

முக்தி மகாசமுத்திரம். நீ சிற்றோடை.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஆன்மிகச் சொற்பொழிவு களைக் கேட்டும்கூட [ச்ரவணம்] கடவுளை அடையலாம் என்று நீங்கள் கூறுகிறீர்கள். சொற்பொழிவைக் கேட்கையில் நான் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டதுபோல் தோன்றுகிறது. அப்போது நான் ஆனந்தத்தில் மூழ்குகிறேன். சிறிது காலம் சென்றபின்**

**பழைய நிலைக்கே (back to square one) திரும்பிவிடுகிறேன். இதனால் துடிதுடிக் கிறேன். என்ன செய்வது?**

**ஆ**ம், காதால் கடவுளைப் பற்றிக் கேட்டும் அவரை அடைய முடியும். கடுமையான முயற்சிகள் தேவையில்லை. இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்றறிய தவம், தலைகீழாக நிற்றல், பஜன், உபவாசம் முதலியவை தேவையில்லை.

என் உரையைக் கேட்கும்போது எல்லாவற்றையும் தெரிந்து கொண்டதுபோல் உணர்வதாக நீ கூறினாய். நீ கூறியது தவறு. இங்கே அகங்காரம் உன்னிடம் மிஞ்சியிருப்பது தெரிகிறது. அகங்காரம் உள்ளவரையிலும் அனைத்தையும் அறிந்துகொண்டு விட முடியாது.

நீ என் உரையைக் கவனமாகக் கேட்டிருந்தால், 'அறிவதற்கு ஒன்றும் இல்லை' என்னும் என் கருத்தை ஊகித்திருப்பாய். வாழ்க்கை ஒரு ரகசியம். அது கேட்டு அறியும் ரகசியமன்று; வாழ்ந்து உணரும் ரகசியம். வாழ்ந்து காட்டிய வழியால் பெறப்படும் ரகசியம். வாழ்க்கை என்பது ஒரு கேள்வியன்று பதில் கூறுவதற்கு. அதை முயன்று சொல்லித்தர முடியாது?

நானும் உனக்குப் பதிலேதும் கூறவில்லை. உன்னை எழுப்ப மட்டும் செய்கிறேன். கண் திறந்து பார் என்று உன்னை லேசாக இடிக்கிறேன். அகங்காரம் உன்னை கர்த்தா ஆகச் சொல்கிறது. கர்த்தா ஆகாதே என்று நான் உன்னை எச்சரிக்கிறேன். அகங் காரம் உன்னை 'ஞானியாகிவிடு, அறிஞனாகிவிடு' என்கிறது. ஆனால் அறிஞனைவிட பெரிய முட்டாள் ஒருவருமில்லை! 'அறிவதற்கு என்ன இருக்கிறது?' என்று உன்னையே நீ கேட்டுக்கொள். உன்னோடு 30 ஆண்டுகளாக வாழ்ந்துவரும் உன் மனைவியைப் பற்றி உனக்கு எந்த அளவு தெரியும்? அதைவிடு, உன்னைப் பற்றியேகூட உனக்கு எவ்வளவு தெரியும்? 'நானா அப்படிச் சொன்னேன்? நானா அப்படிச் செய்தேன்?' என்று உன்னைப் பற்றியேகூட அடிக்கடி அதிசயப்படுகிறாய் அல்லவா? கண்ணாடியில் தெரியும் உருவமா நீ? உன் தந்தை கொடுத்த பெயரைக் கொண்டு அறியப்படும் அவனா நீ?

விஞ்ஞானிகள் எல்லாம் தெரிந்தவர்கள்போலப் பேசுகிறார்கள். அது தவறு. தண்ணீர் என்றால் என்ன என்று கேட்டுப்பார். ஹைட்ரஜனும் ஆக்சிஜனும் குறிப்பிட்ட விகிதத்தில் கலந்து உருவாவது தண்ணீர் என்று அவர்கள் தெரிவிப்பார்கள். அவை யாவை என்று கேட்டால், நியூட்ரான், பாஸிட்ரான் என்பார்கள். அவை யாவை என்று இன்னும் நுணுக்கமாகக் கேட்டால், பதில் வராது.

ரயிலில் வந்து இறங்கிய ஒருவர் உன்னிடம் 'ரஜ்னீஷ் ஆசிரமம் எங்கே இருக்கிறது?' என்று கேட்கிறார். "கோரேகாவ் பூங்கா அருகில்," என்று பதில் சொல்கிறாய். அவர் தொடர்ந்து, 'அந்தப் பூங்கா எங்கே என்று வினவுகிறார். "ப்ளூ டயமண்ட் பக்கத்தில்," என்கிறாய். அவர் சளைக்காமல், "ப்ளூ டயமண்ட் எங்கே உள்ளது?" என்று கேட்கிறார். உனக்குப் பதில் தெரிய வில்லை. பிறகு கோரேகாவ் எப்படிப் போவது? ஆசிரமத்திற்கு எப்படிப் போவது? இதன் பெயர்தான் அறிதலா?

வேதத்தில் சுவையான பகுதி ஒன்று. ஒரு முனிவர் தன்னைச் சுற்றிலுமுள்ள இயற்கையின் எழில்களைச் சுட்டிக்காட்டி இன்னொரு முனிவரிடம், "இவை எல்லாம் என்ன என்று நினைக்கிறீர்?" என்று கேட்கிறார். அதற்கு அவர், "யாருக்குத் தெரியும்? இவற்றை எல்லாம் படைத்த கடவுளுக்குத்தான் தெரியும்," என்கிறார். சற்று இடைவெளி கொடுத்து அம்முனிவர் "கடவுளுக்கேகூட தெரியுமா என்று யாருக்குத் தெரியும்?" என்கிறார்!

உபநிஷதம் சொல்கிறது: 'தெரியாது' என்று சொல்கிற வனுக்குத் தெரியாதுதான். ஆனால் 'தெரியும்' என்று சொல்கிற வனுக்கும்கூட எதுவும் தெரியாது!

சாக்ரடீஸ் சொல்கிறார்: எனக்கு ஒரே ஒரு விஷயம்தான் தெரியும். அது என்ன? எனக்கு ஒன்றும் தெரியாது என்பதுதான் அது!

இவ்விரண்டு மேற்கோள்களும் ஞானத்தின் அறிவிப்புகள்.

நீ என்ன அறிந்துள்ளாய்? இதுவரை நீ ஏதாவது அறிந்திருக்கிறாயா? எதுவும் அறிந்திருக்கவில்லை. இதுவரை நீ

சேர்த்துள்ளது குப்பைகூளம் மட்டுமே. தகவல்களையும் செய்திகளையும் மட்டுமே திரட்டியுள்ளாய். இவற்றை வைத்து நீ உன்னை எல்லாம் அறிந்தவனாக நினைக்கிறாய். ஒரு குறிப்பிட்ட மரத்தைக் காண்பித்து அதன் பெயரென்ன என்று உன்னைக் கேட்டால் நீ அதை அசோகமரம் என்கிறாய். இது ஒரு பெரிய அறிதலா? அந்த மரத்திற்குத் தனது பெயர் அசோகமரம் என்று தெரியுமா? நீ மாட்டிவிட்ட பெயர்ப்பலகை அது. மற்ற மரங்களிலிருந்து பிரித்துக் காட்ட அவ்வாறு நீ செய்தாய். அவ்வளவுதான். அந்த மரம் பற்றிய வேறெந்த விவரமும் உனக்குத் தெரியாதே.

ஞானம் இங்கே எங்கும் இல்லை. அது சாஸ்திரங்களில் இல்லை; விஞ்ஞானிகளிடம் இல்லை; யாரிடமும் இல்லை. ஞானம் என்னும் ஒன்றே கிடையாது! இதை அறிவதுதான் ஞானம்!

## கடைசிக் கேள்வி

**ஒரு ஞானி சொல்கிறார்: நான்—நீ—அவர் முதலியவை உண்மையான வேறுபாடுகள் அல்ல. இவை இலக்கணச் சொற்கள் மாத்திரமே. இவற்றின் மூலம் சூழ்நிலைக்கு ஏற்ப, கடவுளைத்தான் குறிப்பிடுகிறோம். தங்கள் கருத்து என்னவோ?**

**இ**து ஒரு கேள்வியே இல்லையே! பதிலாக அல்லவா உள்ளது. இதைத் தெரிந்துகொண்டபின் நீ எதற்காக இங்கே வந்துள்ளாய்? நீ இங்கே என்ன செய்கிறாய்? விஷயம்தான் முடிந்துவிட்டதே.

மனிதன் தான் பெற்ற அறிவை விளம்பரப்படுத்திக்கொள்ள மிகவும் ஆசைப்படுகிறான். அறிவு குறைவாக இருந்தாலும் அதை வெளிப்படுத்த மிகவும் ஆசைப்படுகிறான். எனவேதான் ‘சிற்றறிவு பேராபத்து’ என்று சொல்லப்படுகிறது.*

**ஒ**ருவன் நள்ளிரவில் தெருவில் அலைந்து கொண்டிருந் தான். ஒரு போலீஸ்காரர் அவனைத் தடுத்து நிறுத்தி, “நீ ஏன்

* A little learning is a dangerous thing. (Alexander lape)

வீட்டுக்குப் போகாமல் இந்த நேரத்தில் இங்கே அலைகிறாய்? பொருத்தமான காரணம் சொல்," என்று அதட்டினார்.

"நான் வீடு திரும்பினால் என் மனைவியும் இப்படித்தான் கேட்பாள். அவள் சண்டை போடாமலிருப்பதற்காக என்ன காரணம் சொல்வது என்று யோசித்தபடியே இப்படி உலாவு கிறேன்," என்று அம்மனிதன் பதிலளித்தான்.

சூழ்நிலைக்கேற்ப, கடவுளை வெவ்வேறு சொற்களில் குறிப்பிடுவது என்பது சரியன்று. அப்போது கடவுளைவிட சூழ்நிலைக்குத்தான் அதிக மதிப்புத் தருவதாக அர்த்தமாகும். சமயத் தலைவர்கள் பிரச்சினைக்கு ஏற்றபடி அதை நீக்கப் பொருத்தமான, தனிப்பட்டதான பெயரால் கடவுளை வேண்டிக் கொள்ளச் சொல்வார்கள். அப்போது பிரச்சினைதான் முக்கியத் துவம் பெறுகிறது. பிரச்சினை எதுவானாலும் கடவுளை எந்தப் பெயராலும் அழைக்கலாம்.

சூஃபி சம்பிரதாயத்தினர் கடவுளைப் பெண்ணாக, காதலியாக, நோக்குகின்றனர். கிறிஸ்தவர்கள் கடவுளைத் தந்தையாகக் கருதுகின்றனர். இதன் மூலம் வழிபடுபவர்களின் கண்ணோட்டம்தான் புலனாகிறதே தவிர, கடவுள் யாருடனும் உலக உறவுகளின் பெயரால் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. கடவுளை உறவுப் பெயரைச் சொல்லி அழைக்கும்வரை உனக்கும் அவருக்கும் இடைவெளி இருக்கிறது. நீ என்பவனே இல்லாமல், கூப்பிடுபவனே இல்லாமல், கூப்பிடுதலும் இல்லாமல் போகும்போதுதான் இறை அனுபவம் முழுமை பெறுகிறது.

கபீர்தாசர் சொல்கிறார்: 'தேடி-தேடி நானே காணாமல் போனதும் கடவுளுடன் இணைப்பு ஏற்பட்டது. 'நான்' இருந்த வரையிலும் நீ இல்லை. இப்பொழுது நீ மட்டுமே உள்ளாய்; நான் இல்லை.'

நீ கூப்பிடும் பெயர் கடவுளின் பெயர்களில் ஒன்றாய் இருப்பினும், அப்பெயர் உன் தற்போதையை அல்லது சூழ்நிலையைத்தான் சுட்டிக்காட்டுகிறது.

என்னுடைய கருத்து அல்லது ஆலோசனையைக் கேட்டா யல்லவா? உலகில் அதிகமாகக் கேட்கப்படுவது ஆலோசனை தான்; குறைவாகப் பின்பற்றப்படுவதும் ஆலோசனைதான். கேட்காத ஒன்றைக் கொடுக்காதே என்று சொல்வது வழக்கம். ஆனால் கேட்டாலும் இயன்றவரையிலும் ஆலோசனை வழங் காதே! உலகில் பலர் கேட்காவிடிலும் ஆலோசனை வழங்கிய வண்ணம் உள்ளனர்.

நீ உனக்குக் கிடைத்துள்ள ஞானத்தைப் பரப்பிக்கொண்டு திரியாதே. எவராவது உண்மையான ஆர்வத்துடன் உன்னை அணுகினால் ஞானத்தைப் பகிர்ந்துகொள். சமயத் தலைவர்கள் தங்களுக்குத் தெரிந்ததை எல்லாம் தற்பெருமைக்காகச் சொல்லிக் கொண்டு திரிவதால்தான் மக்கள் ஆன்மிகம் என்றாலே அலறுகிறார்கள்.

உனக்கு ஞானம் கிடைத்துவிட்டதாக, விழிப்பு உண்டாகி விட்டதாக மக்கள் நினைத்தால், தாமாகவே அவர்கள் உன்னிடம் வருவார்கள். பிறகு அவர்கள் ஏதாவது கேட்டால் சொல்லு.

ஹரி ஓம் தத்ஸத்!

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஆத்மா ப்ரஹ்மேதி நிஸ்சித்ய பாவாபாவெள ச கல்பிதெள|
நிஷ்காம: கிம்விஜானாதி கிம்ப்ரூதே ச கரோதி கிம்|| 184

அயம் ஸோஅஹமயம் நாஹமிதி க்ஷீணா விகல்பனா:|
ஸர்வம் ஆத் மேதி நிஸ்சித்ய தூஷ்ணிபூதஸ்ய யோகின:|| 185

ந விக்ஷேபோ ந சைகாக்ரயம் நாதிபோதோ ந மூடதா
ந ஸுகம் ந ச வா துக்கம் உப ஸாந்தஸ்ய யோகின: 186

ஸ்வராஜ்யே பைக்ஷ்யவ்ருத்தெள ச லாபாலாபே ஜனே வனே|
நிர்விகல்ப ஸ்வபாவஸ்ய ச விசேஷோ அஸ்தி யோகின:|| 187

க்வ தர்ம: க்வ ச வா காம: க்வ சார்த்த: க்வ விவேகிதா|
இதம் க்ருதமிதம் நேதி த்வைந்தைர் முக்தஸ்ப யோகின:|| 188

க்ருத்யம் கிமபி நைவாஸ்தி ந காபி ஹ்ருதி ரஞ்ஜனா|
யதா ஜீவனமேவேஹ ஜீவன முக்தஸ்ய யோகின:|| 189

'ஆத்மா பிரம்மம். உணர்வுகள்-உணர்வின்மை கற்பனையானவை. இவற்றை அறிந்துள்ள, பற்றுகள் அற்ற மனிதன் என்ன அறிந்துள்ளான்? என்ன சொல்லுகிறான்? எதைச் செய்கிறான்?' **(சுலோகம் 184)**

இன்னொருவர் மூலம் நாம் தெரிந்துகொள்ளும் விஷயத்தை நாம் முழுமையாக நம்பிவிட முடியாது. உள்ளத்தில் ஒரு மூலையில் சிறு சந்தேகமாவது இருக்கத்தான் செய்யும். அதை அடக்கிவைக்கலாமே தவிர, அழிக்க முடியாது.

ஆகவே மக்கள் சொல்வது ஒன்று, செய்வது வேறொன்று, நினைப்பது மற்றொன்றாக இருக்கிறது. இவற்றினிடையே சமரசம் இல்லை. இசையில் சுருதி சேர்வதுபோல் சிந்தனை-சொல்-செயல்

ஒன்றுபட்டால் வாழ்க்கை இனிமையான சங்கீதமாக ஒலிக்கும். வீணையின் தந்திகள் வெவ்வேறாக ஒலித்தால் அங்கே ஓசைதான் கேட்கும். அதில் இனிமை இராது. ஆகவே அதன் மூலம் அமைதியும் மகிழ்ச்சியும் கிடைக்காது.

என்னிடம் வருபவர்களில் சிலர், "சுவாமி! நாங்கள் உங்க ளிடம் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ளோம்," என்கிறார்கள். நான் யோசிப்பேன் 'உறுதியான நம்பிக்கையா? அப்படியானால் உறுதியற்ற நம்பிக்கை என்றும் ஒன்று உண்டா?' என எண்ணு வேன். சிலர் என்னிடம், "உங்களை முழுமையாக நேசிக்கிறோம்' என்கிறார்கள். அது எப்படி சாத்தியம்? நேசித்தல்-நேசிக்க வில்லை என்பவைதான் இருக்க முடியுமே தவிர, அரைகுறையாக என்றுகூட ஒருவகை இருக்க முடியுமா?

இதேபோல் நாத்திகர்களுக்கும் ஆத்திகர்களுக்கும் இடையே ஆழமான வேறுபாடு கிடையாது. நாத்திகர் கோயி லுக்குப் போவதில்லை; கடவுளை வணங்குவதில்லை. ஆனால் அன்றாட வாழ்க்கை நடவடிக்கைகளில் இருவகையினரும் ஒரேமாதிரியே செயல்படுகின்றனர். வெவ்வேறு மதத்தவர்கள் வழிபடும் முறை மாறுபட்டாலும் தினசரி வாழ்க்கையில் அவர்களிடம் ஏற்றத் தாழ்வில்லை.

**கே**சவசந்திர சென், ராமகிருஷ்ணரைச் சந்தித்தபோது, "எனக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது. நான் இது பற்றி உங்களுடன் வாதம்புரிய வந்துள்ளேன். என் தர்க்கங்களால் உங்கள் இறை நம்பிக்கையைத் தகர்த்து விடுவேன். என் சவாலை ஏற்றுக்கொள்ளுங்கள்," என்றார்.

ராமகிருஷ்ணர் அமைதியாகப் பதிலளித்தார்: "இது கடினமான முயற்சி. நீ நிச்சயமாகத் தோல்வி காண்பாய். உனக்குப் பதில் சொல்ல என்னிடம் தர்க்கம் இல்லை. ஆனால் நான் கடவுளை அறிந்திருக்கிறேன். நீ மறுத்தாலும் அதனால் எனக்கென்ன வந்தது? நான் கடவுள் உண்டென நம்புகிறேன். அது என் சுயமான அனுபவம். அதை நீ பிடுங்கிக்கொள்ள முடியாது. கடவுள் எனது ஒவ்வொரு ரோமத்திலும் உள்ளார்; ஒவ்வொரு மூச்சிலும் வெளிப்படுகிறார். நீ அறிவாளி, சாஸ்திரம் அறிந்தவன்,

வித்துவான், ஞானி. நான் படிக்காதவன், பட்டிக்காட்டான். ஆனால் இந்தப் பட்டிக்காட்டானுடன் மோதினால், நீதான் தோற்பாய். ஏனெனில் வாத விவாதம் புரிய என்னிடம் ஆன்மிகக் கோட்பாடு என்று தனியாக நான் தயாரித்து வைக்கவில்லை. எனக்குக் கிடைத்தது இறை அனுபவம். ஒருவரது அனுபவத்தை மற்றவர்கள் எப்படி மறுக்க முடியும்? நான் அனுபவத்தால் உணர்ந்ததை நீ எப்படி இல்லாமல் போகும்படி செய்ய முடியும்? நான் இந்தக் கண்களால் கடவுளை தரிசித்திருக்கிறேன். உலகத்தினர் எல்லோருமே கடவுள் கிடையாது என்றாலும், நான் கடவுள் உண்டு என்றே சொல்லுவேன். ஏனெனில் அது எனது அனுபவம், எனது உண்மை.''

ஆனால் கேசவசந்திரர் விடவில்லை. அவர் நீண்ட விவாதம் செய்தார். ராமகிருஷ்ணர் கேட்டபடி இருந்தார். எதையும் மறுத்து அவர் பதிலளிக்கவில்லை. கேசவசந்திரர் வலுவான கருத்துச் சொன்னபோதெல்லாம் ராமகிருஷ்ணர் எழுந்துநின்று அவரைத் தழுவிக்கொண்டார். கேசவசந்திரருக்கு சங்கடமாகி விட்டது. அங்கு கூடியவர்களுக்கும் ராமகிருஷ்ணரின் செயல்கள் புரியவில்லை. கேசவசந்திரர், ''இதென்ன, என் கருத்தை எதிர்த்தாலும் பாராட்டுவதுபோல் என்னைத் தழுவிக்கொள்வது ஏன்? நீங்கள் சுயநினைவுடன்தான் உள்ளீர்களா?,'' என்று ராமகிருஷ்ணரைக் கேட்டார்.

பரமஹம்சர் பதிலளித்தார்: ''நீ என் கருத்தை மறுத்துப் பேசுவதாக நினைக்கிறாய். ஆனால் உன் பேச்சைக் கேட்டு எனக்குக் கடவுள் மீதான நம்பிக்கை மேலும் வலுப்பெற்றுவிட்டது. உன்னிடமுள்ள மேதைத் தன்மையைக் கடவுளைத் தவிர வேறு யார் உனக்கு வழங்கியிருக்க முடியும்? உன்னிடம் அதிசயமான அறிவு நிறைந்துள்ளது. நீ எடுத்துக்கூறும் வாதங்கள் மதிப் புடையவை, கூரானவை. கடவுள் உண்டென்பதற்கு உன் சிந்தனை ஆற்றலே சான்றாக உள்ளது. பூ மலர்ந்தால் ஆங்கே ஒரு செடி-கொடி இருப்பதும் உறுதியல்லவா?

''நானோ பட்டிக்காட்டான். என்னிடம் மேதைத்தனம் என்னும் பூ தோன்றவில்லை. உன்னிடம் நிறைந்து வெளிப்பட்ட

கடவுளின் ஆற்றலைக் கண்டுதான் நான் அதிசயப்பட்டு உன்னை அடிக்கடி தழுவிக் கொண்டேன். இறைவன் என்னிடம் கேசவசந்திரரை அனுப்பி எனக்கு நன்மை செய்துள்ளார். அவர் மூலம் கடவுளின் சாயல் சிறிது கிடைத்தது. கடவுளை அறியக் கூடுதலாக ஓர் அடையாளம் (தடயம்) கிடைத்தது. அவரைக் காண மேற்கொண்டு ஒரு கதவு திறந்தது. கேசவரே, உன்னுடன் அறிமுகம் ஏற்பட்டுவிட்டது. இனி லட்சக்கணக்கானவர்கள் மறுத்தாலும் சரி, கடவுள் உண்டென்பதை நான் மறுக்கமாட்டேன் கடவுள் நிச்சயமாக உள்ளார் என்பதற்கு நீயே சிறந்த உதாரணம்."

இந்த சம்பவம் குறித்து கேசவசந்திரர் தன் நினைவுக் குறிப்புகளில் பின்வருமாறு எழுதியுள்ளார்:

'நான் ராமகிருஷ்ணரிடம் தோற்றுத்தான் போனேன். அவரை வெல்லும் வழி கிடைக்கவில்லை. அவரைச் சந்தித்த இரவு என்னால் தூங்க முடியவில்லை. அவருக்கு நிச்சயமாக ஓர் அனுபவம் கிடைத்திருக்கிறது. அது வாதங்களால் தகர்க்க வொண்ணாத அனுபவமாக இருந்திருக்கிறது. இவருடைய காலடிகளில் உட்காரவேண்டும். இவரிடம் பயிற்சிபெற வேண்டும். இவர் எதைக் கண்டாரோ அதை நானும் காண வேண்டும். என்னிடம் தர்க்க அறிவு மட்டுமே உள்ளது. இவரிடமோ பார்க்கும் கண்கள் உள்ளன. தர்க்கத்தினால் தாகம் தணியாது. அதற்குத் தண்ணீரைக் குடிக்கும் அனுபவம் தேவை. ஒரு விஷயத்தை உறுதியாகவும் முழுமையாகவும் அறிந்திருப்பதற்கு நம்பிக்கை போதாது. அனுபவம்தான் நம்பிக்கையை நிஜமாக்கும்.

'அனுபவசாலி நம்பிக்கையை மட்டும் சார்ந்திருக்க மாட்டான். அதிலும் பிறரது நம்பிக்கையைக் கடன் வாங்கி நாம் முடிவுக்கு வரக்கூடாது. எண்ணங்களற்ற, நம்பிக்கைகளற்ற சூனியத்தில் நில். அப்போது உன் செவியில் புது இசை கேட்கும்; புதிய அனுபவம் உன்னைச் சூழும்.'

ஆத்மாவே கடவுள் (பிரம்மம்). இதை அனுபவத்தால் அறியலாம். அதற்கு நீ வகுத்துள்ள எல்லைகள் நீங்கிவிட வேண்டும். எல்லைக்குட்பட்ட உனக்கும், எல்லைகளற்ற கடவுளுக்கும் இடையே பிரித்துக் காட்டும் கோடு இருக்கக்கூடாது.

ஆத்மா கடவுள் என்பதும், நீர்த்துளி கடலென்பதும் ஒரு பொருளுடையவை. ஆனால் நீர்த்துளி இந்த விஷயத்தை எப்படித் தெரிந்துகொள்வது? நீர்த்துளி கடலில் விழுந்து கலக்க வேண்டும். நீர்த்துளி மறைந்ததும் அதுவும் கடல் என்பது தெரியவரும். நீ மறைந்தால் கடவுள் தெரிவார். நீ மறைந்தால் கடவுள் காட்சி தருவார். நீ இல்லாமை அவரது இருத்தலாகிறது.

ஆத்மா கடவுள் என்பதை உறுதியாக அறிய சாஸ்திரங்களைப் புரட்டாதே. சூனியத்துக்குச் சென்றுவிடு. சொற்களில் சிக்கிக்கொள்ளாதே. ஒலியற்ற நிலைக்குப் போய்விடு. தர்க்க வலையில் சிக்கிக்கொள்ளாதே. மௌனம் கடைப்பிடி. தினமும் ஒன்றிரண்டு மணி நேரம் மௌனம் பழகு. உன் மனத்தில் எல்லாக் குரல்களும், எல்லா ஒலிகளும் அடங்கியபின், அப்போது கடவுள் பேசுவது உனக்குக் கேட்கும்? உனக்குள் எவ்வித ஓசையுமின்றி பரிபூரணமான அமைதி ஆட்சிசெய்யும்போது கடவுளின் காலடி சப்தம் உனக்குக் கேட்கும். அவர் உன்னை நெருங்குவதை ஊகிப்பாய்.

ஒரு உபநிஷத மேற்கோளின்படி, கடவுள் தொலைவிலும் உள்ளார், அருகிலும் உள்ளார். உன் மனம் எண்ணங்களால் நிரம்பி வழிந்தால் அவர் உள்ளே வரமுடியாமல் தொலைவில் நின்றுவிடுகிறார். ஏனெனில் எண்ணங்கள் உன் கண்களை மறைத்துவிடுகின்றன. கண்ணாடியில் தூசி படிந்து பிரதிபிம்பம் தெரியாதது போன்ற நிலைமை இது. ஏரியில் அலைகள் வீசுவதால் சந்திரன் தெரியாதது போன்ற நிலை இது. உன் மனக்கண்ணாடி எண்ணங்களால் மூடப்பட்டிருக்கும்போது கடவுளின் உருவம் அதில் தெரிவதில்லை.

நீ சாந்தமானால், கண்ணாடி சுத்தமானால், ஏரி சலனமின்றி விளங்கினால், எண்ணங்கள் உறங்கிவிட்டால், பிறகு மனக்கண் ணாடியில் கடவுள் தெரிவார்: அதாவது, அவர் தெரிவதை உணர்வாய். இதுவே கடவுளை நிச்சயமாக அறிவது என்பதாகும்.

ஒருநாள் கனவில் நீ அரசனாக ஆடம்பர வாழ்க்கை நடத்துகிறாய். மறுநாள் கனவில் நீ வீடு வீடாகச் சென்று பிச்சை கேட்பவனாகத் தெரிகிறாய். இந்த இரண்டு கனவுகளிலும்

வித்தியாசம் கிடையாது. இரண்டும் உன் கற்பனையே. அரசனாக நீ இருந்த கனவு பொய். ஆனால் கனவு கண்டவன் (நீ) மெய். பிச்சைக்காரனாக நீ அலைந்த கனவு பொய். ஆனால் கனவு கண்டவன் (நீ) இப்பொழுதும் மெய். பார்த்தது பொய். பார்த்தவன் மெய். அதாவது, நீ சாட்சி (பார்வையாளன்) மட்டும். உலகில் நீ காண்பவை தோற்றங்களே.

என் கனவும் உன் கனவும் வெவ்வேறு. ஆனால் சாட்சி மனப்பான்மை பொதுவானது. நீ ஒருவகையான சாட்சி, நான் வேறுவகையான சாட்சி இல்லை.

பலர் ஓரிடத்தில் மௌனமாகவும் சாந்தமான மனத்துடனும் உட்கார்ந்திருக்கிறார்கள் என வைத்துக்கொள்வோம். அப்போது அங்கு சூனியம் (வெற்றிடம்) நிலவுகிறது. எத்தனை மனிதர்கள் என்று எண்ணிப் பார்க்க வேண்டியதில்லை. எத்தனை சூனியங்களைக் கூட்டினாலும் கிடைக்கும் விடை சூனியமே.

ஆனால் ஒருவர் பேசி, இன்னொருவரும் பேசினால் அங்கே இரு நபர்கள் உண்டாகின்றனர். மனத்தில் எண்ணம் உதித்தாலே மனிதர்கள் வெவ்வேறு ஆகின்றனர். சொற்கள் வெளிவந்தால் சண்டையும் வருகிறது. நான் 'ஹிந்து,' நீ 'முஸ்லிம்' என்னும் சொற்களே மனிதர்களாகிய நம்மைப் பிரித்துவிடப் போதுமானவையாக உள்ளன. பிறகு வாத-விவாதம், போட்டி, கலகம் தொடர்கிறது.

ஒரு வேடிக்கை. நீ கனவில் திரைப்படம் கண்டால் அதைக் காண நண்பனையோ, மனைவியையோ அழைத்துச்செல்ல முடியாது. இதற்கு வழி இல்லை. கூட்டு வியாபாரம்போல் இரண்டு பேர் சேர்ந்து ஒரே கனவைக் காண முடியாது. கனவு மனிதர் களைத் தனித்தனியாகப் பிரித்து விடுகிறது. அவ்வாறே சாட்சி மனப்பான்மையில் இருவர் கிடையாது. பார்ப்பவர்கள் ஒரே நபராகி விடுகின்றனர். அந்த ஒருவரின் பெயர்தான் கடவுள் என்பது.

நீ உண்மையாகவே இருக்கிறாய். நீ இருப்பது மகாசத்தியம். மற்ற எல்லாம் கற்பனையால் பின்னப்பட்ட வலை. இதை மற்றவர் சொல்லி, அஷ்டாவக்ரரே சொன்னாலும், அது கேள்விஞானம்

மட்டுமேயாகும். அனுபவம் மூலம் நீ நேரடியாக ஞானம் பெற முடியும். அறிவியலில் உள்ளதுபோலவே ஆன்மிகத்திலும் நேரடி பரிசோதனை தேவைப்படுகிறது.

அறிவியலுக்கும் ஆன்மிகத்திற்கும் இடையே பரிசோதனை குறித்து வேறுபாடில்லை. பரிசோதனைக் கூடத்தால் அவை வேறு படுகின்றன. அறிவியல் சோதனைக்கூடம் உடலுக்கு வெளியே உள்ளது. ஆன்மிக சோதனைக் கூடம், உடலுக்குள்ளே, மனத் துக்கும் உள்ளே இருக்கிறது. அறிவியல் பிற பொருட்கள் மீது சோதனை நடத்துகிறது. ஆன்மிகம் தன்னையே ஆராய்ச்சிக்கு உட்படுத்துகிறது. அறிவியல் பொருட்களை விரித்துப் பார்க்கிறது. ஆன்மிகம் தன்னையே விரித்துப் பார்க்கிறது. அறிவியல் என்பது புறபரிசோதனை. ஆன்மிகம் என்பது சுயபரிசோதனை.

நீ பிறரிடம் கேட்ட ஞானத்தை சோதிக்காமல் ஏற்றால், அதைக் குப்பை கூளமாக நினைத்து அப்புறப்படுத்து. அதில் சாரம் இல்லை. அதன் மூலம் நீ பண்டிதனாகலாம், பக்தனாக முடியாது.

எவனொருவன் ‘கடவுள் மட்டுமே உள்ளார், நான் என்பவன் இல்லை’ என்று உணர்ந்துவிட்டால், அவனுடைய ஆசைகள், பற்றுகள் நீங்கிவிடுகின்றன. பற்றுகள் நீங்கினால் பரமன் கிடைப்பார் என்று சொல்வதுதான் சமயத் தலைவர்களின் வழக்கம். ஆனால், கடவுள் உணர்வு கிடைத்துவிட்டால் பற்றுகள் நீங்கிவிடும் என்பதுதான் எனது கண்ணோட்டம் ஏனெனில் ‘நீ’ என்பவன் இருக்கும்வரை பற்றுகள் உன்னை விடா. ‘நான் கடவுளை அறிய விரும்புகிறேன்’ என்பதுகூட ஒரு பற்றுதான். உலகப் பற்றுகளுக்குப் பதிலாக புண்ணியம், மோட்சம், கடவுள் உலகம் என்னும் புதிய பற்றுகள் உன்னை வசப்படுத்திவிடுகின்றன.

உலகப் பற்று என்பது நிழல் போன்றது. நீ நடக்கும்போது நிழலும் வருகிறது. நீ ஓரிடத்தில் உட்கார்ந்துவிட்டால் நிழல் மறைந்துவிடுகிறது. அமைதியாக, மௌனமாக நீ இருந்துவிட்டால் அகங்காரமும் அமைதியாகிவிடுகிறது. அப்போது எண்ணங்கள் உதிப்பதில்லை. எண்ணங்கள் இல்லாமல் நீ என்பவன் இல்லை. பிறகு பற்றுக்கும் வாய்ப்பில்லை.

ஆனால் எப்பொழுதும் பேரமைதியில் திளைத்தால் ஞானம் கிடைக்கும் என்று எதிர்பார்த்து முயன்றால் அப்போது நீ இருப்பதால், நீ விரும்புவதால் அகங்காரம் இன்னமும் உன்னுடன் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அறிய முயல்பவனே இல்லாது போனால் அறிவதற்கு என்ன மிஞ்சும்? இதுவே பரமஞான நிலை என்பது. அறிபவனும் இல்லை; அறியப்படுவதற்கும் எதுவு மில்லை. சொல்லப்படுவதும் இல்லை; சொல்லக் கூடியதும் எதுவுமில்லை. செய்வதற்கு எதுவும் மிஞ்சியிருப்பதில்லை. நடப்பது தொடர்ந்து நடைபெறுகிறது.

மகாத்மா புத்தர் 42 ஆண்டுகள் உபதேசிப்பதில் ஈடுபட்டார். ஊர் ஊராகச் சென்று, காலையிலிருந்து மாலைவரை மக்களிடம் பேசினார். அவரது தலைமைச் சீடரான ஆனந்தர் இதைப் பற்றிக் குறிப்பிட்டபோது, புத்தர், "ஆனந்தா, நான் 42 ஆண்டுகளாக ஒரு வார்த்தைகூட பேசவில்லை என்பது நீ அறிந்ததுதானே," என்றார்.

அதற்கு ஆனந்தர், "மகாபிரபு, வேறு யாரிடமாவது நீங்கள் இதேபோல் கூறியிருந்தால் பரவாயில்லை என விட்டுவிடலாம். நானோ 42 ஆண்டுகளாக உங்களுடன் நிழல்போல் சேர்ந்துதானே வருகிறேன். அப்படியிருக்க, நீங்கள் எங்கும் ஒருபொழுதும் ஒரு வார்த்தையும் பேசவில்லை என்கிறீர்களே," என்று ஆச்சரியம் தெரிவித்தார்.

புத்தர் மீண்டும், "நான் 42 வருஷங்களாக ஒரு வார்த்தை கூட பேசவில்லை. இத்தனை காலமாக நான் எந்த ஊருக்கும் போய்வரவும் இல்லை," என்றார்.

புத்தர் வேடிக்கையாகச் சொல்கிறார் என்று அப்போது ஆனந்தர் அமைதியாக இருந்துவிட்டார். புத்தர் இறந்த பிறகு, நிர்வாணத்தின் பிறகு ஆனந்தர் பூரண ஞானம் பெற்றார். அப்போது அவருக்கு புத்தர் முன்பு சொன்னதன் அர்த்தம் புரிந்தது. தான் குறிப்பிட்டது உலக வாழ்க்கை என்றும், புத்தர் கூறியது ஆத்ம வாழ்க்கை என்றும் ஆனந்தர் உணர்ந்தார்.

அகங்காரம் நீங்கினால், செயல்கள் நடைபெற்றாலும், உன்னைப் பொறுத்தவரையிலும் அவை நடைபெறவில்லைதான். 'நான் போனேன், நான் பேசினேன்' என்னும் அகங்காரம்

ஒழிந்தால் நீ எங்கும் போகவில்லை, எதுவும் பேசவில்லை என்று அர்த்தம் எடுத்துக்கொள்ளப்படும்!

இதோ நான் சொற்பொழிவு செய்கிறேன் அல்லவா? உண்மையில் ஒரு சொல்கூட நான் பேசவில்லை! நீ இதைக் கேட்டுத் திகைப்படைவாய். நான் முயன்று பேசவில்லை. பேச்சு நிகழ்கிறது. பேசுபவன் என்று ஒருவன் இல்லை. செயல் என்பது நிகழ வேண்டும்; செய்யப்படக்கூடாது.

ஆங்கில மகாகவிஞர் கோல்ரிஜ்* ஏராளமான கவிதைகள் எழுதினார். ஆனால் 5-6 கவிதைகள்தான் அவரால் ஏறத்தாழ விரிவாக எழுத முடிந்தது. ஏன் மற்ற கவிதைகளை முடிக்க வில்லை என்று கேட்டதற்கு, "நான் யார் அவற்றை முடிப்பதற்கு? வரிகள் தாமாக வந்தன. ஒரு கட்டத்தில் நின்றுபோயின. மூன்று வரி மட்டுமே மனத்தில் இறங்கி, கடைசி வரி இறங்காவிட்டால் நான் என்ன செய்வது?" என்று திருப்பிக்கேட்டார்.

தாம் எழுதிய 5-6 நீள் கவிதைகளாலேயே ஆங்கில மகாகவிகளில் ஒருவராக கோல்ரிஜ் போற்றப்படுகிறார். அக்கவிதைகள் அசாதாரணமானவை. எங்கிருந்தோ வந்து உதித்த அவற்றில் இதுவரை அறிந்திராத ஒலி கேட்கிறது. அவை மனிதன் எழுதியவையா, தெய்வம் எழுதியவையா என்று சந்தேகம் தோன்றுகிறது.

இதுபோல்தான் வேதங்களும் தோன்றின. ரிஷிகள் இயற்றினார்கள் என்று சொன்னாலும் அவர்களுக்கு அந்த அகத்தூண்டுதல் எங்கிருந்து கிடைத்தது என்பது ரகசியமாக உள்ளது. இதனால்தான் வேதங்களைக் கடவுளின் அடையாளம் போல் வழிபடும் வழக்கம் உண்டானது. ரிஷிகள் புல்லாங்குழல் போன்றவர்கள். அவர்கள் மூலம் தெய்வ ஒலி நுழைந்து வெளிப்பட்டு வேதம் என்று பெயர் பெற்றது. வித்தகன் அளித்தது வேதம். வெற்று மூங்கிலே புல்லாங்குழலாக மாறுவதைப்போல், மனித மனம் வெற்றிடமாக இருந்தால் அதில் ஞானகீதம் இசைக்கப்படும்.

---

* Samuel Taylor Coleridge (1772-1834) முக்கியமான கவிதைகள் Ancient Mariner, Frost at Midnight, Christabel, Kubla Khan, Dejection

இதேபோல் திருக்குர்ஆன், பைபிள், தம்மபதம் முதலியவை மனிதர்களின் மூலம் வெளிப்பட்ட போதிலும் அவை அடிப்படையில் தெய்வ ஊற்றிலிருந்து சுரந்தவையாகும். ஆகவே ஆத்மாவே கடவுள் என்று உணர்ந்தபின், யாரும் எதுவும் பேசுவதில்லை; யாரும் எதுவும் செய்வதில்லை; யாரும் எதுவும் அறிந்திருக்கவில்லை. எல்லாம் கடவுளின் இயக்கமாகும்.

'யோகி எனப்படுபவன் எல்லாம் ஒரே ஆத்மா என உறுதியாக அறிந்து சாந்தமாக இருப்பான். "இது நான்-இது நானல்லன்" என்பதுபோன்ற எண்ணங்கள் அவன் மனத்தில் வலுவிழக்கின்றன.' **(சுலோகம் 185)**

**பி**ரம்மம் என்பது ஏகம் அல்லது ஒன்று. எல்லாவற்றிலும் அது ஒன்றே உள்ளது. உலகில் காணும் எல்லாம் கடவுளின் விரிவாக்கம். அவை ஒரே கடலின் எண்ணற்ற அலைகள். சடப் பொருளிலிருந்து உயிருள்ளவைவரை அவர் ஒருவரே எல்லா வற்றிலும் உள்ளார். இதை அறிந்தவன் சாந்தமாக விளங்குவான்.

என்னைச் சந்திப்பவர்களில் சிலர் சாந்த மனநிலையைப் பெறுவதற்கான வழி கூறும்படி என்னிடம் கேட்கிறார்கள். அவர்கள் சாந்தத்தையும் ஓய்வையும் ஒன்றெனக் குழப்பிக் கொள்கிறார்கள். அவர்கள் விரும்புவது மனத்திற்கு ஓய்வு. அப்பொழுதுதானே ஓய்வுக்குப்பின் கூடுதலாக உழைத்து அதிகப் பணம் சம்பாதிக்கலாம்.

நீ என்பவன் இல்லாது போகும்வரை (சுயம் இன்மை) நீ அமைதி பெற முடியாது. அதை ஒரு திடப்பொருள்போல் பெற்றடைய இயலாது. பழையதை நீக்கினால்தான் புதியதை உள்ளே கொண்டுவருவது சாத்தியமாகும்.

நீயும் தனியாக இல்லாமல், மற்றவையும் தனித்தனியாக இல்லாமல், இருப்பதெல்லாம் ஒன்றே என்பதை அறிந்ததும் மனத்தில் சாந்தி பரவும்; மன இறுக்கமெலாம் நீங்கும். இரண்டாமவன் உன்னிலிருந்து வேறானவன் என்று ஒருவனை நீ கருதும்போது மனம் இறுகுகிறது. ஏனெனில் அவன் வாழ்க்கையில் ஒவ்வொன்றுக்கும் உன்னோடு போட்டிபோடுகிறான். அரசியலிலும் இன்னொரு நாடு என்றாலே அது பகைநாடாகி

விடுகிறது. நீ உன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும், முயற்சிகளில் வெற்றி பெறவும் எடுக்கும் நடவடிக்கைகள் அடுத்தவனுக்கு அச்சமூட்டி, அவனையும் அம்மாதிரி நடவடிக்கைகள் எடுக்கத் தூண்டுகின்றன. இப்படி சமூகத்தில் ஒவ்வொருவரும் முயலுவதால் எங்கும் இறுக்கமான சூழ்நிலையே நிலவுகிறது. பாகிஸ்தான் அமெரிக்காவிடமிருந்து போர் விமானம் வாங்கினால், இந்தியா கலவரமடைந்து ரஷ்யாவிடமிருந்து போர்விமானம் இறக்குமதி செய்கிறது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் கிராமப் பாதையில் சென்று கொண்டிருந்தார். இரவு நேரம் ஆரம்பிப்பதற்குச் சற்று முன்பான மங்கலான வெளிச்சம். சிறிது தொலைவில் ஒரு கூட்டம் வருவதை அவர் பார்த்தார். நடுவில் ஒருவர் குதிரைமேல் தென்பட்டார். முல்லா அவர்களைக் கொள்ளைக்காரர்கள் என நினைத்து பயந்துவிட்டார். அவர்களிடமிருந்து மறைந்துகொள்ள ஒரு மயானம் தவிர அருகில் வேறு இடம் இல்லை. முல்லா ஓடிப்போய் ஒரு சிதை மேட்டில் படுத்துக்கொண்டார்.

அந்தக் கூட்டம் மாப்பிள்ளை அழைப்புக் கூட்டம். அவர்களும் யாரோ பாதி இருளில் மயானம் நோக்கிப் பாய் வதைப் பார்த்தனர். பிசாசு என்று பயந்தனர். சில தைரியசாலிகள் ஊர்வலத்திற்காக எடுத்துவந்திருந்த விளக்குகளுடன் மயானத்தில் போய்த் தேடினர். முல்லாவைப் பார்த்து பயந்த அவர்கள், அவரும் பயத்தால் நடுங்கி நிற்பதைக் கண்டு, அவரை விசாரித்து, விவரம் தெரிந்துகொண்டனர். இப்படித்தான் பக்கத்து வீட்டுக்காரன் ஏதாவது செய்தால், அதையே பின்பற்றியோ, எதிர்த்தோ நாமும் ஏதாவது செய்யத் தொடங்குகிறோம்.

ஆனால் எல்லாரும் ஒரே ஆத்மா என உறுதியாக அறிந்துகொண்டவன் சாந்தியடைகிறான். அவன்தான் யோகி. யோகம் எனில் இணைதல், எல்லாவற்றுடனும் ஒன்றுதல் என்று பொருள். பிறகு எப்படி பயம் உண்டாகும்? யார் யாரைக் கண்டுவது அஞ்சுவது? உனக்குள்ளும் நான்தானே இருக்கிறேன். எனக்குள்ளும் நீதான் இருக்கிறாய். பிறகு யார் யாரிடம் பயப்படுவது?

சார்லஸ் டார்வின்* வாழ்க்கை என்பது போராட்டமயமானது என்கிறார். இந்திய ஞானிகள் வாழ்க்கையை சமர்ப்பணமாக, அர்ப்பணிப்பாகப் பார்க்கிறார்கள். டார்வின் 'வல்லவன் வாழ்வான்' (survival of the fittest) என்கிறார். ஆனால் சீன ஞானி லாவோத்சு, அஷ்டாவக்ரர், புத்தர், மகாவீரர் முதலிய கிழக்கத்திய ஞானிகள் 'மென்மையே மேன்மை' என்கிறார்கள். அன்பானவர்கள்தாம் மிஞ்சுவார்கள்; பண்பாளர்கள்தாம் பிழைப்பார்கள் என்கிறார்கள்.

லாவோத்சு மலையிலிருந்து பாறை மீது விழும் அருவியை உதாரணமாகக் காட்டுகிறார். காலப்போக்கில் மென்மையான தண்ணீர் பிரவாகம் நீடிக்கிறது. ஆனால் கரடுமுரடான பாறை தேய்ந்து சற்றுக் கரைந்துவிடுகிறது. அகங்காரம் பிடித்தவனின் கதியும் இதுதான்: அவன் யாரை மென்மையானவர், பலகீன மானவர் என்றெல்லாம் நினைத்தானோ, அவரிடமே தோல்வியுறுவான்.

நீ என்பவன் எனது விரிவாக்கம் (extension), நான் உனது விரிவாக்கம். நாம் எல்லோரும் ஒருவருக்கொருவர் அப்படித்தான். ஆகவே நமக்குள்ளே வெற்றி-தோல்வி என்பவை வெறும் சொற்களே. போராட்டம் இல்லாத இடத்தில் சாந்தி நிலவும். அமைதி என்பது வெளியிலிருந்து கொண்டு வரப்படுவது அன்று. மோதல் இல்லாத இடத்தில் அமைதி தானாகவே நிலவும். இப்படி அமைதியுடன் விளங்குபவன்தான் யோகி. சம்மணமிட்டு (பத்மாசனம்) கண்களை மூடி, வலுக்கட்டாயமாக சிந்தனையை அடக்க முயலுபவன் யோகியாகமாட்டான். அவனது நிலை உயிரற்ற உடல் போன்றதாகும். இவ்வாறு தன் மீது திணித்துக் கொள்ளும் அமைதியை உண்மையானதெனச் சொல்ல முடியாது. உண்மையான அமைதி கிடைத்தவன் ஒய்வாக, சௌகரியமாக உணர்வான். 'இது நான்-இது நானல்லன்' என்று அவன் பிரித்துப் பார்ப்பதில்லை.

**எ**னது ஊர் பள்ளிக்கூடத்து ஆசிரியர் ஒருவர். நான் ஊருக்குப் போகும்போதெல்லாம் அவரைச் சந்திப்பதுண்டு. அவர் ஒவ்வொரு சந்திப்பின்போதும் தனக்குப் பேய் பிசாசில் நம்பிக்கை

* Charles Darwin (1809-1882) உயிரின ஆராய்ச்சியாளர். பரிணாம வளர்ச்சி, இயற்கைத் தெரிவு கோட்பாடுகள் உருவாக்கியவர் (Theory of Evolution, Natural Selection)

கிடையாது என்று கூறுவது வழக்கம். இதனால் எரிச்சலடைந்த நான் ஒரு வேடிக்கை செய்யத் தீர்மானித்தேன்.

நான் அவரிடம், "ஐயா, பேய் பிசாசுகள் உண்டு. அவை நம் ஊரில் இருக்குமிடம் எனக்குத் தெரியும். உங்களுக்குத் துணிச்சலிருந்தால் நான் அந்த இடம் உங்களுக்குக் காட்டுகிறேன்," என்றேன். இதைக் கேட்டு, அவரது உடல் லேசாக நடுங்கியது. எனினும் அவர் சமாளித்துக் கொண்டு, "எனக்குப் பேய்-பிசாசிடம் பயம் கிடையாது. அந்த இடத்தைக் காட்டு. நான் வருகிறேன்," என்றார்.

என் வீட்டருகில் ஒரு கிடங்கு (கோடவுன்). அங்கே மண்ணெண்ணெய் விற்பனையாளர் ஒருவர் காலி எண்ணெய் டின்களை அடுக்கிவைத்திருந்தார். இந்த டின்களுக்கு ஒரு விசேஷம் உண்டு. காலி மண்ணெண்ணெய் டின்கள் வெயில் காலத்தில் வெப்பத்தால் சுருங்கி ஓசை எழுப்பும். ஆசிரியருக்கு அந்த விஷயம் தெரியாது.

நான் சொன்னேன், "ஐயா, பேய் பிசாசு உண்டென நான் நம்புகிறேன். சில பேய்கள் அந்தக் கிடங்கில் உள்ளன. நீங்கள் இன்றிரவு அங்கே தங்குங்கள். மின்விளக்குக் கிடையாதாகையால் மெழுகுவர்த்தி எடுத்துச் செல்லுங்கள். நாளை காலை சந்திப்போம். அப்போது பேய் பிசாசு உண்டா என்று முடிவாகச் சொல்லுங்கள். எனினும் நடுவில் பயந்துவிட்டால் கிடங்கின் தகரக் கதவை பலமாகத் தட்டுங்கள். நான் வெளியில் கயிற்றுக் கட்டிலில் இருப்பேன்," என்றேன்.

அவர் வீராப்பாக, "சரி, காலையில் சந்திப்போம். பேய் பிசாசு இந்த கிடங்கிலும் சரி, வேறெங்கும் சரி, கிடையாது என்று என் நம்பிக்கை வலுப்பெற்றுவிடும். கிடங்கில் என் அனுபவத்தை வைத்து நீயும் பேய் பிசாசு கிடையாது என்று ஒத்துக்கொள்ள வேண்டும்," என்று நிபந்தனை விதித்தார்.

இரவு 10 மணிக்கு அவரைக் கிடங்குக்குள் அனுப்பிவிட்டு வெளியே தாழ்ப்பாள் போட்டேன். கயிற்று கட்டில் கொண்டுவந்து கிடங்கின் வெளியே தூங்கினேன். ஒரு மணி நேரம் கழித்துக் கதவை பலமாகத் தட்டும் ஓசையும் ஆசிரியர் அலறலும் கேட்டது.

நானும் பயந்து அவசரமாகக் கதவைத் திறந்துவிட்டேன். அவர் ஓடிவந்து, “தம்பி, நீ சொன்னது உண்மை. உள்ளே ஒன்றிரண்டு பேய் இல்லை. நூறு பேய் இருக்கும். மாற்றி-மாற்றி ஓசை எழுப்புகிறது.” என்று கதறினார்.

நீ உன் கற்பனையை எதன் மீதும் ஏற்றிவைக்க முடியும். இதனால் ஒரு நபர் அல்லது பொருளைப் பற்றிய உனது மதிப்பீடு துல்லியமாக அமையாது. நீ மற்றவர் கண்ணுக்குச் சராசரியாகத் தோன்றுபவளை உனது கற்பனை காரணமாக அழகி என நினைக்கலாம். இதேபோல் பணத்தைப் பற்றிய உன் மதிப்பீடு மிகையாக இருந்தால், பணத்தைக் கொண்டு எதையும் வாங்கிவிட லாம் என்று கற்பனை செய்வாய். பதவி ஆசையும் இப்படித்தான். குறிப்பிட்ட பதவி அல்லது பதவி உயர்வு மூலம் என்னென்ன செய்யலாம் என உன் கற்பனைக் குதிரை பாய்ந்தோடுகிறது.

குழந்தை பிறக்கும் சமயம் அது சூனியமான மனநிலை யுடன் தோன்றுகிறது. நாம்தான் குழந்தையை முதலில் அதன் உடலுக்கு அறிமுகப்படுத்துகிறோம். ‘இது உன் கண்ணு, இது உன் காலு’ என்றெல்லாம் சொல்லித்தருகிறோம். வளர்ந்தபின், ‘நீ இந்து, நீ பிராமணன்’ என்பதுபோல் சமூகத்தில் தரப்படும் பெயர்ச் சீட்டுகளை வளர்கின்ற குழந்தையின் மனத்தில் ஒட்டுகிறோம். இப்படி அகங்காரத்தின் போர்வைகள் ஒன்றன் மீதொன்றாய்ப் போர்த்தப்படுகின்றன.

இவையெல்லாம் உன் உண்மையான அடையாளங்கள் அல்ல. இவற்றைப் பொய் என்றே கூறலாம். ஆனால் பலமுறை கூறப்படும் பொய் காலப்போக்கில் மெய்போல் ஒலிக்கிறது. மேலும் சிறிது காலம் சென்றபின், அது உண்மை என்றே நினைக்கப் படுகிறது.

ஆனால் நீ யார்? உடல் இல்லை, மனம் இல்லை, நீ இரண்டையும் கடந்தவன். நீ எந்த மதத்தையும் சேர்ந்தவனல்லன். நீ சிவப்போ, கருப்போ இல்லை. நீ இளைஞனுமில்லை, கிழவனு மில்லை. இவை எல்லாவற்றையும் கடந்து, ஆனால் உனக்குள் இருந்து உன்னைக் கவனிக்கிறானே அவன்தான் உண்மையான நீ. அவன் உன்னைப் பார்ப்பதால் அவன் சாட்சி. நீதான் அவன் என்பதால் நீ சாட்சி. இதை உணர்ந்தால் மனத்தில் அமைதி பரவும்.

'இவ்வாறு சாந்தமடைந்த யோகிக்கு விரிதலும் இல்லை, குவிதலும் இல்லை, மிகை அறிவும் இல்லை, மூடத்தனமும் இல்லை, இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை.' **(சுலோகம் 186)**

**அ**கங்காரக் கொந்தளிப்பைக் கைவிட்டால் மனம் சாந்தமாகும் என்று முன்பே பார்த்தோம். அப்படி சாந்தமடைந்த யோகி 'நான்-நீ' என்று வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாதவனாக இருப்பான். ஆகவே அவனது கவனம் எதனாலும் சிதறுவது இல்லை.

சிலர் தியானம் செய்வதாகக் கூறிக்கொண்டு அமர்வார்கள். மனைவி பாத்திரத்தைக் கீழேபோட்ட ஓசை, குழந்தையின் அழுகை, தெருவில் செல்லும் வண்டிச் சத்தம், விமானம் பறக்கும் ஒலி என்றெல்லாம் ஒவ்வொன்றிற்கும் உன் கவனம் சிதறினால் அங்கே தியானம் கைகூடாது. தியானத்தை இயற்கையாக மேற்கொள்ளாமல் உன்னைக் கட்டாயப்படுத்திச் செய்ததால் அது நிலைக்கவில்லை.

தியானம் என்பது சூனிய நிலை. சூனியத்தில் கவனம் எப்படிச் சிதறும்? சூனியத்தில் தடை எப்படிக் குறுக்கிடும்? சாந்தமான, இயற்கையான தியான சமயத்திலும் பாத்திரம் கீழே விழுந்த ஓசை கேட்கும். ஆனால் எதிர்விளைவு உண்டாகாது. காது இருப்பதால் ஒலி கேட்பதைத் தவிர்க்க முடியாது. நீ உள்ள சூனிய நிலையில் எந்த ஒலியும் கூடுதலாகவே கேட்கும். ஆனால் சூனியம் சலனமடையாது.

தியானம் என்றால் கவனத்தை ஒரு புள்ளியில் குவிப்பது, மையப்படுத்துவது என்று பெரும்பாலோர் நினைக்கிறார்கள். அது சரியில்லை. கவனத்தைக் குவிக்க முயன்றால் நிச்சயமாகக் குறுக்கீடுகள் வரும். நீ ராமருடைய சிலையில் மனத்தை நிலைநாட்ட முயன்று அதை தியானமென நினைக்கலாம். ஆனால் தெருநாய் குலைப்பதைக் கேட்டு நீ பொறுமையிழந்தால் உன் தியானம் பங்கப்பட்டுவிடுகிறது.

ஜெபமாலை உருட்டுகிறாய். டெலிபோன் மணியடிக்கிறது. தொடர்ந்து உன்னுடைய விரல்கள் மாலையை உருட்டிக் கொண்டிருந்தாலும், மனம் தடுமாறுகிறது. 'யார் போன் செய்தார்?

என்ன விஷயமோ?' என்று ஆர்வம் மேலிட்டு நாம ஜெபம் இயந்திரத்தனமாகிவிடுகிறது.

தியானம் என்பது குவித்தல் (concentration) அன்று. அது விழித்தல் (awakening) ஆகும்.

நீ தியானத்தில் அமர்கிறாய். எங்கோ ஒரு நாய் குலைப்பது உனக்குக் கேட்கிறது. நீ தடுமாறுகிறாய். நீ எந்த நாய் குரைப் பதையும் தடுக்க முடியாது. உன் மனத்தில் சலனமேற்படாமல் தடுப்பதே உனக்கு சாத்தியம். அவ்வாறு செய்யாமல், 'பக்கத்து வீட்டுக்காரனுக்கு என் மேல் பொறாமை. அதனால்தான் நான் தியானம் செய்ய உட்கார்ந்தால் அவன் தன் நாயைக் குலைக்கச் செய்கிறான்' என்று நீ நினைத்தாயானால், 'தெருவில் அலையும் நாய்களை கார்ப்பரேஷன் ஏன் சுட்டுத்தள்ளுவதில்லை?' என்று நீ நொந்துகொண்டாயானால், உன் தியானம் சேதப்படுகிறது.

தியானம் கலைந்தது நாய் குரைத்ததால் அன்று. நீ அதை எதிர்கொண்ட விதத்தால், அதை நோக்கி உன் சிந்தனை சென்றதால் தியானம் கலைந்தது. நாய் குரைக்கட்டும்; டெலிபோன் மணி அடிக்கட்டும்; நீ அசட்டையாக, அமைதியாக இருந்துவிடு.

ஒருமுறை நான் கொல்கத்தாவில் ஷேர் மார்க்கெட் (பங்குச் சந்தை) துறையில் முக்கியமான ஒருவரின் வீட்டில் தங்கியிருந் தேன். அவர் எல்லா அறைகளிலும் டெலிபோன் பொருத்தி யிருந்தார். குளியலறையிலும் தொலைபேசி வசதி இருந்தது. குளியலறை சுவர் முழுதும் ஷேர்களின் விலை மாற்றங்களை அவர் குளிக்கும்போதே போனில் உடனுக்குடன் அறிந்து கிறுக்கிவைத்திருந்தார். அந்த அறையில் சுவரில் எழுத வசதியாக பென்சில்களும் வைத்திருந்தார். நான் காரணம் கேட்டேன்.

“பங்குச் சந்தை விஷயங்கள் நுணுக்கமானவை; நூல்போல் பலகீனமானவை. ஒரு நொடியில் ஏற்படும் மாற்றமும் லட்சக் கணக்கில் லாபமோ, நஷ்டமோ ஏற்படுத்திவிடும்,” என்று அவர் தெரிவித்தார்.

“பூஜை அறையிலும் ஏன் போன் பொருத்தியிருக் கிறீர்கள்?” என்ற கேட்டேன்.

"ஷேர் விலை ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கும். கடவுள் சில நிமிடங்கள் காத்திருக்க நேர்ந்ததால் ஒன்றும் ஆகிவிடாது. ஆனால் பங்குகளின் விலை ஒரு நொடியில் வானத்தைத்தொடும் அல்லது மண்ணில் சரியும். இந்தச் சந்தையில் ஒவ்வொரு சலனத்தையும் உன்னிப்பாகக் கவனித்து அதே நிமிடம் அதிரடி நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்குப் பிறகு ஜெபமாலை உருட்டுவதை விட்ட இடத்திலிருந்து தொடரலாம்," என்று அவர் அலட்சியமாகக் கூறினார்.

இதுவா பூஜை? இதுவா பக்தி? இதற்கொரு தனி அறையா? டெலிபோன் மணி உன் தியானத்தை சேதப்படுத்துவதில்லை. 'யார் போன்? என்ன விஷயம்?' என்று உன் சிந்தனை தடம் மாறியதால் தியானம் கலைகிறது

நானும்தான் அந்த வணிகரின் வீட்டுக் குளியலறையை உபயோகப்படுத்தியிருக்கிறேன். அப்போது அங்குள்ள டெலிபோனின் மணி அடித்திருக்கிறது. அப்போது என் மனத்தில் சலனம் ஏற்பட்டதில்லை. ஏனெனில் எனக்குப் பங்குச் சந்தை பற்றிய சிந்தனையே கிடையாது. இதனால் டெலிபோன் மணியோசை. எனக்கு 'சைரன்' (அபாய ஒலி) போல் அமையாமல் இன்னிசையாகக் கேட்டது.

**நா**ன் அரசாங்கத்தின் ஓய்வு விடுதி ஒன்றில் ஒரு முறை தங்கினேன். ஓர் அமைச்சரும் வந்து இன்னோர் அறையில் தங்கியிருந்தார். அவரால் இரவில் தூங்க முடியவில்லை. அந்த விடுதி வளாகத்தில் சில நாய்கள் விடாமல் குரைத்துக் கொண்டிருந்ததுதான் காரணம். அவர் என் அறைக் கதவைத் தட்டி என்னை எழுப்பிவிட்டார். "என்னய்யா, இப்படி ஆழ்ந்து தூங்குகிறீரே. இந்த நாய்ச் சனியன்கள் என்னைத் தூங்கவிடாமல் குரைக்கின்றன," என்று குற்றம் சாட்டினார்.

"இதோ பாருங்கள் அமைச்சர் அவர்களே, நாய்கள் குரைத்தும் என்னால் தூங்க முடிகிறது; நீங்கள்தான் தூங்க முடியவில்லை எனில் குற்றம் நாய்களுடையது. இல்லை. பிரச்சினை உங்களிடம்தான் உள்ளது. நீங்கள் நாட்டின் தலைவர் களில் ஒருவர் என்றும், உங்கள் தூக்கத்தைக் கெடுக்கக்கூடா

தென்றும் அந்த நாய்களுக்கு எப்படித் தெரியும்?" என்று நான் அவருக்குச் சுட்டிக்காட்டினேன்.

"அது சரி, நான் தூங்குவதற்கு ஒரு வழி சொல்லுங்கள்," என்றார் அவர்.

"நான் சொல்கிறபடி செய்துபாருங்கள். நீங்கள் படுக்கையில் படுத்துக்கொண்டு, 'நாய்களே, குரைப்பது உங்கள் வேலை. எனது வேலை தூங்குவது' என்று சொல்லிவிட்டுக் கண்ணை மூடிக்கொள்ளுங்கள். நாய்கள் ஒரே சீராகக் குரைப்பதிலும் சங்கீதம் உள்ளது. நாய்களும் கடவுளின் உருவ வகைகளுள் அடங்கியவைதாம். அவை குரைப்பதும் கடவுள் எழுப்பும் ஒலி வகைகளில் ஒன்றுதான். இந்த உண்மையை ஏற்றுக்கொள்ளுங்கள். இதனுடன் முரண்படாதீர்கள். உலகில் மனிதர்களுக்கு மட்டு மில்லை, நாய்களுக்கும் இடமுண்டு. அவையும் உரிமைகள் பெற்றிருக்கின்றன," என்று நான் விளக்கினேன்.

அவர் நான் சொன்ன உபாயத்தை முதலில் நம்பாவிடிலும், அதைச் சோதித்துப் பார்ப்பதில் தப்பில்லை என்று கூறி அவர் தன் அறைக்குத் திரும்பினார். அரை மணி கழித்து நான் அவரது அறைப் பக்கமாகச் சென்றேன். குறட்டை ஒலி கேட்டது. நான் கதவைத் தட்டி அவரை எழுப்பினேன். அவர், "என்ன விஷயம்? எதற்காக எழுப்பினீர்கள்? முதலில் நாய்களால் தூங்கவில்லை. ஒரு அரை மணி நேரமாகத்தான் அசந்து தூங்கினேன். மறுபடியும் தூக்கம் கெட்டுவிட்டது," என்று அவர் எரிச்சல்பட்டார்.

"அதனாலென்ன? நான் சொன்ன உபாயம் பலித்துவிட்டது. அது போதும். உலகத்தின் போக்கை நாம் மாற்ற முடியாது. அவை நடக்கிறபடி நடக்கட்டும் என்று விட்டுவிட்டால், தூங்குவது உள்பட நம் வேலைகள் சூழ்நிலையால் பாதிக்கப்படாமல் இருந்துவிடும்," என்று நான் அவரை சமாதானப்படுத்தினேன்.

இப்படி சகஜமாக ஏற்றுக்கொள்ளும் மனோபாவமே தியானத்தின் அஸ்திவாரம் ஆகும். விமானம் பறக்கும் ஒலி, ரயில் வண்டிகளின் ஓட்டம், லாரிகளின் பேரொலி, குழந்தைகளின் அழுகை, பெண்கள் பாத்திரங்களை ஓசைப்படுத்துதல், தபால்காரர் கதவைத் தட்டுதல், இப்படி எல்லாம் நீடிக்கும். நாம்தான் ஒலியைக்

கேட்பதுடன் நிறுத்திக்கொண்டு அதன் பாதிப்பிலிருந்து தப்ப வேண்டும்.

மனத்தை இப்படி சூனியமாக வைத்திருப்பதுதான் தியானம். ஒன்றில் மனத்தைக் குவிப்பது தியானமில்லை. இது தெரியாமல், காட்டுக்குப் போனால்தான் தியானம் செய்ய முடியுமென சிலர் நினைக்கின்றனர்.

**அ**மெரிக்கரான மனத்தத்துவ வல்லுநர் ஒருவர் பௌத்த முறையிலான விபாஸனா என்னும் தியான முறையைக் கற்க விரும்பினார். இதற்காக அவர் மூன்று வாரம் விடுமுறை எடுத்துக்கொண்டார். தியானம் பயிலும் ஆசிரமம் அமைந்திருந்த ரங்கூன் நகருக்கு வந்தார். அவர் ஆசிரமம் மலையடிவாரத்தில், அருவி அருகே, மலர்ச்சோலைகளின் நடுவே பறவைகளின் இனிய ஒலியின் பின்னணியில் அமைந்து இருக்குமென நினைத்திருந்தார்.

அவர் டாக்சியில் ஆசிரமம் உள்ள இடத்தை அடைந்ததும் திடுக்கிட்டார். சுற்றிலும் பார்த்தவர் தலையிலடித்துக் கொண்டார். ஏனெனில் ஆசிரமம் கடைத்தெருவின் நடுவில் அமைந்திருந்தது. அக்கம்பக்கத்தில் மீன் கடைகள். எங்கும் கூட்டம் கூட்டமாக ஈக்கள் மொய்த்துக்கொண்டிருந்தன. நாய்கள் குரைப்பதும் பெண்கள் உரக்கப் பேசுவதும் காதைப் பிளந்தது. குழந்தைகள் அலறின. ஆண்கள் உரத்த குரலில் வியாபாரப் பேரம் செய்தனர். இதுவா ஆசிரமம் நடத்தப் பொருத்தமான இடம் என்று திகைப்புற்றார்.

அவர் உடனடியாக அமெரிக்கா திரும்பிவிடத் துடித்தார். ஆனால் அடுத்த மூன்று நாளுக்கு விமானத்தில் இடமில்லை. வேறு வழியின்றி அங்கு தங்கி பிட்சுக்கள் என்னதான் செய்கிறார்கள் என்று பார்க்க முடிவெடுத்தார்.

அடுத்து அவர் ஆசிரமத்துக்குள் நுழைந்து பார்த்தார்; மேலும் அதிர்ச்சியடைந்தார். சூரியன் அஸ்தமிக்கும் நேரம். ஏராளமான காக்கைகள் ஆசிரம வளாகத்தில் கத்தியபடி வட்டமிட்டுக் கொண்டிருந்தன. பிட்சுக்கள் காக்கைகளுக்கு அந்த

சமயம் உணவு மிச்சங்களைப் போடுவார்கள். அமெரிக்காவில் காக்கையின் குரல் கேட்பது அரிது. இங்கோ காக்கைகளின் இரைச்சலை அந்த அமெரிக்கரால் தாங்க முடியவில்லை.

அதே சமயம் அவர் பிட்சுக்கள் சிலர் நடந்தபடியே தியானிப்பதையும், வேறு சிலர் மரங்களின் கீழ் அமர்ந்து தியானிப்பதையும் அவர் கண்டார். அவர்கள் முகத்தில் அமைதி நிறைந்து காணப்பட்டது. இந்த எதிர்மறையான சூழலிலும் அவர்களால் தியானம் செய்ய முடிவது அவருக்கு முரண்பாடாகத் தோன்றியது.

அமெரிக்கர் தலைமை பிட்சுவைச் சந்தித்தார். கடைத்தெரு சூழ்நிலையில், சந்தை ஆரவாரத்தில் ஆசிரமம் நடத்துவதன் காரணம் என்ன என்று விசாரித்தார். உடனடியாக அந்த பிட்சு பதில் சொல்லாமல், "மூன்று வாரம் தங்கப் போவதாக எழுதி யிருந்தீர்கள். அவ்வாறே தங்கிப் பார்த்தபின் மீண்டும் இதே கேள்வியைக் கேளுங்கள்," என்று கூறிவிட்டார்.

நாள்கள் செல்லச் செல்ல அமெரிக்கருக்கு ஒரு விஷயம் பிடிபட்டது. உண்மையான தியானம் சுற்றுப்புற ஓசைகளால், ஆரவாரத்தால், நிகழ்ச்சிகளால் பாதிப்படையாது. தியானம் செய்பவனது உலகம் வேறாக இருக்கும். அவன் உள்ளுலகத்தில் இறங்கிக்கொண்டே செல்கிறான். தியானப் பயிற்சி மேற்கொண்ட அமெரிக்கரும் நாளடைவில் புறவுலகின் ஒலிகளைக் கேட்டபோதிலும் சலனமடையாமல் தியானத்தைத் தொடர முடிந்தது. இன்னொரு விசித்திரத்தையும் அவர் உணர்ந்தார். காக்கைகள் கரைதல், நாய்கள் குரைத்தல், கடைத்தெரு கூச்சல்கள் முதலியவை பின்னணியாக அமைந்தால்தான் தன்னால் தியானம் செய்ய முடியும் என்னும் நிலைக்கு அவர் வந்துவிட்டார்! மூன்று வாரம் முடிந்தபின் அமெரிக்கர் தலைமை பிட்சுவைச் சந்தித்தார். "நான் ஆசிரமம் உள்ள சூழ்நிலையைப் பற்றி அவசரப்பட்டுப் புகார் செய்துவிட்டேன். என்னை மன்னித்துவிடுங்கள்," என்று கேட்டுக்கொண்டார்.

"நாங்கள் நன்கு யோசித்துதான் இங்கே ஆசிரமம் அமைத்துள்ளோம். எங்கே தடைகள், எதிர்ப்பான சூழ்நிலைகள்

உள்ளனவோ அங்கே அவற்றை பொருட்படுத்தாமல் தியானம் மேற்கொள்வதுதான் விபாஸனா தியானம் எனப்படும். எதிர்த் தாக்கம் இன்றி மனம் சூனியமாகிவிட்டால், அது அமைதி பெற்றுவிடும்.''

மனம் அமைதியாகிவிடும் நிலையை அடைந்தவன் மகாஞானி ஆகிவிடமாட்டான். அவன் நடுநிலையில் இருப்பான். அவன் மூடனாகவும் இருக்கமாட்டான். மிகை ஞானம், மிகை அஞ்ஞானம் என்னும் இரண்டு நிலைகளுக்கும் நடுவில் சாந்தமாக விளங்குவான். அவனது வாழ்க்கையில் எல்லாமே மிதமாக இருக்கும்; மிகையாக எதுவும் இருக்காது. இந்த நிலை ஸம்யம் என்றும் கூறப்படுகிறது.

புத்தர் மொழிந்தார்: 'வீணையின் தந்திகள் தொய்வாக இருந்தால், ஓசை சரியாக எழாது. அவற்றை அளவுக்கு மீறி இறுக்கினால் அவை அறுந்துவிடும். தளர்வோ, இறுக்கமோ இல்லாத நடுவான நிலையில் தந்திகள் விட்டுக்கொடுத்து இருக்கும்போது இனிய ஒலி பிறக்கிறது.' வாழ்க்கை என்னும் வீணைக்கும் அவர் சொல்வது பொருந்தும். எதிலும் மிதமாக இருந்தால் வாழ்க்கையில் எல்லாம் இன்பமாக இருக்கும்.

'சாந்தமான சுபாவம் அமைந்தவனை யோகி எனலாம். அவன் ஆட்சி செய்தல், பிட்சை (தான உணவு) பெறுதல், லாபம், நஷ்டம், கடைத்தெரு, காடு ஆகியவற்றைப் பிரித்துப் பார்க்க மாட்டான்.' **(சுலோகம் 187)**

சாந்த மனநிலை உள்ளவன் நடுநிலைமையாளனாக இருப்பான். தடுமாறாமல் இருப்பான். தனக்குள் கேட்கும் இசையை அனுபவிப்பான். அவன் பிட்சை கேட்கப் புறப்பட்டாலும் அதில் ராஜ கம்பீரம் தெரியும். அவன் சிம்மாசனத்தில் அமர்ந்தால் பிட்சுவின் சுதந்திர உணர்வு அவன் செயல்களில் வெளிப்படும். அவன் எந்த சமயத்திலும் வருத்தப்படாமல் சிம்மாசனத்தைத் துறக்கவும் தயாராக இருப்பான். அவனிடம் எந்த மிகையும் இல்லை என்றாலும் கூட்டத்திலும் அவனது தனித்தன்மை வெளிப்பட்டுவிடும். அவன் உள்ளுலகில் தன்னை ஏற்கெனவே நிலைநாட்டிவிட்டமையால் அவனது வெளியுலக வாழ்க்கையில்

சலனங்கள் தெரிவதில்லை. அவன் எது குறித்தும் குறை கூறுவதில்லை. அவன் எல்லாவற்றையும் அப்படியே ஏற்கிறான்.

'இதைச் செய்தேன், இதைச் செய்யவில்லை என்னும் இரட்டைகளிலிருந்து விடுபட்ட யோகியை அறம்-பொருள்-இன்பம் மற்றும் விவேகம் ஆகியவை பாதிப்பதில்லை.' **(சுலோகம் 188)**

நாம் வாழ்க்கையில் என்ன செய்தோம், என்ன செய்யவில்லை, என்ன செய்வதாக இருந்தோம் என்றெல்லாம் கணக்குப் போட்டபடி இருக்கிறோம். இவ்வளவு சம்பாதித்தோம், இந்த வெற்றி பெற்றோம், இதில் தோல்வியடைந்தோம்-இவ்வாறு இறக்கும்வரை நமது வாழ்க்கை கணக்குமயமாக உள்ளது.

**ஆ**ண்ட்ரூ கார்னேகி அமெரிக்காவின் கோடீஸ்வரர்களில் ஒருவராக விளங்கியவர். இறக்கும் தறுவாயில் அவர் தன் செயலாளரை அழைத்து, "நான் விட்டுச் செல்லும் சொத்துகளின் மதிப்பைக் கணக்குப் பார்த்துச் சொல்," என்று கட்டளையிட்டார். இதைத் தெரிந்துகொள்ளவே அவர் மூச்சு விட்டுக் கொண்டிருப் பதுபோல் தோன்றியது. செயலாளர் எல்லாப் பதிவேடுகளையும் ஆராய்ந்து சுமார் 10 கோடி சொத்துள்ளதாகத் தெரிவித்தார். கார்னேகி ஏமாற்றத்துடன், "நூறு கோடியாவது இருக்குமென நினைத்தேனே. அப்படியானால் நான் வாழ்க்கையில் தோற்று விட்டதாகவே அர்த்தமாகிறது," என்று கூறிவிட்டு இறந்தார்.

ஒருமுறை அந்தச் செயலாளரிடம் அவரது பணி பற்றி விசாரித்தனர். "நீங்கள் மீண்டும் பிறந்தால், கார்னேகியாகப் பிறக்க விரும்புவீர்களா, அல்லது அவரது செயலாளராகவா?" என்று கேட்டனர். "நான் செயலாளராக ஆவதையே விரும்புவேன். ஏனெனில் அவரைப்போல் பணவெறி பிடித்து அலைய என்னால் முடியாது என் எஜமானர் பணத்தின் பின்னாலேயே ஓடியபடி இருந்ததால், பிள்ளைகளோடு பேச, விளையாட, விடுமுறைகளில் ஊர் சுற்றிப் பார்க்க அவருக்கு நேரம் கிடைத்ததில்லை," என்று அவர் பதிலளித்தார்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருமுறை பிடித்துவரப்பட்டு நீதிபதி முன் நிறுத்தப்பட்டார். நீதிபதி அவரிடம், "நீங்கள் பணப்பையை

மட்டும் திருடியிருக்கிறீர்கள் என்று தெரியவருகிறது. ஆனால் அதன் அருகில் கிடந்த ரூபாய் நோட்டுக் கட்டுகளைத் தொடவில்லை என்பது அதிசயமாக உள்ளது. இதன் ரகசியம் என்ன?'' என்று கேட்டார்.

நஸ்ருத்தீன் அவரை வணங்கி, ''ஐயா, இந்த விஷயம் பற்றி கேட்காதீர்கள். போன ஒரு வாரமாக என் மனைவி நான் ஏன் பணத்தைத் தொடவில்லை என்று துளைத்தெடுக்கிறாள். நீங்களும் அதே கேள்வியைக் கேட்டு என்னைத் துன்புறுத்தாதீர்கள். நான் பணப்பையை மட்டும் கொண்டுவந்ததால், ஏன் பணத்தையும் எடுத்துவரவில்லை என்று கேட்கிறீர்கள். நான் பணப்பையை விட்டுவிட்டுப் பணத்தை மட்டும் எடுத்து வந்திருந்தால், பணத்தைக் கொண்டு வரவும், ஒரு இடத்தில் மொத்தமாகப் பணத்தை வைக்கவும் வசதியாகப் பணப்பையை ஏன் கொண்டுவரவில்லை என்று மனைவி கேட்டிருப்பாள்,'' என்று பதிலளித்தார்.

உன் வாழ்க்கையும் இப்படி 'எதைச் செய்தோம்? எதைச் செய்யவில்லை?' என்று கணக்குப்போடுவதில் கழிகிறது. நீ எவ்வளவு லாப நஷ்டக் கணக்குப் போட்டாலும், இந்த உலகை விட்டுச் செல்லும்போது உன்னுடைய கை காலியாகத்தான் இருக்கப்போகிறது.

'செய்தேன்-செய்யவில்லை' என்னும் இரண்டையும் கடந்தவன் யோகி. அவனுக்கு அறம், பொருள், இன்பம், ஞானம் ஆகியவை அர்த்தமற்றவை ஆகிவிடுகின்றன. ஏனெனில் இவை யெல்லாம் செய்தல் அல்லது செய்யாமலிருத்தல் ஆகியவை மூலம் நம்மைப் பாதிக்கின்றன. யோகி சாட்சி மனப்பான்மை பெற்றிருப்பதால், இவற்றால் அவன் பாதிப்படைவதில்லை. நல்லது-கெட்டது, நீதி-அநீதி என்றெல்லாம் பிரித்து அதற்கேற்ப சலனம் அடையாமலிருப்பதால் யோகியின் மனத்தில் சாந்தி நிறைந்துள்ளது.

'ஜீவன் முக்தனான யோகிக்கு கடமை, கருமங்கள் என எதுவும் கிடையாது. அவனது இதயத்தில் எதன் மீதும் ஒட்டுதல் (அனுராகம்) இருக்காது. அவன் தனக்குக் கிடைத்த வாழ்க்கையை ஏற்றுக்கொண்டு அதன்படியே வாழ்கிறான்.' **(சுலோகம் 189)**

கிடைத்த வாழ்க்கையில் திருப்தி. கிடைக்காதவற்றை பற்றிக் கவலையில்லை. யோகி எந்நிலையிலும் மகிழ்ச்சியுடன் இருப்பான். தனக்கு வேறு விதமாக வாழ்க்கை அமைந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என ஏங்கமாட்டான்.

நீயோ இல்லாததற்கு ஏங்குகிறாய். கையில் 10 ரூபாய் இருந்தால் 20 ரூபாயாக இல்லையே என வருத்தப்படுகிறாய். கையில் 99 ரூபாய் இருந்தால் 'இன்னும் ஒரு ரூபாய் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்' என நினைப்பவன் நீ.

பண விஷயத்தில் மட்டுமல்ல, மற்ற விஷயங்களிலும் நீ குறைப்பட்டுக்கொள்கிறாய். நீ பார்ப்பதற்கு நன்றாகத்தான் உள்ளாய். ஆனால் நீ இப்பொழுதுள்ளதைவிட கூடுதலாக அழகாக இருந்தால் கூடுதலாக வெற்றி கிடைத்திருக்கும் என நினைக்கிறாய்.

இதேபோல், ஆன்மிகத் தலைவர்களைப் பார்த்து அவர்களைப்போல் 'நானும் ஒரு மகாத்மா ஆகவில்லையே' என ஏங்குகிறாய். அற்ப ஆத்மாவாக குடும்பப் பிரச்சினைகளிலேயே உழல்கிறேனே' என்று சுய இரக்கம் கொள்கிறாய். புத்தர், மகாவீரர்போல் ஆக முடியவில்லையே எனப் புழுங்குகிறாய். நீ எந்த விஷயத்திலும் எந்த நிலையில் இருந்தாலும் திருப்தி கொள்வதில்லை. சாப்பிடும்போது 'இன்னும் ஒரு கரண்டி' என்று கேட்பதுபோல், வாழ்க்கையிலும் மேன்மேலும் எதிர்பார்க்கிறோம்.

ஒரு முக்கியமான விஷயம் சொல்கிறேன். நீ எப்படி உள்ளாயோ அதை அப்படியே ஏற்றுக்கொண்டாயானால், அப்போதே நீ புத்தராகிவிடுகிறாய்; மகாவீரர் ஆகிவிடுகிறாய். நீ மகாத்மா என்பதற்கு ஆன்மிகத்தில் வெற்றிகளைக் குவித்தவர் எனப் பொருள் கொள்கிறாய். ஆனால் உண்மையான மகாத்மா யார்? எது எப்படி உள்ளதோ அதில் திருப்திகொள்பவன்; இப்பொழுது உள்ளதில் முழு திருப்தி பெற்றவன்; வேறு விதமாக வாழ்க்கை அமையக்கூடாதா என ஏங்காதவன்; கடவுள் காட்டுவதைப் பார்ப்பவன்; அவர் செய்யவைப்பதைச் செய்பவன்; அவர் அனுமதிக்கும்வரை வாழ்வது போதும் என நினைப்பவன்; மரணத்திற்கு எதிர்ப்புக் காட்டாதவன் — இது போன்ற லட்சணங்கள் அமையப் பெற்றவனே மகாத்மா.

கடமை என்று செய்வதற்கு எதுவுமில்லை. எதுவும் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பு இல்லை. ஒன்றின் பிரிவு துன்பமாக அமையும் அளவிற்கு எதன் மீதும் பற்றில்லை; எதன் மீதும் மோகமில்லை, பாசமும் இல்லை. வாழ்க்கை இருக்கின்றபடியே இருக்கட்டும். 'இத்தகைய வாழ்க்கை சம்மதம்' என்று, எதனுடனும் முரண்படாமல் முத்துப்போவதுதான் யோகம். இந்த நிலையை அடைந்தவன் மனிதனைக் கட்டிப்போடும் எல்லாத் தளைகளிலிருந்தும் விடுபடுகிறான். வேதங்கள் சொல்வதன் சாரமும் இதுவே.

'நீ இப்படி இல்லையே-அப்படி இல்லையே' என்று கவலைப்படாமல், நீ எப்படி உள்ளாயோ அப்படியே உன்னை இறைவனுக்கு சமர்ப்பித்துவிடு. 'உன் விருப்பப்படியே நடப்பதாக' என்று பொறுப்பைக் கடவுளிடம் விட்டுவிடு. 'கடவுளே, என்னை எப்படி வைத்தாலும் அப்படியே இருப்பேன். என்னை என்ன செய்யவைக்கிறீர்களோ அதைச் செய்வேன். எங்கெல்லாம் அலையவைக்கிறீர்களோ அலைவேன். நரகத்தில் தள்ளினால் அங்கே வாழ்வேன். எதற்கும் உங்களைக் குறைகூற மாட்டேன்' - இவ்வாறு வாழ்க்கையுடன் சமரசம் ஏற்பட்டுவிட்டால், நீ சத்-சித்-ஆனந்தம் என்னும் நிலையை அனுபவிப்பாய். இறைவனின் சுவையை உணர்வாய்.

வாழ்க்கையில் தினமும் எதையாவது குறை சொல்லத் தோன்றும் போதெல்லாம் இந்த சுலோகத்தை (எண் 189) நினைவில்கொள். குறைகள் என்னும் எல்லாப் பூட்டுகளையும் இந்த சுலோகம் என்னும் சாவி திறந்துவிடும்.

**யதா ஜீவனம் ஏவ** - இந்த சுலோகத்தின் இச்சொற்கள் 'இப்படித்தான் (உன்) வாழ்க்கை' எனக் கூறுகின்றன. இதிலிருந்து எள்ளளவும் அது வேறாக அமைய வேண்டியதில்லை என்பது உனது முடிவாக இருக்கட்டும்.

இயேசுநாதர் சிலுவையில் இறக்கும் சமயம் இதேபோல்தான் அறிவித்தார். அவர் கடைசியாக, 'உமது விருப்பம்போல் ஆகுக' (Thy will be done) என்றார். தாம் சிலுவையில் அறையப் படுவதையும் அவர் கடவுளின் விருப்பம் என்றே ஏற்றார்.

அக்கணமே இயேசு மடிந்தார்; கிறிஸ்து பிறந்தார்! இயேசுவின் மனிதப் பிறப்பின் தன்மை மாறி அவதாரம் எனப் போற்றப்பட்டது. அவர் புதுப்பிறவி பெற்றார்.

அக்னி பரீட்சை என்கிறார்களே அது அதற்குத் தகுதியானவர்களுக்குத்தான் நடத்தப்படுகிறது. துன்பம் நேரும்போது அதை உனக்கு வைக்கப்படும் பரீட்சையாகக் கருது. துன்பத்தை ஒரு சவாலாக எதிர்கொள். 'இப்படித்தான் உன் வாழ்க்கை' என்று நீ ஏற்றுக்கொண்டால் அக்கண்ணோட்டம் உன்னைக் கடவுளுடன் இணைக்கும் பாலமாக அமையும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

> **ஓஷோ அவர்களே! எனக்கு தீட்சை அளித்ததும் முக்தி (விடுதலை) கிடைத்து விடும் என்றீர்கள். ஆனால் என் வாழ்க்கை முற்றிலும் மாறுபடவில்லையே. சந்நியாசம் பெற்றவனும் பழைய மனநிலையிலேயே நீடிக்கிறான். சில சமயம் அவன் சராசரி மனிதனைவிடத் தாழ்ந்து விடுகிறான். முக்தி என்னும் நறுமணம் அவனை ஏன் மேன்மை யானவனாக, மாமனிதனாக ஆக்குவ தில்லை? இதனால் முற்பிறவி வினைகள் பாதிப்பதாகக் கருதலாமா?**

**ஆ**ம், நான் சந்நியாசம் தரும்போது உனக்கு முக்தி அளிக்கிறேன் என்று சொன்னேன்தான். ஆனால் நீ முக்தி அடைந்துவிட்டாய் என்று நான் கூறவில்லையே. நான் சொன்னால் மட்டும் நீ ஆத்ம விடுதலை அடைந்துவிட முடியுமா? எனது அறிவிப்பு மட்டும் போதாது. நீயும் ஒத்துழைக்க வேண்டும். ஆனால் நீ பற்றுகளை இன்னும் முழுமையாக விடவில்லை. விலங்குகளைச் சங்கிலியாகவும், சிறையை நீ வீடாகவும் நினைக்கிறாய். நான் சொல்வதால் மட்டும் எதுவும் நடந்துவிடாது. நீ அதை உண்மையாக்க உழைக்க வேண்டும்.

நீ முற்பிறவியில் செய்த தீமைகள் இப்பிறவியில் உன்னைப் பாதிக்கின்றனவோ எனக் கூறுவது நீ பொறுப்பைத் தட்டிக் கழிக்க முயலுவதையே காட்டுகிறது; நீ தப்பிக்க முயலுவதையே காட்டுகிறது. ஆகவே 'என் கையில் என்ன இருக்கிறது?' என்று கூறுகிறாய்.

நான் சொல்லி நீ பெறுவதல்ல முக்தி. ஆத்ம விடுதலை விருப்பம் உன் சுபாவமாக உனக்குள் ஏற்கெனவே இருக்கிறது. அந்த சுபாவத்தைதான் நான் உனக்கு நினைவூட்டினேன். நீ என் அறிவிப்பிற்குத் தவறான அர்த்தம் எடுத்துக்கொள்ளாதே.

சத்குரு எனப்படுபவர் உனக்கு உன் சுபாவத்தை நினைவு படுத்துவதைத் தவிர வேறெதுவும் செய்வதில்லை. உன்னிடம் ஏற்கெனவே உள்ளதைத் தான் அவர் சுட்டிக்காட்டுகிறார். குரு உன்னை விழிக்கச் செய்கிறார் என்றும், உனக்கு அங்கீகாரம் தருகிறார் என்றும் நீ கருதுவது பிரமை மாத்திரமே. நீ கயிற்றைப் பாம்பென நினைக்கிறாய். நான் விளக்கு எடுத்துவருகிறேன். "நன்றாகப் பாரப்பா." என்று சொல்கிறேன். இதன் மூலம் நான் உன்னைப் பாம்பு என்ற நினைப்பிலிருந்து விடுதலை செய்கிறேன். இதன் அர்த்தம் 'பாம்பு இருந்தது. அதிலிருந்து உனக்கு விடுதலை பெற்றுத் தந்துவிட்டேன்' என்றா பொருள். இல்லவே இல்லை. 'பாம்புதான் இல்லையே ஆகவே உனக்கு விடுதலை' என்பது தான் இதன் அர்த்தம். பாம்பு இல்லாதபோது அங்கு விளக்கு எடுத்துவருவதால் எந்த மாறுதல் இல்லை. அதுபோல் சந்நியாசம் என்பது ஒரு விளக்கு மாத்திரமே. அது மட்டுமே முக்தியைப் பெற்றுத் தந்துவிடாது. அந்த விளக்கின் வெளிச்சத்தில் உன்னை மீண்டும் ஆராய்ந்துகொள்.

நான் உனக்கு சந்நியாசம் அளித்து, பற்றுகளிலிருந்து இனி உனக்கு விடுதலை என்கிறேன். இதனுடன் என் பணி நிறை வடைகிறது. ஆனால் உன் வேலையும் நிறைவடைவதாக நான் சொல்லவில்லை. குரு-சீடன் இடையே ஒத்துழைப்பு இருந்தால் அங்கே ஆன்மிகப் புரட்சி நிகழ்கிறது. ஆனால் நீ ஒத்துழைத் தால்தான் அது சாத்தியமாகும்.

நீயோ விடுதலை பெற விரும்பவில்லை. சாக்குப்போக்கும் புதிய தர்க்கங்களும் முன்வைக்கிறாய். முக்திநிலையை அடைந்த துமே துறவியின் வாழ்க்கையில் மாறுதல் ஏன் ஏற்படுவதில்லை என்று காரணம் கேட்டாய்.

முக்திநிலைக்கும் (பற்றுகள் அறுத்தலுக்கும்) வாழ்க்கையில் மாறுதலுக்கும் சம்பந்தமில்லை. முக்தி என்பது இனி மாறுதலே

கிடையாது என்னும் அறிவிப்புதான். முக்தி மனப்பான்மை வசப்பட்டதும் 'எது எப்படியோ அது அப்படியே' என்று ஏற்றுக் கொள்வாய். எதை மாற்ற வேண்டும்; யார் மாற வேண்டும்; ஏன் மாற வேண்டும்; எங்கே மாற வேண்டும் ஆகிய கேள்விகளுக்கு இனி இடமில்லை.

சந்நியாசம் ஏற்றதும் வாழ்க்கையில் மாற்றம் நிகழ வேண்டும் என எதிர்பார்ப்பது அகங்காரத்தின் நுணுக்கமான வகையாகும். பணத் திமிர், பதவித் திமிர்போல் சந்நியாசத் திமிரும் உண்டு. சந்நியாசம் பெற்றவன் தன்னை எல்லோரும் மகாத்மா என்று கருத வேண்டுமென எதிர்பார்க்கிறான். சந்நியாசத்தால் உடலின் தேவைகளும் உடலின் உபாதைகளும் நீங்கிவிடுவதில்லை. சந்நியாசி ஆகின்ற ஒவ்வொருவரும் மகாத்மா ஆகிவிட முடியாது. யோகம் கற்ற ஒவ்வொருவனும் ஆணிப் படுக்கையில் படுக்க இயலாது.

மகாத்மா ஆவதோ, ஹடயோகி (ஹடம்=பிடிவாதம், அடம்) ஆவதோ முக்தி என்பதன் அர்த்தமன்று. 'நீ ஏற்கெனவே பரிபூரணனாகத்தான் இருக்கிறாய்' என்னும் மனநிலை உனக்குத் தோன்றும். உனக்குப் பசியெடுக்கிறது முக்தி மனநிலை அமைந்துவிட்டால், பிறகு உன் உடலுக்குத்தான் பசிக்கிறது என்று நினைப்பாய். இந்த மாறுதல் உனக்கு மட்டுமே தெரியும். ஆனால் இதை வெளியில் பெருமையாகக் கூறினால், நீ இன்னும் முக்தி நிலையை அடையவில்லை என்றும், அகங்கார நிலையிலேயே உள்ளாய் என்றும் அர்த்தமாகும். நீ மகாத்மா ஆகிவிட்டதுபோல் நினைத்தால் அந்த விஷயத்தை நீ உனக்குள்ளேயே போட்டுவைத்திருக்க வேண்டும். 'நான் மகாத்மா ஆகிவிட்டேன்' என்று நீயே அறிவித்தால், அது நகைப்பிற்குரியது.

என்னிடம் சந்நியாசம் பெற்ற ஒருவர் என்னிடம் வந்து "சுவாமி, துறவியாகிவிட்ட போதிலும் என்னால் தேநீர் (டீ) குடிக்காமல் இருக்க முடியவில்லை' என்று வருத்தம் தெரிவித்தார். துறவி எல்லாப் பற்றுகளையும் விடவேண்டும் என நான் கூறுகையில், இவர் டீ பழக்கத்தை விடுவதைப் பற்றி பேசுகிறார்! இது அற்பமான விஷயம் அல்லவா? சரி, அப்படி டீயைக்

கைவிட்டால் உனக்கு என்ன ஆன்மிக லாபம் கிடைத்துவிடும்? டீ, காபியைக் கைவிட்டால் மோட்சம் கிடைத்துவிடும்போல் மதத்தலைவர்கள் பேசுகிறார்கள். அப்படியென்றால் சிகரெட் பழக்கத்தை விட்டாலும் மோட்சம் கிடைத்துவிடுமா? சிகரெட் பிடிக்காதவர்கள் எல்லாம் மோட்சம் பெறும் உரிமையை அடைந்துவிட்டார்களா?

நான் உன்னை டீ குடிக்க அனுமதியும் தரவில்லை; டீயை விடு என்று வற்புறுத்தவுமில்லை. டீ பழக்கத்திற்கும் மோட்சத் திற்கும் தொடர்பில்லை என்பதை மட்டும் குறிப்பிட விரும்பு கிறேன். மோட்சம் என்பது ஆன்மிக விழிப்பு நிலை. முதலில் அறியாமை நிலையில் டீ குடித்தாய். இப்போது விழிப்பு நிலையில் டீ குடிக்கிறாய். ஆனால் விழிப்பு நிலையில் ஒரு கட்டத்தில் டீ பழக்கம் தானாகவே அகன்றுவிடும். அது சுவையிழந்து விடும்.

அற்பமான பற்றைக் கைவிட்டு நீ அற்ப தியாகியாகத்தான் கருதப்படுவாய். நீ எப்படி மாமனிதன் ஆக முடியும்? ‘நான் டீ குடிப்பதை தியாகம் செய்துவிட்டேன். நான் மகாத்மா ஆகிவிட் டேன். ஆகவே நான் தெருவில் செல்கையில் எல்லோரும் என்னை வணங்குங்கள்’ என்று நீ அறிவிக்க முடியுமா?

ஒருவர் சந்நியாசியானதும் அவரது வாழ்க்கையில் முழுமையான மாறுதல் ஏன் ஏற்படுவதில்லை என்று கேட்கிறாய். வாழ்க்கை ஏன் மாற வேண்டும் என்று நான் திருப்பிக் கேட்கிறேன். வாழ்க்கையில் அப்படி என்ன குறைபாடைக் கண்டு விட்டாய்? எனக்கு வாழ்க்கை குறைபாடுள்ளதாகத் தெரிய வில்லையே. பசியெடுக்க வேண்டும்; தாகம் எடுக்க வேண்டும்; தூக்கம் வரவேண்டும். இல்லாவிடில் நீ நோயாளியாகி விடுவாய். ‘நான் யோகி, ஆணிப் படுக்கையில் படுப்பேன்’ என்று கூறுபவன் பைத்தியக்காரன். உடம்பு ஓர் ஆலயம். இதையா ஆணிகளில் படுக்கவைப்பது?

தனது உடம்பிடம் இப்படிக் கடுமையாக நடந்துகொள்பவன் பிறர் உடலுக்குத் தீங்கு செய்யாமல் கருணை காட்டுவானா? நீ ஆணிப் படுக்கையில் படுப்பவனாயின் வன்முறையில் ஈடுபாடு உனக்குண்டு என்று அர்த்தப்படும். நீ எல்லாருமே ஹடயோகம்

பயின்று ஆணிப்படுக்கையில்தான் தூங்க வேண்டுமென எதிர்பார்ப்பாய். அதற்கேற்றவாறு உபதேசிப்பாய். அவ்வாறு படுப்பவனுக்கு மோட்சம் கிடைக்கும் என்று அறிவிப்பாய்.

ஆணிப் படுக்கை ஆனந்தம் தரும் என்று கூறும் ஹடயோகியே, நீ யாரை ஏமாற்றுகிறாய்? ஆணிப் படுக்கையில் படுத்துப் பயிற்சி பெற்று உன் உடல் பாறைபோல் ஆகலாம். ஆனால் பூவைப்போல் மென்மையாக ஆனால்தான் வாழ்க்கையின் ரகசியம் புரியும்.

ஆணிப் படுக்கையில் படுத்துக் கிடக்கும் பலரை நீ காசி நகரத்தில் காணலாம். அவர்களில் ஞானி யாராவது உண்டா? அவர்களின் சகிப்புத் தன்மையைக் கண்டு அச்சமும் ஆச்சரியமும் கொள்ளும் நீ அவர்களில் ஒருத்தராவது ஐன்ஸ்டீன், பீதோவன், தான்ஸேன், காளிதாசர், பவபூதி அளவிற்கு சாதனை செய்ததுண்டா?

ஆணியில் படுக்கும் இந்த ஆசாமிகளைக் கவனமாகப் பார். இவர்களின் சாதனை என்ன? உலகிற்கு இவர்களின் பங்களிப்பு என்ன? கடவுள் உடல் கொடுத்தமைக்காக நன்றியுடன் இருந்து அதற்கு மரியாதை செய்ய வேண்டிய இவர்கள் அந்த உடலைக் காயப்படுத்தலாமா?

வாழ்க்கையில் முழுமையான மாறுதல் என்பது என்ன? அகங்காரத்துடன் செயல்கள் புரிவதைக் கைவிட்டு, அவற்றை சாட்சி மனப்பான்மையுடன் செய்தால், வாழ்வில் புரட்சி ஏற்படும். அகங்காரத்துடன் செய்யும் செயல்கள் வெற்றியிலோ, தோல்வியிலோ முடிந்து நமது மனநிலையைப் பாதிக்கின்றன. சாட்சி மனப்பான்மையுடன் செய்யப்படும் செயல்களின் பலன் நம்மைப் பாதிக்காது.

முழுமையான மாற்றம் (total revolution) என்று சொன்னாயே அது என்ன? காலால் நடப்பதற்குப் பதிலாகத் தலையால் நடப்பதா? அரிசி, கோதுமைக்குப் பதிலாகக் கல்லையும் மண்ணையும் உண்பதா? முழுப்புரட்சி என்பதற்கு, மற்றவர்கள் உறக்கத்தில் கிடக்கையில் நீ விழித்துக்கொண்டாய் என்று

அர்த்தமாகும். இனி உன் உடலுக்குத்தான் பசியெடுக்கிறது. சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்கிறாய். உடல் உணவைச் சாப்பிடுகிறது. திருப்தியடைகிறது. நீ பின்னணியில் இருந்து கொண்டு சாந்தமாக அதைப் பார்க்கிறாய்.

நீ சிறிய புரட்சிகள் செய்வதில் மட்டுமே ஈடுபட்டுள்ளாய். மதத் தலைவர்கள் உனக்குக் குறுகிய லட்சியங்களையே அடையாளம் காட்டியுள்ளார்கள். ஆனால் நான் 'இதைக் கைவிடு-அதைக் கைவிடு' என்றெல்லாம் சொல்வதில்லை. பக்குவம் பெறும்போது நீயாகவே வேண்டாதவற்றை உதறிவிடுவாய்.

**ந**ண்பர் ஒருவர் சந்தித்தார். "நான் நீண்ட காலமாக ஒழுங்காக தியானம் செய்கிறேன். ஆனால் என் உடல் முதுமையடைந்து கொண்டே செல்கிறது. தியானம் செய்பவனின் உடலுமா முதுமையால் பாதிக்கப்படும்?" என்று அப்பாவியாகக் கேட்டார். தியானிப்பவனின் உடல் ஏன் முதுமை அடையக் கூடாது என்று எனக்கு விளங்கவில்லை. குழந்தை இளைஞனாவதைப் போல், இளைஞன் கிழவன் ஆவதைத் தடுக்க முடியாது. தியானம் செய்பவனும் கிழவனாவான்; அவனும் ஒருநாள் இறப்பான்.

ஒரு வேறுபாடு சொல்லலாம். தியானம் பயின்றவன் சாட்சிபோல் இருந்துகொண்டு, தான் அப்படியே இருப்பதாகவும், தன் உடலுக்குத்தான் கிழடு தட்டுவதாகவும் நினைப்பான். இறக்கும்போது அவன் விழிப்புணர்வுடன் இறப்பான். 'இறப்பது நானல்லன், என் உடல்தான்' என்று உணர்ந்தவாறே இறப்பான். புத்தர், மகாவீரர், இயேசுநாதர், கிருஷ்ணர் போன்றவர்களும் இறந்தார்கள். ஆனால் அழுது புலம்பியபடி இறக்கவில்லை. அமைதியாக, கம்பீரமாக சாவை வரவேற்றார்கள். ஏனெனில் உடல் என்பது நம்மிடமிருந்து வேறுபட்டுத் தனியான ஒன்று. ஆகவே அது ஒருநாள் கைவிட்டுத்தான் போகும்.

ஆகவே வாழ்க்கையின் இயல்பான வளர்ச்சி-தேய்வை ஏற்றுக்கொள்ள, தேவையில்லாத சிந்தனைகளால் உன்னைக் குழப்பிக்கொள்ளாதே. நீ இப்போதே நன்றாகத்தான் இருக்கிறாய்; அழகாகத்தான் உள்ளாய்; சுபமாகத்தான் உள்ளாய்.

நீ மகாத்மாக்கள் என நினைக்கின்ற பலர் மனநலம் உடையவர்கள் அல்லர். உண்மையான மகாத்மா தன்னை அவ்வாறு கூறிக்கொள்ள மாட்டான். இவர்கள் மோசடிப் பேர்வழிகள் அல்லர்தான். எனினும் தாங்கள் மகாத்மாக்கள் என்று உண்மையிலேயே தங்களுக்குத் தாங்களே மூளைச்சலவை செய்துகொண்டவர்கள்.

சந்நியாசி ஆகிவிட்டவனும் பழைய மனநிலையிலேயே நீடிப்பதை நீ குறிப்பிட்டாய்.

பிறகு வேறெந்த மனநிலையில் சந்நியாசி வாழவேண்டும் என்கிறாய். ஒருவன் துறவியானதும் அவனது உடல் தங்கமாகவா மாறிவிடும்? அவன் மனம் புத்தர், மகாவீரர், கிருஷ்ணர், இயேசு நாதர் மனம் போலவா உயர்ந்துவிடும்? அவன் மனம் முன்பு போலவே நீடிக்கும். ஒரு வித்தியாசம் என்னவெனில் இதுவரை அவன் மனத்தின் அடிமையாக இருந்தான். இனி மனம் அவன் சொல்வதைக் கேட்கும். இதுவரை உடல் அவனை இயக்கியது. இனி அவன் உடலைக் கட்டுப்படுத்துவான்.

மனம் ஓர் இயந்திரம் போன்றது. அதை கம்ப்யூட்டர் எனலாம். அது எப்படி சட்டென்று மாறும்? உன் மனம் என்பது என்ன? நீ இதுவரை பெற்ற அனுபவங்களின் சாரம்தான் அது. நீ சுயசரிதை எழுதுகிறாய். நீ துறவியாகிவிட்டால் நீ இதுவரை எழுதிவைத்த சுயசரிதை மாறிவிடாது.

மனம் என்பது கடந்த காலம். அது முடிந்துவிட்டது. அது காற்றில் பறந்த தூசி. அது கடந்த காலத்தின் சின்னம். நீ துறவியானதால் அந்த சின்னம் அழிந்துபோவதில்லை. துறவறம் காரணமாக நீ ஒரு புதிய செய்தி தெரிந்துகொள்வாய். இதுவரை மனமும் நீயும் ஒன்று என நினைத்திருந்தாய். இனி நீ அவ்வாறு நினைக்காமல், மனம் என்பது உன்னிடம் இருக்கும் இயந்திரம் என்றும், அதைத் தேவைப்படும்போது பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் நினைப்பாய்.

நான் உன்னோடு பேசும்போது மனத்தை உபயோகிக்கிறேன். இல்லாவிடில் நான் பேச முடியாது. நான் பேசும் மொழி மனத்தில் தான் பதிவாகியிருக்கிறது. மேலும், மனத்தில் பதிந்திருப்பவை

கடந்த காலத்துடனே சம்பந்தப்பட்டவை. ஆனால் யாருடனும் நான் பேசாத நிலையில் என் மனம் சாந்தமாக இருந்துவிடுகிறது. உதாரணமாக, நீ நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாய். உன் கால்கள் இப்போது நடக்கவில்லை. அவை அமைதியாகத் தொங்கிய நிலையில் இருந்து விடுகின்றன. ஆனால் சிலர் உட்கார்ந்த நிலையிலும் எங்கேயோ நடக்கின்றவர்கள் போல் காலை ஆட்டுவார்கள். இதுபோல் பக்குவமடையாத மனிதனின் மனம் யாருடனும் பேசாத நிலையிலும் உள்ளுக்குள் அரிசி கொதிப்பது போல் சளசளத்துக் கொண்டிருக்கிறது.

சிந்திக்க வேண்டுமானால், மனத்தைப் பயன்படுத்துகிறோம். யோசிக்க வேண்டாமெனில் மனத்தைப் பயன்படுத்துவதில்லை. ஏதாவது பேசவேண்டுமாயின் மனத்தை உபயோகிக்கிறோம். இல்லையெனில் நாம் மனத்தைப் பயன்படுத்துவதில்லை. மற்றவர்களுடன், வெளியுலகத்துடன் தொடர்பு இல்லையாயின் மனம் சாந்தமாக இருக்கிறது. அப்போது மனம் இருப்பதில்லை அல்லது மூடிக்கிடக்கிறது. நீ நிசப்தத்தில் ஆழ்ந்துவிடுகிறாய்.

உன் மனம் அப்போதும் உன்னிடமேதான் உள்ளது. மனத்தை நீ என்று நினைக்கும் பிரமை மட்டும் அகல்கிறது. பிறகு, 'நான் மனம், நான் உடல்' என்னும் நினைப்பு நீங்கிவிடுகிறது.

சந்நியாசம் ஏற்ற பிறகும் ஒருவன் சாதாரண மனிதனின் நிலையைவிடத் தாழ்ந்துபோவதைச் சில சமயம் நாம் காண் கிறோமே என்கிறாய்.

சாதாரணம் என்று யாரைச் சொல்கிறாய், சாதாரண மனிதனை நீ அவமதிக்கிறாய். உலகில் கோடி கோடியாக இருப்பவர்கள் சாமானிய மனிதர்கள்தாமே. உன் பேச்சு அவர்களை இகழ்வதுபோல் உள்ளது. இவர்களிலிருந்து துறவி ஏன் வித்தியாசப்பட வேண்டும்? தான் விசேஷமானவன் என்னும் அடிமன நினைப்பு அகங்காரமன்றி வேறென்ன? இதுவா ஆன்மிகம்? இதுவா சந்நியாசம்?

பரம்பரைக் கண்ணோட்டமுள்ள சந்நியாசிகள் என்னைச் சந்திக்கும்போது, "இதென்ன அநியாயமாக இருக்கிறதே. சாதாரண

மனிதர்களுக்குக்கூட நீங்கள் சந்நியாசம் தருகிறீர்களே?" என்று கண்டிக்கிறார்கள்.

நான் பதிலுக்கு, "சாதாரண மனிதர்களைப் படைப்பதற்குக் கடவுள் வெட்கப்படுவதில்லையே. அவர்கள் படைக்கப்பட்டு விட்டதால் நான் அவர்களுக்கு சந்நியாசம் அளிப்பதற்கு ஏன் சங்கடப்பட வேண்டும்? கடவுள் சாமானியர்களைத்தானே அதிக எண்ணிக்கையில் படைத்துள்ளார். யாரும் நேரடியாக சந்நியாசி யாகப் பிறப்பதில்லை" என்பேன்.

**அ**மெரிக்க ஜனாதிபதியான ஆபிரஹாம் லிங்கன்* அழகான முகம் பெற்றிருக்கவில்லை. "உங்கள் முகம் அழகாகவே இல்லையே," ஒருவர் குறிப்பிட்டபோது லிங்கன், "சாதாரணமான முகம் கொண்டவர்களைத்தாம் கடவுள் அதிக எண்ணிக்கையில் படைத்துள்ளார். இந்தச் செயல் அவர்கள் மீது கடவுளுக்குள்ள பிரியத்தைக் காட்டுகிறது. அழகானவர்களை அவர் எதிர்பாராம லேயே தப்பித் தவறிப் படைத்திருப்பார் எனலாம்," என்று கருத்துத் தெரிவித்தார். அது சாத்தியம். ஆனால் எடுத்த எடுப்பிலேயே துறவியாக யாரையும் படைத்ததில்லை. வர்த்தமான மகாவீரரும் சாதாரணக் குழந்தையாகத்தான் பிறந்தார்.

**ஜெ**ன் துறவி ரன்ஜாயி என்பவரின் ஒரு சீடன், "சுவாமி, நான் மூன்றாண்டுகளாக ஆன்மிகப் பயிற்சி பெற்றுவருகிறேன். ஆனால் தங்களைப்போல் நான் ஏன் ஆக முடியவில்லை?" என்று சந்தேகம் கேட்டான்.

ரின்ஜாயி எதிரே இருந்த மரங்களைச் சுட்டிக்காட்டினார். அவை சிறிதும் பெரிதுமாக இருந்தன. எல்லாவற்றையும் கடவுள் தான் சிருஷ்டித்தார். "அதுபோல் என்னை ஒருவிதமாகவும், உன்னை வேறொரு விதமாகவும் படைத்தவரும் அவரே. இதே போல் மனிதர்களிலும் சாதாரணமானவர்கள்-விசேஷமானவர்கள் என்றெல்லாம் கிடையாது. ஏனெனில், எல்லோருள்ளும் ஒரே கடவுள்தான் வீற்றிருக்கிறார்," என்று ஜென் குரு விளக்கினார்.

---

* Abraham Lincoln (1809-1865) அமெரிக்காவின் 16ஆம் ஜனாதிபதி

சந்நியாசியின் லட்சணங்கள் என்று உன் மனத்தில் ஒரு பட்டியல் ஏற்கெனவே உருவாகிவிட்டது. அவற்றில் ஒன்றில்லா விட்டாலும் சந்நியாசி சராசரி மனிதனைவிட தாழ்ந்துவிட்டதாக நீ நினைக்கிறாய். துறவிக்குக் கோபம் ஆகாதென நீ நினைக்கிறாய். கோப்படும் சந்நியாசியைவிட சாதாரண மனிதனே பரவாயில் லையே என நீ நினைப்பாய். அப்படியானால் எனது முறையிலான சந்நியாசத்தை நீ புரிந்துகொள்ளவில்லை. சந்நியாசி அகங் காரத்தைக் கைவிடவேண்டும் என்பதுதான் எனது எதிர்பார்ப்பு. கடவுள் என் மூலம் செய்வது அப்படியே நடக்கட்டும் என்னும் எண்ணம் வலுப்பட்டதும் சந்நியாசியின் கோப குணம் மறைந்துவிடும். ஏனெனில் தன் மூலம் கோபம் வெளிப்பட்டால் அது கடவுளின் தூண்டுதலால் உண்டாகியிருக்காது என்பதை அவன் உணர்ந்துவிடுகிறான்.

கோபம் என்று தனியாக ஒன்றில்லை. அது அகங்காரத்தின் வெளிப்பாடு. கருணாமூர்த்தியாகத் தெரியும் சந்நியாசியின் மேல் இலேசாக இடித்துப்பார். "நான் யார் தெரியுமா? எப்பேர்ப்பட்ட ஜகத்குரு தெரியுமா? என்மேல் பட்டு என்னைத் தீட்டாக்கி விட்டாயே," என வெடிப்பார். ஆகவே அகங்காரம்தான் அடிப்படை. கோபம் அது வெளிப்படும் விதம் மாத்திரமே ஆகும்.

நீ சந்நியாசியாகவும் விரும்புகிறாய், மற்றவர்களைவிட நீ சிறப்பானவன் என்று கருதப்படவும் விரும்புகிறாய். ஆனால் நானோ உன்னை சந்நியாசியாக்குவதன் மூலமாக சாதாரணமான வனாகவும், இயற்கையானவனாகவும் உருவாக்க விரும்புகிறேன்.

பரம்பரைக் கண்ணோட்டமுள்ள சந்நியாசி வீட்டிலிருக்க மாட்டான்; காட்டுக்குப் போய்விடுவான். சாதாரண மக்களின் மொழிநடையில் அவன் பேசுவதில்லை. ஒவ்வொரு விஷயத்திலும் மற்றவர்களிடமிருந்து தான் முற்றிலும் வேறுபட்டவன் எனக் காண்பித்துக்கொள்வான். ஆனால் நான் உனக்கு சந்நியாசம் தரும்போது வாழ்க்கையிலிருந்து உன்னைத் தொலைவில் அனுப்பிவிடுவதில்லை. நீ குடும்பத்திலேயே நீடிப்பாய்; வீட்டில் வசிப்பாய்; தொழில் புரிவாய்; வேலை பார்ப்பாய். நான் உன்னை வேறுவிதமாகப் பார்ப்பதற்காக தீட்சை தரவில்லை. நீ இருக்கிற

படியே இரு. உன்மீது புதிய பொறுப்பு எதுவும் நான் சுமத்த வில்லை.

மாமனிதன் ஆகவேண்டுமென்று ஆசைப்படுவது கிறுக்குத்தனம். அப்படியென்றால் என்ன அர்த்தம்? கொடியைத் தூக்கிக்கொண்டு, 'ஜண்டா ஊன்ச்சா ரஹே ஹமாரா' (நமது கொடி உயரப் பறப்பதாக) என்று முழங்கியபடியே, நீ முதலில் போகவேண்டும் என்றும், மற்றவர்கள் உன் பின்னால் வந்தால்தான் நீ மாமனிதன் என்றும் நினைக்கிறாயா? மனிதனாக மட்டுமே இருந்தால் போதாதா? மகானாக ஆகத்தான் வேண்டுமா?

விசேஷமான மனிதனாக இருப்பதைவிட சகஜமான மனிதனாக இருப்பதுதான் முக்கியம். இயல்பான மனிதன்தான் மாமனிதன். நீ நினைக்கும் மாமனிதன் திமிர்பிடித்தவனாக இருப்பான். உண்மையான மாமனிதன் பணிவின் சின்னமாக விளங்குவான்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மனைவி சொந்த ஊருக்குப் போயிருந்தாள். அவரையும் அங்கு வந்து சில நாள் தங்குமாறு பல கடிதங்கள் எழுதினாள். ஆனால் அவரோ தான் இருந்த ஊரைவிட்டு அசைவதாக இல்லை. அவர் மனைவி ஒரு தந்திரம் செய்தாள். அவருக்கு இரண்டு புகைப்படங்கள் அனுப்பினாள். இரண்டும் ஒரு பூங்காவில் எடுக்கப்பட்டவை. ஒரு மேடையில் கணவன்-மனைவி ஜோடி கை கோத்தபடி, ஒருவரையொருவர் கண்ணுக்குள் நோக்கியபடி. இன்னொரு படத்தில் இன்னொரு மேடையில் முல்லாவின் மனைவி தனியாக, சோகமாக. படத்தின் கீழ் ஒரு வரிச் செய்தியாக, "பாருங்கள், நான் யாருமில்லாமல் தனித்திருப்பதை' என்று எழுதியிருந்தாள்.

முல்லா கோபப்பட்டார். தனது பதில் கடிதத்தில், 'ஏன் பொய் சொல்லுகிறாய்? நீ எங்கே தனித்திருக்கிறாய்? புகைப்படம் எடுக்க அங்கே ஒரு ஆள் உன் பக்கத்தில் வந்திருப்பாரே" என்று எழுதினார். கோபம் இப்படி எதிர்பாராத முறையில் வெளிப் படுவதைப்போல் அகங்காரமும் சூட்சுமமாக வெளிப்படும். அல்லது நீ மாமனிதனாகு என்று வெளிப்படையாகத் தூண்டும்.

ஆனால் நீ எப்படி உள்ளாயோ அப்படியே இரு. அதுவே உனக்கு நல்லது. நீ உன் இயல்புடன் இணக்கமாக இரு. கோபம் வந்தால், 'ஆமாம், நான் கோபக்காரன்தான்' என்று சொல்லிவிடு. யாருடனாவது சண்டை-சச்சரவு வந்தால், 'ஆமாம், நான் தொந்தரவு பிடிச்சவன்தான்' என்று ஒப்புக்கொண்டுவிடு. நீ இயல் பாக எத்தகையவனோ அப்படியே இதயத்தைத் திறந்துகாட்டு. அதுதான் சகஜமான மனிதனின் இலக்கணம்.

இன்றைய உலகில் சமயத் தலைவர்களும் அரசியல்வாதி களும் ஒரேவிதமாகத்தான் நடந்துகொள்கிறார்கள். தத்தம் நாற்காலியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அவர்கள் வேறு யாரும் தங்களை முந்திவிடாதபடி அடக்கிவைக்கிறார்கள். ஆனால் நாம் எல்லோரும் ஒரே கடவுளின் அம்சங்கள் என்றும், அவர் ஒருவரே நம் எல்லோருக்குள்ளும் வீற்றிருக்கிறார் என்றும் உணர வேண்டும். ஒருவரைவிட இன்னொருவர் உயர்ந்தவரோ, தாழ்ந்தவரோ இல்லை. நல்லவன்-கெட்டவன், சிறியவன்-பெரியவன், ராமன்-ராவணன் எல்லோரும் கடவுளே என்று நீ உணர்ந்தால் அப்போதிலிருந்து நீ ஆன்மிகவாதி ஆகிறாய்.

நீ என்னிடம் சந்நியாசம் பெற்றால் விசேஷமான மனிதனாகி ஆகிவிட முடியும் என்ற நோக்கத்துடன் வந்தாய். என் முயற்சியெல்லாம் உன்னைத் தரையைத் தொடவைப்பதாகவே இருந்தது. உன்னை சகஜமானவன் ஆக்குவதே எனது லட்சியமாக இருந்தது. நீ மாமனிதன் ஆக வேண்டுமென விரும்பினால் நீ வேறு ஆன்மிகத் தலைவரிடம் போ. அவர் என்ன செய்வார் தெரியுமா? நல்லது-கெட்டது எவை-எவை; என்னென்ன செய்ய லாம், என்ன செய்யக்கூடாது; என்னென்ன கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டும்; அதிகாலை 4 மணிக்கு எழுந்து, இரவு தூங்கச் செல்லும்வரை கைதிபோல் கட்டளைகளின்படி அமைந்த வாழ்க்கை முறையை உன்மீது திணிப்பார்.

நான் சாதாரண வகை சந்நியாசி. உன்னையும் சாதாரண சந்நியாசியாகத்தான் ஆக்க முடியும். எனது வாழ்க்கையில் ஒரு சிறப்பம்சமும் கிடையாது. நான் உன்னைப்போல் ஒருவன். நான் இந்த சாதாரணத் தன்மையிலிருந்து சிறிதும் விலகியிருக்கவும்

விரும்பவில்லை. இந்த அளவிலேயே நான் பரம திருப்தியுடன் உள்ளேன். இதனுடன் இணக்கமாக உள்ளேன். என்னுடைய வாழ்க்கைத் திட்டம் என்று தனியாக எதுவும் கிடையாது. 'செய்பவன் நான்' என்னும் அகந்தை எனக்கில்லை. கடவுள் எனக்கு எதைக் காண்பிக்கிறாரோ அதை நான் பார்க்கிறேன்.

அதுபோல் நீயும் பார்வையாளனாக மட்டும் இருந்து கொண்டு, 'கர்த்தா' உணர்வு நீங்கிவிட்டால், என்னிடமிருந்து ஏதேனும் தூண்டுதல் உன்னையும் வந்தடையும். நான் முழுச் சோம்பேறி! நான் உன்னையும் அந்தத் திசைக்குக் கொண்டு செல்ல விரும்புகிறேன். அங்கே 'கர்த்தா' உணர்வு மிஞ்சியிருக் காது. அந்நிலையில் கடவுள் உன் மூலம் செய்விப்பதைச் செய்; உன் மூலம் பேசவைப்பதைப் பேசு.

சந்நியாசம் என்பது இயல்பாக இருத்தலுக்காகச் செய்யப் படும் முயற்சியாகும். நீ இயல்பாகவே ஆன்ம சுதந்திரம் உடையவன் என்பதை அறிதலாகும்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! தாங்கள் 20 ஆண்டுகளாகச் சொற்பொழிவு செய்து வருகிறீர்கள். பல தடவை ஒன்றிற்கு ஒன்று முரணான, எதிரெதிரான கருத்துகளையும் முன்வைக்கிறீர்கள். ஆனால் எக்கருத்தையும் நீங்கள் திரும்பப்பெற்றுக் 'கொண்டதில்லை. எக்கருத்திலும் மாற்றம் ஏதும் செய்ததில்லை. தங்கள் சொற்பொழிவுகள் எங்கும் பரவி மக்கள் சொத்தாகிவிட்டது [ஜனசம்பத்தி]. நீங்கள் வேண்டுமென்றே முரண்படும் கருத்துகளைக் கூறுகிறீர்களா அல்லது பின்னணியில் ரகசியமேதும் உண்டா? பிற்காலத்தில் இவை எல்லாம் வெவ்வேறு மகாத்மாக்கள் கூறியவை என மக்கள் நினைக்கக்கூடும் அல்லவா?**

**நா**ன் என்ன பேசுகிறேனோ அதனுடன் எனக்குள்ள சம்பந்தம் நான் பேசி முடித்ததுமே நீங்கிவிடுகிறது. பிறகு அதில் எனது என்று என்ன மிச்சமிருக்கும்? நான் உன்னிடம் ஒன்றைக் கூறியதுமே அது உன்னுடையதாகி விடுகிறது. அடுத்ததாக நான் கூறுவது முதலில் கூறியதுடன் முரண்படலாம். முன்பு கூறியதை மறுக்க நான் யார்; எனக்கு என்ன உரிமை? முதல் கருத்தைக் கூறிய போதிருந்த சூழ்நிலை வேறாகிவிட்டது. அந்த சூழ்நிலை இப்போதில்லாததால் முந்திய கருத்தை வாபஸ் வாங்க இனி வழியில்லை. ஆகவே நான் பின்னால் திரும்பிப் பார்ப்பதில்லை. அந்த நேரத்தில் நான் கூறியது எதுவோ அதுவே சத்தியம். ஆனால் அது அந்த நேரத்து சத்தியம்.

நான் என்னென்ன சொல்கிறேனோ, அவை ஒன்றுடனொன்று ஒத்திசைய வேண்டுமென எனக்குப் பிடிவாதம் கிடையாது. நான் சொல்கின்ற எல்லா கருத்துகளும் ஒன்றுடனொன்று பொருந்த வேண்டும் என்று முயன்றால், அவ்வாறு முடிந்தால், நான் பொய்யனாகி விடுவேன். பகல் உண்மை, இரவும் உண்மை. வெயில் உண்மை, நிழலும் உண்மை; பிறப்பு உண்மை, இறப்பும் உண்மை. ஒவ்வொரு பருவகாலமும் வெவ்வேறானது. ராமனிடமும் சத்தியம் உண்டு, ராவணனிடமும் சத்தியம் உண்டு. இவை முரண்பாடுகள் அல்ல; சத்தியத்தின் வெவ்வேறு முகப்புகள். என் கருத்துகளும் அவ்வாறேயாகும்.

அதாவது, ஒரு சமயம் நான் சொன்னது சத்தியத்தின் ஒரு முகப்பு. இன்னொரு சமயம் நான் சொன்னது சத்தியத்தின் இன்னொரு முகப்பு. சத்தியம் விரிந்து பரந்திருப்பதால் ஒரு சமயம் அதன் ஓர் அம்சத்தையே நம்மால் புரிந்துகொள்ள இயலும். சொற்கள் வீட்டின் முற்றம் போன்றவை. அதிலிருந்து முழு ஆகாயமும் தெரியாது.

நான் கடந்த காலத்தைத் திரும்பிப் பார்ப்பதில்லை; எதிர்காலத்தின் வருகையிலும் பார்வை செலுத்துவதில்லை. இக்கணம் என்ன நிகழ்கிறதோ அது அவ்வாறே நடைபெற விடுகிறேன். நான் என்னைத் தொழில் புரிபவனாக (கர்த்தா) நினைப்பதில்லை. பத்தாண்டுகளுக்கு முன் நான் சொன்னதைத்

திரும்பப் பெறுகிறேன் என்றால், நான் அதன்மீது கர்த்தா உணர்வைக் கைவிடவில்லை என்று அர்த்தமாகும். ஆனால் நான் அப்போது சொன்னது அந்த சூழ்நிலையில், குறிப்பிட்டவர்களின் முன்னிலையில், சவால் விடப்பட்டபோது அந்த நிலைக்கேற்ற சத்தியத்தின் முகப்பாகும். முடிந்துபோன விஷயத்தை நான் மீண்டும் எப்படிப் பெறுவது? அதன்மீது இனி எனக்கு என்ன உரிமை உள்ளது?

அப்போது என் மூலமாகப் பேசியவனே இப்போதும் என் மூலமாகப் பேசுகிறான். இதை நான் உணர்கிறேன். அந்த சமயம் இறைவன் அவ்விதமாகப் பேச விரும்பியிருக்கிறான். இப்போது அவனே இவ்விதமாகப் பேசுகிறான். நான் என்னைப் புல்லாங்குழல்போல் அவன் ஊதுவதற்கு வசதியாக விட்டு விட்டேன். எனது துளைகளின் வழியாக இந்த சமயம் எந்தப் பாட்டு வெளிவருகிறதோ அதனுடன் மட்டுமே நான் சம்பந்தப்பட்டுள்ளேன்.

நான் இதுவரை சொன்னவற்றை வகைப்படுத்தி, பிறகு அவற்றை தக்கபடி இணைத்து, வரிசை வரிசையாகச் சொல்வதில் எனக்கு இஷ்டமில்லை. நீயும் என் சொற்பொழிவுக் கருத்து களுக்கு, காலம்-இடம் மாற்றியமைத்து, ஓர் ஒழுங்கின்கீழ்க் கொண்டுவர முயலாதே.

புல்லாங்குழலின்மேல் வைக்கப்பட்டுள்ள உதடுகளின் ஜோடி ஒன்றுதான். ஆனால் அக்கருவியிலிருந்து கிளம்பும் பாடல்கள் வெவ்வேறு. இந்த உண்மையை நீயும் புல்லாங்குழல் போல் ஆகும்போது உணருவாய்.

நான் தத்துவ அறிஞன் இல்லை. எனவே நான் ஒன்றைச் சொன்னால் என்றும் அதையே நினைவில் வைத்திருக்கவும், அதையே விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கவும் வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. என்னைக் கவிஞன் என நினைத்துக்கொள். நான் ஒரேமாதிரிப் பாடல்களைப் பாட வேண்டும் என்றா எதிர்பார்ப்பாய்? அல்லது என்னை ஓவியனாகக் கற்பனை செய். என் படங்கள் ஒன்றுடனொன்று தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்றா எதிர்பார்ப்பாய்?

ஓவியன் இரண்டே படங்கள் வரைந்திருந்தாலும் அவை வேறுபட்டிருக்க வேண்டும் என்றுதானே கூறுவாய்.

**உ**லகப் புகழ் பெற்ற ஓவியர் பிக்காஸோவிடம் அவர் வரைந்த ஒரு படத்துடன் ஒருவர் வந்தார். ஓவியக் கண்காட்சியில் இருந்து அந்த ஓவியத்தைத் தான் வாங்கவுள்ளதாகவும், அதன் விலை பல லட்ச ரூபாய் வைக்கப்பட்டுள்ளது என்றும் தெரிவித்தார். அதற்குமுன் உறுதியாக ஒரு விஷயம் தெரிந்துகொள்ள வந்துள்ளதாகச் சொன்னார். "ஓவியர் ஐயா, இந்த ஓவியம் உண்மையாகவே நீங்கள் வரைந்ததுதானே? இது போலி ஓவியமில்லையே? வேறு யாரும் நகல் செய்த ஓவியமில்லையே? இதில் ஏதும் மோசடி உண்டா? முன்னெச்சரிக்கையாகத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்," என்றார்.

பிக்காஸோ ஓவியத்தைப் பார்த்தார். "இந்தப் படத்தை வாங்காதீங்க. இது போலி; அசல் இல்லை," என்றார்.

அருகில் அமர்ந்திருந்த அவர் மனைவி திடுக்கிட்டார். "என்ன சுயநினைவோடுதான் பேசுகிறீர்களா? என் எதிரேதானே இதை நீங்கள் வரைந்தீர்கள்? இது நீங்கள் வரைந்த ஓவியம்தான். எனக்கு நன்றாக நினைவில் உள்ளது," என்றாள்.

"இதை நான் வரையவில்லை என்று சொல்லவில்லை. ஆனாலும் இது போலிதான்," என்று பிக்காஸோ விசித்திரமாகப் பதிலளித்தார்.

"நீங்கள் சொல்வது விளங்கவில்லையே," என்றாள் மனைவி.

"நான் இத்தகைய படம் ஏற்கெனவே தீட்டியிருக்கிறேன். இப்போது மீண்டும் தீட்டியுள்ளேன். ஆகவே இந்த இரண்டாவதை நான் வரைவதற்கும் வேறு யாரும் வரைவதற்கும் என்ன வித்தியாசம்? என் கையால் வரைந்தாலும் முதலாவதாக வரைந்ததே அசலானது," என்று பிக்காஸோ விளக்கினார்.

நாம் ஓவியர் வரையும் ஒவ்வொரு சித்திரமும் வித்தியாச மாக இருக்க வேண்டுமென எதிர்பார்க்கிறோம். கவிஞன்

ஒவ்வொரு முறையும் வித்தியாசமாகப் பாடல் எழுத வேண்டு மென எதிர்பார்க்கிறோம்.

**எ**ன் கிராமத்தில் ஒரு கவிஞர். வக்கீல் தொழில் செய்பவர். அவர் ஒரு பாட்டுதான் எழுதியுள்ளார். அதிலுள்ள பல வரிகளை வேறு ஒருவரின் பாட்டிலிருந்து திருடி எழுதியிருப்பாரோ என்று சந்தேகம். ஏனெனில் ஒரு பாட்டை எழுதியவன் பிறகு அதற்கு மேல் ஒன்றுகூட எழுதாமல் இருக்க முடியுமா? ‘ஏ இளைஞனே!’ என்ற ஒரே கவிதையே அவர் எல்லா நிகழ்ச்சிகளிலும் பாடுவார். அதையே கேட்டுக் கேட்டு எங்கள் கிராமத்து மக்கள் அலுத்துப் போயிருந்தனர்.

நான் மக்கள் படும் திண்டாட்டத்தைப் பார்த்து ரசிப்பேன். ஆகவே கிராமத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கெல்லாம் அவரை அழைத்து வந்துவிடுவேன். அவர் வக்கீல் என்பதால் மேடைக்கு அழைக்கப்பட்டு அங்கே அவர் வீற்றிருப்பார். வக்கீலுடன் ஏன் வம்பு என்று மக்கள் ஆட்சேபிக்கமாட்டார்கள். பிறகு நான் கூட்டத்தினுள் கலந்து பலர் மூலமாக மேடைக்குச் சீட்டனுப்புவேன். எல்லாச் சீட்டுகளிலும் ‘வக்கீல் அய்யாவை ஒரு கவிதை பாடச்சொல்லுங்கள்’ என்னும் வேண்டுகோளிருக்கும். அவைத் தலைவர் அதைப் புறக்கணித்தால், நான் கூட்டத்தில் எழுந்து நின்று, “மக்கள் இப்போது வக்கீல் அய்யாவின் கவிதையைக் கேட்க விரும்புகிறார்கள்” என்று அறிவித்து விடுவேன். அவைத் தலைவர் வேறு வழியின்றி வக்கீலிடம் ஒரு கவிதை பாடுமாறு வேண்டுவார். அவ்வளவுதான், ‘ஏ இளைஞனே!’ கவிதை ஆரம்பமாகிவிடும்! மக்கள் தலை யிலடித்துக் கொள்வார்கள்.

கவிஞன், ஓவியன், சிற்பி முதலியவர்கள் ஒவ்வொரு முறையும் புதியதாகப் படைக்க வேண்டுமென நாம் எதிர்பார்க் கிறோம். ஆனால் ஆன்மிகவாதி மட்டும் எப்போதும் ஒரே மாதிரி கருத்தே கூற வேண்டும் என்றும், அவன் முன்பு கூறியதற்கு முரணாக எதுவும் சொல்லக்கூடாது என்றும் எதிர்பார்ப்பதும் நியாயமில்லை.

நான் தத்துவவாதி இல்லை, ஞானி இல்லை. ஆகவே நான் கூறுபவற்றை வெவ்வேறு கவிதைகள்போல் எடுத்துக் கொள்ளுங்கள். அடிப்படை விஷயம் ஒன்றேதான். அதையே வெவ்வேறு விதமாகக் கூறிவருகிறேன். விதம் விதமான சித்திரங்களாகத் தீட்டி வருகிறேன்.

ஒரு பாடலை காகிதத்தில் எழுதிவைக்க முடியும். அதற்கு மெட்டமைத்து வீணை மூலம் இசைக்க முடியும். பாடலை ஓவியமாகவும் வரையலாம். ராகங்களைப் பெண் வடிவில் (ராகினிகளாக) சித்திரிக்கும் ஓவியங்களைப் பார்த்திருப்பாய்.

நான் சாந்த நிலை குறித்துக் கவிதை எழுதினால் அதைப் படிக்கும்போது நீ அமைதியை உணருவாய். வீணையில் கேட்கும்போது நாலா பக்கமும் சாந்தி பரவும். பச்சை, நீல நிற ஓவியங்கள் அமைதி தரும். அமைதியை புத்தர் சிலையாக வடிக்கும்போது பார்ப்பவர் அமைதியாக உணர்கிறார். ஊடகங்கள் வெவ்வேறாயினும் அவை மூலம் வெளிப்படுகின்ற உணர்வு அல்லது கருத்து ஒன்றேதான்.

ஆகவே என் கருத்துகளில் எனக்கு முரண்பாடு எதுவும் புலப்படவில்லை. ஆகவே எக்கருத்துக்காகவும் நான் வருந்த வேண்டியதில்லை. எதையும் திரும்பப் பெறும் தேவையும் இல்லை. ஆனால் நீ திடீரென சத்தியம் இவ்வளவு விசாலமானது என்பதைப் புரிந்துகொள்வது சிரமம்தான். மனப்பக்குவம் போதாத நிலையில் உன்னால் சத்தியத்தின் ஒரு முகப்பை மட்டுமே ஒரு சமயம் புரிந்துகொள்ள முடிகிறது.

'பக்தியினால் பகவான் கிடைப்பார்' என்று ஒரு சமயம் நான் சொல்லுகிறேன். இதைக் கேட்டு பக்தன் சந்தோஷமடைகிறான். இன்னொரு சமயம் ஞானம் பற்றி பேசும்பொழுது நான் 'பக்தி மட்டும் போதுமா கடவுளை அடைவதற்கு?' என்று கேள்வி எழுப்புகிறேன். இதைக் கேட்டு அந்த பக்தன் கலவரப்படுகிறான். 'இந்த சுவாமி பக்தியைப் புகழ்ந்ததைக் கேட்டு இவரிடம்தான் சந்நியாசம் பெற வேண்டுமென நினைத்தேனே. இப்போது இவர் வேறு விதமாகப் பேசுகிறாரே என்று குழம்புவான். நான் சொன்னது நுணுக்கமான விஷயம். பக்தியால் கடவுள் கிடைப்பார். ஆனால்

பக்தன் தன்னைக் கரைத்துக்கொண்ட பிறகே, தான் இல்லாமல் போன பிறகே, கடவுளாகவே ஆகிவிடுகிறான்.

நான் ஆன்மிகத்தின் எல்லா வழிமுறைகளையும் குறித்துப் பேசுகிறேன். இப்படி மற்ற ஆன்மிகத் தலைவர்கள் செய்வ தில்லை. புத்தர், மகாவீரர், அஷ்டாவக்ரர் (சாட்சி முறை), நாரதர் (பக்தி வழி) என வெவ்வேறு அணுகுமுறைகளைச் சொல்கிறார்கள். ஆனால் இவற்றில் ஒன்றை ஏற்கும் சராசரி மனிதன் மற்ற வழி களெல்லாம் தவறானவை என நினைத்து அவற்றை எதிர்க்கிறான்.

ஆனால் இந்த மாமனிதர்கள் வெவ்வேறு திசையை நோக்கிக் கொண்டிருக்கவில்லை. இவர்களின் பார்வை ஒரே திசையில்தான் பதிந்திருந்தது. விரல்கள் வெவ்வேறு. அவை நீட்டிய திசையில் உள்ள சந்திரன் ஒன்றுதான். நீ சந்திரனைப் பார். விரல்களைப் பார்க்காதே. இதை விளக்கவே நான் பல வகையான கண்ணோட்டங்களைப் பற்றி பேச முடிவெடுத்தேன். ஒவ்வொரு கண்ணோட்டம் பற்றியும் லயித்துப் பேசுவதால் நான் அதைத்தான் ஆதரிப்பதாகத் தோன்றும். இதனால்தான் என் கருத்துகளில் முரண்பாடு உள்ளதாக சந்தேகப்படுகிறாய். ஆனால் அவை காட்டும் சந்திரன் ஒன்றேயாகும்.

அஷ்டாவக்ரரின் வழிமுறையை விளக்கும்போது நான் மற்ற வழிகளையும் கூறினால், அஷ்டாவக்ரருக்கு நான் நியாயம் செய்தவனாக மாட்டேன். அவரையே முழுமையாகப் பேசவிடு கிறேன். இதேபோல் ஒவ்வொரு ஞானியின் அணுகுமுறை பற்றிக் கூறுகையில் பிற ஞானியருடன் ஒப்பிடுவதில்லை. இப்படி எந்த வழிமுறையானாலும் அதுவே சிறந்ததுபோல் நான் பேசுவதால் உனக்கு முரண்பாடுபோல் தோன்றுகிறது. ஆனால் நீ எங்கிருந்து புறப்பட்டாலும், எந்த வழியில் பயணித்தாலும், உச்சியை அடையும்போது, பாதைகளிடையே முரண்பாடில்லை என்பதைக் காண்பாய்.

நான் ஒவ்வொரு முறையும் வெவ்வேறு கருத்துகளை முன்வைக்கிறேன். நீ குறிப்பிட்ட கருத்தில் சிக்கிக்கொள்ளாமல் இருக்கவே அவ்வாறு செய்கிறேன். எனது எந்தக் கருத்தும் பாரமாக உன்னை அழுத்தக் கூடாதென விரும்புகிறேன். நீ ஒரு

கருத்தை ஏற்கலாம் என நினைக்கையில் அதை நான் உடைத்து விடுகிறேன். ஒரு கையால் கொடுத்ததை இன்னொரு கையால் பிடுங்கிக்கொள்கிறேன். ஏனெனில் நீ கருத்துகளே இல்லாத, சூனியமான நிலைக்குப் போக வேண்டுமென விரும்புகிறேன்.

பௌத்தர்கள் புத்தக் கோட்பாடுகளைப் பின்பற்றுகிறார்கள். ஜைனர்கள் மகாவீரரின் சித்தாந்தத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். நானோ உனக்கென எந்தக் கோட்பாட்டையும் விட்டுச்செல்ல விரும்பவில்லை. எல்லாம் சொல்லிவிட்டு எல்லாவற்றையும் பிடுங்கிக்கொள்வேன். நீ வெற்றிடம் போன்ற மனநிலையை அடையச் செய்வேன். அதுவே சத்திய நிலை. பிடித்துக் கொள்வதற்கு எதுவும் இல்லாதபோது நீ ஆன்மிக சுதந்திரம் பெறுகிறாய்.

குறிப்பிட்ட கருத்தைப் பிடித்துக் கொள்பவன் மதவாதி ஆகிறான். எல்லாக் கண்ணோட்டங்களையும் அறிந்து, அவற்றில் ஒன்றை மட்டுமே பின்பற்றாமல் எல்லாவற்றையும் கடப்பவன் ஆன்மிகவாதியாகிறான். அவனைக் குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்டவனாக வரையறுக்க முடியாது.

நேற்று சொன்ன ஒன்றை இன்று நான் வலியுறுத்த வில்லையெனில் அதை நான் வாபஸ் வாங்கிவிட்டதாக அர்த்தமில்லை. நான் இன்றையக் கருத்தை எடுப்பாகச் சொல்ல விழைவதால்தான் நேற்றைய கருத்தை மீண்டும் சொல்லவில்லை.

கடவுள் குறித்து மகாவீரரின் கண்ணோட்டம் 'ஸ்யாத வாதம்' (ஒருவேளைக் கோட்பாடு) எனப்படுகிறது. கடவுளைப் பற்றி அவர் வெவ்வேறு வகையில் கூறுகிறார்: கடவுள் இருக்கிறார்; கடவுள் இல்லை; கடவுள் இருக்கலாம்; கடவுள் இல்லாம லிருக்கலாம்; இருத்தலும் இல்லாமலும் இருக்கலாம்; இருத்தலும் இல்லை, இல்லாமலும் இல்லை. இவற்றுடன் 'ஒருவேளை' (ஷாயத்) என்பதையும் சேர்த்துக்கொள்கிறார். கடைசியில் முத்தாய்ப்பாக, 'கடவுள் சொற்களால் கூறப்பட முடியாதவர்' என்று அறிவித்து விடுகிறார்!

நான் கூறும் எல்லாக் கருத்துகளையும் கேட்டபின், நீ அடைய வேண்டிய நிலை அவற்றைக் கடந்தநிலை என்பதை

நினைவில் கொள். நான் சொல்ல முடியாத ஒன்றை உன்னிடம் சொல்ல முயலுகிறேன். எனவே நான் சொல்வதை உடனடியாக உன்னால் கிரகிக்க முடியவில்லை. சில சமயம் நான் 'கடவுள் உள்ளார்.' என்கிறேன். அது ஒரு கருத்து. சில சமயம் நான் 'கடவுள் கிடையாது' என்கிறேன். அதுவும் ஒரு கருத்து. அதுவும் கடவுளுடன் தொடர்புடையது. முதல் கருத்தில் 'ஆம்' என்பதன் மூலம் கடவுள் விளக்கப்படுகிறார். இரண்டாவது கருத்தில் 'இல்லை' என்பதன் மூலம் அவர்தான் விளக்கப்படுகிறார். பகலும் இரவும்போல இக்கருத்துகள் ஒரே நாணயத்தின் இரண்டு முகப்புகள். ஆத்திகனும் நாத்திகனும் கடவுளைப் பற்றிதான் பேசுகிறார்கள். இருவருமே கடவுள் என்னும் தத்துவத்தில் இணைந்துவிடுகிறார்கள். அவர்கள் எதிரிகள் அல்லர்; வெவ்வேறு அணுகுமுறை கொண்டவர்கள்.

மரத்தைப் பார்க்கிறாய். சிறிது காலம் முன் அந்த மரம் இல்லை. விதை வளர்ந்தது. மரமானது. நாளை அது இல்லாமல் போகலாம். கடவுள், 'உண்டு' என்பதையே ஆதரிப்பவராயின், 'இல்லை' என்னும் நிலை எப்படி வந்தது? கடவுளின் சுபாவத்தில் இரண்டு நிலைகளும் உண்டு. மரம் இருப்பதும் கடவுளுக்கு ஏற்புடையது. அது இல்லாமல் போவதும் அவருக்கு ஏற்புடையதே. மரம் இல்லாவிடிலும் அவருக்குத் தொந்தரவில்லை. மரம் இருந்தாலும் அவருக்குத் தொந்தரவில்லை. 'உண்டு-இல்லை' ஆகிய இரு அம்சங்களும் கடவுளிடம் உள்ளன.

ஒரு முறை சொன்னதைத் திருப்பிப் பெறுதலோ, அதைத் திருத்திச் சொல்வதோ என்னைப் பொறுத்தவரை கிடையாது. ஆனால் மகாத்மாவாகிய காந்திஜி இந்த விஷயத்தில் நிதானம் தவறியிருக்கிறார்.

**கு**ஜராத்தைச் சேர்ந்த ஆனந்தஸ்வாமி என்பவர் என்னுடன் ஒருமுறை தங்கியிருந்தார். அவர் செய்தித்தாள் ஒன்றில் நிருபர். குறிப்பாக, காந்திஜியின் அருகில் இருந்து அவர் சம்பந்தமான செய்திகளை பத்திரிகைகளுக்குத் தெரிவிக்க வேண்டும். காந்திஜி தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியா திரும்பியபின் அவர் கொடுத்த முதல் அறிக்கையை ஆனந்தஸ்வாமிதான் பெற்று

பத்திரிகைகளுக்கு அனுப்பிவைத்தார். ஆனால் காந்திஜி அந்த அறிக்கையில் சில வசவு வார்த்தைகளை உபயோகித்திருந்தார். ஆங்கிலேயர்களைத் திட்டிச் சில சொற்கள் கூறியிருந்தார். இதைக் கண்ட ஆனந்தஸ்வாமி நடந்ததை என்னிடம் சொன்னார்.

"நான் அந்த வசவுச் சொற்களையும் ஏச்சுகளையும் நீக்கிவிட்டு மீதி அறிக்கையைச் செய்தித்தாள்களுக்கு அனுப்பி விட்டேன். மறுநாள் அச்சில் வந்திருந்த அறிக்கைகளைப் படித்து விட்டு என்னை அழைத்தார். கட்டித் தழுவினார். ரிப்போர்ட்டவர் என்பவர் இப்படித்தான் செயல்பட வேண்டுமெனப் பாராட்டினார். 'நீ திட்டுகளைச் சேர்க்காமல் ஒதுக்கிவிட்டாய். நீ செய்தது நல்ல காரியம். அவை வெளியாகியிருந்தால் எனக்கு மிகவும் வருத்த மாகவும் அவமானமாகவும் போயிருக்கும். தீய சொற்களைச் சேர்க்கக்கூடாது. உன் ரிப்போர்ட்டிங் பாணி ஆரோக்கியமானது' என்றார். முதுகைத் தட்டிக்கொடுத்தார்" இவ்வாறு ஆனந்தஸ்வாமி பெருமையாகச் சொன்னார்.

இதை நான் ரசிக்கவில்லை. "அப்படியானால் நீங்கள் வெளியிட்ட காந்திஜியின் அறிக்கை பொய்யானது. அவர் சொன்னதை நீங்கள் தவிர்த்துவிட்டீர்கள். ஆவேசத்தில் வெளிப் பட்ட உண்மையான மன ஓட்டத்தை நீங்கள் மறைத்துவிட்டீர்கள். சரித்திர உண்மையை இருட்டடிப்புச் செய்துவிட்டீர்கள். நீங்கள் ரிப்போர்ட்டராக இருப்பதற்குத் தகுதியற்றவர். காந்திஜியின் வாயிலிருந்து கெட்ட வார்த்தையே வந்ததில்லைபோல் அறிக்கை யிலிருந்து அவற்றை நீக்கி, வரப்போகின்ற தலைமுறைகளையும் ஏமாற்றிவிட்டீர்கள். இப்பொழுதாவது சரித்திர உண்மையை மறைக்காமல் காந்திஜி சொன்ன திட்டுகள் பற்றி ஓர் அறிக்கை விடலாம்," என்று சுட்டிக்காட்டினேன். அவருக்குக் கோபம் வந்துவிட்டது. அப்போது எழுந்துசென்றவர்தான். பிறகு என்னைச் சந்திக்க வந்ததேயில்லை.

அதுபோல், நான் ஒரு கருத்தைச் சொல்லிவிட்டால் விஷயம் முடிந்துவிட்டது. பிறகு அதை ஏன் மாற்ற வேண்டும்? அதை சுயநினைவோடுதான் சொல்லியிருப்பேன். அதனால் எனக்குப் பெயர் கிடைத்தாலும், என் பெயர் கெட்டாலும், என்னை

மகாத்மா என்று போற்றினாலும் பாவி என்று ஏசினாலும் நான் பொருட்படுத்துவதில்லை. ஆகவே என் கருத்தில் மாற்றம் செய்வதை அவசியமென நான் நினைக்கவில்லை.

நான் ஒவ்வொரு முறையும் வெவ்வேறு கருத்துகளைக் கூறுவதால், பிற்காலத்தில் வருபவர்கள் இவையனைத்தையும் கூறியவர் ஒருவரா, பலரா என்று சந்தேகப்படுவார்களே என்று சொன்னாய்.

அதனாலென்ன நஷ்டம்? அவர்கள் எந்த முடிவிற்கு வேண்டுமானாலும் வரட்டுமே. எதிர்காலம் குறித்து நாம் இப்போதே ஏன் கணக்குப் போட வேண்டும்? எதிர்காலம் நம்மால் அறிய முடியாதது. அது அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்.

நான் வெவ்வேறு கருத்துகளைக் கூறுவதால் அவை சங்கடமேற்படுத்துகின்றன. என் கருத்துகளை ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெறுவது எளிதன்று. அவற்றை ஆராய்ச்சி யாளரால் சுலபமாகப் புரிந்துகொள்ள முடியாது. என் கருத்துகள் சிற்றோடையல்ல. அவை வெள்ளமாகப் பொங்கிவரும் நதி. யாரோ டாக்டர் பட்டம் பெறுவதற்காக நான் கருத்துகள் கூறவில்லை.

**ந**வீன பாணி ஓவியங்களின் கண்காட்சி ஒன்று நடந்து கொண்டிருந்தது. நவீன ஓவியங்களைப் புரிந்துகொள்வது சிரமமானது. அந்தக் கண்காட்சியில் பிக்காசோவின் ஓவியம் தவறாகத் தலைகீழாக மாட்டப்பட்டிருந்தது. ஆனால் அதைப் பார்த்தவர்கள் புதுமையான ஓவியமெனப் புகழ்ந்தார்கள். கலை விமரிசகர்கள் அதன் சிறப்பம்சங்களைக் கட்டுரைகளாக எழுதினார்கள். பிக்காசோ ஒருநாள் அங்கே போய் ஓவியத்தைப் பார்த்ததும், "ஏன் இது தலைகீழாகத் தொங்குகிறது? எந்த மடையன் இப்படி இதை மாட்டினான்?" என்று சத்தம் போட்டார்!

ஒருமுறை ஒரு கோடீஸ்வரர் பிக்காசோவைச் சந்தித்து இரண்டு படங்கள் வேண்டுமென்றார். பிக்காசோவிடம் ஒரு படம்தான் இருந்தது. வந்தவர் அவசரப்படுத்தினார். "கையோடு எடுத்துப்போக வேண்டும். விலை பற்றிக் கவலை இல்லை," என்றார். பிக்காசோ உள்ளே சென்றார். ஏற்கெனவே வரைந்து தயாராக இருந்த ஓவியத்தைக் கத்தரிக்கோலால் சரிபாதியாக

வெட்டி இரண்டு படங்களாக்கினார். கோடீசுவரர் மகிழ்ச்சியுடன் அவற்றை எடுத்துச்சென்றார். அதை நாலாக வெட்டியிருந்தால்கூட புரிந்திருக்காது.

ஒருமுறை பிக்காசோவைச் சந்தித்த ஒருவர் தன்னை அமரவைத்துப் படம் வரைந்து தருமாறு கேட்டுக்கொண்டார். கட்டணமாக ஆயிரம் டாலர் தந்தார். படம் தயாரானதும் அதைப் பார்வையிட்ட அவர் மூக்கு சரியாக வரையப்படவில்லை என்று குறை கூறினார். பிக்காசோ, "அதைச் சரிசெய்வது சிரமமான வேலைதான். ஆனாலும் சரிப்படுத்திவிடுகிறேன்," என்று கூறி அவரை அனுப்பிவைத்தார்.

அதன்பின் பிக்காசோ கவலையுடன் உட்கார்ந்திருந்தார். அவர் மனைவி காரணம் கேட்டாள். அதற்கு பிக்காசோ, "நான் வரைந்துள்ள இந்த நவீன பாணிப் படத்தில் மூக்கு எங்கே உள்ளது என்று எனக்கே தெரியவில்லை. மூக்கு இருக்குமிடம் தெரிந்தா லல்லவா அதைச் சரிசெய்ய முடியும்?" என்று கவலையுடன் பதிலளித்தார்.

**ந**வீன பாணி ஓவியக் கண்காட்சி ஒன்று நடந்தது. சிறந்த ஓவியத்தைத் தேர்ந்தெடுத்துப் பரிசளிக்க ஒருவர் நடுவராக நியமிக்கப்பட்டார். அவர் ஒரு சோதிடர்! ஓவியக்கலை அறிந்த வரல்லர். ஆகவே மக்கள் இதுபற்றி சந்தேகம் கிளப்பினார்கள். கைரேகை, ஜாதகம், திருமணப் பொருத்தம், பிசாசு ஓட்டுதல் ஆகியவற்றில் கெட்டிக்காரராக இருப்பதுபோல் இவர் எப்படி ஓவியக்கலை அறிவும் பெற்றவராக இருக்க முடியும்? கண்காட்சி அமைப்பாளர்கள் காரணம் கூறினார்கள். "யாருக்குமே புரியாத இந்த ஓவியங்களைப் பரிசீலிக்க சோதிடரைக் கூப்பிட்டாலும், ஒரு நீதிபதியைக் கூப்பிட்டாலும் எல்லாம் ஒன்றுதான். ஓவியருக்கே தான் வரைந்த ஓவியம் புரியாதபோது ஒரு சோதிடர் வந்து எந்த ஓவியத்தையாவது சிறந்ததாகத் தேர்ந்தெடுத்துவிட்டுப் போகட்டும்," என்று கூறி நிலைமையைச் சமாளித்தார்கள்.

நான் சொன்னவற்றையெல்லாம் திரட்டி ஆராய்ந்தால் குழப்பத்தில் முடியும். நான் என்ன சொன்னேன்; என்ன சொல்லவில்லை; ஏன் அப்படிச் சொன்னேன்; பிறகு ஏன்

முரணான கருத்தைக் கூறினேன் என்பதையெல்லாம் எதிர் காலத்தில் வருபவர்கள் மூளைப் பயிற்சிக்காக விட்டு வைக்கவும். என் முரண்பாடான கருத்துகளைப் பண்டிதர்களால் புரிந்துகொள்ள முடியாது. என்னைக் கிறுக்கு அல்லது குழப்பவாதி என்பார்கள். அல்லது வெவ்வேறு அறிஞர்கள் வெவ்வேறு சமயம் கூறியவை கலந்துபோய்விட்டன என்பார்கள்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் பயத்தைப் பற்றி ஒருமுறை விளக்கினீர்கள். வேதங்களும் பயமுறுத்தும் விஷயங்களைக் கொண் டுள்ளன. பயம் ஏன், எப்படி உண்டாகிறது? இதை எப்படிப் போக்கிக்கொள்வது?**

பயத்தைப் போக்கிக்கொள்ள முயன்றால் அது போய் விடாது. நீயே இல்லாவிடில்தான் பயமும் போகும். பயம் உனது அகங்காரத்தின் நிழல் போன்றது.

சாவு நிச்சயம் என உனக்குத் தெரியும். இந்த உண்மையை நீ மறுக்க முடியாது. தினமும் யாராவது இறக்கிறார்கள். ஒவ்வொருவர் இறப்பிலும் உன் இறப்பின் முன்னறிவிப்பும் அடங்கியுள்ளது. பிறரின் இறுதிக் காரியங்கள் நடப்பதைப் பார்க்கையில் உனக்கு என்ன நடக்கும் என்று ஊகிக்க முடிகிறது. தினமும் நாம் வளர்வதுபோல் தோன்றினாலும், நம்மை அறியா மலே நாம் கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே பயப்படாமல் எப்படி இருக்க முடியும்? மரணம் எந்த சமயமும் நிகழலாம் என்னும் நினைப்பு நடுக்கம் தருகிறது.

பயத்தை விரட்டியடிப்பதில் மனமும் நமக்கு உதவுவ தில்லை. மனம் உறுதியற்றது. அது மாறிக்கொண்டே இருக்கிறது. காலையில் அன்பால் நிறைந்திருந்த மனம் பகலில் கசப்பால் நிரம்பிவிடலாம். உணர்ச்சிகள் மாறியபடி உள்ளன. ஒருவருக்காக உயிரை விடவும் தயாராக உள்ள ஒருவன் சூழ்நிலை மாற்றத்தால் அவரைக் கொல்லவும் முயலக்கூடும்.

நாம் முழுமையாக மனத்தை நம்பி இருக்கக்கூடாது. மனத்தில் எதுவும் உறுதியாக நீடிப்பதில்லை. மனத்தை நீயென

நினைக்கிறாய். ஆகவே மனம் பயந்தால் நீயும் பயப்படுகிறாய். அதிலிருந்து எப்படி விடுபடுவது என்று கேட்கிறாய்.

வேண்டாம், நீ விடுபட முயலாதே. பயம் ஏன் உண்டாகிறது என்று அறிய முற்படு. சிலர் கடவுளை பயத்தின்போதுதான் நினைக்கிறார்கள். 'கடவுளே! காப்பாற்று' என்று அலறுகிறார்கள். நீ உடல் அல்லன், மனம் அல்லன் என்பதை உணர்ந்ததும் பயம் உன்னைவிட்டு அகன்றுவிடும். பிறகு 'நான்' என்பது மிஞ்சியிருக்காது. இன்னொன்றுடன் சேரும்போது 'நான்' பிறக்கிறது. உடலுடன், மனத்துடன், பணத்துடன், மதத்துடன் என்று எதனுடன் சேர்ந்தாலும் 'நான்' உணர்வு தலைதூக்குகிறது. எல்லாம் நீங்கிவிட்டால் 'நான்' மிஞ்சாது. அப்பொழுது உள்ளே சூனிய உணர்வு மட்டுமே நிரம்பியிருக்கும். அந்த சூனிய நிலையில் பயத்திற்கு இடமில்லை.

ஒரு படகு மூழ்கும் நிலையில் இருந்தது. அதிலிருந்த முல்லா நஸ்ருத்தீனும் மூன்று நண்பர்களும் நடுங்கினார்கள். ஒரு நண்பர், 'கடவுளே, என்னைக் காப்பாற்று. இனி என்றுமே நான் கள் குடிக்கமாட்டேன்' என்று சபதம் செய்தார். இன்னொரு நண்பர், 'கடவுளே, என்னைக் காப்பாற்றிவிடு. இனி என்றுமே நான் புகைபிடிக்க மாட்டேன்' என்று சபதம் செய்தார். மூன்றாமவர், 'கடவுளே, என்னைக் காப்பாற்று. நான் சாமியார் ஆகிவிடுகிறேன்' என்று சபதம் செய்தார். அதே சமயம் முல்லா, "அதோ கரை தெரிகிறது. நாம் பிழைத்துவிட்டோம்," என்று கூவினார். உடனே மற்ற மூவரும், 'கடவுளே, எங்களை மன்னித்துவிடு. நாங்கள் அவசரப்பட்டு சபதம் செய்துவிட்டோம். அதைத் திரும்பப் பெற்றுக்கொள்கிறோம்' என்று பிரார்த்தனை செய்தனர்.

முல்லா ஒருமுறை பேரீச்ச மரத்தின்மீது ஏறினார். உயரமான மரம். கால் வழுக்கியது. பயந்துபோன அவர், 'கடவுளே, இன்று என்னை கால் வழுக்காமல் பேரீச்சை பறிக்க உதவு. நான் கோயில் உண்டியலில் ஒரு ரூபாய் காணிக்கை செலுத்துகிறேன்' என வேண்டிக்கொண்டார். 'இதற்குமுன் நீ உதவியபோது நான் காணிக்கை செலுத்தியதில்லைதான். ஆனால் இம்முறை தவறமாட்டேன்' என்று உறுதியும் கூறினார். மரத்தின் உச்சியில்

பேரீச்சம் பழம் கொஞ்சம்தான் காணப்பட்டது. முல்லாவின் மனம் மாறியது. 'கடவுளே, பேரீச்சை குறைவாகத் தான் காணப்படுவதால் உனக்கு ஒரு ரூபாய் காணிக்கை தருவது அதிகம்தான். அரை ரூபாயாகக் குறைத்துவிடுகிறேன். அதை ஏற்றுக்கொள்' என்றார். அதேசமயம் அவர் கால் வழுக்கித் தரையில் விழுந்துவிட்டார். உடலில் காயமில்லை பேரீச்சையும் பறித்துவிட்டார். பயம் நீங்கிவிட்டது. அவர், 'கடவுளே, என்னை ஒழுங்காகத் தரையில் சேர்த்திருந்தால் நான் வாக்களித்தபடி அரை ரூபாய் கொடுத்திருப்பேன். என்னைச் சறுக்கிவிழச் செய்ததால் உமக்கு அந்த அரை ரூபாயும் கிடையாது' என்று அறிவித்துவிட்டார்!

இவ்வாறு மனிதன் பயம் மேலோங்கும்போது கடவுளை நினைக்கிறான் பயத்துக்கான காரணம் நீங்கியதும் கடவுள் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் மறந்துவிடுகிறான். கடவுள் பயத்தின் சின்னமாக விளங்குகிறார்.

ஆத்மா அமரத் தன்மை வாய்ந்தது என்று சொல்லும்போது கூட பெரும்பாலோர் ஞானத்தின் காரணமாக அவ்வாறு கூறுவதில்லை. பயத்தின் காரணமாகக் கூறுகிறார்கள். மரணம் காரணமாக உடல் அழிந்துபோனால் தாங்கள் முழுமையாக இல்லாமல் போய்விடுவோம் என்னும் பயம் ஒவ்வொருவருக்கும் உண்டு. தனது ஆத்மா மிஞ்சியிருக்கும் என்னும் நம்பிக்கை தைரியம் தருகிறது. ஆகவே ஆத்மா பற்றிய கண்ணோட்டமும் பயத்தின் அடிப்படையில் எழுகிறது. எதிர்மறையான இந்த ஆத்ம உணர்வுக்கு எந்த மதிப்பும் கிடையாது.

பயத்தை அறிந்துகொள்வதன் மூலம் பயத்திலிருந்து விடுதலை பெற முடியும். பயத்தை நேரில் சந்தித்துவிடு. யோசி. பயம் ஏன்? அது எங்கு இருக்கிறது? மனத்தின் எந்த மூலையில் ஒளிந்திருக்கிறது? புகை எங்கிருந்து எழுகிறது? ஏன் எழுகிறது?

பயம் ஏற்படும்போது அமைதியாக உட்கார்ந்து பயம் எங்கேயுள்ளது என்று அடையாளம் கண்டுபிடி. உடல் இறக்கும் நிலைக்குப் போய்விட்டால் பயப்படாதே. உடலின் இயற்கை என்றோ ஒருநாள் இறப்பதுதான். பயப்பட்டாலும், போகும் உயிர் நிற்காது; போன உயிர் திரும்பாது. பயம் காரணமாக உயிர் சீக்கிரமே நீங்கிவிடும் அபாயமும் உண்டு.

**சா**க்ரடீஸ் உயிர் பிரியும் நிலையில் இருந்தார். "உங்களுக்கு பயமாக இல்லையா?" என்று சீடர் கேட்டார். சாக்ரடீஸ் கண் திறந்தார். "பயமா? மரணத்தின்பின் இரண்டில் ஒன்று நடக்கும். நாத்திகர்கள் கூறுவதுபோல் மரணத்தின்பின் எதுவும் மிஞ்சாது. பிறகு, இறந்தவருக்கு ஏன் பயம் ஏற்பட வேண்டும்? பிறப்பிற்கு முன்னால் நாம் இருக்கவில்லை. ஆகவே ஒரு கஷ்டமும் தெரியவில்லை. இறப்பிற்குப் பின்னால் நாம் இல்லாமல் போய்விடுவோம். அப்போதும் ஒரு கஷ்டமும் தெரியாது." என்றார்.

நாத்திகர் கண்ணோட்டத்தில் மொத்தமே ஒரு பிறவிதான் உண்டு. முற்பிறவி கிடையாது. ஆகவே அது சம்பந்தமான தொல்லையும் கிடையாது. இல்லாத ஒருவனுக்குத் துன்பமும் இல்லை. இறந்தபின் இல்லாமல் போய்விடுவதால் அப்போது எதுவும் நிகழ்வதில்லை. புராணங்கள் ஆதாரமின்றி பயமுறுத்து கின்றன.

சாக்ரடீஸ் மேலும் சொன்னார்: 'நாத்திகர்கள் கூறுவது சரியென்றால், இறப்புடன் ஆத்மாவும் முடிவ்பெறுகிறது. விஷயம் முடிந்தது. வந்தோம்-நின்றோம்-போனோம். ஓர் அலை எழுந்தது. சிறிது காலம் ஆட்டம் போட்டது. பின்னர் அடங்கிவிட்டது. ஆத்திகர்கள் கூறுவதுதான் சரியென்றால், மரணத்திற்குப் பின்னும் ஆத்மா மிஞ்சும். நாம்தான் உடல் இல்லையே. உடல் நீங்கியபின் நாம் வேறு விதமாக (ஆத்மாவாக) நீடிக்கப்போகிறோம். ஆகவே பயம் தேவையில்லை.'

ஆனால் சாக்ரடீஸ் தான் எந்தக் கட்சி என்று கூறவில்லை. என்ன நிகழும் என்பது தனக்குத் தெரியாது என்கிறார். எனினும் மேற்கண்ட இரண்டில் எது நிகழ்ந்தாலும் அங்கே பயத்துக்கு இடமில்லை என்கிறார்.

∴பக்கீர் (ஞானி) ஒருவருக்கு இரண்டு மகன்கள். ஒருநாள் இருவரும் ஒரு விபத்தில் காலமானார்கள். இது தெரியாமல் வெளியே சென்றிருந்த ஞானி பள்ளிவாசலுக்குச் சென்று, நமாஸ் முடித்துவிட்டு வீடு திரும்பினார். மனைவி அவரிடம், "முதலில் சாப்பிட்டு முடியுங்கள். ஒரு முக்கியமான விஷயம் சொல்ல

வேண்டும்,'' என்றாள். மகன்கள் மீது மிகுந்த பிரியம் கொண்ட அவர் மனைவியிடம், "எங்கே மகன்களைக் காணோம்? பள்ளிவாசலுக்கும் வரவில்லை என்று சொன்னார்களே.'' என்று விசாரித்தார்.

மனைவி பதில் சொல்லாமல் அவர் சாப்பிட்டு முடிக்கும் வரை காத்திருந்தாள். பிறகு பேச்சை ஆரம்பித்தாள். "நாதா! இருபது ஆண்டுகளுக்கு முன் ஒருவர் சில வைரக்கற்களை நம்மிடம் பாதுகாப்புக்காக கொடுத்து வைத்திருந்தார். அதை இன்று திருப்பிக்கேட்டார். கொடுத்துவிடவா?'' என்று கேட்டாள்.

"இதிலென்ன யோசனை?'' என்றார் கணவர். இன்னொருவரிடமிருந்து பெற்ற பொருளைத் திருப்பிக்கொடுக்க என் அனுமதி எதற்கு?''

மனைவி ஓர் அறைக்குள் அழைத்துச் சென்றாள். இரண்டு மகன்களும் அங்கு பிணமாகக் கிடந்தனர். இருவருக்கும் 20 வயது. இரட்டைக் குழந்தைகள். ஞானிக்கு விஷயம் புரிந்தது. "இருபது ஆண்டுகளுக்கு முன் இவர்கள் இருந்திருக்கவில்லை. எனவே பிறகு நடந்ததை ஒரு கனவென எடுத்துக்கொள்வோம். அந்தக் கனவு இப்போது கலைந்துவிட்டது.

உடல் குறித்த பயமாயின் உடல் ஒருநாள் போய்விடும் என்பதை நினைவில் வை. அதைக் காப்பாற்ற வழியில்லை. மனம் குறித்த பயமாயின் மனம் என்பது நீ அல்லன் என்பதை நினைவில் வை. விழி, தியானம் செய், சுயநினைவை அடை. நீ என்பது உடலோ, மனமோ அல்ல என்பது தெரிந்ததும் பயம் தெளிந்து விடும். பயத்துடன் நேருக்கு நேராக மோதாதே. பலன் கிடைக்காது. பயத்தைப் புரிந்துகொண்டால் போதும். அது வலுவிழந்துவிடும்.

பயமும் வாழ்க்கையின் ஓர் அங்கம்தான் என்பதைப் புரிந்துகொள். சாட்சிபோல் உன்னை நீ கவனித்தால், உன் உடல் நீங்கினாலும், மனம் மாறினாலும், உனக்குள்ளே ஏதோ ஒன்று நிரந்தரமாக உள்ளதை உணர்வாய்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

க்வ மோக: க்வ ச வா விஸ்வம் க்வ த்யானம் க்வ முக்ததா|
ஸர்வ ஸங்கல்ப ஸீமாயாம் விஸ்ராந்தஸ்ய மகாத்மன:|| 190

யேந விஸ்வமிதம் த்ருஷ்டம் ஸ நாஸ்தீதி கரோதி வை|
நிர்வாஸன: கிம் குருதே பஸ்யந்நபி ந பஸ்யதி|| 191

யேன த்ருஷ்டம் பரம் ப்ரஹ்ம ஸோஅஹம் ப்ரஹ்மேதி சிந்தயேத்|
கிம் சிந்தயதி நிஸ்சிந்தோ த்விதீயம் யோ ந பஸ்யதி|| 192

த்ருஷ்டோ யேனாத்ம விக்ஷேபோ நிரோதம் குருதே த்வஸௌ|
உதாரஸ்து ந விக்ஷிப்த: ஸாத்யாபாவாத்கரோதி கிம்|| 193

தீரோ லோக விபர்யஸ்தோ வர்த்தமானோ அபி லோகவத்|
ந ஸமாதிம் ந விக்ஷேபம் ந லேபம் ஸ்வஸ்த பஸ்யதி|| 194

பாவாபாவ விஹீனோ யஸ்த்ருப்தோ நிர்வாஸனோ புத:|
நைவ கிஞ்சித்க்ருதம் தேன லோக த்ருஷ்ட்யா விகுர்வதா|| 195

ப்ரவ்ருத்தௌ வா நிவ்ருத்தௌ வா நைவ திரஸ்ய துர்க்ரஹ:|
யதா யத் கர்த்துமாயாதி தத்க்ருத்வா திஷ்டத: ஸுகம்|| 196

**ந**ண்பர் ஒருவர் எனக்கு கோபமாகக் கடிதம் எழுதியிருந்தார். அஷ்டாவக்ரர் கூறியவற்றையும், அதற்கான உங்கள் விளக்கங்களையும் மக்கள் பின்பற்றினால், உலக சக்கரம் சுழல்வது நின்றுவிடும் என்று எச்சரித்திருந்தார்.

உலக சக்கரம் சுழல வேண்டியது என் பொறுப்பு அல்லவே. அந்த நண்பர் அந்தப் பொறுப்பை மேற்கொண்டிருந்தால் அவர் பாடு. அவர் பிறப்பதற்கு முன்பும் உலக சக்கரம் இயங்கியது. அவரது மறைவிற்குப் பின்னும் அது தொடர்ந்து இயங்கும். அந்த சக்கரத்தை உண்மையில் சுழற்றுபவன் மற்றவர்களின் விருப்பு-வெறுப்பின்படி செயல்பட மாட்டான். நீ உன் வாழ்க்கையை ஒழுங்காக நடத்தினால் அதுவே பெரிய விஷயம்தான். உலகம் பற்றிய பெரிய கவலைகளைத் தலையில் சுமக்காதே. உனது வாழ்க்கையின் சிறிய சிக்கல்களே இன்னும் தீர்ந்தபாடில்லையே. உனது ஆற்றலுக்கு அப்பாற்பட்ட கவலைகளில் மாட்டிக் கொள்ளாதே.

அஷ்டாவக்ரர் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டவர். அவர் அப்போதே உலக சக்கரம் சுழல்கிறது என்று சொல்லி விட்டுத்தான் போனார். தற்போது எனது காலம். இதற்கும் 5000 ஆண்டுகளுக்குப் பின் நீ வந்து பார்த்தால் உலக சக்கரம் தொடர்ந்து சுழல்வதைத் தெரிந்துகொள்வாய். நானோ, நீயோ எதுவும் சொல்லியோ, எதுவும் செய்தோ உலக சக்கரம் சுழல்வதில்லை. இதைப் புரிந்துகொண்டால் நீ உலக சக்கரத்தின் பாதிப்பிற்கு அப்பாற்பட்ட நிலைக்குப் போய்விடுவாய். உன்னைப் பொறுத்தவரையில் இனி சக்கரம் சுழலாது. இதுதான் முக்தி என்பதும்.

உலக சக்கரம் குறித்து உன் கவலை உண்மைதானா? அந்த சுழற்சி நின்றுவிடக்கூடாது என்று உன் மனத்தின் ஒரு மூலையில் பயமுள்ளது. உலக இயக்கம் நின்றுவிடுமே என்னும் கவலை மறைமுகமாக அது நின்றுவிடக்கூடாது என்று நீ விரும்புவதையும் காட்டுகிறது. உண்மையிலேயே உனக்கு உலகத்தின் போக்குக் குறித்து அக்கறை உண்டா? நீதான் உலக சக்கரத்தின் பாது காவலனா?

மனத்தில் ஒளிந்திருப்பது எப்படியாவது வெளியாகி விடுகிறது. அதை எவ்வளவு ஆழமாக அமுக்கினாலும் பயனில்லை. அது புதிய வடிவங்கள் எடுத்துவருகிறது. கடவுள் உன்னிடம் அனுமதி கேட்டுக்கொண்டு உலக சுழற்சியைத்

தொடங்கிவைக்கவில்லை. உலகம் இயங்கியது போதும் என அவர் நினைக்கும்போது அதை நிறுத்த உன் சம்மதத்திற்காகக் காத்திருக்கமாட்டார். உன்னால் உனது வாழ்க்கையின் இயக்கத்தையே சீர்படுத்த முடியாதபோது உலகத்தை நீ என்ன செய்ய முடியும்? உன் அற்பமான பிரச்சினைகளை மறக்க நீ உலக அளவிலான பிரச்சினையை எடுத்துக்கொள்கிறாய். மருந்து தயாரிப்பாளர்களிடம் சென்று, "இனிப் புதிதாக மருந்துகள் கண்டுபிடிக்காதீர்கள். புதுப்புது மருந்துகள் உற்பத்தியானால் நோய்களின் சக்கரம் என்ன ஆவது?" என்று நாம் கூற முடியுமா?

உலக சக்கரம் என்பது நோய்களின் சக்கரம் தவிர வேறென்ன? துன்பத்தைத் தவிர வாழ்க்கையில் நாம் வேறு எதைக் கண்டோம்? உடம்பெல்லாம் காயம். மனசெல்லாம் புண். வாழ்க்கையில் பூ மலர்ந்ததுண்டா? நறுமணம் பரவியதுண்டா? இனிய இசை கேட்டதுண்டா? ஆனாலும் உலக சக்கரம் சுழல்வது நின்றுவிடுமோ என பயப்படுகிறாய். சாக்கடையில் கிடக்கிறாய். அதன் அசுத்தத்தைப் பொருட்படுத்தவில்லை. சாக்கடை வற்றிவிடக் கூடாது என்று கவலைப்படுகிறாய். உலகின் உண்மையை உணர்ந்திருப்பதால்தான் ஞானிகள் உலகில் பற்றின்றி வாழ்கிறார்கள். இதை விட்டு வெளியேறுவதற்கான சந்தர்ப்பத்தை எதிர்பார்க்கிறார்கள்.

உனது உலகம் என்பது நரகம் தவிர வேறென்ன? நீ கொஞ்சம் விழிப்புப் பெற்றால் போதும். உலகம் ஒரு கனவுத் தோற்றம் என்பதைத் தெரிந்துகொள்வாய். இது சத்தியமானதன்று எனப் புரிந்து கொள்வாய். கடவுள் மட்டுமே சத்தியம். மற்றவை தோற்றங்கள், கற்பனைகள், கனவுகள்.

இன்னொரு விஷயமும் நினைவில் வை. அஷ்டாவக்ரரோ, நானோ உலகம் குறித்துச் சரியான விழிப்புப் பெறு என்று சொல்வதால் பெரிய மாற்றங்கள் கிடையாது. மரங்கள் அப்படியே இருக்கும்; பறவைகள் தொடர்ந்து பாடும்; வானவில் கண்ணிற்குத் தெரியும்; சூரியன்-சந்திரன்-நட்சத்திரங்கள் வழக்கம்போல் செயல்படும். முன்பைவிட அவற்றை நீ நெருக்கமாக உணர்வாய். இதுவரை உன் கண்களிலும் மனத்திலும் படர்ந்திருந்த இருட்டு

விலகிவிடும். பூவின் மணத்தை முழுமையாக உணர்வாய். உனது மன இரைச்சல் நீங்கி, பறவைகள் பாடுவது கேட்கும்.

ஞானிகள் நம்மை உலகை விட்டு வெளியேறு என்று சொல்லும்போது கண்ணுக்குத் தெரியும் இந்த உலகைக் குறிப்பிட வில்லை. இதை விட்டு நாம் எப்படி வெளியேற முடியும்? எங்கே செல்ல முடியும்? இதனோடு நாம் ஒன்றிப்போயிருக்கிறோம். உலகின் ஓர் அங்கமாக நாம் உள்ளோம். ஞானிகள் கூறுவது நாம் காணும் உலகம் போலியானது என்பதுதான். நீ கயிற்றைப் பார்த்துப் பாம்பென நினைக்கிறாய். விழிப்பு வந்ததும் பாம்பில்லை எனத் தெரியும். ஆனால் கயிறு நீடிக்கத்தான் செய்யும். விழித்ததும் கனவு மறைந்துவிடுவதுபோல், ஞான விழிப்புப் பெற்றதும் நாம் தற்பொழுது (பாம்பாகக்) காணும் மாய உலகம் மறைந்துவிடும்.

**ந**ண்பர் ஒருவர் தனது கனவில் ஆங்கிலத்திலும் இந்தி யிலும் கவிதை வரிகள் வருவதாக என்னிடம் பெருமையடித்துக் கொண்டார். "நீங்கள் விழித்திருக்கும் போதுகூட உங்கள் பேச்சு முதலியவற்றில் கவிதைத் தன்மை வெளிப்படவில்லையே. கனவில் எப்படிக் கவிதை வரும்?" என்று நான் கேட்டேன். அவரோ த்மது கருத்தில் பிடிவாதமாக இருந்தார். ஆகவே நான் அவருக்கு ஒரு யோசனை சொன்னேன். "படுக்கையருகே காகிதமும் பேனாவும் தயாராக வைத்திருங்கள். கவிதை உதித்ததும் சட்டென விழித்து அதை எழுதுங்கள். அல்லது கனவு முடிந்த பிறகாவது படுத்தபடியே நினைவிலுள்ள வரிகளை எழுதிக்கொள்ளுங்கள். பிறகு அவற்றை கற்பனையால் முழுமை யாக்கலாம்," என்றேன்.

மறுநாளே அவர் என்னிடம் வந்தார். வருத்தமாகத் தெரிந் தார். என்ன விஷயம் என்று நான் கேட்டேன். "நீங்கள் சொன்ன படியே செய்தேன். நேற்றிரவே கவிதையுடன் சேர்ந்த கனவு வந்து விட்டது. உடனே விழித்து அதை எழுதினேன். ஒன்றிரண்டு வரியுடன் கனவு கலைந்துவிட்டது," என்றார்.

"பரவாயில்லை, நல்ல ஆரம்பம்தான், கவிதையைக் காட்டுங்கள்," என்றேன். அவர் மறுத்தார், கூச்சப்பட்டார். நான்

வற்புறுத்தியதால் ஒரு துண்டுக் காகிதத்தைக் காண்பித்தார். கோணல்மாணலான கையெழுத்து. அவர் தூக்கம் நடுவில் கலைந்துதான் எழுதியிருக்கிறார் என்பதை உறுதிப்படுத்தியது. ஆனால் அந்த வரிகள்? ஆங்கிலத்தில் 'லிவ்வா லிட்டில் ஹாட், ஸிப்பா கோல்ட் ஸ்பாட்!' என்றிருந்தது. கீழே அதன் மொழி பெயர்ப்பான 'பரபரப்பாக வாழு. கோல்ட் ஸ்பாட் குடி' என்றிருந்தது. நான் யோசித்தேன். அவரது வீட்டின் எதிரே கோல்ட் ஸ்பாட் பானத்தின் இந்த விளம்பரப் பலகை நீண்ட நாளாகத் தொங்கிக் கொண்டிருப்பது ஞாபகம் வந்தது. அந்த விளம்பரத்தை அவர் நூறு தடவைக்குமேல் பார்த்திருப்பார். அந்த வரிகளை உதடுகள் எத்தனையோ முறை உச்சரித்திருக்கும். உனது வெளியுலகப் பாதிப்புதான் உனக்குள் இறங்கிக் கனவாக வருகிறது.

வெளியுலகம் என்பது வெறும் பொய்த் தோற்றம். அந்தப் பொய்யிலிருந்து நாம் சத்திய உலகிற்கு வரவேண்டும். அர்த்தமற்ற உளறலான கனவுகள் நீங்க ஞான விழிப்புப் பெறவேண்டும். கவிதையென நினைத்தது உண்மையில் விளம்பரம் என்று தெரியவந்ததுபோல், இந்த உலகம் கனவு என்றும், அறியாமை கலைந்து நாம் விழிக்க வேண்டியது வேறு உலகு என்பதும் புலனாகும்.

மக்களுக்கு நின்று நிதானித்து யோசிக்க நேரமில்லை. எல்லோரும் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். எங்கே ஓடுகிறோம் என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. ஏன் ஓடுகிறோம் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. மற்றவர்கள் ஓடுவதைப் பார்த்து இவர்களும் ஓடுகிறார்கள். எல்லோரும் தில்லிக்குப் படையெடுக்கிறார்கள். பதவி வேட்டையை மேற்கொண்டு ஓடுகிறார்கள். பணத்தைத் துரத்தியபடி ஓடுகிறார்கள். மற்றவர் களுக்குத் தேவையானவை எல்லாம் தங்களுக்கும் தேவை என்று ஒருவரையொருவர் முட்டித் தள்ளிக்கொண்டு ஓடுகிறார்கள். தனித் தன்மையை இழந்து 'கார்பன்' பிரதிகள்போல் செயல்படுகிறார்கள். இப்படி ஓடுவதன் பெயர் வாழ்க்கை இல்லை. இந்த இடைவிடாத பரபரப்பு ஒருவகையான நோய்மட்டுமே ஆகும்.

மனத் தத்துவ அறிஞர்கள் ஒரு புள்ளிவிவரத்தின் அடிப்படையில், உலகில் ஒவ்வொரு நாலு பேரில் ஏறத்தாழ மூவர் கிறுக்குப் பிடித்தவர்கள் என்கிறார்கள். மிஞ்சியவர் கிறுக்காகவோ, அல்லது ஞானியாகவோ இருக்கக்கூடும் என்கிறார்கள். அப்படித்தானிருக்கும். மக்கள் எனப்படுபவர்கள் வெறிபிடித்த கூட்டமாகத்தான் இருக்கிறார்கள். ஞானிகள் எனப்படும் சிலரே கூட்டத்திலிருந்து விலகிக் காணப்படுகிறார்கள். மக்களோ இவர்களைத்தான் பைத்தியமென நகைக்கிறார்கள்.

பணம் குவிக்கிறாய், ஆனால் வாழ்க்கையை இழக்கிறாய். பணம் சம்பாதிக்க ஆத்மாவை விற்கிறாய். பைத்தியம் நீதானே. பூக்குவியல் என நினைத்து முள்செடியை உன் மார்பில் வைத்திருக்கிறாய். முள் குத்தினாலும் பொருட்படுத்துவதில்லை. யாராவது ஏதாவது சொன்னால், 'நான் எதையும் விடமுடியாது. உலக சக்கரத்தின் ஓட்டம் பாதிப்படையும்' என்கிறாய்.

உலக சக்கரம் என்பது கடவுளின் ஏற்பாடு. உலக சக்கரம் அவரது தேரின் சக்கரங்கள்தாம். அது நிற்காமல் ஓடும் தேராகும். இப்போது நீ தேரால் இழுத்துச்செல்லப்படுகிறாய். விழிப்புப் பெற்றால் தேரில் அமர்ந்தபடி செல்வாய். பயப்பட வேண்டாம். விழிப்புப் பெறுவதால் நீ எதையும் இழப்பதில்லை. உனக்குள்ளே இருப்பதெல்லாம் உன் வசமாகிவிடும். ஆகவே நான் என் சந்நியாசிகளிடம் 'உங்களுக்கு ஏற்கெனவே உள்ளதை அடையாளம் காட்டுவதுதான் என் வேலை' என்று சொல்லிவருகிறேன்.

இங்கே 'எனது-உனது' என்றெல்லாம் சொந்தம் கொண்டாடுவது அர்த்தமற்றது. இங்கே எதுவும் யாருக்கும் சொந்தமில்லை. முற்காலத்தில் இவை எல்லாம் இருந்தன. நாம்தான் பிறக்கவில்லை. எதிர்காலத்திலும் இவை எல்லாம் இருக்கும். நாம்தான் இருக்கமாட்டோம். எல்லாவற்றிற்கும் கடவுள்தான் சொந்தக்காரர். ஏதாவது ஒன்றை உன்னுடையது என்று சொந்தம் கொண்டாடினால் அங்கே நீ பொய்யை நிலைநாட்டுகிறாய்.

ஒருவரின் மனைவி இறந்துபோனாள். அவர் என்னிடம் வந்து, "இனி உலகத்தில் என்ன மிச்சமிருக்கிறது? எனக்கு சந்நியாசம் கொடுங்கள்," என்கிறார். நான் மறுக்கிறேன், "துக்க

சூழ்நிலையில் சந்நியாசம் மேற்கொள்ளாதே. இரண்டு மாதம் பொறுத்திரு. இப்போது துக்க ஆவேசத்தில் இருக்கிறாய். ஆவேசத்தில் பெறும் சந்நியாசம் நீடிக்காது. இரண்டு-மூன்று மாதத்தில் நீ மறுமணம் செய்துகொள்ளாவிடில் அப்போது வர, பார்க்கலாம்,'' என்று அவரை அனுப்பிவிட்டேன். அவர் மீண்டும் வரவேயில்லை!

இன்னொருவர் வந்தார். அவர் வியாபாரத்தில் திவாலாகி விட்டார். தனக்கு சந்நியாசம் அளிக்குமாறு என்னைக் கேட்டுக் கொண்டார். இதுவரை உலக சக்கரத்தைச் சுழற்றுவதுபோல் நடந்துகொண்டவர் இப்போது 'உலகச் சக்கரம் நின்றுபோகட்டும். எனக்கென்ன வந்தது?' என்கிறார். நான் சற்று காத்திருக்கச் சொன்னேன். நடுவில் எதற்காகவோ வீட்டில் பழுதுபார்க்கும் வேலை நடந்தது. அப்பொழுது ஒரு புதையல் கிடைத்தது. அந்தச் செய்தி கிடைத்ததும் கிளம்பிப் போனவர் மீண்டும் என்னைச் சந்திக்க வரவேயில்லை!

வாழ்க்கையில் நீ தோற்கும்போது, மனமுடைந்து போகும் போது சந்நியாசியாகிவிடத் துடிக்கிறாய். உலக வாழ்வை விட்டு வெளியேறுகிறேன் என்கிறாய். இது அறிவுபூர்வமான முடிவன்று.

**மு**ல்லா நஸ்ருத்தீன் கப்பலில் பயணம் செய்து கொண்டிருந்தார். சுற்றுக் கம்பியைப் பிடித்து நின்றுகொண்டிருந்த ஒரு சிறுவன் தண்ணீரில் விழுந்துவிட்டான். எல்லோரும் என்ன செய்வது என்று தவித்தனர். திடீரென முல்லாவும் தண்ணீரில் குதிப்பதைப் பார்த்தனர். அவர் சிரமப்பட்டுப் பையனைக் காப்பாற்றி, கப்பலின் தளத்துக்கு வந்தார். எல்லோரும் முல்லாவைப் பாராட்டினர். மாவீரர் என்று வாழ்த்தினர்.

முல்லாவோ மகிழ்வதற்குப் பதிலாகச் சீறினார். ''எல்லோரும் கூச்சல் போடுவதை நிறுத்துங்கள். நான் கம்பியைப் பிடித்து வேடிக்கை பார்த்த நிலையில் யார் என் மீது மோதி நான் தண்ணீரில் விழும்படி செய்தவன்? அவன் முதுகுத் தோலை உரிக்க வேண்டும்,'' என்று கத்தினார்!

இப்படித்தான் சந்நியாச ஆர்வமும் உள்ளது. அது இயற்கை யாக ஏற்படாமல், யாரோ, ஏதோ நிகழ்ச்சி உன்னை அதிர்ச்சிக்கு

உள்ளாக்கினால் அந்த மனக்கசப்பில் நீ சந்நியாசத்தை நாடுகிறாய். உலக பந்தங்களிலிருந்து கௌரவமாக, நாகரிகமாக நீங்காமல் நீ அவமானப்பட்டபின் அவற்றை உதறிவிட நினைக்கிறாய். உலகம் என்னும் தமாஷை நீ ரசிக்கும்போது நூறு செருப்படி வாங்கினாலும் நீ அதை உணர்வதில்லை.

உலகின் மீது இத்துணை மோகம் ஏன்? உலக வாழ்க்கையில் என்ன கிடைத்தது? இதை ஏன் கெட்டியாகப் பிடித்தபடி உள்ளாய்? உனது வாழ்க்கை வெறுமையான, காலியான இடம்போல் ஆகிவிட்டது. உலக வாழ்க்கையில் நேற்றும் இன்றும் பலன் கிடைக்காவிடிலும் நாளை கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையில் நாள்களை ஓட்டுகிறாய்.

நீ மண்ணிலிருந்து எண்ணெய் எடுக்க முயல்கிறாய். அது சாத்தியமில்லை. உழைப்பும் நேரமும்தான் அம்முயற்சியில் வீணாகும். உனக்கும் முன்னால் பிறந்து இறந்தவர்கள் கோடி-கோடி பேர். விரல் விட்டு எண்ணக்கூடிய சில சாதனையாளர்களைத் தவிர மற்றவர்கள் எதுவும் சாதிக்கவில்லை. வெறுங்கையோடுதான் திரும்பிச் சென்றார்கள். நீயும் அவ்வாறே விடைபெற்றுச் செல்வதைத் தவிர்க்க, மரணத்திற்கு முன்பே விழித்துக்கொள். அன்றிலிருந்து உனக்கு சத்தியம் புலப்பட ஆரம்பிக்கும்.

சந்நியாசம் என்ற பெயரில் உன்னைக் காடு-மலைகளுக்கு ஓடிப்போகும்படி நானோ, அஷ்டாவக்ரரோ தூண்டவில்லை. உண்மையான குரு உன்னை ஊரைவிட்டு ஓடும்படி சொல்ல மாட்டார். அப்படிக் காட்டுக்கு ஓடிப்போனவர்களும் ஞானம் கிடைத்தபின் நாட்டுக்கே திரும்பிவந்திருக்கிறார்கள். புத்தரும் மகாவீரரும் அப்படித்தானே செய்தனர்?

**ர**வீந்திரநாத டாகுரின் ஒரு கவிதையில் புத்தர் ஆறு ஆண்டுகளுக்குப் பின் தனது ஊருக்குத் திரும்புகிறார். மனைவி யசோதரை சந்திக்க வருகிறாள். அவள் புத்தரிடம், "இத்தனை ஆண்டுகளாக என் மனத்தில் உறுத்திவரும் ஒரு கேள்வியைக் கேட்க விரும்புகிறேன்," என்றாள். புத்தர் அனுமதியளித்ததும் யசோதரை, "காட்டிற்குச் சென்று உங்களுக்கு என்ன கிடைத்ததோ

அதை இந்த அரண்மனையில் வசித்தபடியே அடைந்திருக்க முடியாதா என்பதே என் கேள்வி," என்றாள்.

புத்தர் அரண்மனையைவிட்டு ஓடிப்போனதை ரவீந்திரர் ஆதரிக்கவில்லை. ஆகவேதான் அவர் தமது கருத்தை இக்கவிதையில் யசோதரை மூலமாக வெளிப்படுத்துகிறார். யசோதரையின் கேள்விக்கு புத்தரால் பதில் சொல்ல முடியவில்லை. "ஆமாம், காட்டில் அடைந்ததை நான் இங்கேயும் பெற்றிருக்க முடியும்," என்று அவர் கூறினால், "பிறகு ஏன் பைத்தியம் பிடித்தவர்போல் ஓடினீர்?" என்று மனைவி திருப்பிக் கேட்பாள். "அங்கே கிடைத்தது இங்கே கிடைத்திருக்காது," என்று சொன்னாலும் தப்பாகிவிடும். ஏனெனில் பூரண ஞானம் ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

'வீட்டைவிட்டு ஓடிப்போ' என அஷ்டாவக்ரர் உபதேசிக்கவில்லை. நானும் நிச்சயமாக அவ்வாறு கூறமாட்டேன். உலகில் வசித்தபடியே விழிப்புப் பெறுவதுதான் ஆன்மிகம். அப்போது நீ தண்ணீரில் தாமரை போன்ற நிலையை அடைகிறாய். நீரில் இருந்தும் ஈரமாகாமல் இருக்கிறாய். அதுதான் விசேஷம். அதுதான் பெருமை. அதுதான் சிறப்பு. கூட்டத்தின் நடுவில் இருந்தும் நீ உன்னைத் தனியாளாக உணர்வது மேன்மை. கடைத்தெரு ஆரவாரத்தின் மத்தியில் உன்னால் தியானம் செய்ய முடிந்தால் அது ஒரு சாதனை. தடைகள், குறுக்கீடுகளின் இடையில் உன்னால் சமாதி நிலையை அடைய முடியுமானால் அது ஒரு சாதனை.

கடைத்தெருவில் சாந்தி கிடைத்தால் அது உண்மையானது. இமயமலைக்குச் சென்றாலும் நீ சாந்தமாக உணர்வாய். அது உண்மையான அமைதியென எப்படிச் சொல்ல முடியும்? சுற்றுப்புறத்தில் நிலவும் அமைதியின் பிரதிபலிப்பாகவும் அது இருக்கக்கூடும். உன் மனம் சாந்தமடைந்துவிட்டதாக உன்னையே நீ ஏமாற்றிக்கொள்கிறாய். இமயமலையிலிருந்து நீ கடைத்தெருவுக்குத் திரும்பி வந்தால்தான் உன் உள் அமைதி எவ்வளவு உண்மையானது எனத் தெரியவரும்.

இமயமலைக்குப் போனவன் மீண்டும் சந்தை வாழ்க்கைக்குத் திரும்பிவர பயப்படுகிறான். அந்தக் கூட்டத்தில் தான்

தொலைந்துபோவோம் என் நினைக்கிறான். உண்மையான சாந்தம் கிடைத்ததா என்றறிய கடைத்தெரு வாழ்க்கைதான் பரீட்சையும் உரைகல்லுமாகும். எங்கே ஒன்று (சாந்தி) தொலைய முடியுமோ அங்கே அது தொலையாவிட்டால் அது கிடைத்துவிட்டதாகி விடும். எங்கே (இமயமலையில்) ஒன்று தொலைய முடியாதோ அங்கே அது தொலையாவிடில் எதையும் சம்பாதித்ததாகக் கருத முடியாது.

இமயமலையில் உனது குகையில் தனிமையில் இருக்கும் போது உனக்குக் கோபமே வந்ததில்லை என்றால் அது பாராட்டத் தக்கது. நீ உன் குகையில் அமர்ந்திருக்கிறாய். யாரும் உன்னைச் சீண்டவில்லை; எந்தத் தூண்டுதலும் இல்லை; சத்தம்-ஆரவாரம் இல்லை; உபத்திரவம் இல்லை. நீ சாந்தமான உணர்வை அனுபவிப்பதாக நினைக்கலாம். ஆனால் அது கடன்வாங்கிய அமைதி. இமயமலையின் அமைதி உன்னிடம் பிரதிபலிப்பாகிறது. அது உன் சொந்த அமைதியன்று. உன் அமைதியை பரிசோதிக்கக் கடைத்தெருதான் தகுந்த உரைகல்.

ஆகவே அஷ்டாவக்ரர் ஓடிப்போய்த் துறவியாவதை ஆதரிக்கவில்லை. நானும் ஆதரிக்கவில்லை. நாங்கள் விழிப் புணர்வு பெறுவதைத்தான் ஆதரிப்பவர்கள். ஓடுதல் கோழைத் தனம். ஓடுதலின் அடிப்படையில் பயம் உள்ளது. ப்யம் இருக்குமிடத்தில் வெற்றிக்கு வாய்ப்பில்லை.

'விருப்பு-வெறுப்புகள் முற்றிலுமாக நீங்கி ஓய்வான மனநிலையில் வீற்றுள்ள மகாத்மாவுக்கு மோகமோ, உலகமோ, தியானமோ, முக்தியோ எதுவும் அவசியமில்லை.' **(சுலோகம் 190)**

விருப்பு-வெறுப்புகள் நீங்கிய உள்ளத்தில் இனி என்ன நடக்க வேண்டும்-நடக்கக்கூடாது என்றெல்லாம் எண்ணங்கள் வலைபோல் பின்னிக் கொள்ளாமல், எதிர்காலம் குறித்த கருத்து எதுவும் இல்லாமல், கற்பனைகள் தோன்றாமல், பழைய நினைவுகள் உறங்கிப்போய், நிகழ்காலத்தில் மட்டுமே வாழ்ந்து ஓய்வான மனநிலையைப் பெற்றவனைத்தான் மகாத்மா எனலாம்.

மகாத்மா நிலையை அடைந்தவன் பிறகு வாழ்க்கையில் எதன் மீதும் விருப்பம் வைத்து அதைத் துரத்தமாட்டான். அவன் எதையும் விரும்புவதில்லை. கடவுளை அடையவும் ஆசைப் படுவதில்லை. அவனுக்கு மோட்ச விருப்பமும் கிடையாது. எல்லா வகையான ஆசைகளும் அவனைவிட்டு நீங்கிவிடுகின்றன. அவன் பரம திருப்தி உணர்வில் லயித்துப்போகிறான்.

விருப்பு-வெறுப்புகளின் மொத்தக் குவியல்தான் 'நான்' என்னும் ஆளுமை உணர்வு. உனது கடந்த காலம் உன்னிட மிருந்து பிடுங்கி அகற்றப்பட்டால், நீ யார், பெற்றோர் யாவர், உன் குலமென்ன, மதமென்ன, நாடென்ன முதலிய கேள்விகளுக்கு உன்னால் விடைகூற முடியாமல் போய்விடும். இவையெல்லாம் சேர்ந்துதான் 'நான்' என்னும் ஆளுமை உருவாகிறது.

**எ**ன் நண்பர் ஒருவர். வேலைநிமித்தம் ரயிலில் செல்வார். ஒருநாள் கூட்டம் காரணமாகக் கதவருகே நிற்க நேர்ந்தது. கைப்பிடியைச் சரியாகப் பிடித்துக் கொள்ளாததால் வெளியே விழுந்துவிட்டார். உடலில் அடிபடவில்லை. எலும்பு முறிவு எதுவுமில்லை. ஆனால் தலையில் பலத்த அடி. மூளை பாதிக்கப்பட்டதால் அவரது ஞாபகசக்தி நீங்கிவிட்டது. தனது பெயர்கூட அவருக்கு நினைவில்லை. எங்கிருந்து வருகிறார் என்றும் சொல்லத் தெரியவில்லை. சட்டைப்பையிலிருந்த டிக்கட்டைப் பார்த்து அவரை ஊரில் கொண்டுபோய் விட்டார்கள். அவருக்குத் தன் மனைவியையும் பெற்றோர்களையும்கூட அடையாளம் தெரியவில்லை. நான் அவருடன் சேர்ந்து படித்தவன். பார்க்கப் போயிருந்தேன். நான் யார் என்றே அவருக்குத் தெரியவில்லை.

உன் நினைவாற்றல் நீங்கிவிட்டால் பிறகு நீ யார்? உன் நினைவுகளின் தொகுப்புதானே நீ. கடந்த காலம் மறந்துபோனால் நீ அரை ஆள்தான். எதிர்காலத் திட்டங்களும் நழுவிப்போனால் நீ முழுமையாக பூஜ்ஜியம்தான். கடந்த காலம் மறந்தால் நீ யாராக இருந்தாய் என்பதெல்லாம் மறந்துபோகும். எதிர்காலக் கற்பனை என்றால், பணம்-பதவி பற்றிய திட்டங்கள் இல்லையெனில் எதிர்காலமும் வெற்றிடமாகும். இந்த இரண்டு காலங்களும் கால்கள் போன்றவை. இவை இன்றேல் நீ விழுந்துவிடுவாய்.

விருப்பு-வெறுப்புகளும், இரட்டைகளும் நீங்கிய நிலையில் மனிதனின் உள்மனம் ஒய்வுநிலைக்குச் செல்கிறது. எதுவும் பின்னோக்கித் தள்ளுவதில்லை; எதுவும் முன்னோக்கி இழுப்ப தில்லை. நீ நிகழ்காலத்தில் சாந்தமாக, ஒய்வாக இருப்பாய். அந்த நிலைதான் மகாத்மாவின் நிலை. மகாத்மாவுக்கு மோகம் ஏது? உலகப் பற்றேது?

ஒருவன் மகாத்மா ஆனால் மரங்கள், சந்திரன், நட்சத்திரம், ஆகாயம், மேகம் எல்லாம் இல்லாமல் போகும் என்று அர்த்த மில்லை. அஷ்டாவக்ரரின் எதிரில் உபதேசம் கேட்ட ஜனகர் அரண்மனையில் தானே வாழ்ந்தார். அவர் அரச சின்னங்களைக் கைவிடவில்லை. இங்கே ‘உலகை விடுவது’ என்பதில் உலகைக் கனவு என அறிந்து விழிப்புப் பெறுவது என்று பொருள் தரும். உனக்குள்ளே கனவுகளின் தொடர் ஓட்டம் நிகழ்கிறது. ‘இப்படி-இப்படி நடைபெற வேண்டும்; இதை-அதைப் பெற வேண்டும்; இதை-அதைச் செய்ய வேண்டும்’ என்று இடைவிடாமல் உனக்கு எதிர்பார்ப்புகள் உள்ளன. இவை சேர்ந்ததுதான் உலகம் என்பது.

நான் பல முறை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். வீடு-வாசல் துறந்து செல்வதுதான் உலகைத் துறப்பது என நினைக் கிறாய். உலகத்தை விடு என்பதற்கு எதிர்காலத்தைக் கைவிடு என்று அர்த்தம்; கடந்த காலத்தை மற என்று அர்த்தம்; கற்பனைகளைத் துற என்று அர்த்தம்.

எல்லாம் நீங்கியது. நோய் நீங்கியபோதே மருந்தின் தேவை யும் நீங்கிவிட்டது. நோய் நீங்கிய பின் நீ மருந்து பாட்டில்களை வைத்திருக்க மாட்டாய். மருந்துகளின் மீதுள்ள நன்றி உணர்வால் அவற்றை எப்படித் தூக்கியெறிவது என்று குழம்பமாட்டாய். பென்சிலின் ஊசியால் நோய் நீங்கியது என்பதற்காகப் பொக்கிஷம் போல் அந்தக் குப்பியைப் பத்திரப்படுத்தி வைப்பாயா? நோய் நீங்கியதும் மிஞ்சிய மருந்துகளை எல்லாம் குப்பையில்தான் கொட்டிவிட்டு வருவாய். விஷயம் அத்துடன் முடிந்தது.

எண்ணங்கள் என்பவை நோய். அதற்கு மருந்து தியானம். உலகம் ஒரு நோய். அதற்கு மருந்து மோட்சம். உலகம் (உலக உணர்வு) என்பது இல்லாமல் போனால் எங்கே மோட்சம், எப்படி

மோட்சம்? எதனுடன் கட்டுப்பட்டிருந்தோமோ அதுவே இல்லாது போனால் விடுதலை (முக்தி) என்பதும் தனியாக இருக்காது. இதுவரை நீ உலகம் இல்லாவிடில் மோட்சம் கிடைத்துவிடும் எனக் கேள்விப்பட்டுள்ளாய். ஆனால் அஷ்டாவக்ரரோ, கணித சூத்திரம்போல், உலகம் நீங்கினால் அதுதான் மோட்சம் என்கிறார். அதாவது, உலகம் நீங்கினால் மோட்சம் தனியாகத் தேவைப்படாது.

நமது வாழ்க்கையில் எல்லாம் இரட்டைகளாக வருகின்றன. உன் வாழ்விலிருந்து துன்பம் நீங்கினால் அதன் ஜோடியான இன்பமும் நீங்கிவிடும். இதை அறிந்து நீ திகைப்படைவாய். சுகம்-துக்கம் என்னும் இரண்டும் இல்லாத நிலையே ஆனந்தம். இதேபோல் உன் வாழ்க்கையில் உலகப் பிடிப்பு நீங்கியதும் மோட்சத் தேவையும் நீங்கிவிடும். இதுதான் சுபாவநிலை அல்லது சத்தியநிலை.

'உலகைப் பார்த்துப் புரிந்துகொண்டவன் அதை மறுக்கலாம். ஆனால் பற்றுகளற்ற மனிதன் உலகைப் பார்த்தும் பாராதவனாக இருக்கிறான்.' **(சுலோகம் 191)**

**உ**லகை மறுத்து ஓடுபவனுக்கு உலகம் இன்னும் கண்ணில் பட்டுக்கொண்டுதான் இருக்கிறது. இல்லாவிடில் அவன் ஏன் ஓடவேண்டும்? எங்கே ஓடுகிறான்? யாரிடமிருந்து தப்பி ஓடுகிறான்? பெண்ணிடம் பயப்பட்டுத் தப்பிக்க ஓடினால் அவன் மனத்தில் பெண்ணாசை மிச்சமென்று அர்த்தம். நமக்கு எதன்மீது பிடிப்பு இருக்கிறதோ அதிலிருந்து தப்பிக்கத்தானே நாம் ஓடுவோம்.

நீ தியாகி என்று சொல்லுபவன் தனிப்பிறவியில்லை. அவன் போகியின் தலைகீழ் வடிவம்தான். போகி சிரஸாசனம் போட்டால் தியாகி! இருவருக்குமிடையில் அடிப்படையில் வேறுபாடு கிடையாது. இரண்டு பேரின் பார்வையும் ஒரே திசையில் செல்கிறது. போகி பணத்துக்கு ஆசைப்படுகிறான். தியாகி பணம் என்றால் பயப்படுகிறான். 'பணம் கிடைக்காவிட்டால் செத்துப்போவேன்' என்கிறான் போகி. 'பணத்தை என் கண்ணில் காட்டாதீர்கள். அது பாம்பு-தேளின் விஷத்துக்கு சமம்' என்று பதறுகிறான் தியாகி.

'பெண் சுகம் என் லட்சியம்' என்கிறான் போகி. 'பெண் ஒரு பிசாசு' என்று தவிர்க்கிறான் தியாகி. இருவர் கவனமும் ஒன்றின் மீதே பதிந்திருக்கிறது. ஞானி இந்த இருவகைக் கண்ணோட்டங் களையும் கடந்து நிற்கிறான். ஞானி பெண்-பொன் என்பவற்றை நாடுவதுமில்லை; வெறுப்பதுமில்லை; இரண்டு நிலைகளையும் அவன் உதாசீனப்படுத்திவிடுகிறான்.

ஆசைகளெல்லாம் நீங்கப் பெற்றவன் பிறகு என்ன செய்வான்? தியாகமா செய்வான்? எப்படிச் செய்வான்? போகம் உண்டாகாத இடத்தில் தியாகம் எப்படி உண்டாகும்? போகமும் தியாகமும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் அல்லவா?

அவனும் கண்களால் பார்க்கிறான். ஆனாலும் அவனுக்கு மற்றவர்கள் பார்க்கும் உலகம் தெரிவதில்லை. பாதையில் பணம் கிடக்கிறது. நீ போகியாக இருந்தால் உடனே எடுத்து மறைத்து விடுவாய். தியாகியாக இருந்தால் தாவிக் குதித்துப் பணத்தைக் கடந்துவிடுவாய். கொஞ்சம் தாமதத்திலும் மனத்தில் பண ஆசை தோன்றிவிடுமென பயப்படுவாய். நீ பணத்தைத் தாண்டிச் செல்வது உன் மனத்தில் பணத்தின் மீது கொஞ்சமாவது ஈர்ப்பு உள்ளதைக் காட்டுகிறது. ஞானி ஒருவன் அப்பக்கமாகச் செல்கிறான். அவனது நடையில் மாற்றமில்லை. அவன் பணத்தை எடுப்பதுமில்லை; பார்த்து நடுங்கி ஓடிப்போவதுமில்லை.

**வ**ங்காள கல்வி அறிஞரான ஈஸ்வர்சந்திர வித்யாசாகருக்கு ஆங்கிலேயே கவர்னர் ஜெனரல் ஒரு பட்டம் வழங்கி விழா நடுத்த விரும்பினார். அவர் ஏழை என்பதால் சாதாரண ஆடைகளே வைத்திருந்தார். அவருடைய நண்பர்கள் அவர் வழக்கமான ஆடையில் விழாவிற்குப் போகக்கூடாது என்றனர். ஏனெனில் சமூகத்தில் பெரிய மனிதர்களும் உயர் அதிகாரிகளும் விழாவிற்கு வருவார்கள். சில பணக்கார நண்பர்கள் அவர் அன்றைய தினம் அணிய தங்கள் ஆடைகளைத் தருவதாகச் சொன்னார்கள். ஈஸ்வரசந்திரர், "என் ஆடைகள் என் வாழ்க் கைக்குச் சொந்தமானவை. உங்களிடமிருந்து ஆடைகள் பெறுவது கடன் வாங்குவதற்கு சமம்," என்று சொல்லிப் பார்த்தார். நண்பர்கள் விடுவதாக இல்லை. "நாங்களும் விழாவிற்கு வருவோம்.

அப்போது நீங்கள் சாதாரண உடையில் வந்தால் நாங்கள் அவமானமாக உணர்வோம்,'' என்றனர். வேறுவழியின்றி அவர் களிடமிருந்து ஒரு செட் நல்ல ஆடைகளை வாங்கிவைத்துக் கொண்டார்.

விழாவிற்கு முதல் நாள் மாலை அவர் பூங்காவில் உலாவிக்கொண்டிருந்தார். சற்றுத் தொலைவில் ஒரு முஸ்லிம் கனவான் உயர்ந்த ரக லக்னௌ பாணி ஜிப்பா-பைஜாமாவில் உலாவுவதைப் பார்த்தார். கையில் பளபளக்கும் பூண் வைத்த தடி யானைபோல் அசைந்தாடியபடி லக்னௌ பாணி நடையில் உலாவினார். திடீரென ஒருவன் ஓடிவந்து, "ஐயா, தங்கள் வீட்டில் தீப்பற்றிக் கொண்டுவிட்டது. என்னுடன் உடனே கிளம்புங்கள்,'' என்று கூவினான், ஈஸ்வர்சந்திரர்கூட அதிர்ச்சியடைந்தார். "வீடு எங்கே உள்ளது? நானும் உதவிக்கு வருகிறேன்,'' என்றார். ஆனால் வீட்டின் சொந்தக்காரர் பதற்றப்படவில்லை.

வந்தவன் மீண்டும், "ஐயா, இதுவா சாவதானமாக நடைபோடும் சமயம்? உடனே கிளம்புங்கள்,'' என்று அவசரப் படுத்தினான். ஆனால் அவரோ, "வீடு பற்றி எரிவதால் நான் ஏன் நடைப்பயிற்சி வழக்கத்தைக் கைவிட வேண்டும்?'' என்று கூறி வந்தவனை விரட்டிவிட்டார். அவரது பேச்சு ஈஸ்வரசந்திரருக்கு முட்டாள்தனமாகத் தோன்றினாலும் ஒரு விஷயம் அவரைக் கவர்ந்தது. தன்னைச் சுற்றி என்ன நடந்தாலும் தனது வழக்கத்தை ஏன் கைவிட வேண்டும் என்ற அந்த மனிதரின் கண்ணோட்டம் ஈஸ்வரசந்திரரைப் பாதித்தது. மறுநாள் கவர்னர் ஜெனரலின் மாளிகைக்கு அவர் தமது வழக்கமான, சாதாரண உடையிலேயே சென்றார்.

ஈஸ்வரசந்திரர் தாம் எப்போதும் இப்படித்தான் என்பதை நிரூபித்தார். அவர் வேஷம்போடத் தயாராக இல்லை. நமது வாழ்க்கையும் நமது நிஜத்தன்மையிலிருந்து பிறழாமல் ஒரேசீராக நடைபெற வேண்டும். பச்சோந்திபோல் மாறிக்கொண்டே இருக்கக்கூடாது. போகத்திலும் தியாகத்திலும், சுகத்திலும் துக்கத்திலும், வெற்றியிலும் தோல்வியிலும் நாம் சலனமடையாமல் நின்றால் ஓய்வான மனநிலை வாய்த்துவிடும்.

அப்போது உனக்கு உண்மையான உலகம் கண்ணுக்குத் தெரிகிறது. மற்றவர் காணும் மாயா உலகம் மறைந்துபோகிறது. உனக்கு யதார்த்த நிலை புரியவருகிறது. நீ உன்னை, உன் கண்ணோட்டத்தை அந்த யதார்த்த உலகின் மீது சுமத்துவதில்லை. எது எப்படியோ அதை அப்படியே பார்ப்பது ஆனந்தத்துக்கும் அமைதிக்கும் வழிவகுக்கும்.

'இறை உணர்வு பெற்றவன் (கடவுளைக் கண்டவன்) தன்னைக் கடவுளாக நினைத்துக் கொள்ளலாம். ஆனால் இரண்டாவதாக எதையும் பார்க்காத ஒருவன் எதைப் பற்றி சிந்திப்பான்?' **(சுலோகம் 192)**

**இ**ந்த சுலோகம் உபநிடதக் கண்ணோட்டத்தையும்விட உயரத்தில் பறக்கிறது! உபநிடதம்தான் உச்சம் என்று நாம் நினைத்து வந்தது. இந்த சுலோகத்தால் தகர்ந்துபோகிறது. அஷ்டாவக்ரர் உபநிடதத்துக்கும் அப்பால் செல்லுகிறார். உபநிடதம் அதிக பட்சம் 'நான் இறைவன்' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்கிறது. ஆனால் அதையும் கடந்த நிலையை அஷ்டாவக்ரர் காட்டுகிறார். 'நான் கடவுள்' என்று உபநிடதம் சொல்லும்போது அவை தனித் தனியாகப் பிரிந்து தெரிகின்றன. அஷ்டாவக்ரரில் உச்ச நிலையை அடைந்தவன் தன்னைத் தனியாகக் காண்பதில்லை. பிறகு அவன் எதைப் பற்றி சிந்திப்பான்?

புகழ்மிக்க ஜென் துறவி ரின்ஜாயி ஒருநாள் ஏதோ படம் வரைவதில் ஈடுபட்டிருந்தார். அப்போது ஒரு சீடன் வந்து, "குருதேவ்! எனது தியானம் வெற்றி பெற்றிவிட்டது, முழுமலர்ச்சி பெற்றுவிட்டது," என்று கூவினான். ஆனால் அவர் அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. சீடனுக்கு வருத்தமாகிவிட்டது. 'நான் சூனிய நிலையை அடைந்துவிட்டேனென்ற அதிசயச் செய்தியைக் கொண்டுவந்திருக்கிறேன். குருவான இவர் என் வெற்றிக்கு மகிழ்ச்சிகொள்ளாமல் ஏதோ படம் வரைவதிலேயே ஆழ்ந்துள்ளாரே' என்று சீடன் மனம் குமுறினான்.

சீடன் மறுபடியும் சத்தமாக, "குருவே! நான் சொன்னது காதில் விழவில்லையா? நான் முழுமையான சமாதிநிலையை அனுபவித்துவிட்டேன்," என்றான்.

ரின்ஜாயி தொடர்ந்து ஓவியம் வரைந்தபடியே, "இந்தாப்பா, சமாதி, சூனியம் முதலியவற்றை வெளியே எறிந்துவிட்டு வா. அவற்றை உள்ளே கொண்டுவராதே. 'சூனியத்தை அடைந்து விட்டேன்' என்று நீ கூறுவதால், நீ இருப்பதை உணர்கிறாய் என்று அர்த்தமாகிறது. பிறகு அங்கே சூனியம் எப்படி சாத்தியமாகும்?" என்று மடக்கினார்.

சூனியத்தை அடைந்துவிட்டவனால் உண்மையில் 'நான் சூனியத்தை அடைந்து விட்டேன்' என்று கூற முடியாது. எப்படிச் சொல்லுவாய்? சொல்ல மிஞ்சியிருப்பவன் யார்? சூனியமும் நீயும் தனித்தனியாக இருக்க முடியாது. அவை ஒன்றாகிவிடும்.

ரின்ஜாயி சொன்னது சரியே. பல்லாண்டுகளாக தியானம் செய்கிறோம். பிறகு அதை வெளியே எறியவும் பல ஆண்டு களாகும். நமது மனம் எதையாவது பிடித்தபடி இருக்க விரும்புகிறது. முதலில் உலகை (போகத்தை) பிடிக்கிறோம். அடுத்து தியாகத்தைப் பிடிக்கிறோம். பிறகு சந்நியாசத்தைப் பிடிக்கிறோம். கடைசியில் எதற்கும் வசப்படாத சூனியத்தையும் பிடித்து வைத்துக்கொள்ள முயலுகிறோம்.

சில ஆண்டுகளுக்குப்பின் அந்தச் சீடன் ரின்ஜாயிடம் மீண்டும் வந்தான். இந்த முறை அவன் அமைதியாக நின்றான். ரின்ஜாயி அவனைத் தழுவியபடியே வாழ்த்தினார். "நான் எதுவும் சொல்லவில்லையே," என்று சீடன் வியந்தான். "நீ சூனியமாக வந்திருக்கிறாய். அதாவது, நீ என்பவனே இல்லை. அதனால் பேசுவதற்கு ஆளில்லாமல் சூனியமும் அமைதியும் கைகோத்து வந்துள்ளதை உணரமுடிந்தது," என்றார் ரின்ஜாயி.

'நான் கடவுள்' என்று சொல்கையில் சிறிதளவு இடைவெளி தெரிகிறது. இது ஞான நிலை. இதைக் கடந்த பரமஞான நிலையில் இந்த இடைவெளி மறைந்துவிடுகிறது. ஆகவேதான் புத்தரும் மகாவீரரும் கடவுளைப் பற்றிப் பேசவில்லை. இந்த சர்வோச்ச நிலையில் கடவுள் என்று தனியாகப் பிரித்துப் பேசமுடியாது. இதைப் புரிந்துகொள்ளாமல் இந்துக்கள் அவசரப்பட்டு அவ்விரு வரையும் நாத்திகர்களென முடிவுகட்டிவிட்டனர். கடவுளைப் பற்றி பேசவேண்டுமானால் அவரைவிட்டு விலகி ஒரு படி கீழே

இறங்கி நிற்க நேரிடும். அது ஆன்மிகத்தில் சரிவாகக் கருதப்படும். புத்தரோவெனில் ஆத்மாவை பற்றிக்கூட பேசியதில்லை! ஏனெனில் ஆத்மா என்பது அனுபவத்தால் உணரப்படுவது. அதைச் சொற்களால் வரையறுக்க முடியாது. அது சிந்தனைக்கு அப்பாற்பட்டது.

'மனத்தில் சங்கடங்கள் உள்ளவன் புலன்களை அடக் கட்டும். மன இறுக்கம் உடையவன் மன அமைதிக்கு முயலட்டும். ஆசைகள் பொங்குகின்றவன் மனத்தைக் கட்டுப்படுத்தட்டும். ஆனால் சாந்தமான மனம் பெற்றவன் அடக்குவதற்கு என்ன இருக்கிறது?' **(சுலோகம் 193)**

**அ**ஷ்டாவக்ரர் படிப்படியாக முன்னேறுகிறார். ஒரு சுலோகத்தில் தியாகிகளும் இன்னொரு வகையான போகிகள் தாம் என்கிறார். அடுத்த சூத்திரத்தில் நான், கடவுள் என இரண்டு இருக்க முடியாது என்கிறார். மூன்றாவது சுலோகத்தில் பதஞ்ச லியை எதிர்க்கிறார். பதஞ்சலி புலன்களை, மனச் சலனங்களை அடக்குவது யோகம் என்கிறார். ஆனால் ஏற்கெனவே புலன்கள் அடங்கிப்போனவன் என்ன செய்வான்? அவன் புதிதாக எதை அடக்குவான்?

இதுதான் பரம முக்தி நிலை என்பது. இந்நிலையில் பெறுவதற்கும் ஒன்றுமில்லை; இழப்பதற்கும் ஒன்றுமில்லை. நீ உன் சொந்த வீட்டுக்கு வந்துவிடுகிறாய். இங்கே வந்து சேரத்தானே நீ இவ்வளவு காலமாகத் தொடர் ஓட்டம் மேற்கொண்டிருந்தாய். அந்த இடம் உனக்குள்ளேயேதான் இருந்துவந்துள்ளது. நீ எப்போதாவது உள்பக்கம் பார்த்திருந்தால் இந்த விஷயம் புரிந்திருக்கும். இதைத் தேட வேண்டிய தேவையில்லை. ஆனால் நீ வெளியில் எங்கெல்லாமோ தேடியதால் வழிதவறி நிறைய் அலைந்தாய். உன் வீடென்பது உனக்கு சுபர்வமானது. இதை அடைய விசேஷமாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. அதை நீ ஏற்கெனவே பெற்றிருக்கிறாய். அது கடவுள் தந்துள்ள பிரசாதம்.

'பல வகையில் மற்ற மனிதர்களைப் போலவே நடந்து கொண்ட போதிலும் ஞானி அவர்களிடமிருந்து வித்தியாசப்படு கிறான். அந்த ஞானி சமாதியையோ, கவனத்தை மாற்றும்,

பிரச்சினைகளையோ, பற்றுகளையோ கவனிப்பதில்லை.' **(சுலோகம் 194)**

**உ**ண்மையான ஞானி பல விஷயங்களில் மற்றவர்களைப் போலவே நடந்துகொள்வான். மேலும், மொத்தத்தில், அவன் சாதாரண மனிதனாகவே தெரிவான். அவன் தன்னிடம் ஏதேனும் சிறப்பு இருப்பதாக நினைப்பதுமில்லை; அதற்கேற்ப அதை வெளிக்காட்ட முயலுவதுமில்லை. போகங்களைக் கைவிட்டு, தியாகி நிலைவரை வந்து அதனுடன் நின்றுவிட்ட அரை வேக்காடு ஞானிதான் ஆர்ப்பாட்டம் செய்வான்.

ஒருவர் என்னை அணுகி, தான் மாமனிதனாக, மகாத்மாவாக உருவெடுக்க என்ன செய்ய வேண்டும் என்று விசாரித்தார். இந்தக் கேள்வியே அகங்காரமாக ஒலிக்கிறது. நீ இயல்பாக இருப்பதுதான் ஆரோக்கியமானது. மகானாக ஆவதற்கு முயல்வது உன்னை மனநோயில் தள்ளிவிடும். நீ ஞானம் பெற்றாலும் மற்ற சாமானிய மனிதர்களைப் போலவே நடந்துகொள். மற்றவர்களிடமிருந்து பிரித்து உன்னை விசேஷமானவனாகக் காட்ட முயலாதே.

என்னிடம் சந்நியாசம் ஏற்பவர்களிடம் இதனால் நீங்கள் விசேஷ மனிதர்களாகிவிடவில்லை என்பதை நான் தெளிவுப் படுத்துகிறேன். நீ பொதுவாக உண்மையில் எப்படியோ அப்படியே இரு. ஞானம் பெற்ற நீ மற்ற மனிதர்களிடமிருந்து வித்தியாசப்படுவது உண்மைதான். அந்த வித்தியாசம் உள்ளுக்குள்ளேதான் தெரிய வேண்டும். நீ நேற்றுவரை எந்தக் கடமைகளைச் செய்தாயோ அவற்றையே தொடர்ந்து செய். ஒரு வித்தியாசம் உண்டு. இனி நீ சாட்சிபோல் அகங்காரமின்றிச் செய்ய வேண்டும்.

சந்நியாசம் என்பது பொருள்களைக் கைவிடுவதுடன் முடிந்துபோவதில்லை. அது புதியதான ஒரு மனநிலையை ஏற்பதுடன் சம்பந்தப்பட்டதாகும். சந்நியாசம் எதையும் உடைத்து வெளியே எறிவது இல்லை. அது உன் வாழ்க்கையில் புதிதாக சாட்சி மனப்பான்மையை கொண்டுவந்து இணைக்கிறது. சந்நியாசம் வறுமை நிலையில்லை, திரண்ட செல்வம். சந்நியாசி பிச்சைக்கார னில்லை, ராஜா, யதிராஜன் (எதிராஜன்).

உண்மையான ஞானி தான் சமாதி நிலையை அடைந்து விட்டதாக மார்தட்டிக்கொள்ள மாட்டார் 'எனக்கு எதன் மீதும் பற்று கிடையாது; நான் சுகம்-துக்கங்களை, உணர்ச்சிகளைக் கடந்தவன்' என்று பெருமையாய் வெளியில் சொல்லமாட்டார். அவர் எதையும் வெளிக்காட்டாவிடிலும் அவரருகில் சென்றதுமே நீ வித்தியாசமாக உணர்வாய். அவரைச் சுற்றியுள்ள புனித அலைகள் உன்னையும் தழுவும். அவர் எதிரில் நிற்பதேகூட உனக்குப் பரவசமாகத் தோன்றும். உன்னைப் போலவே நடந்துகொள்ளும் அவர் உன்னை மெய்ம்மறக்கச் செய்வது உனக்கு வியப்புத் தரும்.

கபீர்தாசர் ஞானம் பெற்ற பிறகும் தமது வழக்கமான நெசவுத் தொழிலைச் செய்துவந்தார். அவருடைய பக்தர்கள் அவர் துணி நெய்வதைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்டனர். ஞானம் பெற்ற பிறகும் தொழில் செய்வது ஞானிக்கு அழகன்று என்று சுட்டிக்காட்டினர். "நீங்களோ பெரிய மகாத்மா. உங்களுக்கு நிறையச் சீடர்கள். இந்நிலையில் நீங்கள் வீட்டில் துணி நெய்வதையும், கடைத்தெருவில் விற்பனை செய்வதையும் நிறுத்திவிடுங்கள்," என்று கோரினர்.

கபீர் ஒப்புக்கொள்ளவில்லை. எது எப்படி உள்ளதோ அது அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும் என்று கூறிவிட்டார். "கடைத்தெருவில் துணி வாங்க வருபவர்களைக் கடவுளின் வெவ்வேறு உருவங்களாகத்தான் நான் காண்கிறேன். ஆகவே அவர்களுக்காக நான் தயாரிக்கும் ஆடைகள் சிறப்பாகத்தானே இருக்க வேண்டும். அதனால்தான் இவ்வளவு ஈடுபாட்டுடன் துணி நெய்கிறேன். நான் நெசவு செய்யாவிடில் இந்தக் கடவுளின் உருவங்களுக்கு நான் எவ்வகையில் சேவை செய்வது?" என்று கேட்டார்.

கபீர் கடைசிவரை நெசவாளியாகவே இருந்தார். மூச்சிருந்த வரையிலும் அவர் துணி நெய்வதை விடவில்லை. இதுதான் பரம ஞானியின் நிலை. அவரிடம் அகங்காரம் இருந்திருந்தால் நெசவுத் தொழிலைக் கைவிட்டு மேடையேறி உபதேசம் செய்வதிலேயே வாழ்க்கையை ஓட்டியிருப்பார்.

கோரா கும்பர் என்ற குயவர் ஞானம் கிடைத்த பிறகும் மண்பாண்டங்கள் தயாரிப்பதை நிறுத்தவில்லை. அவற்றைக் கடைத்தெருவில் விற்றும் வந்தார். மற்றவர்கள் தடுத்துப் பார்த்தார்கள். "ஞானியாகிவிட்ட நீர் ஏன் இன்னும் குயவர் தொழில் செய்கிறீர்?" என்று கேட்டார்கள்.

"கடவுள் மிகப் பெரிய குயவர் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஏனெனில் அவர் தனி ஒருவராக இந்த மாபெரும் உலகைப் படைத்துள்ளார். அவரே இதற்காக வெட்கப்படாதபோது எனக்கு எப்படி வெட்கம் வரும்? அவருடைய படைப்புகளோடு ஒப்பிட்டால் குயவர்களாகிய நாங்கள் படைப்பவை மிகவும் அற்பமானவை," என்று கோரா கும்பர் பதிலளித்தார்.

சேனா என்ற ஞானி நாவிதர். அவர் தொடர்ந்து முடி திருத்தினார். பக்தர்களுக்கு சங்கடமாக இருந்தது. "உங்களைப் போன்ற ஞானியிடம் முடிதிருத்திக் கொள்ள கூச்சமாக உள்ளது. நீங்கள் மகாத்மாவாயிற்றே," என்று சொல்லிப்பார்த்தனர். அவரோ, "மகாத்மாவின் வேலை என்ன? சுத்தம் செய்வதுதானே. நானோ உங்கள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவதுடன் உங்கள் உடலையும் (தலையையும் முகத்தையும்) சுத்தம் செய்யும் கலையும் அறிந்திருக்கிறேன்," என்று கூறித் தமது நாவிதர் வேலையைத் தொடர்ந்தார்.

கபீர்தாசரின் சீடரான ரைதாஸ் (ரவிதாஸ்) செருப்புத் தைப்பவர். ஞானம் கிடைத்த பிறகும் அவர் தமது தொழிலை விடவில்லை. இவர்களெல்லாம் மகாத்மாக்களாயினும் மற்ற மனிதர்களைப்போலவே அன்றாட வாழ்க்கையை நடத்திவந்தனர். ஆனால் மற்றவர்கள் உறக்கத்தில் நடப்பவர்கள்போல் நடக்கின்றனர். ஞானி விழிப்புடன் நடக்கிறார்; சுய உணர்வுடன் நடக்கிறார். மற்றவர்கள் வாழ்க்கை பற்றி சிந்திக்காமல் ஒரேமாதிரி வாழ்ந்து நாட்களை ஓட்டிவிடுகிறார்கள். ஞானி உள்ளத்து ஒளியின் துணைகொண்டு வாழ்க்கையை ஆராய்ந்து வாழ்கிறான்.

உள்ளத்து ஒளி அமையாதவன் ஞானிபோல் காட்டிக் கொள்ள முயல்கிறான். ஞானி தன்னை வெளிக்காட்டுவதில்லை என்பதை உணராமல், போலி ஆன்மிகவாதி திகம்பர சாமியாராக,

ஆடையின்றி நின்று, அல்லது தலைகீழாய் நின்று, தன்னை வித்தியாசப்படுத்த முயல்கிறான். உள்ளத்தில் ஒளிவு-மறைவு இல்லாமலிருப்பதுதான் முக்கியமே தவிர, உடலை ஒளிவு மறைவின்றிக் காட்டுவது வீண் வேலை. பைத்தியக்காரனும் ஆடையின்றித் திரிகிறான்; அவனாலும் தலைகீழாக நிற்க முடியும். நீயும் கொஞ்சம் பயிற்சி எடுத்தால் தலைகீழாய் நிற்பாய். ஆடை-ஆசனங்களுக்கும் ஆன்மிகத்திற்கும் சம்பந்தமில்லை. சாதாரண மனிதன் ஞானியாவதற்கு அவன் மீண்டும் உள்ளுக்குள்ளே குழந்தை மனம் பெற்றிட வேண்டும்.

ஞானம் பெற்றபின் ஆடையை மிகுதியாகக் கருதிக் கழற்றிவிடுவது வேறு விஷயம். அது இயல்பான செயலெனலாம். ஆனால் வேண்டுமென்றே முயன்று, ஆடையைக் கழற்றிப் போட்டு, தான் ஞானம் பெற்றுவிட்டதாக ஒருவன் நினைத்தால் அது தன்னையும் பிறரையும் ஏமாற்றும் வேலை. சமூகத்தில் பிரபலமாக உள்ள சாதுக்களை எடைபோட்டுப் பார். அவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் பொதுமக்களைவிட எவ்வகையிலாவது விசேஷமானவர்கள் என்பதை நிலைகாட்ட முயல்கின்றனர்.

ஒருமுறை ஒரு துறவியும் நானும் ஓர் ஊரில் ஒரு நண்பர் வீட்டில் தங்கியிருந்தோம். அவரால் நான் மிகவும் சிரமத்துக் குள்ளானேன். ஏனெனில் அவர் அதிகாலை 3 மணிக்கே பிரம்ம முகூர்த்தம் என்று சொல்லி எழுந்துவிடுவார். பிறகு ராமநாம ஜெபம் செய்வார். நான் அவரிடம், “இன்னொருவர் வீட்டில் தங்கி யிருக்கும் போது இவ்வளவு அதிகாலையில் எழுந்தால் வீட்டி லுள்ளவர்கள் சிரமப்படுவார்களே,” என்று சுட்டிக்காட்டினேன்.

அதற்கு அவர், “குடும்பஸ்தர்களின் சௌகரியத்துக்காக சந்நியாசியாகிய நான் அன்றாடக் கடமைகளை எப்படிக் கைவிட முடியும்?” என மறுத்தார்.

“சரி போகட்டும். உங்கள் ராமநாம ஜெபத்தை ஏன் இவ்வளவு சத்தம் போட்டுச் சொல்கிறீர்கள்? வீட்டிலுள்ளவர்கள் விழித்து விடுகிறார்கள். தெரு மக்களும் விழித்துக் கொள்கிறார்கள். இவ்வளவு உரக்க ஜெபம் செய்ய வேண்டாமே. மனத்துக்குள்

ளேயே சொன்னால் என்ன குறைந்து போய்விடும்? மௌன ஜெபமே ராமன் காதுகளுக்குக் கேட்கும். அவர் செவிக்குறை உடையவர் அல்லவே,'' என்று நான் அவருக்கு ஆலோசனை கூறினேன்.

அதற்கும் அவர் மசியவில்லை. சத்தமாக ஜெபம் செய்தால் தான் ராம அலைகள் நாற்புறமும் பரவும் என்றார். அது மட்டுமா? அவர் புது நெய் மட்டுமே உணவில் ஏற்பார். அதுவும் முந்திய மூன்று மணி நேரத்துக்குள் தயாரிக்கப்பட்ட புதுச்சரக்காக இருக்க வேண்டும். பசுவின் பால்தான் பருகுவார். எருமைப்பால் குடித்தால் எருமை புத்திதான் வரும் என்பார். பிரம்ம முகூர்த்தத்தில் விழிப்பு, சத்தமாக ஜெபம், உண்ணுதல்-பருகுதலில் விசேஷ ஏற்பாடுகள் அவர் ஆன்மிகவாதியே அல்லர் என்பதைக் காட்டுகின்றன. மேலும், இவ்வாறு நடந்துகொள்வதால் சந்நியாசியாகிய தான் சாதாரண மக்களைவிட உயர்ந்தவர் என்று காட்டிக்கொள்ளவும் முயலுகிறார். சந்நியாசி என்றாலே மற்றவர்கள் நடுங்க வேண்டுமென எதிர்பார்க்கிறார்.

உனது துறவறத்தை நீ எந்த அளவிற்கு வெளிப்படுத்து கிறாயோ, அதற்கேற்ப உன் உள்ளத்து விளக்கு (ஆன்ம விளக்கு) மங்கலாக எரியும். ஆன்மா பிரகாசமாக இருந்தால் வெளி வேஷமும், வெளிச்சடங்குகளும் தேவைப்படா. மக்கள் அத்தகை யவரைத் தாங்களே கண்டுபிடித்துவிடுவார்கள். அத்தகையவரிட மிருந்து அலைகள்போல் கிளம்பி மக்களின் மனத்தைத் தொடும். அந்த அலைகள் மோதுவதுபோல் அமையாமல் மென்மையாக மக்க்ளை வருடும்.

உள்ளொளி இருந்தால் வெளியுலகம் பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. உள்ளொளி இல்லாவிடில் வெளியுலகில் நடிக்க வேண்டியிருக்கும். உபவாசம் இருப்பாய்; தலைகீழாய் நிற்பாய்; ஆசனங்கள் போடுவாய்; உடற்பயிற்சி செய்வாய்; மூடச் சடங்குகளை மேற்கொள்வாய். சந்நியாசி மற்ற மக்களைவிட வித்தியாசமானவன், சிறப்பானவன் என்று காட்ட இவ்வாறெல்லாம் செய்கிறார். நீ சமூகத்தில் காணும் சாது-மகாத்மாக்களில் நூற்றுக்கு 99 பேர் இப்படி வெளிச்சடங்குகளால் மக்களை பிரமிக்க

வைப்பவர்கள்தாம். நிஜமாகவே ஞானம் பெற்றவன் இப்படியெல்லாம் தன்னை வெளிப்படுத்தமாட்டான். அவன் சாதாரணமாகவே வாழ்வான். மக்கள் தாமாகவே அவன் வித்தியாசமானவன் என்பதைப் புரிந்துகொள்வர்.

எவனிடம் விசேஷத் தன்மை நிச்சயமாக உள்ளதோ அவன்தான் சாதாரணமானவன் ஆவதற்கு முயலலாம். எவனுடைய விசேஷத் தன்மை உறுதியாகச் சொல்ல முடியாதோ, அவன் தன்னைச் சிறப்பானவனாகக் காட்டிக்கொள்ள முயல்கிறான். விசேஷமான மனிதனால் சாதாரண மனிதன்போல் நடந்துகொள்ள முடியும். சாதாரண மனிதன் தான் இருப்பதைக் காட்டிக்கொள்ள காலிக்குடம்போல் ஆரவாரம் செய்வான்.

வித்தியாசப்படுதல் உள் வாழ்க்கையோடு, உள் ஒளியோடு சம்பந்தப்பட்டது. வெளியுலக நடத்தை மற்றவர்களின் நடத்தை போலவே இருக்கும்.

முழு ஞானம் அடைந்தவனுக்கு உலகியல் பார்வை நீங்கிவிடுகிறது. தான் சமாதிநிலையை நிறைவேற்றியது அவனுக்கு சாதனையாகத் தெரிவதில்லை. மற்றவர்கள் சமாதிப் பயிற்சியை மேற்கொள்ளாததைக் குறித்து அவனுக்கு எந்த அபிப்பிராயமும் இல்லை. அவன் மற்றவர்களை, ஞானம் பெறாதவர்களை, மட்டமாக, பாவிகளாக, நரகத்திற்குப் போகின்றவர்களாக மதிப்பிடுவதில்லை. அவன் மற்றவர்களிடம் குறை காண்பதில்லை.

**பு**த்தர் ஒருமுறை சொன்னார்: 'எனக்கு ஞானம் கிடைத்த அதே சமயம் உலகத்திற்கே ஞானம் கிடைத்துவிட்டதாக எனக்குத் தோன்றியது. பிறகு நான் அறியாமை வசப்பட்டவனாக எவனையுமே காணவில்லை. ஏனெனில் ஞானம் பெற்றவன் மற்றவரின் உள்ளத்திலும் ஆத்மா என்னும் ரத்தினம் புதைந்திருப்பதைக் காண்கிறான்.'

நாம் காணும் சமயத் தலைவர்கள் பொதுமக்கள் மீது இரக்கம் காட்டுவதுபோல் நடந்துகொள்கிறார்கள். மக்களைத் தூய்மை குறைந்தவர்களாக, தாழ்ந்தவர்களாக, சிற்றின்பங்களில் உழலும் பூச்சிகளாகக் கருதுகிறார்கள். இத்தகையவர்களின் ஞானக் கண்

திறக்கவில்லை என்று தெரிந்துகொள். இவர்கள் ஞானப் பார்வையற்றவர்கள். ஒவ்வொருவரிடத்திலும் பரமாத்மாவை இவர்களால் அடையாளம் காண முடியவில்லை.

நீ உனக்குள்ளே எவ்வளவு ஆழ்ந்து செல்ல முடியுமோ அதே அளவிற்குப் பிறர் உள்ளத்தினுள்ளும் பிரவேசித்து விட்டதாக அர்த்தம். ஏனெனில் உனது உள்மனமும் பிறரது உள்மனமும் வெவ்வேறு அல்ல. உள்மனத்தின் அடிப்படையில் நாமனைவரும் ஒன்றே. வெளிப்பார்வை மட்டும் உடையவன்தான் வேறுபாடுகள் காண்கிறான்.

உள்பார்வை பெற்று சமநோக்குடையவன் சஞ்சலப்பட மாட்டான். அவன் குளித்துவிட்டு வரும்போது யாராவது மேலே பட்டுவிட்டால் தீட்டு என்று அலறமாட்டான்.

என் பாட்டி சாதாரணமான கிராமப்புறப் பெண்மணி. பழைய வழக்கங்களில் ஊறியவர். ஜைன மதத்தைப் பின்பற்றுவதில் தீவிரமானவர். அவர் சாப்பிடும் சமயம் தற்செயலாக மாமிசம் என்னும் சொல்லைக் கேட்டாலும் மாமிசம் உண்டவர்போல் பதறி சாப்பாட்டைவிட்டு எழுந்துவிடுவார். தக்காளிப் பழம் பார்ப்பதற்கு மாமிசம் போலிருப்பதால் என் பாட்டி எதிரே தக்காளி என்று உச்சரித்தால்கூட பதறுவார், அவருக்கு ஒக்காளம் வரும்.

ஆச்சாரம் என்று அலட்டிக்கொள்பவர்கள் தீட்டு, விழுப்பு, அசுத்தம் என்றெல்லாம் குறைகூறுவதற்கான வாய்ப்புக்குக் காத்திருப்பார்கள். அவர்கள் தேடாமலே ஏதாவது காரணம் கிடைத்துவிடும். அப்படிக் கிடைக்காவிடில் அவர்களே தேடி காரணத்தை உண்டாக்கிக் கொள்வார்கள்.

உண்மையில் சாந்தமான மனநிலையில் ஊன்றிவிட்டவன், ஒய்வான மனநிலையில் இருப்பவன் பதறமாட்டான். அவன் தியானம் செய்யும் சமயம் தெருவில் பேண்டு வாத்தியம் ஒலித் தாலும், அவ்வொலி காதில் விழுந்தாலும், அவன் பதறுவதில்லை. அவனது அமைதி தடைப்படாது. வலுக்கட்டாயமாகப் போலியான சாந்தியை, செயற்கையான தியானத்தை மேற்கொண்டால், வெளி யுலகின் ஒவ்வோர் ஒலியும், ஒவ்வோர் அசைவும் தடைகளாக

அமையும். அந்த தவம் நீடிக்காது. சாந்தம் உள்ளேயிருந்து பொங்க வேண்டும்.

ஆதி சங்கரர் நதியில் நீராடிவிட்டு வருகையில் எதிரில் ஒரு சூத்திரர் நெருங்கி வருவதைக் கண்டார். "என் மேலே படாமல் விலகிப் போ. என் மேல் நீ பட்டால் தீட்டாகிவிடும். நான் மறுபடியும் குளிக்க நேரிடும்," என்று சங்கரர் கூறினார்.

அந்த சூத்திரர் ஞானம் பெற்றவர் (அவர் சிவபெருமான் என்று கூறுவதுண்டு). அவர் நினைவூட்டினார். "நீங்கள் உலகை மாயை என்கிறீர்கள். அப்படியானால் இந்த உடலும் மாயை அல்லது பொய். பிறகு வெறும் தோற்றமாகிய என் உடல் உங்கள் மீது பட்டால் உங்களுக்கு ஏன் தீட்டாகும்? நாம் ஆத்மா என்கிறீர்கள். ஆத்மாவில் பிராமணர்-சூத்திரர் என்று வித்தியாசம் உண்டா? பொய்யான என் உடலைப் பொய்யான உங்கள் உடலிலிருந்து தள்ளிப்போகச் சொல்கிறீர்களா அல்லது உங்களது ஆத்மா போலவே உள்ள என் ஆத்மாவைத் தள்ளிப்போகச் சொல்கிறீர்களா?" — சூத்திரர் கேட்டார். சங்கரர் ஆடிப்போய் விட்டார். தரையில் விழுந்து சூத்திரரை வணங்கிவிட்டுத் தொடர்ந்து நடந்தார்.

**மு**ம்பையிலிருந்து ஒரு முறை நான் ரயிலில் புறப்பட்டேன். ஏராளமான பேர் வழியனுப்ப வந்திருந்தனர். அந்த முதலாம் வகுப்புப் பெட்டியில் என்னைத் தவிர இன்னொரு பயணி இருந்தார். வந்திருந்த கூட்டத்தையும் என் தாடியையும் பார்த்த அவர் என்னை ஒரு மகாத்மா என்று நினைத்திருக்கிறார். ரயில் புறப்பட்டதும் கதவை மூடிவிட்டு அவர் உள்ளே வந்ததும் என் காலடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

எனக்கு ஒரு வேடிக்கை தோன்றியது. "நான் யார் என்று தெரியாமலே என்னைக் காலில் விழுந்து வணங்கலாமா?" என்று கேட்டேன். அவர் திடுக்கிட்டார். "நான் ஒரு முஸ்லிம்" என்று தொடர்ந்து சொன்னேன். "ஐயோ, அப்படியா! முதலிலேயே ஏன் சொல்லவில்லை?" என்று குமுறினர். "நீங்கள் எங்கே வாய்ப்புக் கொடுத்தீர்கள்? சட்டென்று காலில் விழுந்துவிட்டீர்களே" என்று சுட்டிக்காட்டினேன்.

"நான் ஒரு பிராமணன். ஸ்டேஷனில் உங்களை வழியனுப்பவந்த கூட்டத்தைப் பார்த்து உங்களை ஒரு மகாத்மா என்று நினைத்துவிட்டேன். அதனால் வணங்கினேன்." என்றார்.

"மும்பையிலே கூட்டத்திற்கு என்ன குறைச்சல்? எந்த விஷயத்திற்கும் ஒரு கும்பல் கூடிவிடும். என்னை வழியனுப்ப நாலு பேரே வந்திருந்தனர். என் தாடியையும் உடையையும் பார்த்து அவர்கள் பின்னால் கூட்டம் சேர்ந்துவிட்டது. பலர் கடத்தல்காரர்கள். அவர்களை என் சீடர்களென நினைத்து நீங்கள் ஏமாறியதற்கு நான் பொறுப்பில்லை." என விளக்கினேன்.

அவர் என்னையே அடிக்கடி உற்றுப் பார்த்தார். பிறகு சொன்னார், "உங்களைப் பார்த்தால் முஸ்லிம்போல் தெரிய வில்லை," என்றார்.

"அது உங்கள் விருப்பம். நான் இந்துவா, முஸ்லிமா என்று நீங்கள் என்ன நினைத்தாலும் நான் அதற்குப் பொறுப்பில்லை." என்று பேச்சை முடிவுக்குக் கொண்டுவந்தேன். அவரோ நான் முஸ்லிமா என்று தீர்மானிக்க முடியாததாலும், ஒருவேளை முஸ்லிமாயிருந்தால் பிராமணரான தான் என் காலில் விழுந்து வணங்கிவிட்டோமே என்று சங்கடப்பட்டதாலும், டிக்கட் பரிசோதகரிடம் சொல்லி, பெட்டியின் வேறு பகுதிக்குப் போய் விட்டார். நான் இந்துவா, முஸ்லிமா என்று அவர் சந்தேகப் பட்டதால்தானே இந்தச் சிக்கல் எழுந்தது. நான் யாராயினும் வணங்கத் தக்கவர் என்று மட்டும் நினைத்து வணங்கியிருந்தால் பிரச்சினையே வந்திருக்காது.

துர்கனேவ்* எழுதிய புகழ்பெற்ற கதை ஒன்றில் போலீஸ் காரர்கள் இரண்டு பேர் ஒரு பாதையில் சென்றுகொண்டிருந்தனர். வழியில் ஒரு ஹோட்டல் எதிரில் கூட்டம். அங்கே ஒரு மனிதன் ஒரு நாயின் கால்களைப் பிடித்து அதைக் கையில் வைத்திருந்தான். "நாயைத் தரையிலடித்துக் கொல்லப்போகிறேன். ஏன் என்றால் இது என்னை ஒருநாள் கடித்துவிட்டது." என்று அறிவித்தான்.

---

* Ivan Turganev (1818-1883) ரஷிய நாவலாசிரியர், கவிஞர், நாடகாசிரியர். இவர் எழுதிய Fathers and Sons தலைமுறை இடைவெளியைச் சித்திரிக்கும் தலைசிறந்த நாவலாகும்.

ஒரு போலீஸ்காரர், "நல்லது, அதைக் கொன்றுவிடு. இந்த சனியன் போலீஸ்காரர்களைப் பார்த்தால் மிகவும் குரைக்கிறது," என்று ஆமோதித்தார்.

நாய்களிடம் ஒரு விசித்திரப் பழக்கமுண்டு. வித்தியாசமான உடை அணிகின்றவர்களான போலீஸ்காரர்கள், தபால்காரர்கள், சாமியார்களைப் பார்த்தால் அவை குரைத்துத் துரத்தும்!

இரண்டாவது போலீஸ்காரர் தன் சகாவின் காதில் முணுமுணுத்தார், "அவசரப்படாதீங்க. இது நம்ம இன்ஸ்பெக்டர் அய்யாவோட நாய் மாதிரியில்ல தெரியுது," என்றார்.

உடனே சூழ்நிலை மாறிவிட்டது. முதல் போலீஸ்காரர் நாயை வைத்திருந்தவன் மீது பாய்ந்தார். "யாருடா நீ, ரோட்டில கலாட்டா செய்யறவன்? வேடிக்கையா காட்டறே? இது யாரோட நாய் தெரியுமா?" என்று கூறியபடி அவர் நாயைத் தன்னிடம் எடுத்துக் கொண்டு தடவிக் கொடுத்தார். மேலும் அவர் தன் சகாவைப் பார்த்து, "இந்த ஆளை கைது செஞ்சு ஜெயில்ல தள்ளு," என்றும் கூறினார்.

அப்போது இரண்டாமவர், "நான் இன்ஸ்பெக்டர் அய்யாவோட நாய் மாதிரி இருக்குன்னுதான் சொன்னேன். ஆனா இது அவரோட நாய்தான்னு உறுதியா சொல்ல முடியலை," என்றார்.

முதல் போலீஸ்காரர் உடனே நாயைக் கீழே போட்டார். "இந்த அழுக்கு நாயைத் தூக்கியதற்குக் குளித்தாக வேண்டுமே. இது யாருடைய நாய்னு உறுதியா தெரியலையே," என்று முணுமுணுத்தவர் நாய் வைத்திருந்தவனிடம், "இதை என்ன வேணுமானாலும் செய். நான் தலையிடலை," என்று கூறிவிட்டார்.

கதை இப்படி மாறி-மாறி இதற்கு மேலும் தொடர்கிறது.

இதேபோல் மனிதர்களை பிராமணர்-சூத்திரர், இந்து-முஸ்லிம் என்றெல்லாம் பெயர் சூட்டிப் பார்க்கும்போது பல பிரச்சினைகள் உதிக்கின்றன. இப்படியெல்லாம் பிரிக்காமல் பழகினால் நீ சாந்த மனநிலையை அடைவாய். வெளிச் சூழ்நிலையால் உனக்குப் பதற்றமேற்படாது.

அந்நிலையை அடைந்தவன் மீது எதுவும் ஒட்டிக் கொள்ளாது. அவனைக் கரிப்புகை படிந்த அறையில் தள்ளி னாலும் சுத்தமாக வெளியே வருவான். அவன் உலகத்தின் வழியேதான் போவான்; ஆனால் அதன்மீது படாமல் போவான். உலகத்திலிருந்து தப்புவதுபோல் வேகமாக ஓடமாட்டான். பயப்படுவதுபோல் ஒடுங்கியபடியும் செல்லமாட்டான். உலகத்தை அலட்சியமாகப் பார்த்தபடியே கம்பீரமாக முன்னேறுவான்.

**ஜ**ப்பான் நாட்டுப் பழங்கதை. ஓர் அரசர் ஒரு துறவியை எல்லாப் பருவங்களிலும் ஒரு மரத்தின் கீழேயே வசித்து வருவதைக் கவனித்தார். "இப்படி கஷ்டப்பட வேண்டாம். என்னுடன் வந்து அரண்மனையில் வசியுங்கள்," என வேண்டி னார். "நான் தியாகி. அரண்மனை வாழ்க்கை எனக்கு ஒத்துவராது," என்று சந்நியாசி கூறுவாரென அரசர் எதிர்பார்த்தார். அவரோ சட்டென்று எழுந்து புறப்பட தயாராகிவிட்டார். அரசருக்கு ஏமாற்றமாகிவிட்டது.

துறவி அரண்மனையில் ஆடம்பர வசதிகளை அனுபவித்து வாழ்ந்தார். ஆறு மாதமாகிவிட்டது. அரசருக்குப் பொறுக்க முடியவில்லை. தியாக வாழ்க்கை நடத்தாமல் இந்தத் துறவி மகாபோகியாக இருக்கிறாரே என அரசர் மனம் நொந்தார். ஒருநாள் வாய் திறந்து கேட்டேவிட்டார். "சுவாமி, என் வாழ்க்கைக்கும் உங்கள் வாழ்க்கைக்கும் வித்தியாசம் என்ன? நீங்கள் சுகம் மட்டுமே அனுபவிக்கிறீர்கள். நான் சுகங்களின் நடுவில் வாழ்ந்தபோதிலும் அரசன் என்ற முறையில் ஏராளமான பிரச்சினைகளால் எந்த வசதியையும் முழுமையாக அனுபவிக்க முடியவில்லை," என்று அரசர் வருத்தப்பட்டார்.

துறவி பதில் சொல்லவில்லை. மறுநாள் அவர் அரசரைத் தன்னுடன் வரச்சொன்னார் நீண்ட நேரம் நடந்து, நீண்ட தூரம் கடந்து, அவர்கள் நாட்டின் எல்லையையும் தாண்டிவிட்டிருந்தனர். அடர்ந்த காடு ஆரம்பமாகும் இடம்.

"அரசே, நான் மேற்கொண்டு முன்னேறி, காட்டைக் கடந்து செல்லப்போகிறேன். இனி இந்தப் பக்கம் திரும்பிவருவதாக இல்லை. நீரும் என்னுடன் வருகிறீரா?" என்று துறவி வினவினார்.

"அதெப்படி முடியும், சுவாமி," மன்னர் பதறினார். "நான் ஆட்சி செய்யும் நாடு உள்ளது. ராணிகள்-குழந்தைகள் உள்ளனர், கஜானாவில் செல்வம் குவிந்திருக்கிறது. நிர்வாக சம்பந்தமாக எத்தனையோ பிரச்சினைகள், கடமைகள், கணக்கு-வழக்குகள் உள்ளன. நான் இல்லாமல் அவற்றையெல்லாம் யார் சமாளிப்பது? எப்படிச் சமாளிப்பது?"

துறவி சொன்னார், "நம்மிடையே உள்ள வேறுபாட்டைப் பார்த்தாயா? நான் சட்டென்று எங்கிருந்தும் எங்கும் போக முடியும். உன்னால் அரண்மனையைவிட்டுக்கூட வெளியே வர முடியாது."

சந்நியாசிக்கும் சம்சாரிக்கும் இடையே ஒரு வேறுபாடுதான். சம்சாரி உலக வலையிலிருந்து தான் மீளமுடியாதபடி மாட்டிக்கொண்டிருக்கிறான். சந்நியாசியைச் சுற்றிலும்கூட உலக வலை உள்ளது. ஆனால் அவரால் எந்த நிமிடமும் வலையை விட்டு வெளியேற முடியும். வெளியேறியபிறகு அவர் பின்னால் திரும்பிப் பார்க்கக்கூட மாட்டார். அப்படித் திரும்பிப் பார்க்காத வர்தான் உண்மையான துறவி. 'நடந்தது, நடந்து முடிந்துவிட்டது. நடக்காதது, நடைபெறவில்லை. ஓரிடத்திலிருந்து விலகினால் அது நிரந்தரமான விலகல்தான்' — இதுவே துறவறம்.

குடும்பஸ்தன் கட்டப்படுகிறான். வீடு அவனைக் கட்டிப் பிடிக்கவில்லை. அவனது மோகம்தான் அவனைக் கட்டிப் போடுகிறது. மேற்கண்ட கதையில் அரசர் சம்சாரி என்றால் போகி, சந்நியாசி என்றால் தியாகி என்று நினைத்துவிட்டார்.

அப்படியில்லை. தியாகி-போகி இருவருமே சம்சாரிகள்தாம். சந்நியாசி இந்த இருவகையினரிடமிருந்தும் வேறுபட்டு சாட்சி யாகத் திகழ்கிறான். போகங்களால் சூழப்பட்டாலும் அவற்றில் ஒட்டிக்கொள்ளாமல் நிற்கிறான். தியாகங்கள் செய்தாலும் அவற்றைத் தான் செய்ததாக நினைப்பதில்லை.

'மனநிறைவு பெற்ற ஞானி உணர்ச்சிகளாலும் வறட்சி களாலும் (தேவைக்குறைவுகளாலும்) பாதிக்கப்படுவதில்லை. அவன் பற்றுகள் அற்றவனாக உள்ளான். உலகத்தின் பார்வையில் அவன் மற்றவர்கள் போலவே செயற்படுவதாகத் தோன்றினாலும்

அவன் கர்த்தா உணர்வுடன் எதுவும் செய்வதில்லை.' **(சுலோகம் 195)**

**இ**வனைத்தான் புத்த புருஷன் என்கிறோம். இவன் ஞான விழிப்புப் பெற்றவன். இவன்தான் ஞானி. அவன் உணர்ச்சிகளால் பாதிக்கப்படுவதில்லை; வெறுமையாலும் பாதிக்கப்படுவதில்லை. அவன் எப்பக்கமும் சாராதவனாக இருக்கிறான். 'இப்படித்தான் எதுவும் நடக்க வேண்டும்' என்றும் அவன் சொல்வதில்லை. அவன் தனக்கென அமைந்த நிலையிலேயே திருப்தியுடன் விளங்குகிறான்.

உலகத்தின் பார்வையில் அவனும் சம்சாரிபோல் தெரிகிறான். மற்றவர்கள் செய்வதை அவனும் செய்கிறான். மற்றவர்கள் எதை எவ்விதம் செய்கிறார்களோ அவனும் அவ்வாறே செய்கிறான்.

**து**றவி போகோஜுவிடம் ஒருவன் வந்து, "நீங்கள் ஒரு ஞானியாக மதிக்கப்படுகிறீர்கள். உங்கள் யோக முறையைச் சொல்லுங்கள். நானும் அதைப் பின்பற்ற முயலுகிறேன்," என்று கர்வம் காட்டினான்.

போகோஜு அதற்கு, "எனக்குப் பசியெடுக்கும்போது சாப்பிடுகிறேன். தூக்கம் வரும்போது படுத்துவிடுகிறேன். இதுதான் எனது வழி," என்றார்.

வந்தவன் ஆச்சரியப்பட்டான். "இதுவா யோகம்? நாம் எல்லோருமே இப்படித்தானே செய்கிறோம். பசித்தால் சாப்பிடு கிறோம். தூக்கம் வந்தால் தூங்குகிறோம். இதில் யோகம் எங்கே வந்தது?" என்று கேட்டான்.

"உண்மை அதுவல்ல," போகோஜு விளக்கினார்: "நான் சாப்பிடும்போது சாப்பிட மட்டும்தான் செய்கிறேன். வேறு சிந்தனையே கிடையாது. நீ சாப்பிடும்போது நூற்றுக்கணக்கான விஷயங்களை யோசிக்கிறாய். என்ன சாப்பிட்டோம்; எவ்வளவு சாப்பிட்டோம்; அதன் சுவை எப்படி இருந்தது என்பது நினைவிலேயே பதிவதில்லை. எனக்குத் தூக்கம் வந்தால் எந்தச்

சிந்தனையுமின்றி உறங்கிவிடுகிறேன். எனக்குக் கனவுகூட வருவதில்லை. நீயோ பலவித சிந்தனைகள், கவலைகள் காரணமாகப் படுத்தவுடன் உறங்குவதில்லை. கனவுகளாலும் உன் தூக்கம் பாதிப்படைகிறது. நான் எதையும் லயிப்புடன் செய்கிறேன். நீ இயந்திரம்போல் ஆர்வமின்றிப் பணிசெய்கிறாய். சாப்பிடு வதிலும் தூங்குவதிலும்கூட லயிப்பு வேண்டும் லயிப்பு வந்தால் 'நான்' உணர்வு, கர்த்தா மனநிலை நீங்கிவிடும்.

'ஞானியாகிய மனிதன் தனக்கு முன் எதிர்ப்படும் கடமைகளை நிறைவேற்றி சுகமாக விளங்குகிறான். விருப்பம்-விருப்பமின்மை, ஆர்வம்-உதாசீனம் ஆகிய எதையும் பிடிவாதமாகப் பற்றிக்கொள்வதில்லை.' **(சுலோகம் 196)**

**அ**வன் எதற்கும் பிடிவாதம் பிடிப்பதில்லை. எல்லா வகையான பிடிவாதமும் தவறானவைதாம். காந்திஜியின் சத்தியாக்கிரகத்திலும் (சத்தியத்தை வற்புறுத்தும் பிடிவாதத்திலும்) குறையுண்டு. 'இப்படித்தான் நடக்க வேண்டும்' என நீ நினைத்ததுமே அங்கே உன்னைக் கவலை சூழ்ந்து கொள்கிறது. அப்படித்தான் நடக்குமென்று நிச்சயமில்லை. தோல்வி ஏற்பட்டால் உடைந்து போகிறாய்.

இவ்வுலகம் யாருடைய ஆசைகளையும் முழுமையாக நிறைவேற்றித் தருவதில்லை. உலகம் அப்படி யாருக்கும் வாக்குறுதி தரவில்லை. உன் தனி விருப்பங்கள் உலகத்தின் போக்கோடு ஒட்டிப்போகும்போது உனக்கு வெற்றி கிடைக்கிறது. அவை உலகத்துடன் ஒட்ட முடியாதபோது நீ தோல்வி யடைகிறாய். பெரும்பான்மையான விஷயங்களில் நீ உலகத்துடன் ஒத்துப்போக முடிவதில்லை. உலக இயக்கத்திற்கு எவ்வளவோ காரணங்கள் உள்ளன. ஆனால் அது உனக்காகப் படைக்கப் பட்டிருப்பதாக நீ நினைத்து ஏமாறுகிறாய்.

உதாரணமாக, நாம் சமையலறையில் சுற்றித் திரியும் எறும்புகள் போன்றவர்கள். உணவிலிருந்து விழும் பருக்கைகளை அவை எடுத்துச் செல்கின்றன. சரி, ஆனால் தாங்கள் எடுத்துச் செல்வதற்காகவே உணவு தயாரிக்கப்படுவதாக எறும்புகள் நினைத்தால் வேடிக்கைதானே. சர்க்கரை சிந்தினால் எறும்புகள்

சாப்பிடத்தான் நீ கடைக்குப்போய் சர்க்கரை வாங்கி வந்ததாக அவை நினைத்தால் எப்படியிருக்கும். அதுபோலவே, நீயும் உலக நடவடிக்கைகளெல்லாம் உன்னை மையமாகக் கொண்டுள்ளதாக நீ நினைக்கிறாய். உன் திருப்தியை முன்னிட்டு உலகம் இயங்குவதாக நினைக்கிறாய்.

ஆனால் ஞானி தன்னிடம் வந்துசேரும் வேலைகளைப் புறக்கணிப்பதில்லை. அவற்றை நிறைவேற்றி அவன் சுகமாக உணர்கிறான். வெற்றி-தோல்வி அவனைப் பாதிப்பதில்லை. தன்னால் முடிந்த அளவிற்கு வேலைகளைச் செய்கிறான். சூழ்நிலைப்படி நடந்துகொள்கிறான். கர்த்தா என்னும் அகங்காரத்துடன் அவன் எதுவும் செய்வதில்லை. சந்நியாசியாகிய தான் சமூக நடவடிக்கைகளில் உதவக்கூடாது. என்றும் அவன் நினைப்பதில்லை.

சமயத் தலைவர்கள் சிலர் விசித்திரமான ஒரு கொள்கையை நம்பிக் கடைப்பிடிக்கிறார்கள். ஒருவன் கஷ்டப்பட்டால் அவனுக்கு உதவக்கூடாது என்பதுதான் அந்தக் கொள்கை! ஏனெனில் அவன் கஷ்டப்பட்டு முற்பிறவிப் பாவமூட்டையின் சுமையை இப்பிறவியில் குறைத்துக் கொள்கிறான் அல்லது முற்றிலுமாக நீக்கிக் கொள்கிறான். நாம் இடையில் குறுக்கிட்டு அவனுக்கு உதவினால், அல்லது அவனைக் காப்பாற்றினால், அவனது பாவமூட்டை அப்படியே இருக்கும். அந்த கர்ம பலன்களைப் போக்க அவன் மேலும் பிறவிகள் எடுக்க நேரிடும். அடுத்த பிறவி என்று அவனைத் தள்ளலாகாது என்பது அந்த சமயத் தலைவர்கள் சிலரின் கண்ணோட்டம். இதனால் தாகத்தால் தவிப்பவனுக்கும் தண்ணீர் தரக்கூடாது, கிணற்றில் விழ முயல்பவனைத் தடுக்கக்கூடாது என்றெல்லாம் விபரீத அர்த்தம் விளைகிறது. ஆகவே இந்தத் தலைவர்கள் மக்களின் கஷ்டங்கள் குறைவதற்கு நடைமுறைப்படுத்தக்கூடிய யோசனைகளைச் சொல்லாமல், "எல்லாவற்றையும் பொறுத்துக்கொள். இந்தக் கஷ்டங்களால் முற்பிறவிப் பாவங்களெல்லாம் நீங்கிவிடும். மறுபிறவி இருக்காது," என்ற ஆதாரமில்லாத உறுதிமொழி தருகிறார்கள்.

இது கடுமையான கண்ணோட்டம். இது ஹிம்சை வழி. கிணற்றில் விழ முயலும் ஒருவனைக் காப்பாற்றினால் நாம் அவனது பாவச் சுமை குறைவதைத் தடுத்துவிடுகிறோம் என்று கூறும் மதத் தலைவர்கள் கூறும் இன்னொரு தருக்கம் வேடிக்கையானது. இப்படி நாம் தலையிட்டதால்தான் அவன் காப்பாற்றப்பட்டதால், அவன் எதிர்காலத்தில் செய்கின்ற பாவங்கள் அனைத்திலும் ஒரு பங்கு நம்மை வந்துசேர்ந்து, நம்மிடம் ஏற்கெனவே உள்ள பாவமூட்டை மேலும் பாரமாகிவிடும் என்று மடாதிபதிகள் அச்சுறுத்துகின்றனர்.

இது சாட்சி மனப்பான்மைக்கு எதிரானது. எப்பொழுது தான் செய்ய வேண்டிய ஒன்று எதிர்ப்படுகிறதோ, அப்பொழுது சாட்சி மனப்பான்மையுள்ளவன் தன் சக்திக்கு ஏற்றவாறு செய்வான். யாராவது கிணற்றில் விழப் போனால் தடுத்து நிறுத்திக் காப்பாற்றுவான். சாட்சி என்றால் வேடிக்கை பார்ப்பவன் என்றாகாது. சாட்சி என்பவன் ‘நான்தான் காப்பாற்றினேன்’ என்று பெருமைகொள்ள மாட்டான். காப்பாற்றப்பட்டவன் எதிர்காலத்தில் செய்யக்கூடிய பாவங்களின் பலனில் தனக்கும் பங்கு வரும் என அவன் நினைக்க மாட்டான். தன்னை கர்த்தாவாக நினைக்காமல் கடவுளே எல்லாம் செய்கிறார் என நினைப்பான். அவருக்கு இஷ்டமானால் கிணற்றில் விழுபவனைக் காப்பாற்றுவார். அந்த சமயம் சாட்சி மனப்பான்மை கொண்டவனைக் கிணற்றுப் பக்கம் அனுப்புவார். ஏனெனில் அவன் வேடிக்கை பார்க்காமல் தன்னால் முடிந்ததைச் செய்வான் என்று கடவுளுக்குத் தெரியும். கடவுள்தான் செய்பவர் என அவன் நினைப்பதால், அவன் தனது முயற்சியின் பலன் குறித்துக் குழப்பிக்கொள்ள மாட்டான்.

எப்பொழுது எதைச் செய்ய முடியுமோ அதை முடித்து அவன் மகிழ்ச்சியாக இருப்பான். அவனது மகிழ்ச்சியைப் பிறர் சேதப்படுத்த முடியாது. ஒரு பணி எதிர்ப்படும்போது அவன் தன்னைச் சுருக்கிக் கொள்ளமாட்டான். ‘நான் துறவி, குறிப்பிட்ட அளவுதான் செய்ய முடியும்’ அல்லது ‘நான் குடும்பஸ்தன், ஆகவே இப்படித்தான் செய்வேன்’ அல்லது ‘நான் பிராமணன், எனக்கு இவ்வளவுதான் செய்ய சாஸ்திர அனுமதி உள்ளது’ என்றெல்லாம் சாட்சி மனப்பான்மையாளன் எல்லை

வருக்கமாட்டான். அவன் திறந்த மனத்தவனாக இருப்பான். ஒரு சூழ்நிலையில் அவனுக்குக் கிடைக்கும் அடித்தூண்டுதலின்படி செயலில் ஈடுபடுவான். அத்துடன் விஷயம் முடிந்தது. தன் செயல்களின் வெற்றி-தோல்வி கணக்கு எதுவும் அவன் எழுதுவதில்லை. தன் மூலம் கடவுள் செய்விப்பதையே தான் ஒரு கருவிபோல் செய்வதாக அவன் நினைக்கிறான்.

எதிர்ப்படும் பணியைச் செய். அகத் தூண்டுதலின்படி செயல்படு. இயல்பாக வாழ்க்கை நடத்து. வாழ்க்கை குறித்துப் பெரியதான அல்லது தொலைவான எதிர்காலத் திட்டங்கள் வேண்டாம். எதையும் வலுக்கட்டாயமாக வாழ்க்கை மீது திணிக்க வேண்டாம். 'இது கடமை-இது கடமையன்று' என எதையும் மிகவும் முன்கூட்டியே முடிவுசெய்ய வேண்டாம். சுதந்திரமாக இரு. அந்தந்த நேரத்து வேலையைச் செய்துமுடி. அதை சாதனையாக நினைத்துத் தேங்காமல் மறந்துவிடு. தொடர்ந்து நடைபோடு. கடந்த காலச் சுமைகளைத் தாங்கியபடி திரியாதே. நிகழ்காலத்தில் கவனம் செலுத்து.

சாட்சி மனப்பான்மை கொண்டவன்தான் நிகழ்கால மனிதனாக இருக்கிறான். நீயோ பின்னோக்கி நடக்கிறாய். கடந்த காலத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறாய். அல்லது எதிர்காலக் கற்பனையிலேயே மூழ்கியிருக்கிறாய். நீ ஒருவரை வணங்கும் போதுகூட நிகழ்காலத்தில் இருப்பதில்லை. அவரால் எதிர்கால நன்மை விளையும் என்று கணக்குப்போட்டுப் பார்த்து, அதற்கேற்ப எதிர்காலத்தில் எதையாவது எதிர்பார்த்து, அவரை வணங்கு கிறாய். அல்லது பழைய கணக்கைப் பார்க்கிறாய். இந்த ஆள் முன்பு நம்மை ஆதரித்திருக்கிறார். சரியான நேரத்தில் உதவியிருக்கிறார். ஆகவே அவரை நன்றியுடன் வணங்குகிறாய். நமஸ்காரம்கூட உன்னால் நிகழ்காலத்தில் செலுத்த முடியவில்லை. சாட்சி மனப்பான்மையுள்ளவன் எப்பொழுதும் அந்தந்த நிகழ் காலத்திலேயே வாழ்கிறான். அவன் இயல்பாக இருக்கிறான். ஆகவே இறுக்கமின்றி சுகமாக இருக்கிறான். அவன் தன்னிலேயே லயித்து நிலைபெறுகிறான்.

அவன் தன்னை சம்சாரி என்றும் கூறிக்கொள்வதில்லை; தியாகி என்றும் கூறிக்கொள்வதில்லை. நான் கூறும் சந்நியாசமும்

இதே அர்த்தமுடையது. என்னிடம் துறவறம் ஏற்றவன் போகியுமில்லை, தியாகியுமில்லை. மாறாக, அவன் இயல்பானவன். அவன் நடுநிலையில் நிற்கிறான்.

போகம் நிறைந்த சூழ்நிலையில் தவிர்க்க முடியாது இருக்க நேர்ந்தாலும் அவன் எதிலும் ஒட்டமாட்டான். தியாகி நிலையிலும் அதைப் பெருமையாகச் சொல்லமாட்டான். சந்நியாசம் என்னும் சொல்லை ஸம்யக்+ந்யாஸ் என்று பிரிக்கலாம். இதற்கு நடுவுநிலையில் இருத்தல் என்று பொருள். உண்மையான துறவி எத்தரப்பிலும் சேராமல், சலனமில்லாமல் நடுநிலையில் இருப்பான்.

ஞானக் கதவுகள் யாருக்கும் திறக்கும். நீ வாசற்படியில் நிற்கிறாய். கதவைத் தட்டுவது மட்டும்தான் பாக்கி. 'தட்டுங்கள், திறக்கப்படும்' என்று இயேசுநாதர் உறுதியளித்துள்ளார்.

ஹஸன் என்ற துறவி பள்ளிவாசலின் முன் நின்று, 'ஆண்டவரே! கதவைத் திறங்கள். நான் எவ்வளவு காலமாகக் கெஞ்சிக் கொண்டிருக்கிறேன்' என்று கூவியபடி இருந்தார். அவ்வழியே சென்ற ராபியா என்ற பெண் துறவி, "ஹஸன், உளறாதே. கதவு எங்கே மூடியிருக்கிறது? கண்ணை நன்றாகத் திறந்துபார்," என்றாள்.

இயேசுநாதர் மூடிய கதவைத் தட்டச் சொல்கிறார். ராபியா அவரைவிட முன்னேறிச் சென்று, கதவு மூடியிருக்கவில்லை என்பதைச் சுட்டிக் காட்டுகிறாள்.

நீ ஏற்கெனவே கோயிலில்தான் அமர்ந்துள்ளாய். எனவே உள்ளே நுழைய வேண்டுமென்ற அவசியமில்லை. நீ இருக்கு மிடத்திலேயே எல்லாம் கிடைக்கும். கொஞ்சம் விழித்துப் பார். கதவைத் தட்டு என்பதற்கு உன்னை உலுக்கு என்று அர்த்தம். தூங்குபவனை எழுப்ப உலுக்குவதுபோல்தான் இது. உலகத் தூக்கித்திலிருந்து விழித்தெழு.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! அஷ்டாவக்ர கீதையில் ஜீவன்—முக்தி 'வாழ்வில் மோட்சம்' என்பது பல முறை கூறப்பட்டுள்ளது. வாழ்க்கை—மரணம்—முக்தி ஆகியவற்றைத் தொடர்பு படுத்தி விளக்குங்கள்.**

**வா**ழ்க்கை எப்படியோ அதற்கேற்பவே மரணம் நிகழும். இக்கரை போன்றே அக்கரையும் அமையும். இங்கே இருப்பது போன்றே நீ அங்கும் இருக்க முடியும். இங்கே இருட்டில் வாழ்ந்தால், சாவுக்குப்பின் ஒளியில் வாழ்வாய் என நினைக்காதே. இங்கே நடைபெற முடியாதது உடலைவிட்டு நீங்கிய பிறகும் நடைபெறாது. நீ நீயாகவே இருப்பாய். மரணத்தினால் உன்னிடம் எந்த வித்தியாசமும் தெரியாது. இங்கு உன் வாழ்க்கை ஆனந்த மாகக் கழிந்தால், மரணத்திற்குப் பிறகும் ஆனந்தமாக இருப்பாய். சாவின் நடுவிலும் ஆனந்தமாக இருப்பாய். நீ வாழ்வில் துன்பம் அனுபவித்தால் மரணம் உனக்கு சுகம் தந்துவிடாது. இங்கு நீ நரக வாழ்க்கை வாழ்ந்தால் மரணத்திற்கு அப்பாலும் நரக வாழ்க்கையே தொடரும். இக்கருத்தைச் சரியாகப் புரிந்துகொள்வது சிரமம்தான்.

மனிதன் அடிப்படையில் மோசடிக்காரன். எதையும் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று தள்ளிப்போடுபவன். சாவுக்குப் பின்தானே முக்தி என அவன் நினைப்பதால் அவன் அவசரப் படுவதில்லை. சாகும் சமயம் கடவுளை நினைத்தால் போதுமென அவன் நினைக்கிறான். அப்போது காதில் மந்திரங்களின் ஒலியைக் கேட்டுக்கொள்ளலாம் என நினைக்கிறான். முதுமை வரட்டும். பிறகு தீர்த்த யாத்திரை மேற்கொள்ளலாம். தேவையானால்

அப்போது சந்நியாசம் ஏற்கலாம். இப்படியெல்லாம் மனிதன் திட்டம் வைத்திருக்கிறான்.

ஆன்மிகத்தை எதிர்காலத்துக்கு அனுப்பிவிட்டு நாம் நிகழ்காலத்தில் வழக்கமான வாழ்க்கைப் பாதையிலேயே தொடர்ந்து செல்கிறோம். இன்று எத்துணை கெட்டது செய்தாலும் நாளை நல்லது செய்து கணக்கைச் சீராக்கிவிடலாம் என நினைக்கிறோம். நல்லதை நாம் தள்ளியே போடுகிறோம். கெட்டதை நாம் உடனே செய்கிறோம். இன்று உலகப் பற்று, நாளை உலகத்திலிருந்து விடுதலை என்றபடிக்குக் கணக்குப்போட்டு வைத்திருக்கிறோம். ஜீவன்-முக்தி என்னும் பேருண்மை இந்தக் கணக்கைப் பொய்யாக்குகிறது.

வாழ்க்கையிலேயேதான் முக்தி கிடைக்க வாய்ப்புள்ளது. அது தனியாகக் கிடைக்காது. உயிருடன் இருக்கும்போதுதான் விழிப்புநிலை ஏற்பட முடியும். யோசித்துப் பார். உயிருடன் உள்ளபோது விழிக்க முடியாதவன் இறப்பதால் எப்படி விழிப்பான்? சாவு என்பது வாழ்க்கையின் சாரம். சாவு என்பது ஓர் உரைகல். உன் வாழ்க்கையின் சாரமெல்லாம் இறக்கும் தறுவாயில் உன் கண்ணெதிரே திரைப்படமாக ஓடும். அந்தச் சாரமே உன் வாழ்க்கையின் தீர்ப்பாக அமையும்.

மனிதன் எப்படி வாழ்கிறானோ அவ்வாறே இறக்கிறான். நாம் தனித்தனி வாழ்க்கை நடத்துவதுபோல் நாம் வெவ்வேறு விதமாக இறக்கிறோம். நாம் வாழும் முறை மட்டும் வித்தியாசப் படுகிறது என்றில்லை; நாம் இறக்கும் பாணியும் ஆளுக்கு ஆள் வித்தி யாசப்படுகிறது. நீ சரியாக வாழ்ந்திராவிடில் சரியாக இறக்கவு மாட்டாய்.

மரணத்துடன் வாழ்க்கை முடிந்துவிடுவதில்லை. மரணம் வரை நீ வாழ்ந்ததன் சாரத்தைத் திரட்டியெடுத்துப் புதிய பயணத்தைத் தொடங்குகிறாய். கோபமே உன் வாழ்க்கையின் அடிப்படை என்றால், உன் சாவிலும் கோபம் பிரதிபலிக்கும். உன் வாழ்க்கையின் மையம் துன்பம் என்றால், இறக்கும்போது அமாவாசை இருட்டுப்போல் துன்ப சூழ்நிலையாக இருக்கும். உன்

வாழ்க்கை ஆனந்தமாக அமைந்தால் மரணம் ஒரு கொண்டாட்டம்போல் நிகழும்.

**ஜெ**ர்மானிய மகாகவி கதே (Goethe) இறக்கும் தறுவாயில் இருந்தார். திடீரெனக் கண்களைத் திறந்தார். உதட்டில் புன்னகை மலர்ந்தது. சுற்றிலும் எரிந்துகொண்டிருந்த விளக்குகளை அணைத்துவிடுமாறு சொன்னார். 'ஏனெனில் இப்போது எனக்குப் பேரொளி ஒன்று காட்சி தருகிறது' என்று கூறினார். அவருடைய கண்கள் மீண்டும் மூடின. அவர் இறந்துவிட்டார். ஆன்ம ஒளி தென்பட்டபின் மற்ற ஒளிகள் தேவைப்படுவதில்லை. ஆனால் வாழ்க்கை முழுவதுமே ஒளிமயமாக இருந்திருந்தால்தான் இறக்கும்போது மகாசூரிய ஒளி தெரியும்.

மரண சமயம் உனக்கு பூரண விடுதலை போன்ற உணர்வு ஏற்படாவிடில் நீ உன் வாழ்க்கையை வீணடித்திருக்கிறாய் என்று பொருள்படும். மரணம் உன்னைக் கடவுளின் இல்லத்தில் கொண்டுபோய் நிறுத்தாவிடில், மரண சமயம் கடவுளின் கைகள் நீண்டு உன்னை வரவேற்பதுபோல் தோன்றாவிடில், மரணம் நீ நல்வாழ்வு வாழ்ந்ததற்கான சான்று தரவில்லை என்று அர்த்தம் அப்போது நீ மீண்டும் பிறப்பெடுத்து உலகிற்கு வரநேரிடும்.

முக்தன் என்றால் விடுதலை பெற்றவன். அவன் திரும்பிவர மாட்டான். அவனுக்கு மற்றொரு பிறப்பு கிடையாது. புத்தர் அவனை அநாகாமின் என்கிறார். ஆகமன் என்றால் வருகை. முக்தன் வாழ்க்கை பாடத்தைக் கற்றுக்கொண்டவனாவான். அவன் மீண்டும் பள்ளிக்கூடத்துக்கு வரமாட்டான்.

சாவின்போது உனக்கு விடுதலை உணர்வு தோன்றினால் பிறகு மறுபிறவி கிடையாது. ஆனால் சாவு சமயம் முக்தி அனுபவம் எப்படிக் கிடைக்கும்? வாழும்போது கிடைக்காத அனுபவம் இறக்கும்போது எப்படி வாய்க்கும்? ஒருசமயம் எல்லா வசதிகளும் இருந்தன; கண்கள் தெளிவாகப் பார்த்தன; கை-கால் பலத்துடன் விளங்கின; மனத்தில் உறுதி இருந்தது; உடலில் சக்தி கொப்புளித்தது. உன்னை வீர உணர்ச்சி உந்தித் தள்ளியது. அப்போதெல்லாம் ஆன்மிகத்தை அலட்சியம் செய்து நீ சும்மா இருந்துவிட்டாய். முதுமையில் உடல் தளர்ந்த பிறகு, மனம்

சலிப்புற்ற நிலையில் நாட்களை ஓட்டத்தான் தோன்றுமே தவிர ஆன்மிக நாட்டம் எழாது. வாழும்போது முக்திக்கு முயலாதவன் தாழும்போது எப்படி முக்திக்கு உரிமை கொண்டாட முடியும்?

தள்ளிப்போடாதே. தவிர்க்காதே. செய்ய வேண்டியவற்றை இன்றே செய். அடுத்த நாளைக்குக்கூட ஒத்திவைக்காதே. ஏனெனில் இன்றுதான் வாழ்வு. நாளை மரணம் சம்பவிக்கலாம். வாழ்க்கை எப்பொழுதுமே இன்றுதான். மரணம் எப்பொழுதுமே அடுத்த கணத்தில்தான், நாளைதான், எதிர்காலத்தில்தான். நீ இன்னும் இறந்ததுபோகாத இந்த சமயத்தைப் பயன்படுத்திக் கொள்.

நீ நிகழ்காலத்தை வீணில் கழிக்கிறாய். எல்லாக் கடமை களையும் பூர்த்தி செய்தபிறகு, பணி அல்லது தொழிலிலிருந்து ஓய்வுபெற்ற பிறகு கடவுள் நினைவில் காலத்தைக் கழிக்கலாம் என நினைக்கிறாய். இவ்வாறு நீ உன்னையே ஏமாற்றிக்கொள் கிறாய். உன் ஆயுள்காலம் எவ்வளவு என்பது உனக்குத் தெரியாதே.

முக்தனாக வேண்டுமா? இப்பொழுதே ஆகிவிடு. தியானம் பழக வேண்டுமா? இப்பொழுதே ஆரம்பி. பிரார்த்தனையால் உன்னை நிரப்பிக்கொள்ள வேண்டுமா? இப்பொழுதே பிரார்த்த னையைத் தொடங்கிவிடு. தினமும் பிரார்த்தனை மணிகளைக் கோத்துவந்தால் இறக்கும் சமயம் உனது வாழ்க்கையென்னும் மாலை முழுமையடைந்துவிடும்.

ஜீவன்-முக்தன் எதையும் தள்ளிப்போட மாட்டான். எதிர் காலத்துக்காகக் காத்துக் கொண்டிருக்க மாட்டான். நிகழ்காலத்தை நன்றாக உபயோகப்படுத்துவான். ஒவ்வொரு நிமிடத்தையும் முழுமையாகப் பயன்படுத்துவான்.

ஜீவன்-முக்தன் கோழையாக ஓடிப்போக மாட்டான். வாழ்க்கையைப் புறக்கணித்து ஓடி முக்தி பெற முடியாது. முக்தி இமயமலை குகையில் இல்லை. போராட்டங்கள் நிறைந்த வாழ்க்கையின் நடுவில்தான் சந்தை - கடைத்தெருவின் ஆரவாரத்திடையேதான், மக்கள் கூட்டத்தின் நடுவில்தான் முக்தி

வாய்ப்பு உள்ளது. முக்தியைத் தேடி அலையாதே. அப்படிப் போவதால் தீர்வு எதுவும் கிடைக்காது. நீ எங்கே போனாலும் நீ நீயாகத்தான் இருப்பாய். இமயமலைக்கு இடம் பெயர்ந்தால் உன் மனமும் மாறிவிடுமா? உனது வருகையால் இமயமலையின் குகைதான் கெட்டுப்போகும்!

ஓடாமலிருத்தல்தான் ஜீவன் முக்தி. நீ இருக்கும் இடத்திலேயே உன்னை மாற்றிக்கொள். அதுதான் முக்கியம். இடம் முக்கியமில்லை. நீ கணவன், மனைவி, தாய்-தந்தை, கடை முதலாளி, தொழிலாளி முதலிய எந்த நிலையில் இருந்தாலும் அந்த நிலையில் தொடர்ந்து இருந்தபடியே, அவற்றில் ஒட்டாமல் விடுதலை உணர்வைப் பெறு.

எத்தகைய வாழ்க்கை உனக்குக் கிடைக்கிறதோ அதை அப்படியே ஏற்குமாறு அஷ்டாவக்ரர் அடிக்கடி கூறுகிறார். வேறு வகையாக அமைந்திருக்கக்கூடாதா என ஏங்காதே. கடவுள் கொடுத்த வாழ்க்கையுடன் இணக்கமாக இரு. அதில் துன்பம் இருந்தால் அதற்கொரு காரணம் இருக்கும். சுகம் வாழ்க்கையைத் துருப்பிடிக்கச் செய்கிறது. துன்பம் கசண்டுகளை நீக்கி வாழ்க் கைக்கு மெருகேற்றுகிறது. தங்கக் கட்டியை நெருப்பிலிட்டால் தூய்மையாவதுபோல்தான் துன்பம் நமது வாழ்க்கையை சுத்தப்படுத்துகிறது.

ஆகவே எது உள்ளதோ, எப்படி உள்ளதோ அதிலிருந்து ஓடாதே. அங்கேயே விழி. விழிப்புப் பெறுவதுதான் உண்மையான தேவை. எதையும் சுயநினைவோடு செய். துன்பத்தையும் சுய நினைவோடு நீ அனுபவி, அங்கீகரி. இந்தத் துன்பங்களுக் கெல்லாம் ஏதோ பிரயோஜனம் உண்டு என்று நம்பு. துன்பம் உன்னை மாற்றும்; கம்பீரமாக்கும்; கறைகளைக் கழுவிவிடும்; உனது ஆளுமைக்கு மெருகேற்றும்; உனக்குத் துடிப்பேற்றும்; ஏதோ ஒரு பெரிய சுகத்திற்கு இட்டுச்செல்லும்.

வாழ்க்கைக்குப் பிறகல்ல முக்தி. வாழ்க்கையிலேயே முக்தி இணைந்துள்ளது. தர்ம குரு எனப்படுபவர்கள்தாம் வாழ்க்கையும் மோட்சமும் ஒன்றுக்கொன்று எதிரானவைபோல் ஆக்கிவிட் டார்கள். உனக்கு வாழ்க்கை சுவையாக இருந்தால் கடவுள்

சுகப்பாகிவிடுவார் என்று அவர்கள் பயமுறுத்துகிறார்கள். வாழ்க்கைக்கும் கடவுளுக்கும் இடையே விரோதம் இருப்பது போல், மோதல் இருப்பதுபோல், அவர்கள் காட்டுகிறார்கள். பெரும்பான்மையான மதத் தலைவர்கள் அத்துவைதத்தை (எதுவும் இரண்டல்ல என்னும் கோட்பாடு) ஆதரித்தும் இப்படிப் பிரிவினை செய்கிறார்கள். வாழ்க்கையில் சந்தோஷமாக இருப்பதைக் குற்றம்போல் அவர்கள் கருதுகிறார்கள். இன்பங்களை வெறுத்தால்தான் கடவுள் கிடைப்பார் என்கிறார்கள்.

வாழ்க்கையில் நிகழும் இன்பங்கள் இயல்பானவை. அவையும் கடவுளால் அளிக்கப்பட்டவைதாம். வாழ்க்கையில் இனிய ரசத்தை ஓடச் செய்தவர் அவர்தாம். இன்பங்களைப் படைத்தவன் நீ அல்லன். நீ படைத்திராததால் நீ அவற்றை விலக்கவும் முடியாது. உன் கையைக் கடவுளின் கை பற்றிக் கொண்டுள்ளது. அவரது பிடியிலிருந்து உன் கையை விலக்க முடியாது. பூக்கள் அழகாக உள்ளன. இயற்கையின் ஒலிகள் காதில் இனிமையாகப் பாய்கின்றன. நீல வானத்தைப் பார்த்து மனம் சாந்தமாகிறது. அழகிய காட்சிகளைக் கண்டு மனம் சிலிர்க்கிறது. இந்த இனிய பிரவாகம் நீ சொல்லிப் பெருகுவதில்லை. இவை கடவுளின் விருப்பத்தால் உனக்குக் கிடைத்தவையாகும்.

**ஜா**ர்ஜ் குர்ஜியேஃப்* உலகிலுள்ள மதங்கள் கடவுளுக்கு எதிரானவை என்னும் விசித்திரக் கருத்தை முன்வைக்கிறார். நாமோ மதங்கள் கடவுளை வழிபடுவதற்காக அல்லவா ஏற்பட்டவை என நினைக்கிறோம். அத்துடன் நிற்காமல், அவர் 'நீ போற்றும் மகாத்மாக்கள் அடிப்படையில் கடவுளின் எதிரிகள்' என்கிறார். ஏனெனில் அவர்கள் கடவுள் படைத்தவற்றிற்கு எதிராக உன்னை இட்டுச்செல்கிறார்கள். கடவுள் படைத்ததே நடனம். வாழ்க்கை முழுவதுமே ஒரு திருவிழா. ஒவ்வொரு பூவும், ஒவ்வோர் இலையும் அசைந்தாடியபடியே உள்ளன. படைப்பில் எங்கு பார்த்தாலும் வானவில்போல் வண்ணக்களஞ்சியம். நீ வணங்கும் மகாத்மாக்களோ வானவில், மலர்கள், இலைகள் முதலிய எதையும் பார்த்து ரசிப்பதில்லை. அவர்களது வாழ்க்கை வறண்ட நதிபோல் மண்திட்டுகளாக உள்ளது.

---

* Gurdjieff, Georges ஆர்மேனிய நாட்டு ஞானி

கடவுள் எங்கும் பசுமையாகப் படர்ந்திருக்கிறார். இதை எதிர்த்துச் செல்ல வேண்டிய தேவையில்லை. இந்தப் பசுமையிலேயே அவரைத் தேடவேண்டும். அஷ்டாவக்ரர், கபீர்தாசர், லாவோத்சு ஆகிய உண்மையான ஞானிகளின் உபதேசத்தின் சாரம் என்னவெனில், 'எங்கே வாழ்க்கை இயங்குகிறதோ, எங்கே உயிர்த்துடிப்பு உள்ளதோ, அங்கு கடவுள் மறைந்து நிற்கிறார்' என்பதுதான். உனக்கு அவர் தென்படவில்லையெனில் உன் கண்களைக் கழுவி மீண்டும் பார் தியானம் என்னும் வசிய மையை உன் கண்களில் பூசிக்கொண்டு பார். உன் முகத்தை மூடியிருக்கும் பர்தாவை அகற்று. இதயக் கதவைத் திறந்துவை. வாழ்க்கையின் இயக்கத்தில்தான் மோட்சம் உள்ளது. வாழ்க்கையின் இயக்கத்தில்தான் கடவுள் உள்ளார்.

ஜப்பானிய ஞானி ரின்ஜாயி என்பவர் உலகமும் (உலகியலும்) நிர்வாண (முக்தி) நிலையும் ஒன்றே என்கிறார். ஜீவன் முக்தனிடம் இரண்டும் காணப்படுகின்றன. ஜீவன் முக்தன் அத்துவைத நிலையில் விளங்குகிறான். அவனுக்கு வாழ்க்கையும் கிடைத்துவிடுகிறது; மோட்சமும் வசப்படுகிறது.

ஒரு காட்டில் நெருப்புப் பிடித்துக் கொண்டுவிட்டது. அங்கே நடக்க முடியாத ஒருவரும் பார்வையற்ற இருவரும் வாழ்ந்துவந்தனர். இருவரும் தப்புவதற்கான வழியை யோசித்தனர். அதன்படி முடவர் பார்வையற்றவரின் தோளில் உட்கார்ந்து கொண்டார். அவரால் நெருப்பு இல்லாத பகுதியைப் பார்த்து திசை கூற முடியும். இதனால் பார்வையற்றவரால் தடுக்காமல் நடக்க முடியும்.

இவ்வாறு அவர்கள் உயிர் பிழைத்துக் காட்டுக்கு வெளியே வந்தார்கள். அவர்கள் பிரிந்து முயன்றிருந்தால் இருவருமே இறந்திருப்பார்கள். ஒத்துழைப்பின் காரணமாக அவர்கள் சாவிலிருந்து தப்பிவிட்டனர். முடவர் பார்வையற்றவருக்குப் பார்க்கும் சக்தி கொடுத்தது போலவும், பார்வையற்றவர் முடவருக்கு நடக்கும் சக்தி கொடுத்தது போலவும் ஆனது.

ஜீவன் முக்தி என்பது இம்மாதிரி நிலைதான். இதில் ஜீவனின் தோள்மேல் கடவுள் அமர்கிறார்; வழிகாட்டுகிறார். இதில்

வாழ்க்கையின் சாமானிய நிலையில் கடவுளின் விசேஷத் தன்மை வெளிப்படுகிறது. ஆகவே அஷ்டாவக்ரர், ஜீவன் முக்தன் வெளிப்பார்வைக்கு மற்ற சாதாரண மனிதர்களைப் போலவே தெரிவான்; சாதாரண மனிதன் போலவே நடந்துகொள்வான். வித்தியாசம் உள்ளே இருக்கிறது. விசேஷத் தன்மை உள்ளே இருக்கிறது.

ஜீவன் முக்தன் வசிப்பது என்னவோ உலகில்தான். ஆனால் அவன் உலகுடன் ஒட்டிக்கொள்ளமாட்டான். உலகத் தளைகளில் சிக்கமாட்டான். அவன் மற்றவர்களைப் போலவே செயல்கள் புரிவான். ஆனால் அவற்றைக் கடவுள் தன் மூலம் செய்விப்பதாக எண்ணுவான். தன்னை கர்த்தாவாக நினைக்கமாட்டான். தன்னைக் கடவுளின் கருவியாகக் கருதுவான். 'எது நடைபெறுகிறதோ, அது நடக்கட்டும்; எது நடைபெறவில்லையோ அது நடைபெற வேண்டாம்' என்பான் அவன். ஒரு செயல் இப்படித்தான் நிகழ வேண்டுமென்றோ, இப்படி நிகழக்கூடாது என்றோ அவன் வற்புறுத்துவதில்லை. அவன் எல்லாவற்றையும் பார்க்கிறான். ஆனால் காணும் காட்சிகளால் அவன் பாதிப்படைவதில்லை. இவ்வாறு உயிர் வாழ்ந்தபடியே முக்தி மனநிலையில் இருப்பது மிகவும் மகத்தான விஷயமாகும்.

நீ உலகில் பொதுவாக இருவகை மனிதர்களைக் காண முடியும். ஒரு வகையினர் போகி எனப்படுவர். இவர்கள் பார்வையற்றவர்கள் போன்றவர்கள். தட்டுத் தடுமாறியபடி இடித்துக்கொண்டு வாழ்க்கையில் துன்பம் அனுபவிக்கின்றனர். இன்னொரு வகையினர் மகாத்மாக்கள் என்று தவறாக வணங்கப்படுவோர் ஆவர். அவருக்கு வழி எது என்று தெரியும். ஆனால் அவரால் நடக்க முடிவதில்லை. பரமஞானி என்பவர் மேற்கண்ட இருவகையினரின் ஆக்கபூர்வமான ஆற்றல்களின் இணைப்பாக இருப்பார். அவர் சமூகத்தைத் துறந்து ஓடிவிட மாட்டார். உலகில் வாழ்ந்தபடியே அவர் இறைவனைப் பெற்று விடுவார். அவரது வாழ்க்கையே தவம் போன்றதுதான். அவர் உடலைக் கோயிலாகப் பார்க்கிறார். வாழ்வதை அதன் வழிபாடாக நடத்துகிறார்.

ஜீவன் முக்தியின் மூன்று அடையாளங்களாக உடல் இறைவனின் ஆலயமாக ஆகிவிடல், உலகம் என்பதைக்

கடவுளின் விரிவாக்கமாகக் காணுதல், ஒவ்வொரு பொருளிலும் கடவுளின் தரிசனம் ஆகியவை ஆகும். அப்போது சிறையி லிருந்தாலும் அது வீடாகத் தெரியும்; விலங்குகள் தங்க வளையல்களாகத் தோன்றும்.

ஜீவன் முக்தன் இப்போதுள்ள உலகேகூட முழுமையானது என்றுதான் கருதுவான். இதைவிட நன்றாக இருந்திருக்கலாம் என் அவன் ஏங்கமாட்டான். அவன் தற்போதுள்ள உலகைக் குறைகூற மாட்டான். பற்று வைப்பதும் குறை காண்பதும் அவனிடம் இல்லையாதலால் அவன் சாவின் மூலம் உலகைவிட்டுச் செல்ல அஞ்சமாட்டான். சாவிற்கும் மேலான முக்தி உணர்வு அவனுக்கு வசப்பட்டுவிட்டது. உயிருடன் உள்ளமையால் அவனது உடலும் ஆத்மாவும் சந்தித்துக்கொண்டன. உலகமும் சுவர்க்கமும் இணைந்தன. சாதாரணமும் சிறப்பும் கலந்தன. உட்புறமும் வெளிப் புறமும் ஒரே தன்மையாயின. எந்த நெருப்பும் அவனுக்குத் தீங்கு செய்யாது. அதிலிருந்து தப்பிக்க உதவும் வெவ்வேறான ஆற்றல்கள் அவனிடம் இணைந்துள்ளன. இவ்வாறு உள்ளும் வெளியும் இணைவது யோகம். இந்த இணைப்பு நிலையை அடைந்தவன் யோகி எனப்படுகிறான்.

இதைப் புரிந்துகொள்வது கடினமாகத் தெரிகிறது. நீ உலகில் வாழ்கிறாய். இன்பங்களை அனுபவிக்கிறாய். ஆனால் அவற்றால் பிறகு விளைந்த பிரச்சினைகளையும் அனுபவித்திருக்கிறாய். மதத் தலைவர்கள் போகங்களைக் கைவிடுமாறு உனக்கு அறிவுறுத்துகிறார்கள். குடும்ப வாழ்க்கையைத் துறந்து ஓடிப்போ என உன்னை விரட்டுகிறார்கள். அவர்கள் சொல்வது சரியென்றே உனக்குத் தோன்றுகிறது. பிரச்சினைகளைச் சமாளிக்க ஓடிப்போவதே சரியான உபாயம் என நினைக்கிறாய்.

ஆனால் இந்த மதத் தலைவர்களின் கண்களை ஆழ்ந்து நோக்கு; ஊடுருவிப் பார். அவற்றில் வாழ்க்கையின் பிரகாசம் தெரியாது. இடிபாடுகள் போன்ற சோகம்தான் தெரியும். இவர்கள் அருகில் நீ அமர்ந்தால், வறட்சிபோல் உணர்வாயே தவிர, அவர் களிடமிருந்து உன்னை நோக்கி ஜீவ அமிர்தம் பிரவாகிப்பது போல் உணரமாட்டாய்.

ஆனால் ஒரு மகாத்மாவைக் குறித்து ஏற்கெனவே நீ சில மதிப்பீடுகள் வைத்திருந்தால், உனக்கு யதார்த்த நிலை புரியாது. மகாத்மா எனப்படுபவர் தினமும் ஒருவேளைதான் (பகலில்) சாப்பிடுபவர் என்று நீ முடிவெடுத்திருந்தால் அது நகைப்பிற் குரியது. நம்நாட்டில் ஏழைகள் ஒருவேளைதான் (பிற்பகலில்) சாப்பிடுகிறார்கள். முஸ்லிம் சகோதரர்களும் ரம்ஜான் சமயம் இரவு மட்டும்தான் சாப்பிடுவார்கள். அவர்களில் ஃபக்கீர் எனப்படும் துறவிகள் சிலரைத் தவிர மற்றவர்களை ஒட்டுமொத்தமாக மகாத்மாக்கள் என்று கூற முடியுமா? மேலும், ஒரு மதத்தின் மகாத்மாக்களை மற்ற மதத்தினர் அவ்வாறு கருதுவதில்லை. ஒரு மதத்தின் மகாத்மாக்களின் நடவடிக்கைகளும் வாழும் விதமும் மற்ற மதத்தினரைச் சிரிக்கவைக்கின்றன. உதாரணமாக, துறவி களில் ஒருவகையினர் ஆடை அணியாமல் திருவிழாக்களில் திரிகின்றனர். வேறு சிலர் நீண்ட கேசத்தை வளர்த்துக்கொண்டு. கையாலேயே ஒவ்வொரு முடியையும் அவ்வப்போது பிடுங்கி எறிகின்றனர். இவர்களைக் காணும் மற்ற மதத்தினர் இவர்களுக்கு புத்தி பேதலித்துவிட்டதோ என்று சந்தேகப்படுகின்றனர்.

நீ முன்கூட்டியே எவ்விதமான அளவுகோலும் வைத்துக் கொள்ளாமல் சமூகத்தில் மகாத்மா எனப்படுபவர்கள் நடந்துகொள்ளும் விதத்தை ஆராய்ந்துபார். இவர்களில் பெரும்பான்மையோர் மகாத்மாக்கள் அல்லர் என்ற முடிவிற்கே வருவாய். அதேசமயம் சாதாரண மக்களில் சிலரை மகாத்மாக்கள் என்று கூறலாமே என்றும் நீ நினைப்பாய்.

எவரது அன்றாடச் செயல்களில், தினசரி வாழ்க்கையில் கடவுளும் இணைந்துள்ளாரோ அவரே மகாத்மா ஆவார். அவருடைய செயல்கள் இசையில் சுருதி சேருவதுபோல் சீராக இணைந்திருக்கும். அவர் சாப்பிடுவதும் தியானம் போல் இருக்கும். கடையில் வியாபாரம் செய்தாலும் தியானம் போலி ருக்கும். அவரது வாழ்க்கையில் கடவுள் நினைவையும் கடை நினைவையும் பிரிக்க முடியாது.

கபீர்தாசர் கூறுகிறார்: 'நான் உட்கார்வதும் எழுவதும் கடவுளுக்கு சேவைதான். நடந்தால் அது கோயிலுக்குள் பிரதட்சணம் வருதல் போன்றே கடவுளின் வழிபாடுதான். சுற்றிவருவதற்குக் கடவுளைத் தவிர வேறு யார் உள்ளனர்? நான்

உண்பது, பருகுவதும்கூட கடவுளின் சேவையே.' கோயிலில் கடவுளுக்கு உணவு வைப்பதை நைவேத்திய சேவை என்கிறோம். உனக்குள்ளேயும் கடவுள் வீற்றிருக்கிறார். நீ அவருக்குப் படைப்பதாக எண்ணி அதற்கேற்ப உணவு கொள்ளவேண்டும்.

இவ்வாறு வாழ்க்கையின் அன்றாட நடவடிக்கைகளிலும் புனித உணர்வு நிறைந்து விளங்கினால், சாதாரண விஷயத்திலும் தெய்விகத்தின் கலப்பை ஊகித்தால், ஒவ்வோர் அணுவிலும் பிரம்மாண்டம் (பிரபஞ்சம் முழுவதும்) காட்சி தந்தால், அந்த நிலைதான் ஜீவன் முக்தி.

இதனால்தான் நான் உபதேசம் செய்யும்போது, 'நீ துறவறத்தை விரும்புகின்றவனாயின் சந்நியாசி ஆகிவிடு ஆனால் இதற்காக வீட்டை, குடும்பத்தைத் துறந்து ஓடாதே. நீ துறவறத்தை உன் வீட்டிற்குள் கொண்டுசெல். துறவறம் என்பது மாபெரும் புரட்சி. அதை வீட்டுக்குள் இட்டுவந்தால், உன் வீடு கோயிலாக மாறிவிடும்.

உன் வாழ்க்கை இதுவரை இயல்பாக இருந்தது போன்றே தொடரட்டும். துறவறம் காரணமாக உன் வாழ்க்கையைச் செயற்கையாக்கிவிடாதே. கடவுள் நேர்வழியில் கிடைத்துவிடுவார்; எளிதாகக் கிடைத்துவிடுவார். அதற்கேற்ப நீ உன்னை எளிமைப்படுத்திக்கொள். சிக்கல் கடவுளிடம் இல்லை; உன்னிடம் தான் உள்ளது. துறவறம் காரணமாக வாழ்க்கையைத் தலை கீழாக்கிக் கொள்ளாதே. கடவுள் உனக்கு மிக அருகில், தொடும் தூரத்தில்தான் இருக்கிறார். உன் உடலிலுள்ள நரம்பைவிட நெருக்கமாக உள்ளார். மேற்கொண்டு நுணுக்கமாகப் பார்த்தால், உனக்கும் கடவுளுக்கும் நடுவில் இடைவெளி கிடையாது. ஏனெனில் நீயே கடவுள்!

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! எவனாவது சீடன் தன்னுடைய தியான அனுபவங்களைப் பற்றி கூறினால், அவை சுபமான அறிகுறிகள் என்று நீங்கள் பாராட்டுகிறீர்கள். இதனால் அவனது அகங்காரம் அதிகரித்துவிடுகிறது. இது தவறில்லையா?**

**அ**கங்காரம் (மமதை, தன்முனைப்பு) பற்றி ஒரு விஷயம் சொல்கிறேன், புரிந்துகொள். அகங்காரம் சிறிய அளவில் இருந்தால் அதிலிருந்து விடுதலை பெறுவது கடினம்! நான் சொல்வது உனக்குத் தலைகீழான கருத்தாகத் தோன்றும். நான் எப்பொழுதும் தலைகீழான கருத்தைச் சொல்பவன்!

அகங்காரம் எத்துணை பெரிதோ அத்துணை சீக்கிரம் நாம் அதிலிருந்து விடுபடலாம். பழுத்த பழம் தானே விழுவதைப்போல கொழுத்த அகங்காரம் சுயமாக நீங்கிவிடும். காய் நிலையிலுள்ள (கச்சா) பழம் விழுவதில்லை. பலூனில் காற்றை அதிகம் நிரப்பினால் அது திடீரென வெடித்துவிடும். அதுபோல், வளர்ந்து வீங்கிக்கொண்டே செல்லும் அகங்காரம் ஒரு கட்டத்தில் திடீரென்று உடைந்துவிடும். அவ்வாறே நான் சில சமயம் உன் அகங்காரத்தில் காற்று ஏற்றுகிறேன். அதற்காக நான் உன்னை மிகையாகப் புகழ்கிறேன். நீ தியானம் செய்வதாகச் சொன்னால், "நீ தியான நிலையைக் கடந்து சமாதிநிலைக்கு அல்லவா வந்துவிட்டாய்," என்று மிகைப்படுத்துகிறேன். நீ இடுப்பு வலிக்கிறது என்றால், நான், "உனக்குள் உள்ள குண்டலினி சக்தி (அடி வயிற்றில், தொப்புளின் கீழே இருப்பதாகக் கூறப்படும் யோக ஆற்றல்) விழித்துக்கொண்டுவிட்டது," என உனக்கு வாழ்த்துத் தெரிவிக்கிறேன். நீ நெற்றியில் மிகவும் வலிக்கிறது (தலைவலி) என்கிறாய். நான், "அப்படியில்லை, உனக்கு சிவபெருமான்போல் மூன்றாவது கண் திறக்கப்போகிறது. நீ பாக்கியசாலி," என்று விளக்குகிறேன்.

எச்சரிக்கையாக இரு. உன் அகங்கார பலூனில் காற்று திணிக்கப்படுகிறது. ஒரு கட்டத்தில் அது உடையும். அப்போது நீ இதைப் புரிந்துகொள்வாய்.

என்னைச் சந்திக்க ஐரோப்பியர் நிறைய வருகின்றனர். கிழக்கு நாடுகளிலிருந்தும் பலர் வருகின்றனர். கிழக்கு நாட்டவருக்கு, உதாரணமாக இந்தியருக்கு தன்னை என்னிடம் சமர்ப்பித்துக் கொள்வது சுலபமாக உள்ளது. இந்தியர்கள் என்னுடைய கால்களில் அப்படியே விழுந்துவிடுகிறார்கள். ஐரோப்பியர்களுக்கு இப்படி சமர்ப்பணமாகுதல் கடினமாகத் தெரிகிறது. இன்னொருவரின் காலைத் தொட்டு வணங்க

அவர்களால் முடிவதில்லை. ஆனால் ஓர் ஐரோப்பியன் அப்படி வணங்கிவிட்டால் அது உண்மையான வணக்கம்தான். கிழக்கு நாட்டவன் காலைத் தொட்டால் (சரண ஸ்பர்ஸ) அது எந்த அள விற்கு அசலானது என்று கணிக்க முடியாது. அது மேல்போக் காகவும் இருக்கலாம். சிறுவயதிலிருந்த கட்டாயப்படுத்தப்பட்டு காலகிரமத்தில் வெற்றுப் பழக்கமாக மாறிப்போயிருக்கலாம்.

என் தந்தை நான் சிறுவனாக இருந்தபோது பல இடங்களுக்கு அழைத்துச் செல்வார். ஆங்காங்கு எதிர்ப்படுகிற சிலரைக் கால் தொட்டு வணங்கு என்று என் தந்தை எனக்குக் கட்டளையிடுவார். நான் துணிச்சலாக, "அப்பா, நீங்கள் சொல்வ தால் இந்த ஆட்களுடைய காலைத் தொட்டு வணங்குகிறேன். மற்றபடி இவர்கள் அந்த அளவு வணங்கப்படுவதற்கு யோக்கியதை பெற்றவர்கள் அல்ல," என்று சொல்லி விடுவேன். என் தந்தை மறுப்பார். "பலர் நமது உறவினர்களாயிருப்பர். வேறு பலர் நன்றிக்குரியவர்கள். சிலரால் எதிர்காலத்தில் காரியம் ஆகவேண்டியிருக்கும். ஆகவே எந்தப் பெரியவரைப் பார்த்தாலும் காலைத் தொட்டு வணங்குவது பாதுகாப்பு," என்று அவர் புத்திமதி கூறுவார்.

இவ்வாறு கிழக்கு நாட்டு மனிதர்கள் பிறர் காலைத் தொட்டு வணங்குவது அர்த்தமற்ற சடங்காகிவிட்டது. அதையும் அவர்கள் நிதானமாக, முழுமையாகச் செய்வதில்லை. ஐரோப்பியர் சந்திக்க வருகிறார். காலைத் தொட்டு வணங்கும் பழக்கம் அவருக்குக் கற்பிக்கப்படவில்லை அப்பழக்கத்தை அவர் அசிங்கமெனவும் நினைக்கிறார். தன் காலில் நிற்பதை அவர் நம்புகிறார். பிறர் காலைத் தொட்டால் நன்மை என அவரால் ஏற்க முடியவில்லை. ஆகவே ஓர் ஐரோப்பியர் பிறர் காலைத் தொட்டு வணங்கினாரெனில் அப்பழக்கம் குறித்து நன்கு ஆலோசித்த பிறகே அவ்வாறு செய்திருப்பார். எனவே அவரது வணக்கம் வாஸ்தவமானது. மரபு காரணமாகவோ, ஒப்புக்காகவோ அது ஏற்படவில்லை என்பதால் தனிச்சிறப்பு வாய்ந்தது.

இன்னும் ஆழமாகச் சிந்திப்போம். காலைத் தொட்டு வணங்குபவனிடம் முன்னரே கொஞ்சமாவது அகங்காரம் இருக்க வேண்டும். கல்வி முறையில் அகங்காரத்தை வளர்க்கவும் பயிற்சி

தர வேண்டும்! ஒவ்வொரு சிறுவனும் சிறுமி தத்தம் காலில் நிற்கக் கற்பிக்க வேண்டும். சங்கல்பம்தான் (சிந்தனையிலும் செயலிலும் உறுதிதான்) வாழ்க்கைத் தேவை என்று அவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும். மோது, போரிடு, போராடு, குனியாதே, எந்நிலையிலும் வணங்காமுடியாக இரு, அழிந்துபோவதானாலும் தோற்காதே — என்றெல்லாம் தூண்டிவிடு.

வாழ்க்கையின் முற்பகுதி, சுமார் 35 ஆண்டுகள், அகங்காரத்தை வளர்க்கலாம். மீதியுள்ள சுமார் 35 ஆண்டுகள் வாழ்க்கையின் இரண்டாம் அத்தியாயம் ஆகும். அப்போது சமர்ப்பண உணர்வு (அர்ப்பணித்தல்) கற்பிக்கப்பட வேண்டும். வாழ்க்கையின் பிற்பகுதியில் பணிவுடன் எல்லோரையும் வணங்கி இருப்பதில்தான் சந்தோஷம் என்று சுட்டிக்காட்ட வேண்டும். காய் நிலையிலுள்ளதைப் பார்த்து, 'இப்படியே தொங்கியபடியே இரு. மரத்தைவிட்டு விலகாதே. இப்போது விழுந்தால் பழுக்காத நிலையில் (கச்சாவாக) பயன்படாமல் போவாய். மரத்திலேயே நீடித்து அதிகபட்ச சத்தை (ரசத்தைத்) திரட்டிக்கொள்,' என்று கூறு. காய் பழுத்ததும், 'நீ தொங்கியது போதும். விழுந்து மக்களுக்குப் பயன்படு. மரத்திலேயே இருந்தால் அழுகிவிடுவாய்,' என்று எச்சரிக்கை கொடு.

**சூ**ஃபி துறவி பாய்ஜீத் ஒருமுறை தன் குருவுடன் படகில் பயணித்து நதியைக் கடந்துகொண்டிருந்தார். குருவுடன் நிறையப் பேச இதுவே தருணம் என்று ஊகித்து அவர், "தாங்கள் சங்கல்பமும் (வளையா உறுதியும்) வேண்டும் என்கிறீர்கள்; சமர்ப்பண உணர்வும் (பணிவும்) வேண்டும் என்கிறீர்கள். இவை எதிரெதிரான குணங்கள் அல்லவா? இரண்டில் ஒன்றை மட்டும் பரிந்துரையுங்கள். இரண்டையும் வற்புறுத்தி என்னைக் குழப்பாதீர்கள்," என்று கேட்டுக்கொண்டார்.

குரு பதில் சொல்லாமல் ஒரு துடுப்பைப் படகில் போட்டு விட்டு இன்னொரு துடுப்பின் மூலம் படகைச் செலுத்தலானார். ஆனால் படகு முன்னேறாமல் சுழலத் தொடங்கியது. பாய்ஜீத் பதற்றத்துடன், "குருதேவ்! ஒரு துடுப்பு மட்டும் போட்டு நாம் கரையை அடைய முடியுமா? படகு இப்படியே சுற்றி-சுற்றி வரும்.

முன்னோக்கிப் பயணிக்க வேண்டுமானால் இரண்டு துடுப்புகள் தேவையல்லவா?'' என்று கேட்டார்.

குரு சொன்னார்: "ஆம், இரண்டு துடுப்பும் போட வேண்டும். ஒன்றின் பெயர் சங்கல்பம். இன்னொன்று சமர்ப்பணம். இந்த இரண்டின் உதவியும் கொண்டுதான் மேற்கொண்டு பயணம் செய்யலாம். பறவை இரண்டு சிறகுகளால் பறப்பதும், மனிதன் இரண்டு கால்களால் நடப்பது போன்றதும்தான் படகுப்பயணமும்.''

மனித மூளை சம்பந்தமாக மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சி களின்படி நமக்கு இரண்டு மூளைகள் உள்ளன! இவை இணைவ தால் சிந்திப்பது, தியானிப்பது முதலியவை சாத்தியப்படுகின்றன.

உலகம் முழுதும் இரவு-பகல், வாழ்வு-சாவு, இருட்டு-வெளிச்சம், விருப்பு-வெறுப்பு, கருணை-குரோதம் என்பவை போன்ற எதிரெதிரான அம்சங்களால் படைக்கப்பட்டதாகும். இவ்வுலகம் பரஸ்பர எதிர்ப்புகள் சந்திக்கும் இடமாகும். ஆணும் பெண்ணும் ஒன்றாகவும் வாழ முடியவில்லை; பிரிந்தும் போக முடியவில்லை. பிரிந்து வாழ்ந்தால் நெருங்க வேண்டுமென்ற விருப்பம் தோன்றும். நெருங்கிவந்தால் கழுத்தில் சுருக்குக் கயிறு மாட்டிக்கொண்டதுபோல் தோன்றி இருவரும் பிரிய விரும்புவர். இந்த இரு நிலைகளுக்கிடையே வாழ்க்கை பிரவாகம் ஓடுகிறது. இந்த முரண்பாடுகளை நதியின் இரண்டு கரைகள் எனலாம்.

எதிரெதிர் அம்சங்களான சங்கல்பமும் சமர்ப்பணமும் இதேபோல் அடிப்படையில் இணைகோடுகள் போன்றவை. உன் சொந்தக் காலில் நிமிர்ந்து நிற்கக்கூடிய பலம் உன்னிடம் இருந்தால்தான் உன்னிடம் பணிந்துபோகும் குணமும் உண்டாக முடியும்.

ஆகவே அகங்காரத்தைக் காய் நிலையில் அவசரப்பட்டுக் கைவிடாதே. அது பழுத்துத் தானாக உதிரட்டும். ஆரம்பத்தில் 'நான்' என்னும் சொல்லை அழுத்திச் சொல்லு. பிறகு ஒருநாள் அந்த உணர்வை கடவுளின் திருவடிகளில் சேர்ப்பித்துவிடு. கடவு ளுக்குக் காயைச் சமர்ப்பிக்காமல், பழத்தை சமர்ப்பிப்பதுதானே உகந்தது; அதுதானே வழக்கமானது.

ஆனால் ஓர் எச்சரிக்கை. சமர்ப்பண நிலையை அடைந்த பின் தனது பணிவு உணர்வு குறித்து அகங்காரம் கொள்ளக்கூடாது. 'நான் அடியார்க்கும் அடியேன்' என்பதைப் பணிவின் அறிவிப்பாகவும் கருதலாம் அல்லது நுணுக்கமான திமிர் உணர்வின் வெளிப்பாடு என்றும் கருதலாம். 'என்னைவிடப் பணிவானவனைக் காண்பியுங்கள் பார்க்கலாம்' என்று சவால் விடுவது போலிப் பணிவாகிவிடும். இவ்வாறு வாழ்க்கை போட்டி மயமாகிவிடுகிறது. முன்பு அகங்காரம் மூலம் மற்றவர்களைவிட தன்னை உயர்ந்தவனாகக் காட்டிக்கொள்ள முயன்றாய். இப்போது மற்றவர்களைவிடத் தான் அடிமட்டத்தில் இருப்பவன் என்று நீ காட்டிக்கொள்ள முயலுகிறாய். உண்மையிலேயே பணிவு நிலையை அடைந்தவன் அதை முயன்று வெளிக்காட்டிக் கொள்ள மாட்டான். அது அவனது சுபாவத்தின் அங்கமாகி விடுகிறது.

மனிதன் மிகவும் தந்திரசாலி. அவனது அகங்கார உணர்வு எந்த விதத்திலாவது திருப்தி பெற்றுவிடுகிறது. உன் கேள்விக்கு நான் பதில் சொன்னால், 'ஓஷோவே முன்வந்து பதில் சொல்லும்படி என் கேள்வி சிறப்பானது' என்று கர்வமடைவாய். நான் பதில் சொல்லாவிடில், 'ஓஷோ என்ன, எவராலும் பதில் சொல்ல முடியாத அளவிற்கு என் கேள்வி நுணுக்கமானது' என்று மார்தட்டிக் கொள்வாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மல்யுத்த வீரர். அக்கம்பக்கத்து பயில்வான்களைத் தோற்கடித்தவர். அவர் சுற்றுப்பயணம் மேற்கொண்டு சற்றுத் தொலைவில் இருந்த ஊர்களில் வசிக்கும் பயில்வான்களையும் வெல்ல விரும்பினார்.அவரது ஊரின் நதிக்கால்வாய்க்கு அப்பால் ஒரு பயில்வான் விவசாயி இருப்ப தாகவும், அவன் மற்ற பயில்வான்களுக்கு சவால்விடுவதாகவும், முல்லா கேள்விப்பட்டார். அவர் தனது குதிரையிலேறி, சிறிய கால்வாயைக் கடந்து அக்கரைக்குப் போனார். அந்த விவசாயியைப் பார்த்தார். அவன் வயலில் உழுது கொண்டிருந் தான். அவன் பயில்வானைப்போல் வலுவான உடம்பு பெற்றிருந்த போதிலும் அவன் முறையாக மல்வித்தை பயின்றவனில்லை.

முல்லா அவனருகே சென்று குதிரையிலிருந்து இறங்கினார். அவர் விவசாயியைப் பார்த்து, “நீ உன்னை ஜெயிக்க முடியாது என்று எல்லோருக்கும் சவால் விடுகிறாயாமே. நானும் ஒரு பயில்வான்தான். என்னுடன் மோது பார்ப்போம்,” என்றார்.

விவசாயி முறையாக மற்போர் கற்காததால், எவ்வித ஆயத்தமும் இன்றி, அவன் முல்லாவை அலாக்காகத் தூக்கிக் கால்வாய்க்கு மறுபக்கம் எறிந்துவிட்டான்! முல்லா உடம்பிலும் உடையிலும் படிந்துவிட்ட மண்ணைத் தட்டி உதறியபடி, “ஏம்ப்பா, உனக்கு என்னோடு குஸ்திபோட இஷ்டமில்லையெனில், அதைச் சொல்லித் தொலைப்பதற்கென்ன? இதுவா மல்யுத்தம்? என் குதிரையையாவது ஜாக்கிரதையாக எறி. அதன் கால் உடைந்து போனால், நான் ஊருக்குப் போகமுடியாது,” என்று தெரிவித்தார்.

இவ்வாறு மனிதன் எந்த நிலையிலும் அகங்காரத்தைக் கைவிடுவதில்லை. தோல்வி கண்டால் பேச்சை மாற்றிவிடுகிறான். ஆகவே முல்லா தனக்கு மீசையில் மண் ஒட்டவில்லை போலவும், குதிரைக்குக் காயம்படக் கூடாது என்று கவலைப்படுவது போலவும் நடிக்கிறார்.

நான் யாருக்கும் அகங்காரத்திலிருந்து விடுதலைபெற்றுத் தரமுடியாது. நீயே உன் அகங்காரத்தைக் கவனித்து, படிப்படியாக அதைக் குறைத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. எங்கெங்கெல்லாம், எப்பொழுது, யார்-யார் எதிரில் உன் அகங்காரம் தலைதூக்குகிறது என்பதை ஆராய்ந்து, அந்த சூழ்நிலைகளில் அகங்காரத்தைத் தடுக்க அல்லது குறைக்க விழிப்புடன் செயல்பட வேண்டும்.

**போ**தி தர்மர் சீனாவுக்குப் போனார். சீன நாட்டரசர் அவரை தரிசிக்க வந்தார். தன்னிடம் அதிகமாக உள்ள அகங்காரத்தைப் போக்க வழி சொல்லுமாறு கேட்டார். துறவி அவரை மறுநாள் அதிகாலை 3 மணிக்குத் தனியாக வந்து தன்னைச் சந்திக்கச் சொன்னார். “வரும்போது நீ உன் அகங்காரத்தையும் எடுத்துக் கொண்டுவா. நான் அதை முழுமையாக சாந்தப்படுத்தி விடுகிறேன்” என்று வாக்களித்தார்.

அரசர் சற்று பயந்தார். 'இரவு 3 மணிக்கு வரச் சொல்கிறாரே' என்று அரசர் திகைத்தார். 'கையோடு அகங்காரத்தையும் எடுத்துவரச் சொல்கிறாரே! இவருக்கு மூளைக் கோளாறோ?' என்று அரசர் சந்தேகப்பட்டார். அதே சமயம் அவர் போதி தர்மர் மாபெரும் ஞானி என்பதையும் அறிந்திருந்தார். துறவியின் பேச்சில் ஏதோ மர்மம் உள்ளதென நினைத்தார்.

அரசர் இந்தச் சந்திப்பைப் பற்றியே யோசித்ததால் இரவு முழுதும் தூங்கவில்லை. 'அதிகாலை 3 மணிக்கு இருட்டாக இருக்குமே. தனியாக வரச் சொல்கிறாரே. அருகே ஒரு குண்டாந்தடி வைத்திருக்கிறாரே. சற்று மூளைக் கோளாறு உள்ளவராகவும் தெரிகிறாரே' என்று நினைத்தாலும் பிட்சுவிடம் தென்பட்ட ஒரு கவர்ச்சி அரசரை அவரிடம் இழுத்துச் சென்றது.

அரசரை எதிர்பார்த்து மடத்தின் படிக்கட்டுகளில் போதி தர்மர் உட்கார்ந்திருந்தார். அவர் அரசரை வரவேற்றபடியே, "உன் அகங்காரத்தையும் அழைத்துவந்துள்ளாய் அல்லவா?" என்று கேட்டார்.

"சுவாமி, தங்கள் பேச்சு விசித்திரமாக உள்ளது. அகங்காரம் ஒரு திடப்பொருள் இல்லையே. அதை எப்படிக் கொண்டு வருவது?' என்று அரசர் கேட்டார்.

போதி தர்மர் சிரித்தார். "அப்படியானால் 50 சதவிகிதச் சிக்கல் எளிதில் தீர்ந்துவிட்டது. பிறகு அகங்காரம் என்று நீ எதைச் சொல்கிறாய்?" என்று விசாரித்தார்.

"அது ஒரு வகையான எண்ணம், ஆனால் அனைத்திலும் வலுவான எண்ணம் என நான் நினைக்கிறேன்," என்று அரசர் பதிலளித்தார்.

"அப்படியானால் அந்த எண்ணத்தை விரட்ட வேண்டியது தான் பாக்கி. நீ கண்களை மூடி அந்த எண்ணம் இருக்கு மிடத்தைத் தேடு. உன் உள்ளத்தினுள் ஆழ்ந்து அகங்காரம் எங்கே ஒளிந்திருக்கிறது என்று கண்டுபிடி அந்த எண்ணம் அகப் பட்டதும் என்னிடம் கொண்டுவா. அதை என் குண்டாந்தடியால் அடித்து நொறுக்கிவிடுகிறேன்," என்று பிட்சு வழி சொன்னார்.

அரசர் கண்களை மூடியபடி மனத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் ஆராய்ந்தார். அகங்காரம் என்று தனி உணர்வை எங்கேயும் உணர முடியவில்லை. அரசர் அப்படியே தியானத்தில் அமிழ்ந்துவிட்டார். சூரியன் உதிக்கும் நேரமாகி விட்டது. தியான நிலையில் அரசர் மனத்தில் எந்த எண்ணமும் மிஞ்சியிருக்கவில்லை. 'நான்' என்னும் உணர்வே மிஞ்சியிருக்க வில்லை.

போதி தர்மர் அரசரை அசைத்து தியானத்தைக் கலைத்தார். "கண்ணைத் திற. உள்ளே எதைக் கண்டாய்? பதில் கூறு." என்றார்.

அரசர் பிட்சுவின் காலடிகளில் வீழ்ந்தார். "நீங்கள் நிஜமாகவே என் அகங்காரத்தைப் போக்கிவிட்டீர்கள். நான் இதுவரை மனத்துக்குள் ஆழ்ந்து சென்றதில்லை. என் சிந்தனை எப்போதும் வெளிப்புறமாகவே சென்றுகொண்டிருந்தது. அகங்காரம் என்பது ஒரு கண்ணோட்டம் அல்லது அபிப்பிராயம் மட்டுமே ஆகும் என்பது இப்போதுதான் புரிந்தது." என்று ஒப்புக்கொண்டார்."

குழந்தை பிறக்கும்போது அதனிடம் அகங்கார குணம் இருப்பதில்லை. நாம்தான் குழந்தையை மிகையாகக் கொஞ்சியும் பாராட்டியும் அதற்கு அகங்கார குணத்தைப் புகட்டிவிடுகிறோம். பிறப்புடன் சேர்ந்திருந்தால் அகங்காரத்தை மாற்ற முடியாது. நடுவில் கற்பிக்கப்பட்டதால் முயன்று அதைக் கைவிடலாம்.

நீ தனியானதொரு இடத்தில் அமைதியாக அமர்ந்து உள்முகமாக யோசி. அகங்காரம் என்பது கற்பனை மாத்திரமே என்பது புரியவரும். அது ஓர் எண்ண வகை. உன்னை உயர்த்தி நினைக்க வைப்பதால் அது கனவு போன்றது. அந்த கனவுலகத் திமிருடன் 'நான் யார் தெரியுமா?' என்று நிஜ உலகில் நடந்து கொள்கிறாய். ஆகவே ஒவ்வொருவனும் உனது அந்தக் கனவைச் சிதைக்க முயல்கிறான்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் காதலியுடன் கடற்கரைக்குச் செல்வது வழக்கம். ஒருமுறை ஒருவன் நஸ்ருத்தீனை நெருங்கினான்.

அவனது உடல் எடை 150 கிலோ இருக்கும். அவன் கொடுத்த உதையில் நஸ்ருத்தீன் உடம்பெல்லாம் மணல் ஒட்டத் தொலைவில் விழுந்தார். காதலி சிரித்துவிட்டாள். நஸ்ருத்தீனுக்கு அவமானமாகிவிட்டது.

அடுத்த இரண்டு வருடங்கள் அவர் காதலை ஒதுக்கி விட்டுக் கடுமையான உடற்பயிற்சிகள் செய்தார். சத்தான உணவுகளையே சாப்பிட்டார். அவரும் 150 கிலோ எடை உள்ளவரானார். மீண்டும் காதலியுடன் கடற்கரைக்குப் போக லானார். ஒருமுறை ஒருவன் அவரை நெருங்கினான். அவனது உடல் எடை 200 கிலோ இருக்கும். அவன் கொடுத்த உதையில் நஸ்ருத்தீன் தொலைவில் போய் விழுந்தார். இம்முறையும் காதலி வாய்விட்டுச் சிரித்தாள். நஸ்ருத்தீன் அவமானமாக உணர்ந்தார். போதும். இதற்கு மேலும் உடற்பயிற்சி செய்வதானால் இப்படியே ஆயுள் முடிந்துவிடும் என்று இந்த சம்பவங்களைக் கேள்விப்பட்ட வர்களிடம் அவர் கூறினார்.

இப்படி எல்லோரது வாழ்க்கையிலும் நிகழ்கிறது. நீ கஷ்டப்பட்டு உழைத்து ஃபியட் கார் வாங்குவாய். அதேசமயம் பக்கத்து வீட்டுக்காரன் அம்பாசிடர் வாங்கிவிடுவான். நீ மேலும் உழைத்து அம்பாசிடர் வாங்கினால் அவன் இம்பாலா வாங்கி யிருப்பான். நீ சேமிப்பையும் கடனையும் கொண்டு வீடு கட்டினால் உனக்குத் தெரிந்த இன்னொருவன் மாடிவீடு கட்டியிருப்பான்.

அகங்காரம் என்றைக்கும் திருப்தி அடையாது. ஏனெனில் உன்னைவிட எதிலாவது பெரியவன் உன் அகங்காரத்தை உடைத்துவிடுகிறான். நீ உன்னைத் தனிச் சிறப்பு வாய்ந்தவனாக நினைப்பதைப் போலவே மற்றவர்களும் தங்களைப் பற்றி உயர்வாக நினைக்கின்றனர் (One-upmanship). எல்லோரும் அகங்கார நோயால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

உலகில் பெரியோர் யாருமில்லை; சிறியோர் என்றும் யாருமில்லை. எல்லோருமே வெவ்வேறு விசேஷத் தன்மை வாய்ந்தவர்கள். ஒவ்வொருவனிடம் பிறரால் வெல்ல முடியாத ஒரு சிறப்பாவது இருக்கும். உன்னைப்போல் ஒருவன் தோன்றிய தில்லை; தோன்றப் போவதுமில்லை, நீ தன்னேரில்லாதவன் (unique). உன்னைப்போல் நீ ஒருவன்தான் உள்ளாய். ஒருவரை

இன்னொருவருடன் ஒப்பிட வழியில்லை; ஒப்பிடத் தேவையு மில்லை.

உலகிலுள்ள அனைவரும் இறந்துவிட்டதாகவும், நீ மட்டுமே மிச்சம் என்று கற்பனை செய்துபார். அந்த சமயம் நீ அகங்காரம் கொள்ள முடியுமா? இன்னொருவனும் மிஞ்சி ஒரு கோடு இழுத்திருந்தால்தானே நீ அதைவிட பெரிய கோடு இழுக்க முடியும். இதேபோல் நீ உனக்குள்ளேயே இறங்கும்போது வெளியுலகத் தொடர்பு நீங்கி நீ மட்டுமே உள்ளதால் அகங்கார உணர்வு எழுவதில்லை.

தினமும் ஆழ்ந்த உறக்கத்தின்போது என்ன நடக்கிறது? அப்பொழுதும் அகங்காரம் நீடிக்கிறதா? அரசனின் தூக்கத்திற்கும் ஆண்டியின் தூக்கத்திற்குமிடையே வித்தியாசம் கிடையாது. அரசன் தூக்கத்தில் அரசனாக உணர்வதில்லை. ஆண்டியும் அப்படியே. தூங்கும்போது நீ எந்த மதத்தவன், சாமியாரா- குடும்பஸ்தனா, யாருக்கு என்ன உறவு, என்னென்ன பட்டங்கள்- பரிசுகள் பெற்றாய் முதலிய எதுவும் நினைவிலிருப்பதில்லை. எண்ணங்கள் எழாத இடத்தில் அகங்காரமும் இராது. ஆகவே மிகையான மதிப்பீட்டு எண்ணங்களின் தொகுப்பே அகங்காரம் என்பது.

உறக்கம் போன்றதே சமாதி நிலை. இங்கும் எண்ணங்கள் எழுவதில்லை. அகங்காரம் மூள்வதில்லை. சாந்த நிலை உருவாகிறது. ஆனால் தூக்கம் போன்ற மயக்கம் சமாதியில் கிடையாது.

உன் அறையிலிருந்து நாற்காலி முதலிய் தளவாடங்களை அகற்றியாகிவிட்டது. சுவரில் மாட்டியிருந்த படங்களை நீக்கியாகி விட்டது. அறை முற்றிலுமாக வெறுமையாகிவிட்டது. விளக்கு ஏற்றவில்லை. ஆகவே இருட்டாக உள்ளது. இது உறக்க நிலை. அறை அப்படியே காலியாக இருந்து விளக்கு ஏற்றினால் அது சமாதி நிலை. இதற்குமுன் நடக்க முடியாதபடி அறையை அடைத்துக் கொண்டு கிடந்த பொருட்களே விதம்விதமான எண்ணங்கள். அவற்றின் கொந்தளிப்பாக வெளிப்படுவதே அகங்காரம். அது தூக்கத்தைக் கெடுக்கும். சமாதியை மேற்கொள்ள உதவாது.

எவராவது உன் காலைத் தன் காலால் மிதித்துவிட்டால், 'நான் யார் தெரியுமா?' என்று சீறுகிறாய். உண்மையில் உனக்கு நீ யார் என்று தெரியுமா?

ஒருமுறை ரயில் பயணத்திற்காக ஸ்டேஷனுக்குப் போனேன். பலத்த கூட்டம். பெட்டியில் ஏறமுடியவில்லை. எனக்கு முன்னால் ஏற முயன்றவரும் நானும் பெட்டியிலிருந்த கூட்டத்தால் மீண்டும் பிளாட்பாரத்தில் தள்ளப்பட்டோம். அப்போது நான் அவர் காலை மிதித்துவிட்டேன். அவர் கோபமாக, "உமக்குக் கண் இல்லையா? நான் யார் தெரியுமா?" என்று கத்தினார்.

நான் அவரை அமைதிப்படுத்தி, "நான் இப்படி ஒரு ஞானியைத்தான் தேடினேன். இந்த ரயிலை விடுங்கள். அதைவிட முக்கியமான விஷயமாகிய நீங்கள் உண்மையில், அடிப்படையில் யார்? எனக்கு அறிமுகப்படுத்துங்கள். என் படுக்கை (ஹோல்டால்) இதோ உள்ளது. இதன்மீது அமருங்கள். அல்லது என் பெட்டிமீது வசதியாக உட்கார்ந்துகொள்ளுங்கள். நான் பிளாட்பாரம் தரையில் உட்காருகிறேன். 'நான் யார் தெரியுமா?' என்று கேட்டதால், உங்களை உங்கள் ஒருவருக்காவது தெரிந்திருக்குமென நம்புகிறேன்," என்று பணிவாகச் சொன்னேன்.

'இந்த ஆளுக்கு பைத்தியம் பிடித்துவிட்டதுபோல' என்று முணுமுணுத்தபடியே அவர் தனது பெட்டியை எடுத்துக்கொண்டு வேறிடத்திற்கு அகன்றார்.

நீயும் அடிக்கடி, 'நான் யார் தெரியுமா?' என்று மற்றவர்களை மிரட்டுகிறாய். ஆனால் நீ யார் என்று உண்மையில் உனக்குத் தெரியாது. அதை முதலில் கண்டுபிடி. அப்படி முயன்று கண்டுபிடிப்பவன், 'நான் என்று ஒருவன் இருப்பதாகத் தெரியவில்லையே' என்று கூறிச் சிரிப்பான். 'நான் யார்?' என்று கண்டுபிடிப்பவன், 'நான் என்று யாருமே இல்லை' என்று கூறுவது வேடிக்கை. தான் யார் என்று தெரியாதவன் அகங்காரம் காரணமாக 'நான் யார் தெரியுமா?' என மிரட்டுகிறான். அறிவிலி தான் யார் என்றும், தான் முக்கியமானவன் என்றும் அறிவிக்கிறான் ஞானியோ, 'நான் என்று தனியாக யாரும் இல்லை, கடவுள் மட்டுமே உள்ளார்' என்கிறார்.

தற்சமயம் நீ அறியாமை வசப்பட்டிருந்தால் பரவாயில்லை. நீ உனக்குள் இறங்கு. கொஞ்சம் தேடு. உள்ளே பரவியிருக்கும் இருட்டில் ஓரிடத்தில் கடவுள் உட்கார்ந்திருக்கிறார். நீ ஞான தீபம் ஏற்று. அவர் உள்ள இடம் தென்படும்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மனைவிக்குத் தலைசுற்றல் ஏற்பட்டுப் படுக்கையில் விழுந்துவிட்டாள். நஸ்ருத்தீன் போன் செய்து டாக்டரை வரவழைத்தார். டாக்டர் அந்த குடும்பத்தின் நீண்ட கால நண்பர். முல்லா அவரை வரவேற்றார். இருவரும் பல விஷயங்களைப் பற்றி நேரம் போவது தெரியாமல் பேசினர். சிறிது நேரம் சீட்டாடினர். இப்படி இரண்டு மணி நேரம் கழிந்தது. டாக்டர், “நான் இப்போது போக வேண்டும். நோயாளிகள் காத்திருப்பார்கள். நீங்கள் எதற்கு என்னை அழைத்தீர்கள் என்று இதுவரை சொல்லவில்லையே. நானும் கேட்க மறந்து போனேன். வீட்டில் மனைவி, குழந்தைகள் நலம்தானே?” என்று விசாரித்தார்.

முல்லாவுக்குத் தன் மனைவி மூர்ச்சையடைந்தது அப்போதுதான் நினைவுக்கு வந்தது. ஆகவே அவரும் இதுவரை ஒருவகையான மறதியில் இருந்து விட்டார். டாக்டர் விஷயமும் அப்படித்தான். “போன் செய்து எதற்காகக் கூப்பிட்டீர்கள்?” என்று வந்தவுடனே கேட்டிருக்க வேண்டாமா? நண்பரைச் சந்தித்த மகிழ்ச்சியில் அவர் அரட்டையிலும் சீட்டாட்டத்திலும் நேரத்தை வீணாக்கிவிட்டார். தனது மருத்துவமனையில் நோயாளிகள் காத்திருப்பதையும் மறந்துவிட்டார். ஆகவே அவரும் மயக்க நிலையில் இருந்தார் என்றே சொல்ல வேண்டும்.

நாமும் பரபரப்பாக வாழ்க்கை நடத்தினாலும் சுய உணர்வற்ற நிலையில் ஓடிக்கொண்டே இருக்கிறோம். இதுவும் மயக்க நிலைதான். எப்பொழுதாவது கடவுள் நினைவு வரும்போது ஒரு நிமிடம் விழித்துக் கொள்கிறோம்.

நூற்றுக்கணக்கான மக்களின் வாழ்க்கையை ஆராய்ந்த வரான ஞானி குர்ஜியேப் தனது முடிவைக் கூறுகையில், ‘எழுபது ஆண்டுகள் வாழ்ந்தவனும் முழு உணர்வுடனும் முழு லயிப் புடனும் 70 நிமிடமாவது தனது வாழ்வில் கடவுளை நினைத்திருந் தாலும் அது அரிய விஷயம்தான்’ என்கிறார்.

உண்மையான கடவுள் உணர்வு மேலிட்டால் நீ நடத்தி வரும் வாழ்க்கை ஒரு கனவு போன்றதே என்பது புரியும். நீ வாழ்க்கையில் கஷ்டப்பட்டுச் சம்பாதித்தவை கல்லுக்கும் மண்ணுக்கும் சமம் என்பது தெரியவரும். அவை அழிகின்ற பொருட்கள், தாமாக அழியாத சொத்துகளும் உன்னிடமே நிரந்தரமாக இருக்கப் போவதில்லை.

**பு**த்தரைச் சந்திக்க வந்த ஒருவன், "எனக்கு மற்றவர்களின் இழிநிலை கண்டு அவர்கள் மீது இரக்கம் உண்டாகிறது. நான் மக்களுக்கு சேவை செய்ய விரும்புகிறேன். எப்படி சேவை செய்ய வேண்டுமென்று வழிகாட்டுங்கள்," என வேண்டிக் கொண்டான்.

புத்தர் அவனை உற்றுநோக்கியபடி இருந்தார். அவருடைய கண்களில் கண்ணீர்! வந்தவன் பதைத்துப்போனான். "சுவாமி, என்ன இது? தங்கள் கண்களில் கண்ணீர்! என்னை எதற்காக இப்படி உற்றுப் பார்க்கிறீர்கள்?" என்று விசாரித்தான்.

புத்தர் கூறினார், "உன்னைப் பார்த்து எனக்கு இரக்கமாக இருக்கிறது. நீயோ மற்றவர்களுக்கு இரக்கம் காட்ட விரும்புவ தாகச் சொல்கிறாயே. நீ முதலில் உன்மீது இரக்கம் காட்டிக்கொள்."

வந்தவன் திகைத்தான். "தாங்கள் சொல்வதன் அர்த்தம் புரியவில்லையே, சுவாமி. என்னிடம் எல்லா வசதிகளும் உள்ளனவே. பணம்-சொத்து, வீடு-வயல் எல்லாம் உள்ளன. நான் மக்களுக்கு சேவை செய்ய முடியும். தாங்கள் கட்டளையிட்டால், தானமாகவும் நிறையத் தர முடியும்," என்றான்.

"நான் அந்த மாதிரி வசதிகளைக் குறிப்பிடவில்லை. அவை இங்கேயே நின்றுவிடும். வேறுவிதமான, விலை மதிக்க முடியாத, நிரந்தரச் செல்வம் உனக்குள் இருப்பதை நீ அறிவாயா? அந்தச் செல்வத்தைப் பயன்படுத்தாமல் காலத்தை ஓட்டி இறக்கின்ற மனிதர்களைப்போல் நீயும் உள்ளதால் உன்மீது எனக்கு இரக்கம் ஏற்படுகிறது," என்று புத்தர் விளக்கினார்.

நானும் கேள்விகேட்ட உன்னைப் பார்த்து இரக்கப்படு கிறேன். உனக்குள் புதைந்துள்ள செல்வத்திற்கு நீ முதுகு காட்டி

உட்கார்ந்துள்ளாயே என்று எனக்கும் புத்தர் மாதிரி கண்களில் நீர் தளும்புகிறது. அந்த உன் செல்வத்தின் மீதே நீ உன் உரிமையை நிலைநாட்டிக் கொள்ளவில்லை. நீ அதன் எஜமானனாக இருந்தும் அதை நீ பாராமல் இருக்கிறாய். நீ கேட்டதும் அது உனக்குக் கிடைத்துவிடும். உனது பேரரசு, நீ பிறக்கையில் உனக்குக் கிடைத்த கடவுளின் பேரரசு, அப்படியே பராமரிப்பின்றிக் கிடக்கிறது. பிரம்மாண்டம் உனக்கு வசப்படக்கூடிய நிலையில் நீ அற்பத்தின் பின்னால் ஓடுகிறாய். அர்த்தமுள்ளதைத் தேடாமல் அர்த்தமற்றதை சேகரிக்கிறாய். ஆத்மாவைப் புறக்கணித்தபின் நீ யார்? நீ நிஜமானவன் அல்லன். நீ நிழல் மனிதன் மாத்திரமே.

**ஜெ**ர்மனி நாட்டுப்புறக் கதை ஒன்று. ஒரு மனிதன் ஒரு பூதத்தை பரிகசித்ததால் பூதம் கோபம் கொண்டது. "இன்றிலிருந்து நீ உன் நிழலை இழக்கும்படி சாபமிடப்போகிறேன்," என்று மிரட்டியது. அந்த மனிதன் சிரித்தபடி, "இதுகூட ஒரு சாபமா? இதனால் எனக்கு என்ன கேடு விளையும்? என் நிழலுக்கும் எனக்கும் இடையே எந்தக் கொடுக்கல்-வாங்கலுமில்லையே. நிழலில்லாமல் போனால் எனது எந்த வேலை நின்றுபோய்விடும்?" என்று கேட்டான். "என்ன நடக்கிறது என்று நீயே பார்த்துக்கொள்," என்று கூறி பூதம் சாபம் கொடுத்துவிட்டுப் போனது.

அந்த மனிதனைப் பற்றி ஊர்க்காரர்கள் முதலில் கவனம் செலுத்தவில்லை. பிறகுதான் சிலர்-சிலராக அவனது நிழல் வெயிலிலும் விளக்கு வெளிச்சத்திலும் தென்படுவதில்லை என்பதைக் கவனித்தனர். ஊர் மக்களுக்கு பீதி உண்டானது. 'இப்படி யாருக்கும் நேர்ந்ததில்லையே! மனிதனாயிருந்தால் கட்டாயம் நிழல் விழுமே. இவன் பிசாசு-பூதம் போலிருக்கிறது' என்று மக்கள் பயந்தனர்.

இந்தச் செய்தி பரவியதும் அவன் மனைவி அவன் வீட்டுக்குள் வரமுடியாதபடி வாசற்கதவைத் தாழ்ப்பாளிட்டு விட்டாள். நண்பர்கள் ஒளிந்து கொண்டனர். கடைகளில் அவன் எதுவும் வாங்க முடியவில்லை. உணவு விடுதிகளில் உள்ளே விடவில்லை. பூதத்திற்குப் போடும் அளவு உணவு நம்மிடம் எங்கே இருக்கிறது என்று அவர்கள் நினைத்தனர். அந்த மனிதன்

அதிர்ந்துபோனான். வெறும் நிழல் இல்லாமல் போனால் வாழ்க்கை இப்படியா குழப்பமாகிவிடும் என்று அவன் திகைத்தான்.

இதைவிட மோசமான நிலை உண்டு. நிழல் நீங்கினாலேகூட இத்துணை பிரச்சினைகள். ஆத்மாவையும் இழந்தால் உனது நிலை எத்துணை மோசமாகிவிடும் பார். இன்னொரு கோணத்தி லிருந்து பார்த்தால், அப்படிப் பிரச்சினை தோன்றாமலுமிருக்கலாம். ஏனெனில் உன்னைச் சுற்றியுள்ளவர்களில் பலர் ஆத்மாவை அறிந்திருக்கவில்லை. வேறு பலர் ஆத்மாவை இழந்தவர்கள். உன்னிடமும் ஆத்ம உணர்வு காணப்படாததை அவர்கள் பொருட்படுத்தமாட்டார்கள்.

நிழல் இல்லாவிடில் பிரச்சினை. ஆத்மா இல்லாவிடில் பிரச்சினை. ஆத்ம உணர்வு வெளிப்படையாகத் தெரிந்தாலும் ஆபத்து என்றே நினைக்கிறேன். ஆத்மாவை பிரச்சாரம் செய்த தால்தான் மகாவீரர் கல்லடிபட்டார்; புத்தர் அவமதிக்கப்பட்டார்; சாக்ரடீஸ் விஷம் குடிக்க நேரிட்டது; இயேசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்கள். பெரும்பான்மை மக்கள் ஆத்மா பற்றி சிந்திக்காத தால்தான் உலகத்தோடு ஒட்டிச் செல்லாத மகாத்மாக்களுக்கு இப்படி தண்டனை கொடுக்கிறார்கள்.

இதற்கு மாறாக, ஆத்ம உணர்வு பெற்றவர்களிடமிருந்து மற்றவர்களும் ஆத்ம உணர்வு பெறும் கலையைப் பயில வேண்டும். ஆனால் மகாத்மாக்களைப் பார்த்து நமக்கு சங்கடம் தான் மேலிடுகிறது. பயமும் மேலிடுகிறது. இவர்களைப் போல் நாம் ஆகவில்லையே என்னும் ஏக்கமும் தலைதூக்குகிறது. நமது வாழ்க்கை வீணாகிவிட்டதே என்று தோல்வி உணர்ச்சி தோன்று கிறது. நம் மனத்தில் முள்போல் உறுத்தும் இந்த மகாத்மாக்களைக் கண்ணெதிரேயிருந்து நீக்கிவிட்டால் நிம்மதியாயிருக்கும் என்று முடிவுகட்டி அவ்வாறே அவர்களைத் தீர்த்துவிடுகிறோம்.

**பெ**ண் ஒருத்தி மிகவும் குரூபமாக இருந்தாள். ஆகவே அவள் கண்ணாடியில் தன்னைப் பார்ப்பதைத் தவிர்த்தாள். எல்லாக் கண்ணாடிகளும் அவளுக்கு எதிராகச் சதி செய்வதாகக் கூறுவாள். அவள் எதிரில் எவராவது கண்ணாடி கொண்டுவந்தால் அதை உடைத்தெறிவாள். கண்ணாடிதான் அவளைக் குரூபமாக

ஆக்குகிறது என்று அவள் சொல்லுவாள். ஆனால் கண்ணாடி தானாகவே ஒருவரை அழகாகவோ, குரூபமாகவோ காட்டுவ தில்லை. நீ எப்படி உள்ளாயோ அப்படியே கண்ணாடி உனக்குத் தெரிவித்துவிடும். அது உன் உருவத்தை அப்படியே காட்டுகிறது.

புத்தர், மகாவீரர், இயேசுநாதர் கண்ணாடி போன்றவர்கள். அவர்களை ஊடகமாகக் கொண்டு உன்னை நீ பார்க்கையில் நீ குரூபமாக இருப்பது தெரியவருகிறது. அவர்களைப் பின்பற்றி நீ உன் தோற்றத்தை மாற்றிக்கொள்ளத் தயாராக இல்லை. நீ இரக்கத்திற்கு உரியவனாகிறாய்.

நான் சொல்கிறேன். 'நீ விழித்தெழு. மயக்க நிலையிலிருந்து வெளியேறு. நீ தற்சமயம் விழிப்பதும், பேசுவதும், பதிலளிப்பதும் சுயநினைவுடன்தான் செய்கிறாயா? யாராவது உன்னைத் திட்டினால் நீ சுயநினைவுடன் கோபம் கொள்கிறாயா அல்லது, ஸ்விச் போட்டால் ஓடும் மின்விசிறிபோல், இயந்திரம்போல் சுய உணர்வின்றிக் கோபம் கொள்கிறாயா?

எவராவது உன்னைத் திட்டினால் அமைதியாக அப்படியே இருந்துவிடு. யோசித்துப் பார். அவன் திட்டியது நியாயமாக இருக்கக்கூடும். அப்படியெனில் மனத்திற்குள்ளேயே அவனுக்கு நன்றி சொல். அவன் திட்டியது உனக்குப் பொருந்தாதெனில், சிரித்துவிட்டு உன் வழியில்போ. அந்தத் திட்டு அல்லது விமரிசனம் தவறெனில் கூறியவனுடன் எதற்குச் சண்டைக்குப் போகவேண்டும்? அவன் கூறிய குறை உண்மையெனில் அவன் உன்னை உனக்கே புரியவைத்திருக்கிறான். இவ்வாறு அவன் உனக்கொரு சேவை புரிந்திருக்கிறான்.

### மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒருமுறை உட்கார்ந்து உங்கள் படத்தையே பார்த்தபோது மனத்தில் எதிரெதிராக மோதுகின்ற எண்ணங்கள் தோன்றின. இப்படித்தான் என் மூளை உருண்டுகொண்டே செல்லும் என்று எனக்கு ஓர் எண்ணம் உதித்தது. ஆகவே 'என் மன ஓட்டத்தை நீங்களே நெறிப்படுத்தி**

**நடத்துங்கள்' என்று அடுத்ததாக நான் நினைத்ததும் மனம் இலேசாகிவிட்டதுபோல் தெரிந்தது. நான் ஆனந்தத்தில் ஆழ்ந்தேன். அப்போது உங்களது கம்பீரமான முகத் தோற்றம் கொண்ட அந்தப் படம் சிரித்தது! இன்றுவரை அந்த சம்பவம் பசுமையாக நினைவில் நிற்கிறது. உங்களுக்கு மிக்க நன்றி.**

**நீ** கூறியது எளிமையான விஷயம். மூளையை உருட்டியபடி இருந்தால் அது உருண்டபடியேதான் இருக்கும். மூளை அல்லது மனம் உன்னுடையது. நீ ஒத்துழைப்பதால் அது செயல்படுகிறது. பெடல் மிதிக்கும்வரையிலும் சைக்கிள் ஓடுவதுபோல்தான் மனமும் இயங்குகிறது.

நீ ஒருமுறையாவது முடிவுசெய். இதுவரை நடந்தது எப்படியோ தொலையட்டும். இனி. உன் சிந்தனையை குருவிடம் தள்ளிவிடு; கடவுளிடம் தள்ளிவிடு. எது நடந்தாலும் சரி, எது நடைபெறாவிடிலும் சரி என்று விட்டுவிடு. நீ எதிலும் ஆர்வத் துடன் ஒட்டிக்கொள்ளாதே. ஒன்றிற்கு ஆதரவாகவும் இராதே, எதிர்ப்பாகவும் இராதே. குறிப்பாக, எண்ணங்களை அப்படியே அனுசரித்துப்போகாமல் எதிர்நீச்சல் போட்டால், உன் மனம் மேன்மேலும் வேகமாகச் சுற்றிக் கொதிப்படையும்!

உன் மனத்தில் ஓர் எண்ணம் உதித்து அவ்வாறு அது உதிக்கக்கூடாது என்று நீ விரும்பினால் அது பல மடங்காக வரும். அது வரக்கூடாது என்று நினைப்பே அதைப் பலமுறை நினைவூட்டும். நீ தப்பித்து ஓட விரும்பும் எண்ணம் முன்பைவிட வேகமாக உன்னைத் துரத்தும். இது கணிதவியல் உண்மை. எதை எதிர்க்கிறோமோ அது நம்மை இரண்டு மடங்காகப் பிடித்துக்கொள்ளும் என்பது உளவியல் உண்மை (the rule of the opposite).

நீ முயன்று பார். நீ எதை மறக்க விரும்புகிறாயோ அதுவே அதிகமாக நினைவிற்கு வரும். ஏனெனில் மறக்க முயலும்போதும் எதை மறக்க விரும்புகிறோம் என்னும் நினைவு நீடிக்கிறது! உன் மனைவி பிறந்தகம் சென்றுள்ளாள். இதுதான் அவளை

மறப்பதற்கு நல்ல தருணம் என நினைக்கிறாய். முன்பு அவள் உன்னுடன் இருந்தபோது அவளைப் பற்றி நீ நினைத்ததைவிட அவள் இப்போது இல்லாத நிலையில் பல மடங்காக உன் நினைவில் வருகிறாள். சிலரது இறப்பு முன்பைவிட அவரைப் பற்றி நம்மை அதிகம் நினைக்கவைக்கிறது.

மறப்பது என்பதும் நினைவுபடுத்திக் கொள்வதன் ஓர் அங்கம்தான். நாம் எதை மறக்க விரும்புகிறோம் என்பது நம் நினைவில் இருக்க வேண்டுமல்லவா! ஆகவே அந்த நினைவு தேய்வதற்குப் பதில் வலிமை பெற்றுவிடுகிறது. நாம் நினைத்தது ஒன்று நடந்தது வேறொன்று. எதிர்பார்த்ததற்கு விபரீதமான விளைவு ஏற்படுகிறது.

மனம் அடங்கி இயங்குவது நிற்க வேண்டுமென நீ நிஜமாகவே விரும்பினால், அந்த விருப்பத்தையும் துறந்துவிடு. மனத்திடம் நீ 'இயங்க வேண்டுமானால் இயங்கு. இல்லையேல் சும்மா கிட' என்று சொல்லிவிடு. இதுதான் சமர்ப்பணம் என்பதன் அர்த்தம்.

உன் மனத்தை நெறிப்படுத்த என்னை அழைக்கிறாய். உன் மனத்தில் நிகழ்ந்த மாறுதல்கள் எனக்கு எப்படித் தெரியும்? நான் ஒருவனே எத்தனை பேருடைய கபாலங்களைத் தட்டிப்பார்த்து அவற்றிற்கு வழிகாட்ட முடியும்?

என்னைச் சந்திப்பவர்களில் சிலர் என்னிடம் அவர்கள் சமர்ப்பணம் ஆனால் ஏதாவது மாறுதல் நிகழுமா என்று கேட்கிறார்கள். இதில் நான் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதுதான் என் பதில். இது உன் சமர்ப்பணம். நீ செய்வதால் உனக்கு ஏதேனும் நிகழலாம். கற்சிலைக்கு முன் நீ மனமுருகி சமர்ப்பணமானாலும் உனக்குள் மாறுதல் ஏற்படலாம். ஆனால் கற்சிலைதான் ஏதோ மாயம் செய்வதாக நீ நினைக்காதே. கல், கல்தான். அது என்ன செய்யும்? நீ சமர்ப்பண உணர்வு பெற்றுவிட்டால் கற்சிலை ஒரு சாக்குதான் அல்லது ஊடகம்தான். குருவின் முன் சமர்ப்பணமானால் அவரும் ஒரு சாக்குதான். அவர் உன்னிடம் மாறுதல் ஏற்படுத்துவதில்லை. உன் சமர்ப் பணத்தின் தீவிரமும் நிஜத் தன்மையும்தான் உன்னிடம்

மாறுதலைக் கொண்டுவருகின்றன. கடவுளின் எதிரில் சமர்ப்பணமானாலும் உன் சமர்ப்பணத்தின் தீவிரத்திற்கு ஏற்றபடிதான் உனக்குள் ஆன்மிகப் புரட்சி உண்டாகும்.

குரு உள்ள இடம் குருத்வாரா எனப்படுகிறது. 'த்வார்' என்றால் வாசல் அல்லது கதவு. குரு உன் உள்ளத்துக் கதவைத் திறக்கவைத்து உன்னை உனக்குள்ளே செலுத்துகிறார். உண்மையில் குரு புதிதாக எதுவும் உனக்குக் கொடுப்பதில்லை. நீ உனக்கு எதை எந்த அளவிற்குக் கொடுக்கத் தயாராக இருக்கிறாயோ அதைத்தான் குரு உனக்கு அடையாளம் காட்டுகிறார். ஒவ்வொரு சீடருக்கும் உரிய முறையில், பொருத்தமான அளவிற்கு அவர் ஆன்மிகக் கதவைத் திறந்துவைக்கிறார்.

இங்கே வருபவர்களில் ஒருவன் பரம ஆனந்தம் தனக்குள் நிரம்பிய உணர்வைப் பெறுகிறான். இன்னொருவன் வந்து காலியாகத் திரும்புகிறான். அவன் இங்கு தனக்கு ஆன்மிக அனுபவம் எதுவும் கிடைக்கவில்லை என்கிறான். ஆனந்தத்தால் நிரம்பியவனோ குரு தனக்கு அருள் செய்ததாக நெகிழ்கிறான். ஆனந்தத்தால் நிரம்பாதவன் சமர்ப்பண உணர்வு பெற்றிருக்க வில்லை. ஆனந்தத்தால் நிரம்பியவன் தன்னை முழுவதுமாக சமர்ப்பித்திருப்பான். ஆகவே அவனுக்குள் ஆன்மிகப் புரட்சி நிகழ்ந்திருக்கிறது.

நான் உங்களுக்காக எதுவும் செய்யவில்லை. ஆகவே நான் உலகை விட்டு நீங்கிய பிறகும், நீ சமர்ப்பண உணர்வில் தீவிரமாக இருந்தால் நீ விரும்பியபடி ஆன்மிக முன்னேற்றம் உண்டாகும். இது உன்னைப் பொறுத்த விஷயமே தவிர, நான் இருந்தாலும்–இறந்தாலும் ஒன்றுதான். இயேசுநாதர் மறைந்து இரண்டாயிரம் ஆண்டுகளாகிவிட்டன. அவரை தியானித்து இப்போது சமர்ப்பணமாகின்றவனும் ஆன்மிக லாபம் அடைகிறான். புத்தர் மறைந்து 2500 ஆண்டுகளாகிவிட்டன. இப்போது புத்தர் சிலையின் முன் உணர்ச்சி வசப்பட்டு பக்தியில் லயிப்பவனும் ஆன்மிக நன்மை பெறுகிறான். ஆயிரமாயிரம் ஆண்டுகள் ஆன போதிலும் கடவுள் தொடர்ந்து கருணை காட்டுகிறார் என பக்தன் உருகுகிறான். ஆனால் கடவுள் அப்போதும் யாருக்கும் தனிப்பட்ட முறையில் கருணை காட்டியதில்லை. இப்போதும் அவர்

தனிப்பட்ட முறையில் உனக்கென்று கருணை காட்டவில்லை. அவர் தொடர்ந்து சிலையாகவே நீடிக்கிறார்.

நீதான் உனக்கு எஜமானன் என்னும் உணர்வு உனக்கு ஏற்பட வேண்டும். நீ குருவைச் சார்ந்தவனாகவே என்றும் நீடிக்க வேண்டும் என்று அவர் எதிர்பார்க்கமாட்டார். அப்படி உன்னை அடிமையாக வைத்திருக்க விரும்புபவர் உண்மையான குரு அல்லர். குரு உன்னை சுயநம்பிக்கை கொண்டவனாக, உன்னையே நம்பியிருப்பவனாக ஆக்க விரும்புகிறார். உன்னை விடுவிக்க விரும்புகிறார். குரு உன்னைக் கட்டிப்போட்டால் அவரை உன் எதிரி என்றே கூறலாம்.

நான் உன்னை முழுமையாக விடுவிக்க விரும்புகிறேன். எந்த சூழ்நிலையிலும் நீ சுதந்திரமாக இருப்பதை விரும்புகிறேன். உன்னை உன்னிடமிருந்தே (நீ என்னும் உணர்விலிருந்தே) விடுவிக்க விரும்புகிறேன். நீ உனக்கு எதை கொடுக்க இணங்குகிறாயோ அதைத்தான் நான் கொடுக்கிறேன். நீயே ஒரு கையிலிருந்து எடுத்து இன்னொரு கைக்குக் கொடுக்க இயலாதவனாக உள்ளாய். தற்சமயம் நீ முதலில் எனக்குத் தருகிறாய். பிறகு நான் அதையே செம்மைப்படுத்தி உனக்குத் தருகிறேன். ஆன்மிகத்தில் பக்குவம் பெற்றதும் நீயே உனக்குத் தேவையானதை எடுத்துக்கொள்வதும், கொடுத்துக்கொள்வதும் சாத்தியப்பட்டுவிடும்.

## நான்காம் கேள்வி

> **ஓஷோ அவர்களே! நீங்கள் எனக்கு வீணை வழங்கினீர்கள். நான் அதை வாசித்துப் பாட விரும்பினேன். பைரவி, மேகமல்ஹார் முதலிய ராகங்களை இசைக்க விரும்பினேன். ஆனால் வெற்றோசைதான் கேட்டது. ஆகவே உங்கள் வீணையை [என்னை] உங்கள் திருவடிகளிலேயே வைத்து விடுகிறேன். நீங்களே எடுத்து வாசியுங்கள்.**

**நா**ன் எடுத்து வாசிக்காமலே உன் வீணை ஒலிக்க முடியும். ஆனால் ஒரு நிபந்தனை. நீ சமர்ப்பணமாகிவிட வேண்டும்.

கடவுளின் விருப்பப்படி வாழ்க்கையில் எல்லாம் நடைபெறட்டும் என விட்டுக்கொடுத்துவிட வேண்டும். நீயாகிய வீணையை அவர் வாசித்துப் பாட விடவேண்டும்.

**நீயே பாடினால் என் மூலம்**
**எனது பாட்டு என்றும் நிலைக்கும்**
**நானே பாட்டுப் பாடியபோது**
**சொற்கள் சிதறின கண்டபடி**
**வரிகள் கோணலாய்த் தடம் புரண்டன**
**பாடியவை நின்று நிலைக்காமல்**
**எதிரொலித்து அடங்கிவிட்டன**

**வாழ்க்கை துன்பத்தில் கழிந்தது**
**ஆயினும் ஏதோ உள்ளது மிச்சம்**
**வாழ்க்கையின் இறுதிக் கணத்திலாவது**
**என்னை ஒருமுறை ஸ்பரிசித்துவிட்டால்**
**எனது வாழ்க்கை அமர காவ்யமாகிவிடும்**

நீ உனது புல்லாங்குழலைக் கடவுளின் திருவடிகளில் வைத்துவிடு. வீணையையும் அவர் திருவடிகளில் வை. உனது குரலையும் (உன் மூலம் பாட வசதியாக) அவரிடம் சமர்ப்பித்து விடு.

நீயே பாடினால் அது வெற்றோசையாக, ஆரவாரமாகத்தான் இருக்கும். ஏனெனில் நீ உனக்குள் இரைச்சல் நிரம்பிய மனிதனாகத்தான் விளங்குகிறாய். உனது ஒவ்வொரு முயற்சியிலும் இறுக்கம் தெரிகிறது. 'நானே செயல்பட்டு எதுவும் பெறமுடியும்' என்னும் உன் இறுமாப்புதான் உன் வாழ்வில் சங்கடமேற்படுத்தும் அம்சமாகும்.. 'எனது முயற்சி என்னை முன்னேற்றிவிடும்' என்ற திமிரான எண்ணம்தான் கடவுளின் அருள் உனக்குக் கிடைக்கவிடாமல் வஞ்சிக்கிறது. நீ இளகிவிடு, இலேசாகிவிடு. எல்லாச் சுமையையும் கீழேபோடு. பிறகு வேண்டுதல் செய்: 'இறைவா! எனக்குள் பிரவேசிப்பாயாக. என் உள் நுழைந்து நீ பாடு. என் உள் நுழைந்து நீ போ. நீ பேசாமல் இருக்க விரும்பி னால் மௌனமாகிவிடு. நான் இனி நடக்கமாட்டேன். நீ என்னை நடக்க வை. நீயே என் பாட்டைப் பாடிவிடு. தெய்வத்தன்மை பெற்று அது அமரகானமாகிவிடும்.'

இதுபோல் நானாகிய வீணையை கடவுளிடம் ஒப்படைத்து மீட்டச் சொன்னால், இதுவரை கேட்ட 'கொர்-கொர்' ஒலி நீங்கி தெய்விகப் பண்கள் கேட்கத் தொடங்கும். அந்த ஒலிகள் எந்த மனிதருடைய விரல்களிலிருந்தும் எழமுடியாத அதிசய ஒலிகளாகும்.

ஆனாலும் நான் உனக்கு ஒன்றை நினைவுபடுத்துகிறேன். எந்தக் கடவுளும் வந்து உன் வீணையை மீட்டவில்லை. நீதான் அதை மீட்டுகிறாய். ஆனால் சுயநினைப்பை நீ கைவிட்டால், நீ என்பவன் இல்லாமல் போனால், நீதான் வீணையை மீட்டும் அந்தக் கடவுள் ஆகிறாய். நீ இல்லை என்றதும் உன் மானிட எல்லைகள் அக்கணமே நீங்குகின்றன. ஆன்மிக ரசம் உனக்குள் எங்கும் பரவுகிறது.

இலகுவாகி விடு. சுயத்தைச் சார்ந்திரு. பிறகு வீணை ஒலிக்கும். நீ என்னும் உணர்வு காரணமாக இதுவரை இருந்த தடை நீங்கும். உன்னால் முடியும் என்னும் திமிரான முயற்சிகள் நதியின் ஓட்டத்தை எதிர்த்துச் செல்வதற்கு சமம். அமைதியாக இருந்து நதியுடன் சேர்ந்து செல்வதே உத்தமம்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்தார். சிலர் ஓடிவந்து, "உன் மனைவி நதியில் விழுந்துவிட்டாள். அடித்துச் செல்லப்படுகிறாள்," என்று கூவினர். முல்லா ஓடி நதியில் குதித்தார். ஆனால் நதியின் ஓட்டத்திற்கு எதிர்ப்புறமாக நீந்தினார். கரையில் இருந்தவர்கள், "நஸ்ருத்தீன், இதென்ன? உன் மனைவி நதியுடன் சேர்த்து அடித்துச் செல்லப்படுகிறாள். நீ எதிர் திசையில் நீந்தி அவளைத் தேடுகிறாயே," என்று கண்டித்தனர்.

"வாயை மூடுங்கள்," முல்லா அதட்டினார். "நான் முப்பது ஆண்டுகளாக என் மனைவியுடன் வசித்துவருகிறேன். எனக்கு அவள் குணம் தெரியும். எவரையும் எதையும் எதிர்த்துச் செய்வது அவள் வழக்கம். அதன்படி அவள் நதியோடு உடன் பட்டுச் செல்லாமல், போராடி, எதிர்ப்புறமாகத்தான் போயிருப்பாள். ஆகவேதான் நான் எதிர்ப்புறமாக நீந்துகிறேன்," என்று அவர் விளக்கினார்.

முல்லாவின் மனைவியைப் போல்தான் அகங்காரம் பிடித்தவர்களும், எது நடைபெறவில்லையோ அது நிகழ வேண்டும்; எது நடைபெற முடியாதோ அதுவும் நிகழவேண்டும் என்று பிடிவாதமாக இருப்பார்கள்.

நாம் எஜமான மனப்பான்மை கொண்டுள்ளோம். எதுவும் இப்படித்தான் நடக்க வேண்டும் என்று கடவுளுக்கே கட்டளை யிடுகிறோம். இதனால் உனது வீணையின் தந்திகள் அறுந்து விடுகின்றன. நீ நதியோடு சேர்ந்து செல். அது கடலை நோக்கித்தான் செல்கிறது. ராமகிருஷ்ணர் சொன்னார், 'துடுப்புப் போடாதே. பாய்மரத்தைத் திறந்துவிடு. கடவுளின் கருணைக் காற்று வீசுகிறது. அது உன் படகைச் சரியான திசையில் இட்டுச்செல்லும்.'

நானும் சொல்கிறேன் — நீந்தாதே, மிதந்தபடி செல்.

வீணை ஒலிக்கும். பாட்டு எழும். இதை அனாஹதம் என்பர். ஆஹதம் என்றால் அடித்தல், மீட்டுதல். இவ்வொலி எல்லோ ருக்கும் கேட்கும். அனாஹதம் என்றால் அடிக்கப்படாதது, மீட்டப்படாதது. அப்படியும் ஞானிகளுக்கு அந்த சூட்சுமமான ஒலி கேட்கும். அதுவே நாத பிரம்மம் எனப்படுவது.

நீ வலிந்து முயற்சி செய்யாதே. அது செயற்கையாகிவிடும். வீணையைக் கீழே வை. திடீரென சூனியத்திலிருந்து ஒருவகை இசை உனக்குக் கேட்கும்; உனக்கு மட்டுமே கேட்கும். நீ போதைபோல் உணருவாய். அதற்கேற்ப ஆடுவாய். உன் உடல் பூரிப்படையும். இந்த இசை மற்றவர்களுக்குக் கேட்காததால் அவர்கள் ஞானியாகிவிட்ட நீ திடீரென எழுந்து நடனமாடுவதைக் கண்டு திகைப்பார்கள், குழப்பமடைவார்கள்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! தியான சமயம் எனக்குக் கண்ணீர் வருகிறது. உங்கள் படத்தைப் பார்த்தால் மெய்ம்மறக்கிறேன். உங்களை நினைத்தாலேகூட எனக்குள் ஏதோ மாறுதல் நிகழ்கிறது. இதை விளக்குவீர்களா?**

தியானம் செய்கையில் கண்ணீர் வடிந்தால் அது ஓர் அற்புதமான நிகழ்ச்சி. கடவுளின் திருவடிகளில் சமர்ப்பிப்பதற்கு கண்ணீரைவிட மதிப்பு மிகுந்த பொருள் எதுவும் இருக்க முடியாது. மலர்கள்கூட கண்ணீருக்கு சமானமில்லை. கண்ணீர்ப் பூக்கள் உன் வாழ்க்கையில் பூத்தவையாகும். வாடும் சாதாரணப் பூக்களைப் போலன்றி கண்ணீர் உயிரோட்டமுடையது. கண்ணீர் உன் இதயத்திலிருந்து, உயிரின் ஆழத்திலிருந்து வெளிப்படுகிறது.

அழு. அழுகையைத் தடுக்காதே. பிறர் பார்ப்பார்களோ என்று கூச்சப்படாதே. அழுவது முறையில்லை என நினைக்காதே. நன்றாக மனம்விட்டு அழு. ஆனந்தமாக அழு. லயித்து அழு.

அழுகை என்பதன் அர்த்தம் இதய உணர்வுகள் நெகிழ்ந்து பிரவாகிக்கின்றன என்பதுதான்.

பொதுவாக, நாம் அழுகைக்குத் தவறான அர்த்தம் கற்பிக்கிறோம். மக்கள் துன்பம் நேர்கையில்தான் அழுவதாக நாம் நினைக்கிறோம். மக்கள் இன்ப மேலீட்டாலும் கண்ணீர் விடுவது உண்டு. அதுவும் ஆன்மிக இன்பமாக இருந்தால் நீண்ட நேரம் கண்ணீர் சுரக்கும்.

கேள்வி கேட்ட நீ செய்வதற்கு எதுவுமில்லை. அழ முடியாதவர்கள்தாம் அழுவதற்கு பிரயத்தனம் செய்ய வேண்டும். இதயம் கல்லாக இருந்து உணர்வுப் பூக்கள் மலராத நிலையில் உள்ளவர்கள்தாம் அழ வேண்டும். உள்ளத்தில் பக்தி உலர்ந்து போனவர்கள்தாம் அழ வேண்டும். அழ முடிந்தவர்களுக்கு ஆண்டவன் பாதையைக் காட்டுகிறார்.

ஆன்மிக உணர்வு பொங்கி உன்னால் அழ முடிவதால் ஆண்டவனின் சந்நிதிக் கதவுகள் திறந்து காணப்படுகின்றன. ஆனந்தமாகக் கண்ணீர்விடு. அப்போது உன்னையே மறந்துவிடு. அழுகை மட்டுமே மிஞ்சட்டும். எனக்குள்ளே ஒருவன் அழுகிறான் என்னும் உணர்வும் இல்லாது போகட்டும். அப்போது உன் தியானம் முழுமை பெறும். அடுத்த கட்டமாக சமாதிநிலை வாய்க்கும்.

ஆன்மிகத்தில் இரண்டு வழிகள் — தியான வழி, அன்பு வழி. இவற்றில் அன்பு வழி சுவை நிறைந்தது. தியான வழி வறண்ட,

கரடுமுரடான பாதை. அன்பு வழி எவனுக்கு வசப்பட்டுள்ளதோ அவன் தியானத்தை மறந்துவிடட்டும். அன்பு வழியே அவனுக்குப் போதுமானது.

அன்பே, கதவைத் திற!
கானகத்தில் குயில்கள்
முணுமுணுத்துக் கூவுகின்றன
வானத்தில் சூரிய கிரணங்கள்
வரிசையாய்க் கிளம்புகின்றன

பூக்களில் வண்டுகளின் ரீங்கார ஒலி
ஆகாயத்தில் காற்றின் பாட்டொலி
இலையுதிர் காலத்தை மறந்துபோய்
கிளைகளில் மீண்டும் பூத்தன மலர்கள்

நாமும் மறப்போம் கடந்த காலத்தை
வீணையை மீண்டும் மீட்டுவோம்
ஊமையாய் இருந்த பாட்டுகள்
உயிர் பெற்றெழும் மறுபடியும்

வாழ்க்கை சிரமமானதுதான்
விதியும் நமக்கு எதிரியாய் உள்ளது
வா, அழைப்போம் அவற்றைப் போட்டிக்கு

அழ முடிகின்றவனால் ஆண்டவன் இல்லத்தின் கதவைத் தட்ட முடிகிறது.

கோவிலின் கதவைத் தட்டுவதற்கு அழுவதைவிடச் சிறந்த வழியில்லை.

உன்னால் கண்ணீர் விட முடிகிறதெனில், கடவுள் உன்மீது கருணை காட்டுகிறார் என்று அர்த்தம். அவரது கருணை எல்லையற்றது. நீ சிந்தும் கண்ணீர் பிரார்த்தனைப் பன்னீராகட்டும். நீ வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. நீ எதுவும் செய்ய வேண்டுமென யோசிக்காதே. எதுவும் செய்ய முயன்றால் அங்கே கர்த்தா உணர்வு (அகங்காரம்) தலைதூக்குகிறது அழும்போது 'நான்' என்பவன் எளிதில் கரைந்துவிடுகிறான். அழுதல் என்பது கரைதலின் மறுபெயர்தான், ஆகவேதான் மனிதன் அழுவதற்கு பயப்படுகிறான்.

ஆண்கள் அழுவதையே நிறுத்திவிட்டார்கள். அவர்கள் அழும் கலையையே மறந்துவிட்டனர். இதனால்தான் பெண்களைவிட இரண்டு மடங்கு எண்ணிக்கையில் ஆண்கள் பைத்தியக்காரர்களாக உள்ளனர். அவர்களின் வெறி படிப்படியாக வளர்ந்து, பத்தாண்டுகளுக்கு ஒரு முறை உலகப் போர் அல்லது மாபெரும் போர் நிகழ்ந்து, அந்த வெறிக்கு வடிகால் கிடைக்கிறது. இடைப்பட்ட காலங்களில் அவர்கள் உள்நாட்டுக் கலகம், மதக் கலவரம், மொழிக் கலவரம் போன்றவற்றில் ஈடுபட்டுத் தங்கள் கல்லான இதயத்தை நெகிழ்த்திக் கொள்கின்றனர்.

வீட்டில் வளர்கின்ற ஆண் குழந்தைகளுக்குச் சிறுவயதிலிருந்தே ‘ஆம்பிளை பிள்ளை அழக்கூடாது’ என்று பயிற்றுவிக்கிறோம். பெண்ணின் கண்ணில் உள்ள அதே எண்ணிக்கையில்தான் ஆணின் கண்ணில் கண்ணீர்ச் சுரப்பிகள் உள்ளன. இந்த விஷயத்தில் கடவுள் ஆண்-பெண் என வித்தியாசம் பாராட்டவில்லை. பெண்களுக்குக் கொடுத்ததைப் போலவே ஆண்களுக்கும் கடவுள் கண்களும், கண்ணீர்ச் சுரப்பிகளும், கண்ணீரும் தந்துள்ளார். ஆண் அழக்கூடாது என்று கடவுளும் நினைத்திருந்தால், அவர் ஆணுக்குக் கண்ணீர் சுரப்பியை ஏற்படுத்தியிருக்கமாட்டார். அழுவது ஆண்மையில்லை என்று அவர் நினைத்திருக்க மாட்டார். அழுவதை ஆண்களுக்கும் பெண்களுக்கும் அவர் பொதுவில் வைத்தார்.

இதனால்தான் ஆண் உணர்வுகளை அடக்கி, ஜட நிலைக்குத் தன்னைத் தாழ்த்திக்கொண்டு விட்டான். பெண்கள் இதைவிடச் சிறந்த நிலையில் உள்ளனர். தேவைப்படும்போது அவர்கள் அழுது தீர்த்துவிடுகின்றனர். யாரும் அவர்கள் அழுவதைத் தடுப்பதில்லை. ‘பொம்பிளை பிள்ளை, அப்படித்தான் அழும்’ என்று விட்டுவிடுவார்கள். இந்த விஷயத்தில் பெண்கள் அதிர்ஷ்டசாலிகள் அவர்களிடமிருந்து மற்ற எல்லாம் பிடுங்கப் பட்டாலும் அழும் ஆற்றல் அவர்களது நிரந்தரச் சொத்தாக நீடிக்கும்.

கேள்வி கேட்ட அன்பனே, அஞ்சாதே. நீ வேறெதுவும் செய்ய வேண்டியதில்லை. அழு, கடவுளைக் கூப்பிடு. இந்த ஆன்மிக நெகிழ்ச்சி அதிகமாகி, ஒரு கட்டத்தில் கண்ணீர்

மட்டுமே மிஞ்சட்டும். கண்ணீர் கசிந்தோடி உன்னைச் சேர வேண்டிய இடத்தில் கொண்டுபோய்விடும்.

**வாழ்க்கையின் நீண்ட பாதையில்**
**ஒவ்வோர் அடியும் சவாலாய் உள்ளது**
**இறுதிக் கட்டம் கண்ணில் படவில்லை**
**புழுதி படிந்து, வியர்வையால் நனைந்து,**
**மாசடைந்து உடல் பாரமாய் ஆனது**
**ஆனால் ஒரு நம்பிக்கை**
**தொடர்ந்து என்னை இழுக்கிறது**
**கண்கள் இரண்டு காத்துள்ளன எனக்காக**

**விண்மீன்கள் ஏதும் தரவில்லை உறுதி**
**உலகம் என்னை ஊக்குவிக்கவில்லை**
**ஆனால் எதனுடைய தூண்டுதலாலோ**
**லட்சியத்தை நோக்கியே செல்கிறேன் நான்**
**உலகம் என்னை ஏசினால் என்ன?**
**தீய சகுனங்கள் அச்சுறுத்தினால் என்ன?**
**கண்கள் இரண்டு காத்துள்ளன என்க்காக**

கண்ணீர் பெருக்கு. கண்கள் இதனால் தூய்மை அடையும். அவ்வாறு தூய்மை ஏற்பட்டதும் உன் கண்ணீரில் வேறு இரண்டு கண்கள் வெளிப்படுவதை நீ காணலாம். காத்திருக்கும் அக்கண்கள் கடவுளின் நயனங்கள்.

உன் கண்ணீர் உன் கண்களை மூடியுள்ள திரையை நீக்கிவிடும். உன் கண்களில் படிந்துள்ள தூசியெல்லாம் வெளித் தள்ளப்படும். கண்ணின் கறை எல்லாம் நீங்கிவிடும். கண்களில் தேங்கியுள்ள முற்பிறவி வினைகளெல்லாம் ஒழிந்துபோகும். உடனடியாக, நீ நீரால் நிறைந்த கண்களை உயர்த்திப் பார்ப்பாய். அப்போது வேறிரண்டு கண்கள் உன்னை எதிர்பார்த்துக் காத்திருப்பது தெரியவரும்.

உன் கண்கள் சுத்தமாகவும், தெளிவாகவும், குறைகளற்றும் போனபின் அந்த இரண்டு தெய்விகக் கண்கள் தெரியப்படத் தொடங்குகின்றன. கண்களைத் தூய்மைப் படுத்திக்கொள்ள வேறு சிறந்த உபாயம் கிடையாது. உடல் அடிப்படையிலும், ஆத்ம அடிப்படையிலும் இந்த உபாயமே சரியானது. கண் மருத்துவரிடம்

விசாரித்தால், கண்ணீர் கண் நோய்களை நீக்கவோ, குறைக்கவோ செய்கிறது என்பார். கண்ணுக்குள் கிருமி நுழைந்தால், கண்ணில் தொற்று ஏற்பட்டால், கண்ணீர் பெருகி அதைக் கொன்றுவிடும். கண்ணீரின் ஒரு துளிகூட ஏராளமான கிருமிகளைக் கொல்ல வல்லது.

இது உடல் சம்பந்தப்பட்ட விஷயம். நான் உடல்நோய் மருத்துவரில்லை. என் சிந்தனைப்படி, கண்ணீர் உனக்குள் குடிகொண்டிருக்கும் மனத்தளவிலான நோய்களையும் அழித்துவிடுகிறது. கோபக்காரன் மனம்விட்டு அழுதால், அவனது கோபம் முடிவுக்கு வரும். அவன் தன் உள்ளச் சுமை இறங்கிவிட்டதை உணர்வான். மனம்விட்டு அழக்கூடியவனின் அகங்காரம் கரைந்துபோகும். மனம் இலேசாகும். இவ்வாறு உடலும் மனமும் இலகுவாகி உன்னால் பறக்க முடியும்போல் தோன்றும்.

## கடைசிக் கேள்வி

> **ஓஷோ அவர்களே! உங்கள் பிறந்த நாளன்று உங்கள் சிநேகிதர்கள், சீடர்கள், சந்நியாசிகள் மனத்தைத் தொடும் பரிசுகள் கொண்டுவருகின்றனர். என்னிடமோ எதுவுமில்லை. சூனியத்தைத் தவிர எதுவும் என் வசமில்லை. அதைத் தாங்கள் ஏற்பீர்களா?**

சூனியத்தைவிட உயர்ந்த பரிசு வேறு என்ன இருக்க முடியும்? சூனியத்தையே நீ கொண்டுவா. நான் அதை எதிர்பார்த்திருப்பேன். நீ வேறு ஏதேனும் கொண்டுவந்து அளிப்பது வீண் செயலாகும். நீ சூனியத்தை எடுத்துவந்தால் அது அர்த்தமுள்ள செயலாக இருக்கும். சூனியம் என்பதற்கு சமாதிநிலை, பூரண தியானம், பூரணமான பரம்பொருளின் இல்லத்து வாசல் என்றெல்லாம் அர்த்தம் கூறலாம்.

அடிப்படையில் நீ தட்சிணைபோல் எதுவும் கொண்டுவர வேண்டும் என்பதில்லை. நீ வந்துள்ளாய். இதுவே போதுமானது. அன்பு என்பது தன்னிலேயே நிறைவுபெற்றதாகும். வேறு பரிசு அவசியமில்லை.

**உயிருக்கும் உயிரானவனே! உனக்கு**
**அன்பொன்றே நான் தர முடியும்**
**பொன்னும் மணியும் நான் சேர்க்கவில்லை**
**அவற்றில் ஆழ நீ விடவில்லை**
**கண்ணீர் மாலையே உனக்குத் தர முடியும்**
**பூக்கள், தோட்டக்காரருக்கும்**
**வீணை அதை வாசிப்பவருக்கும்**
**தருகின்ற பரிசினையே**
**நானும் உனக்குத் தந்திடுவேன்**

அன்பை நீ கொண்டு வந்துள்ளாய். அதற்கு நீ எல்லா வற்றையுமே கொண்டுவந்ததாக அர்த்தம். நீ சூனியத்தைக் கொண்டு வந்துள்ளவனாகில், சமர்ப்பணமும் கொண்டு வந்திருப்பதாக, சமாதிநிலையும் கொண்டு வந்திருப்பதாக அர்த்தம். இனி வேறெதுவும் தேவையில்லை. இதைவிடப் பெரிய பரிசு இருக்க முடியாது.

எப்படி அன்பாவது, எப்படி சூனியமாவது என்பதைத்தான் நானும் உபதேசித்து வருகிறேன். நீ வெற்றிடமாக ஆனால்தான் கடவுள் உனக்குள் இறங்கிவருவார்.

'தான்' என்னும் உணர்வை இழந்தவர்கள் கடவுளைப் பெறும் உரிமை உடையவர்கள் ஆகிறார்கள். தன்னை இழக்க முடியாதவர்கள் பரிதாபத்துக்குரியவர்கள். அவர்கள் அலைவார் களே தவிர, கடவுளை அடைய முடியாது. 'நீ' அழிந்தால் நீ பெறலாம்!

மலைகளின் மீது மழை பொழிகிறது. அங்கே அது தேங்குவதில்லை. மலையின் அடிவாரத்தில் காலியாக உள்ள பள்ளத்தாக்குகளை அது நிரப்புகிறது.

நீ வெறும் கையுடன் வா. சூனியத்தைக் கொண்டுவா. அன்பைக் கொண்டுவா. குருவிற்கேற்ற தட்சிணை இது ஒன்றே.

**ஹரி ஓம் தத்ஸத்!**